Tamil Elakiyathil

# தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு

Thirumaal Valipaadu

Srmt T. Dhana Bagayavathi

திருமதி த. தனபாக்கியவதி

வெளியீடு:

Kurinji Publisher

குறிஞ்சி பதிப்பகம்

ஆர். பி. 6, பட்டினப்பாக்கம் குடியிருப்பு

சென்னை - 600 028

1996 ch-28

THIS BOOK IS PUBLISHED WITH THE
ASSISTANCE OF

**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**

TIRUPATI

UNDER THEIR SCHEME

**"AID TO AUTHORS"**

TO PUBLISH RELIGIOUS BOOKS



"நாரணன் புகழை நானிலம் அறிய
நாடிய முயற்சிக்கு நன்பொருள் ஈந்த
நன்றாய தொல்சீர் திருப்பதி தேவஸ்தானத்திற்கு
நாளும் நெஞ்சார்ந்த நன்றி."

## குறிப்புகளில் பயன்படுத்தப்பட்டுள்ள குறுக்க விளக்கம்

ஓம்

| | | |
|---|---|---|
| அகம் | — | அகநானூறு |
| கலி | — | கலித்தொகை |
| குறிஞ்சி. க | — | குறிஞ்சிக்கலி |
| சம். தே | — | சம்பந்தர் தேவாரம் |
| சிலம்பு | — | சிலப்பதிகாரம் |
| சுந். தே | — | சுந்தரர் தேவாரம் |
| திரு. கோ | — | திருக்கோவையார் |
| திரு. நாவு | — | திருநாவுக்கரசர் |
| திரு. மந் | — | திருமந்திரம் |
| திரு. முருகு | — | திருமுருகாற்றுப்படை |
| திரு. வா | — | திருவாசகம் |
| தொல் | — | தொல்காப்பியம் |
| நற். | — | நற்றிணை |
| நா. தி. பிர | — | நாலாயிர திவ்வியப் பிரபந்தம் |
| நெய். கலி | — | நெய்தற்கலி |
| பரி. | — | பரிபாடல் |
| புறம் | — | புறநானூறு |
| மணி | — | மணிமேகலை |
| மதுரை | — | மதுரைக் காஞ்சி |
| முத்தொள் | — | முத்தொள்ளாயிரம் |
| முல்லை. கலி | — | முல்லைக்கலி |
| முல்லை. பா | — | முல்லைப்பாட்டு |
| பெரும்பாணா | — | பெரும்பாணாற்றுப்படை |

# பிழை திருத்தம்

| பக்கம் | பிழை | | திருத்தம் |
|---|---|---|---|
| 15 | திருமகளாகியப் | — | திருமகளாகிப் |
| 26 | என் | — | என |
| 46 | இவ்வ்வதாரத்தை | — | இவ்வவதாரத்தை |
| 46 | நிவந்தருதிருவின் | — | நிலந்தருதிருவின் |
| 89 | துழாய் மாலையான் | — | துழாய் மாலையன் |
| 97 | ஒளித்தான் | — | ஒளித்தவன் |
| 160 | வையமுழுதுவிட மால் | — | வையமுழுதுண்டமால் |
| 188 | பணியை | — | பண்பை |
| 222 | துரகூத்தைவாய் | — | துரகத்தைவாய் |
| 248 | நாயகத்தணை | — | நாகத்தணை |
| 300 | நிகழாகுபடி | — | நிகழாதபடி |
| 303 | முளைத்தென்ழுந் தோங்கி | — | முளைத்தெழுந்தோங்கி |
| 329 | ஒத்துலகா | — | ஒத்திலக |

# பொருளடக்கம்

# வாழ்த்துரை

**டாக்டர் திரு. M. கோபாலகிருஷ்ணன்**
*முன்னாள் தலைவர்*
*இந்தியன் வங்கி*
*11, Dr. ரங்காச்சாரி ரோடு*
*மயிலாப்பூர், சென்னை-600 004*



*"தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு" என்ற இவ்வாய்வேட்டு நூல் ஒரு தலைசிறந்த முயற்சியாகும்.*

*1973-ம் ஆண்டு மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் முதுகலைப் பட்டத்தில் முதலிடம் பெற்ற இம்மாணவி, பின்னர் அரசுப் பணியில் சேர்ந்து அதில் இருந்து கொண்டு பணிக்கிடையே சென்னைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டத்திற்குப் பதிவு செய்து, கடுமையாக உழைத்து, அவ்வுழைப்பின் பயனாக இவ்வாய்வேட்டு நூல் உருவாக்கப்பட்டுள்ளது. ஆழ்வார் பாசுரங்களில் ஆழங் கால்பட்டு ஆழ்வார் தமிழை அமுதத்தமிழெனச் சொல்லி வரும் மாநிலக் கல்லூரியின் தலைசிறந்த பேராசிரியர் முனைவர் ஆர். கே. நாகுவின் அரிய மேற்பார்வையில் மேலும் இந்நூல் பொலிவு பெறுகின்றது.*

*எண்ணவும், பேசவும், போற்றவும், சிறந்த திருமாலின் பரத்துவம், அருளிச் செயல்கள், இறைப் பண்புகள் பற்றிய செய்திகள் வகை தொகையாகத் தமிழ் இலக்கியங்கள் வாயிலாக நெறிப்படுத்திக் கூறப்பட்டுள்ளன. இவ்வாய் வேட்டுநூல் தமிழ் இலக்கிய உலகில் ஒரு நல்ல இடத்தைப் பெறவேண்டும் என வாழ்த்துகிறேன்.*

**அன்புடன்,**

M. Gopalakrishnan

**(M. கோபாலகிருஷ்ணன்)**

# அணிந்துரை

பேராசிரியர் டாக்டர் இரா. கு. நாகு
மாநிலக் கல்லூரி, சென்னை-5

''தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு'' என்னுந் தலைப்பில் திருமதி தனபாக்கியவதி அவர்கள் என் மேற்பார்வையில் டாக்டர் பட்டத்திற்காக ஆய்வு செய்தார்கள். தொல்காப்பியர் காலந் தொடங்கிப் பக்திக் காலம் முடியவுள்ள தமிழ் இலக்கியங்களில் திருமால் பற்றி வந்துள்ள தகவல்களை எல்லாம் திரட்டினார்கள். திருமாலுக்குள்ள பெயர்களாக வழங்குபவை பற்றியும் திருமால் அவதாரச் செய்திகளாகக் குறிக்கப்பட்டுள்ளவை பற்றியும் திருமால் வழிபாடுகளாக அமைந்தவை பற்றியும் திருமாலின் அருளிச் செயல் களாகப் பொறிக்கப்பட்டுள்ளவை பற்றியும் திருமால் திருமகள் சார் பான உறவு நிலைகள் பற்றியும் அறிய வரும் தகவல்களையெல்லாம் வகை தொகை செய்து பார்த்தார்கள். பின்னர் அத்தகவல்களின் அடிப்படையில் கட்டுரைகளாக எழுதி இயல்களாக அமைத்தார்கள். அவ்வாறு அமைத்தவையே இன்று நூலாகப் புத்துருவம் பெற்று நம் கையில் திகழ்கிறது. அன்னார் முயற்சி வாழ்க என வாழ்த்துகிறேன். அன்னாரின் கடின உழைப்புக்கும் ஆய்வு நாகரிகத்திற்கும் பாராட்டு தலைத் தெரிவிக்கின்றேன்.

திருமால் வழிபாடு மிகமிகத் தொன்மையானது. அவ்வழிபாடு என்று தோன்றியது என அறுதியிட்டுக் கூறமுடியாத பழமைசான்றது. தொல்காப்பியம் திருமாலை மாயோன் எனப் பெயரிட்டு அழைக் கிறது; அவனைக் காடுறை தெய்வமாகத் தொல்காப்பியம் அகத் திணை இயலில் காட்டுகிறது. புறத்திணை இயலில் மன்னரோடு சார்த்தி, 'மன்பெருஞ் சிறப்பின் தாவா விழுப் புகழ்ப் பூவை நிலை' என வாழ்த்தும் வழிபாட்டையும் குறிக்கிறது. இவ்வாறு தொல்காப் பியர் காலத்திலேயே சிறப்புடன் திகழ்ந்த தெய்வமாகத் திருமால் பேசப்படுகிறது. இத்தகு மன்பெருஞ் சிறப்பின் மாயோன் காலப் போக்கில் 'முழுமுதல்' தெய்வமாக வழிபடப் பெற்ற நிலையையும் தமிழ் இலக்கியங்களில் காண்கிறோம். திருமாலை 'மாயோன்' எனக் காட்டிய தொல்காப்பிய நிலை காலப்போக்கில் வளர்ச்சியுற்றது. சங்க காலத்தில் மாயோனாக மட்டுமின்றி, மால், திருமறுமார்பன், நேமியான், திகிரியான், முதல்வன், நெடியோன், முந்நீர் வண்ணன், வெய்யோன், மாயவண்ணன். அறிதுயிலோன், கேசவன் எனப் பல பெயர் பூண்டு திருமால் வழிபடப் பெற்ற வளர்ச்சி நிலையைக் காண் கிறோம். சங்கம் மருவிய கால இலக்கியங்களில் 'மாயோன்' மேலும்

சில பெயர்களால் சுட்டப்பெறும் நிலையையும் காண்கிறோம். சங்கம் மருவிய காலப் புலவர்கள், மாயோனை, நீணில மளந்தோன், செங்கண் அரிமால், நெடுமுடி அண்ணல், அரவணைக்கிடந்தோன், பூவண்ணன், மாமணிவண்ணன், அஞ்சனவண்ணன், கரியான், நாராயணன், விஷ்ணு என்றெல்லாம் குறிப்பிட்டுள்ளனர். திணை நிலைத் தெய்வமாக இருந்த திருமால் நானிலத் தெய்வமாக மாறியதையும் ஆயர் மக்களின் முல்லை நிலக் கடவுளாக இருந்த திருமால் பல்லோர் பரவும் 'பரத்துவம்' உற்ற தெய்வமாக மாறியதையும் இந்த நூலுள் திருமதி தனபாக்கியவதி அவர்கள் தக்க சான்றுகளுடன் ஆய்ந்து வெளிப்படுத்தியுள்ளார்.

திருமால் காப்புத் தெய்வமாக இருந்த நிலை மாறி ஆக்கல் தெய்வமாகவும், அழித்தல் தெய்வமாகவும் மாறிப் பின்னர்ப் பக்திக் காலத்தில் 'எல்லாமாகவும்' மாறிய நிலையைத் தமிழ் இலக்கியங்கள் மிகத் தெளிவாகக் காட்டுகின்றன. காடுறை உலகத்து மாயோன் பக்திக் காலத்தில் எங்கும் நிறைந்தவனாகவும் எதனுள்ளும் உறைபவனாகவும் பரிணாம வளர்ச்சியுற்ற நிலையை நம்மாழ்வார்,

திடவிசும் பெரிவளி நீர்நில மிவைமிசை
படர்பொருள் முழுவதுமா யவையவைதொறும்
உடன் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்
சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே - என்றும்
உளனெனி லுளன் அவனுருவ மிவ்வுருவுகள்
உளனல னெனில் அவன் அருவமிவ்வுருவுகள்
உளனென விலனென இவைகுண முடைமையில்
உளனிரு தகைமெயொடு ஒழிவிலன் பரந்தே. என்றும்

பலவாறாகப் பாடியுள்ளார். திருமால் வழிபாட்டில் ஏற்பட்டுள்ள இது போன்ற வளர்ச்சி நிலைகளையெல்லாம் இந்நூலுள் பரக்கக் காணலாம்.

தமிழிலக்கியங்களில் திருமால் வழிபாட்டைக் கற்போர் திருமால் வழிபாடு சங்க காலத்திலேயே மிக உயர்ந்த நிலையை எட்டிவிட்டது என்பதை உணர்வர். வேதக் கருத்துகள் சங்க காலத் தமிழிலக்கியங்களில் இடம் பெற்றுவிட்டமையைக் காணும்போது, தமிழகத்தின் எல்லை வேங்கடத்தைத் தாண்டி இமயத்தை எட்டியிருப்பதை உணரமுடிகிறது. திருமாலுக்குப் பரத்துவம் கூறும் வேதக் கருத்துகள் பலவும் பரிபாடலில் இடம் பெற்றுவிட்டன. ''தீ, காற்று, வானம், நிலம், நீர் என்னும் ஐந்து பூதங்களும் சூரிய சந்திரரும் வேள்வித் தலைவனும் செவ்வாய் முதலிய ஐந்து கோள்களும்

அசுரரும் துவாத சாதித்தியரும் வசுக்கள் எண்மரும் ஏகா தசருத்திரர் களும் அச்சுவினி தேவர்களும் யமனும் அவனுடைய ஏவலனாகிய கூற்றுவனும் மூவேழுலகமும் அவற்றிலுள்ள உயிர்ப்பன்மையும் ஆகிய இவையெல்லாம் நின்னிடத்திற் றோன்றிப் பரந்தவை யென்று வேதம் கூறும்; அதனால் யாமும் கூறினோம்'' எனப் பரிபாடல் காட்டுவதிலிருந்து திருமால் வழிபாட்டின் 'வியாபகத்தைப்' புரிந்து கொள்ளமுடிகிறது.

பரிபாடல், திருமாலை,

''நின் வெம்மையும் விளக்கமு ஞாயிற்றுள
நின் தண்மையுஞ் சாயலுந் திங்களுள
நின் சுரத்தலும் வண்மையும் மாரியுள
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள
நின் நாற்றமும் மென்மையும் பூவையுள
நின் தோற்றமும் அகலமும் நீரினுள
நின் உருவமும் ஒலியும் ஆகாயத்துள
நின் வருதலும் ஒடுக்கமும் மருத்தினுள
அதனால், இவ்வு முவ்வு மவ்வும் பிறவும்
ஏம மார்ந்த''

என்று பலவாறாகப் புகழ்ந்து கூறியுள்ளது.

திருமால் வழிபாட்டை இலக்கியங்களின் துணைகொண்டு ஆய்ந்த திருமதி தனபாக்கியவதி அவர்கள் வரலாற்றுணர்வோடு ஆய்வு செய்து எழுதியுள்ளார். திரு பற்றியும் திருமகள் பற்றியும் அவர் வழங்கியுள்ள கருத்துக்ளை இதற்குச் சான்றாகக் காட்டலாம்: ''தொடக்க காலத்தில் சங்க இலக்கியங்களில் 'திரு' என்ற சொல் உணர்த்திய பொருள் காலப்போக்கில் மாற்ற முற்றுத் திருமாலின் மனைவி திருமகள் என்னும் சிறப்புப் பொருளில் வழங்கப்பட்டமை யினையும், தொடக்ககாலத்தில் கதைக் குறிப்புகள் இன்றிச் சுட்டப்பட்ட 'திரு' பின்னர்க் கதைப் பின்னணியோடு சுட்டப்படும் திருமகளாகக் காட்சியளித்தமையை, திருமால் மார்பில் மறுவாகத் தொடக்கத்தில் இருந்து பின் உருப்பெற்ற திருமகளாகிப் பின் அவனிடமிருந்து பிரிக்கப்பட்டுத் தனித் தெய்வமான செய்தியினையும் மேற்குறித்த சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம்.''

இந்த நூலுள் 'இருந்தையூர்' பற்றித் தெரிவிக்கப்பட்டிருக்கும் கருத்தும் இயல்கள் தோறும் 'அவதாரங்கள்' குறித்து எழுதி அவற்றைப்பற்றி ஆய்ந்து வெளியிட்டிருக்கும் கருத்தும் சிவனைப்

பற்றிக் கூறும் அடிமுடி தேடிய புராணக் கதைக்குச் சங்க இலக்கியத்துள் ஆதாரமில்லை யென்று நிறுவியிருக்கும் திறமும் சைவ இலக்கியத்துள் வந்துள்ள திருமால் பற்றிய செய்திகளைத் தொகுத்து அவற்றைச் சமயக் காழ்ப்பின்றி வெளிப்படுத்தியிருக்கும் ஆய்வு நாகரிகமும் பாராட்டத் தக்கவையாகும். நப்பின்னை பற்றியும் கொற்றவை பற்றியும் வெளியிட்டிருக்கும் கருத்துகள் திருமதி தனபாக்கியவதி அவர்களின் ஆழ்ந்த நூற்பயிற்சியையும் ஆய்வுத் திறத்தையும் வெளிக்காட்டுவனவாகவுள்ளன. இந்த நூலுள் பலவிடங்களிலும் பயின்று வரும் ஆய்வுச் செய்திகள் ஆய்வாளரின் புலமைக் கீற்றுகளாக ஒளிறுகின்றன எனில் மிகையாகா தெனலாம்.

'தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு' என்னும் இந்நூல் ஓர் இலக்கிய நூல்; ஓர் வழிபாட்டு நூல்; ஓர் பக்தி நூல்; ஓர் வரலாற்று நூல்; இதுபோன்று இன்னும் பல நூல்களை எழுதித் தமிழுக்கு வளஞ்சேர்க்க வேண்டுமென்று வாழ்த்தி அமைகின்றேன்.

> ''மாநிலஞ் சேவடியாகத் தூநீர்
> வளைநரல் பெளவம் உடுக்கையாக
> விசும்பு மெய் யாகத்திசை கையாகப்
> பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக
> இயன்ற எல்லாம் பயின்று அகத்தடக்கிய
> வேத முதல்வன் என்ப
> தீதற விளங்கிய திகிரியோனே''

(பாரதம் பாடிய பெருந்தேவனார்)

(ஒப்பம்) **இரா. கு. நாகு**

# நன்றியுரை

''தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு'' பற்றிய என்னுடைய ஆய்வை மேற்கொள்வதற்கு எனக்குத் துணைநின்று அனுமதி வழங்கிய தமிழக அரசுக் கல்லூரிக் கல்வித் துறைக்கும், சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், இராணிமேரி கல்லூரி மற்றும் மாநிலக் கல்லூரி முதல்வர்களுக்கும் என் இதயபூர்வமான நன்றி.

ஆய்வு உலகிற்கு வழி அமைத்துக்கொடுத்து, என்னை ஆய்வு மாணவியாக ஆற்றுப்படுத்தி, இவ்வாய்வு நிகழ்த்தும் வாய்ப்பினை எனக்கு அளித்து, ஆய்வு வழிகாட்டியாகத் துணை நின்று அரிய கருத்துரைகளை வழங்கி, நெறிப்படுத்தி ஆய்வின் எல்லா நிலைகளிலும் ஊக்கமளித்து, ஆய்வு நிறைவு பெறுவதற்குப் பல்லாற்றானும் உதவி, இவ்வாய்வு செம்மை பெற்றுச் சிறக்கவும், வனப்புப் பெறவும் பெரிதும் உதவிய என் ஆய்வு மேற்பார்வையாளர் மாநிலக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் இரா. கு. நாகு அவர்களுக்கும், எனது நலனில் பெரிதும் அக்கறைகொண்ட அவரது துணைவியார் திருமதி. நா. காந்திமதி அவர்களுக்கும் என்றென்றும் உளங்கனிந்த நன்றி கூறுவது எனது மனமகிழ்ச்சிக்குரிய முதற்கடமையாகும்.

இந்நூலுக்கு அணிந்துரை அருளிய டாக்டர் M. கோபால கிருஷ்ணன், முன்னாள் இந்தியன் வங்கித் தலைவர் அவர்களுக்கு என் உளமார்ந்த நன்றியைக் கூறுவதில் பெருமைகொள்கிறேன்.

நான் தமிழ் இலக்கியத்தைச் சிறப்புப் பாடமாக எடுத்துப் படிப்பதற்கு ஆர்வம் ஊட்டியதோடு, என் முன்னேற்றத்திலும் என் இல்லத்தவர் நலனிலும் பெரிதும் ஈடுபாடு கொண்டவருமான டாக்டர். திருமதி. இலலிதா காமேஸ்வரன், துணைவேந்தர், இராமச்சந்திரா மருத்துவக் கல்லூரி மற்றும் ஆய்வு மையம், (அங்கீகரிக்கப்பட்ட பல்கலைக் கழகம்) சென்னை அவர்களுக்கு என்றென்றும் என் மனமார்ந்த நன்றியைக் கூறுவதில் பெருமை கொள்கிறேன்.

ஆய்வேட்டை எழுதும்பொழுதும், நூலாக்குப்பொழுதும் எனக்குத் துணைநின்ற எனது தாய் மற்றும் சகோதர சகோதரிகளுக்கும், என் அன்புத் துணைவருக்கும், என் அன்பு மகள் குறிஞ்சிக்கும் நன்றி கூறி மகிழ்கின்றேன். தேவையான நூல்களையெல்லாம் இன்முகத்துடன் எடுத்துக்கொடுத்து உதவிய மறைமலை அடிகள் நூலகத்தாருக்கும் நன்றி.

நூலைச் சிறந்த முறையில் அச்சேற்றிய சிண்டிகேட் பிரிண்டர்ஸ் நிறுவனர் மற்றும் ஊழியர்களுக்கும் என் இனிய நன்றி. இந்நூல் வெளிவரப் பண உதவி நல்கிய திருப்பதி தேவஸ்தானத்திற்கும், இந்நூல் வெளிவர உதவிய அனைத்து நண்பர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை-28
26-1-1996

**த. தனபாக்கியவதி**

# முன்னுரை

மக்கள் வாழ்க்கைக்கு இறைவழிபாடு இன்றியமையாதது; அது துன்பம் துடைத்து இன்பம் தருவது. குறைகளை நீக்கவும் தேவைகளை வேண்டவும் அதனை மக்கள் பயன்படுத்துவர். ஒவ்வொருவரும் தெய்வத்தோடு தொடர்பு கொண்டு வாழவேண்டும் என்பதே வழிபாட்டின் நோக்கம் என்பர். திருமழிசையாழ்வார், ''வாசித்தும், கேட்டும், வணங்கி, வழிபட்டும், பூசித்தும் போக்கினேன் போது'' என்பார். பண்டைக் காலந்தொட்டே தமிழரிடம் தெய்வ வழிபாட்டு முறைகள் பல இருந்து வந்தமையைத் தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். தமிழர் வழிபட்ட தெய்வங்கள் பல இருப்பினும் அவற்றுள்ளும் திருமாலும், முருகனும் குறிப்பிடத்தக்க தெய்வங்களாகும். வேத காலந்தொட்டு வழிபடப் பெற்று வரும் தெய்வம் திருமால் என்பது வரலாறு காட்டும் உண்மையாகும். அத்திருமால் வழிபாடு தமிழர்கள் வாழ்வில் தொன்மைக் காலந் தொட்டு எவ்வாறு இருந்து வந்துள்ளது என்பதைத் தமிழ் இலக்கியங் களின் துணை கொண்டு ஆய்ந்து வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வுத் தலைப்பு :** பள்ளியில் பயிலுங் காலத்தில் ஆண்டாளாக நடிக்கும் வாய்ப்புக் கிட்டிய காலத்திலிருந்தே திருமாலாகிய தெய்வத்தைப் பற்றிய சிந்தனைகள் உள்ளத்தில் ஆழ வேரூன்றி யிருந்தன. இறை வழிபாட்டிலே நம்பிக்கை கொண்டோர் வாழ்ந்த சூழலில் வளர்ந்து வந்த எனக்குக் காத்தற் கடவுளாகிய திருமாலைப் பற்றி ஆராய்ச்சி செய்ய வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டது. அவ்விருப்பத்தை என் நெறியாளர் பேராசிரியர் டாக்டர் நாகு அவர்களிடம் தெரிவித்தேன். ஆழ்வார் பாசுரங்களில் ஆழங்கால் பட்டு ஆழ்வார் தமிழை அமுதத் தமிழெனச் சொல்லி வரும் பேராசிரியர் டாக்டர் நாகு அவர்கள் என் ஆர்வத்தைப் பாராட்டி, ஆராய்ச்சி செய்ய ஊக்கம் ஊட்டினார். என்னுடைய ஆர்வமும் என் மேற்பார்வையாளரின் ஊக்கமூட்டலும் ஒருசேரத் திரண்டு காத்தல் கடவுளாகிய திருமால் வழிபாட்டை ஆராயத் தூண்டியது. தமிழ் இலக்கியங்களில் திருமால் வழிபாடு தோன்றி வளர்ந்த வரலாற்றை ஆராய எண்ணினேன். அதன் விளைவே இவ்வாய் வேடாகும்.

**ஆய்வின் நோக்கம் :** காலந்தோறும் வளர்ந்து வரும் திருமால் வழிபாட்டைப் பற்றிய தனி ஆய்வு நூல் இல்லாத நிலையில் அதனை ஆழ்ந்து காணும் நோக்கில் இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டது.

திருமால் வழிபாடு சங்க காலம் முதல் பக்திக் காலத்தில் ஆழ்வார்கள் காலம் முடிய எவ்வாறிருந்தது, திருமால் வழிபாட்டில் காலந்தோறும் ஏற்பட்ட மாற்றங்கள் எவையெவை, திருமால் வழிபாட்டில் நிகழ்ந்துள்ள வளர்ச்சிகள் எவையெவை என்பனவற்றைத் தமிழ் இலக்கியங்களின் மூலமாகக் காணும் முயற்சியே இவ்வாய்வில் மேற் கொள்ளப்பட்டுள்ளது. திருமால் வழிபாடு என்னும் தலைப்பு இடம் பெற்றிருப்பினும் வழிபாட்டை மட்டும் குறிப்பது ஆய்வின் நோக்கம் அன்று. திருமால் பற்றிய செய்திகள் தமிழிலக்கியங்களில் விரவி வந்திருப்பதைத் தேர்ந்து, தொகுத்து நெறிப்படுத்தி, கட்டுரை வடிவில் தருவதே இவ்வாய்வின் பயனாகக் கருதப் பெற்றுள்ளது. வழிபாடு என்று தலைப்புக் கொடுத்திருந்தாலும் திருமால் பற்றி இலக்கியங்கள் வழி அறியலாகும் செய்திகளைத் தொகுத்து வகை செய்து கட்டுரைகளில் வெளியிடுவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வின் தேவை :** திருமால் பற்றிய செய்திகள் பரவலாகப் பேசப்பட்டுள்ளன. எனினும் அவை பற்றிய அறிவார்ந்த ஆய்வு இல்லாத நிலை உணரப்பெற்றதால் இவ்வாய்வு மேற்கொள்ளப் பெற்றது.

ஆய்வு முறையில் எதனையும் ஆராய்ந்து நடுவுநிலை பிறழாமல் வெளிப்படுத்தும் நெறியே இவ்வாய்வில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. தமிழிலக்கியங்களுள் திருமால் பற்றிக் குறிப்பிடப் பெறும் அனைத்துச் செய்திகளும் தொகுக்கப் பெற்றுள்ளன. தற்கால ஆய்வியல் அணுகு முறையின்படி, இயன்ற அளவு இவ்வாய் வுரை எழுதப்பெற்றுள்ளது.

**ஆய்வுப் பரப்பு :** சங்க காலம் முதல் பக்திக் காலம் வரையில் உள்ள தமிழ் இலக்கியங்களில் காணப்பெறும் திருமால் பற்றிய செய்திகளே இவ்வாய்வுக்கான முதன்மை ஆதாரங்களாகும்.

**சங்க காலத்தில் :** சங்க இலக்கியங்களினின்று பெறப்படும் தகவல்கள் முதன்மை ஆதாரங்களாகவும், சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற பிற நூல்களில் கிடைக்கப் பெறும் தகவல்கள் துணைமை ஆதாரங்களாகவும் அமையும். தொல்காப்பியச் செய்திகள் தெளிவு கருதியும், ஆய்வின் தரத்தை உயர்த்தும் நோக்கிலும் ஆங்காங்கு ஆளப்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்கள் முதன்மை ஆதாரங்களாக இருப்பதால் அவற்றிற் கான உரை விளக்கங்களும், திருமால் வழிபாடு வைதிக சமயத்தைச் சார்ந்திருப்பதால் வேத நெறியை விளக்கும் வடமொழி நூற்கருத்து களும் உண்மை காணும் நோக்கில் ஒப்பவைத்துச் சார்பு ஆதாரங் களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**சங்கம் மருவிய காலத்தில்:** பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும், சிலம்பு, மேகலை ஆகிய காப்பியங்களும், மூவேந்தர் புகழ் பாடும் முத்தொள்ளாயிரமும் முதன்மை ஆதாரங்களை வழங்கும் நூல்களாகவும் அவை பற்றி எழுதப்பெற்ற பிற நூல்களினின்று எடுக்கப் பெறும் தகவல்கள் துணைமை ஆதாரங்களாகவும் கொள்ளப் பட்டுள்ளன.

**பக்திக் காலத்தில்:** சிவன் புகழ்பாடும் காரைக்கால் அம்மையாரின் பாடல்கள், திருமூலர் திருமந்திரம், மூவர் தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் ஆகிய நூல்களும், ஆழ்வார் பாசுரங்களின் தொகுப்பாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் முதன்மை ஆதாரங் களை வழங்கும் நூல்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

இவ்வாதாரங்கள் வழங்கிய நூல்கள் பின் இணைப்பில் அகர வரிசையில் தரப்பட்டுள்ளன.

**அணுகு முறை :** திருமால் வழிபாடு பற்றிய கருத்துக்களில் ஏற்பட்ட வளர்ச்சி, அவ்வளர்ச்சிகளைத் தெரிவிக்கும் நூல்களின் காலம், அக்கால வரலாற்றில் காணப்படும் உண்மைகள் ஆகியவற்றை நோக்க, சங்க இலக்கியங்கள் முதல் ஆழ்வார்களின் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முடிய உள்ள தமிழ் இலக்கியங்களில் திருமால் பற்றிய அனைத்துச் செய்திகளையும் தொகுத்துப் பகுத்து வகைப் படுத்தி அவற்றை ஆய்ந்து அவற்றின் சிறப்புகளை வெளிக்கொணரும் முயற்சியே இவ்வாய்வில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது. இலக்கிய அணுகு முறையோடு வரலாற்றணுகு முறை நெறிகளும் மேற்கொள் ளப்பட்டுள்ளதால் திருமால் வழிபாட்டைக் காலச் சூழலோடு ஒப்பிட்டுச் சிறப்பு நிலைகளை முடிவு செய்யும் தன்மையும் அமைகின் றது. தொகுத்தும், பகுத்தும், வகைப்படுத்தியும் தமிழ் இலக்கியங் களில் அமையும் திருமால் வழிபாட்டுச் செய்திகள் ஆராயப் பெற்றுள்ளன.

**ஆய்வுப் போக்கு :** பழமை கருதித் தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் காட்டும் திருமால் பற்றிய செய்திகளைத் தொகுத் தும், பகுத்தும், வகைப்படுத்தும் முயற்சி முதல் நிலையாக மேற்கொள்ளப்பெற்றது.

சங்க காலத்திற்கு அடுத்த சங்கம் மருவிய காலத்தில் தமிழகத்தில் அரசியல், பொருளாதாரம், சமுதாயச் சூழல், ஆகியவற்றிலே பெரிதும் மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. அந்நியர் ஆட்சிக்கு வந்தமை யாலும், அவர்களின் கலப்பாலும், சமண பௌத்த மதங்களின்

ஆதிக்கத்தாலும் உண்டான ஒருவிதமான மாற்றங்களை இலக்கியங்களும் உணர்த்துகின்றன. இத்தகைய மாறுதல்களினால் திருமால் வழிபாட்டில் உண்டான வளர்ச்சி நிலைகள், மாற்றங்களைக் காணும் முயற்சி இப்பகுதியில் மேற்கொள்ளப் பெற்றுள்ளது.

பக்திக் காலமாகிய சைவ, வைணவ நெறிகள் தழைத்த பல்லவர் காலத்திலும் அரசியல், சமுதாயம், இறை உணர்வுக் கோட்பாடுகள் முதலானவற்றில் பெரிதும் மாற்றங்கள் ஏற்பட்டன. சமண, பௌத்த மதங்கள் வளமை குன்றித் தமிழும் வைதீக சமயமும் மறுமலர்ச்சி அடைந்தன. இக்காலத்தில் சிவன் புகழ் பாடும் சைவ இலக்கியங்களிலும் திருமால் எவ்வாறு கருதப்படுகிறார் என்பதனையும் நடுவுநிலை தவறாது இவ்வாய்வு சுட்டிக்காட்டுகிறது. திருமால் பற்றிய செய்திகள் வகை தொகை செய்து தரப் பெற்றுள்ளன.

திருமாலையே பரம் பொருளாகக் காட்டும் ஆழ்வார்களின் நோக்கில் திருமால் வழிபாடு எத்தகைய உயர்நிலையினைப் பெற்றது என்பதை ஆய்ந்து காணும் முயற்சி இங்கு இடம் பெற்றுள்ளது.

இவ்வாறு ஆய்வு முயற்சியினை மேற்கொண்டு திருமால் பற்றிய குறிப்புகளை எடுத்தபோது அவை, திருமால் பற்றிய பெயர்கள், திருமால் பற்றிய பல்வேறு தொடர்கள், வருணனைகள், திருமகளோடு திருமாலுக்குள்ள உறவு, திருமாலின் அவதாரங்கள், வழிபாட்டு நிலைகள், திருக்கோயில் வழிபாட்டு வளர்ச்சி நிலைகள் என்ற வகையில் ஒழுங்குபடுத்தப்பெற்று, அவ்வாறு ஒழுங்குபடுத்தப் பெற்ற செய்திகளின் அடிப்படையில் கட்டுரைகள் எழுதப்பெற்று இயல்களாக அமைக்கப் பெற்றுள்ளன.

அவை வருமாறு :—

1. சங்க இலக்கியங்களில் திருமால் வழிபாடு
2. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் வழிபாடு
3. சைவ இலக்கியங்களில் திருமால் வழிபாடு
4. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் திருமால் வழிபாடு

மேற்குறித்த நான்காம் இயலில் மிகுதியான தகவல்களை ஆய்வுரையாக வழங்க வேண்டிய நிலை ஏற்பட்டதால் அவை நான்கு உட்தலைப்புகளில் எழுதி வெளியிடப் பெற்றுள்ளன. அவை வருமாறு :

1. அவதாரங்கள்
2. பொதுச் செய்திகள்
3. அகத்துறைச் செய்திகள்
4. திருமால் வழிபாட்டு நிலை

ஆழ்வார்கள் காலம் வரையில் இவ்வாய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது. ஆசாரியர்கள்' குறிப்பாக நாதமுனிகள், ஆளவந்தார், இராமானுசர், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள் ஆகியோரது காலத்தில் திருமால் பற்றிய கருத்துகள் வளர்ச்சியுற்ற பாங்கை இனிவரும் ஆய்வாளர்கள் தொடரலாம் எனக் கருத்தும் கூறப்பெற்றுள்ளது.

மிகப் பழங்காலந்தொட்டே தொடர்ந்து வரும் வைணவ நெறி இராமானுசர் காலத்தில் புத்தொளி பெற்று அவரது அரிய நொண்டால் ஒழுங்குபடுத்தப் பெற்றது. இராமானுசர் வேதம், உபநிடதங்கள், ஆழ்வார் அருளிச் செயல்கள் ஆகியவற்றுள் ஆங்காங்கே விரவிக் கிடந்த வைணவ நெறிகளைத் தொகுத்துக் கோவைப்படுத்தித் தெளிய வைத்தார். ''விசிஷ்டாத்வைதம்'' என்ற பெயரில் புதிய நெறியாகவும் அறிமுகப்படுத்தினார். அதனால் இன்று வைணவம் ''இராமானுசர் தரிசனம்'' என வழங்கப் பெறும் நிலையை எய்தியுள்ளது. இராமானுசர் காலத்திற்குப் பின் சோழர் காலம், நாயக்கர் காலங்களில் திருமால் பற்றிய • செய்திகளில் மாற்றங்கள், வளர்ச்சிகள் ஏற்பட்டிருக்கக் கூடும். எனவே, பின்வரும் ஆய்வாளர்களுக்கு ஆழ்வார்கள் காலத்திற்குப் பின் இராமானுசர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம் என வரும் பல்வேறு காலக் கட்டங்களில் திருமால் வழிபாட்டு நிலை குறித்து ஆராய்ச்சி செய்ய வாய்ப்பு உள்ளது என்பதுவும் இவ்வாய்வுரையில் சுட்டிக் கூறப் பெற்றுள்ளது. பின்வரும் ஆய்வாளருக்கான ஆய்வுக் களங்களாக அவற்றை அமைத்துக் கொள்ளலாம் என்ற கருத்தும் தெரிவிக்கப் பெற்றுள்ளது.

இவ்வாய்வேட்டில் நான்கு இயல்கள் உள்ளன. ஒவ்வோர் இயலிலும் கூறப்பெற்ற செய்திகளைத் தொகுத்துக் கூறவேண்டும் என்ற ஆய்வு நெறிக்கேற்ப அவை அடுத்து வரும் பத்திகளில் எழுதப் பெற்றுள்ளன.

## இயல் ஒன்று

**சங்க இலக்கியங்களில் திருமால் வழிபாடு:** சங்க இலக்கியங்கள், பண்டு தொட்டே தமிழரிடம் தெய்வ வழிபாடுகள் இருந்து வந்தமை, திருமாலைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள், அவை உரைக்கும் திருமாலின் பண்புகள், அப்பெயர்கள் இடம் பெறும் சூழல்கள், பெயர்கள் பற்றிய செய்திகளில் இடம் பெறும் திருமாலின் அவதாரங்கள் அதற்குரிய காரணங்கள் கூறப் பெற்றுள்ளன. திருமகளோடு திருமாலுக்கு உள்ள உறவு பற்றிய

செய்திகளில் ''திரு'' என்னும் சொல் உணர்த்தும் பொருள் திருமால் மார்பில் மறுவாகிப் பின் உருவாகி, அதன் பின் திருமாலினின்றும் பிரிந்து தனித்த உருவமாகிக் காலப்போக்கில் தனித் தெய்வ வணக்கத் திற்குரியவளாக மாறிய திருமகளின் வளர்ச்சி நிலைகள் காட்டப் பெற்றுள்ளன. விஷ்ணு புராணம் கூறும் பாற்கடலில் திருமகளின் தோற்றம் பற்றிய செய்திகளோடு ஒத்தனவாக அமையும் சங்க இலக்கியச் செய்திகள் முதலியனவும் இடம் பெற்றுள்ளன.

திருமாலின் நிறம், ஆடை, மாலை, கொடி, ஊர்தி முதலியனவும் பாம்பணைப் பள்ளி கொண்டவன், சங்கு சக்கரம் உடையவன், மகன் காமன் பிரமனைப் படைத்தவன் போன்ற செய்திகளோடு அமைந்த ''திருமால் பற்றிய பல்வேறு தொடர்கள்'' பற்றிய கருத்துகள் கூறப்பெற்றுள்ளன. கொடியும், ஊர்தியுமான கருடன் பற்றிய செய்திகள் புராணச் செய்திகளுடன் ஒத்துள்ள தன்மையும் காட்டப்பெற்றுள்ளன.

முல்லை நில முதன்மை, முல்லை நிலத் தெய்வமாகத் திருமால் வணங்கப்பட்டமை, பிற நில மக்களால் திருமால் வணங்கப்பட்ட நிலை, திருமாலின் கோயில்கள், திருமாலிருஞ்சோலை, இருந்தையூர் முதலிய திருப்பதிகள் பற்றிய செய்திகள், சங்க காலத்திலேயே திருமாலைக் கோலத்துடன் சித்தரிக்கும் பண்பு தோன்றியிருந்தமை வழிபாட்டு நிலை எத்தகையது முதலான செய்திகள் விளக்கப் பெற்றுள்ளன.

[illegible] பரிபாடல் முதலான இலக்கியங்களில் திருமாலை முழுமுதற் கடவுளாகக் காட்டும் திருமால் பற்றிய வருணனைகள், திருமாலிடம் இறை உணர்வைக் கண்டுணர்ந்து போற்றிய புலவர் [illegible], குறிப்பிட்ட நிலத்திற்கு, இனத்திற்குத் தெய்வமாக இருந்த மாயோன் வளர்ந்து எல்லா நிலத்திற்கும் உரிய பெருந் தெய்வமாக மாறிய வளர்ச்சி நிலைகள் காட்டப் பெற்றுள்ளன. தொல்காப்பியர் கூறும் புறத்துறைகளுள் ஒன்றான பூவை நிலைத் துறையில் திருமாலின் பண்புகளை மன்னர்களுக்கு ஏற்றி உரைத்தல், திருமாலின் அவதாரங்கள், அவதாரத்தின் நோக்கம், சங்க இலக்கியங் களில் இடம் பெறும் அவதாரங்கள், அவற்றின் செய்தி விளக்கங்கள், [illegible] சூழல், மிகுதியாக இடம் பெறும் கிருட்டிணாவதாரச் செய்திகள், கண்ணன் பற்றிய பாரதக் கதைக் குறிப்புகள், சங்க காலத்தில் திருமாலுடைய வழிபாட்டு முறைகள், திருமால் வழிபாட்டின் நிலை [illegible] எத்தகையது என்பன போன்ற கருத்துகள் இவ்வியலில் ஆய்வு நோக்கில் வழங்கப் பெற்றுள்ளன.

## இயல் இரண்டு

**சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் வழிபாடு:** களப்பிரர் காலச் சூழல், நீதி இலக்கியங்கள், அவற்றின் தோற்றம் பற்றிய செய்திகள், திருமாலைக் குறிக்கும் பெயர்கள், அவற்றில் நற்பண்புகளைக் குறிப்பன, நிறம் பற்றியன, அவதாரப் பெருமைகளை விளக்கி நிற்பனவும்; திருமகள் பற்றிய செய்திகளில் முந்தைய காலத்தை ஒப்பிட்டும், வளர்ச்சி நிலைகளையும் கண்டு கூறுதல், திருமகளை செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் தொடர்புபடுத்திப் பேசல், மானிடப் பெண்ணுக்கு உவமமாகத் திருமகள் அமையும் போக்கு, வளத்திற்குக் காரணமானவள், மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகத் திருமகள் கூறப்படல், கண்ணனின் காதலி நப்பின்னை பற்றிய செய்திகளில் கண்ணன் ஏறு தழுவி அவளை மணந்த செய்தி, குரவையாடிய செய்தி முதலியனவும், திருமாலின் தங்கையாகக் கூறப்படும் கொற்றவை பற்றிய செய்திகள், திருமாலின் காக்கும் ஆற்றலாகக் கொற்றவை குறிக்கப்படல், திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறல், திருமால் கோவில்கள், மாயோன் பாணி, விஷ்ணு புராணம், எட்டெழுத்து மந்திரம், திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி நிலைகள், வழிபாட்டுப் பொருள்கள், திருமால் பற்றிய வருணனைகள், திருமாலின் கோலங்கள், கிடந்த வண்ணம், நின்ற வண்ணம், அவதாரங்கள், அவதாரச் செய்திகளில் வளர்ச்சி நிலைகள், இராமாவதாரச் செய்திகள் மிகுதியான நிலை, கண்ணனின் வீரச் செயல்கள், குறும்புகள், பாரதக் கருத்துகள், பூவை நிலைத்துறையில் அமைந்த செய்திகள், வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி நிலைகள், கோவில் வழிபாடு இவற்றில் ஏற்பட்ட மாற்றங்கள், வளர்ச்சி நிலைகள் பலவும் வரலாற்று நோக்கிலும் வளர்ச்சி நோக்கிலும் ஆய்ந்து எழுதப்பெற்றுள்ளன.

## இயல் மூன்று

**சைவ இலக்கியங்களில் திருமால் வழிபாடு:** பல்லவர் காலச் சூழ்நிலை, பக்தி இலக்கியங்கள் தோன்றி வளர்ந்தமை, நாயன்மார்களின் பணி, சிவ நெறி, திருமால் நெறி பற்றிய செய்திகள், திருமகள் பற்றிய செய்திகள், நால்வகைத் தேவியருள் ஒருத்தியாகச் சுட்டப் பெறுகின்ற தன்மை, திருமகள் சிவனை வழிபட்ட செய்திக் குறிப்பு, அம்பிகையின் அம்சமாகத் திருமகள் சுட்டப்படல், திருமகள் வழிபாட்டில் காணப்பெறும் புதிய செய்திகள், நப்பின்னை பற்றிய செய்திகள் கூறப்பெற்றுள்ளன.

திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறல், அவை இடம் பெறும் சூழல்கள், அமையும் போக்கு, திருமாலின் குணங்கள், அவை இடம் பெறும் சூழல், சொல்லப்படும் காரணங்கள்,

திருமாலைச் சிவனுடன் ஒப்பிட்டுக் கூறும்போது திருமாலின் பண்புகள், கூட்டியும், குறைத்தும் அமையும் திருமால் பற்றிய செய்திகள், வழிபாட்டில் சடங்குகள், இடம் பெறும் வழிபாட்டுப் பொருள்கள், திருமாலின் அவதாரங்கள், அவை இடம் பெறும் சூழல்கள், மிகுதியாக இடம் பெறும் கிருட்டிணாவதாரத்தில் புதியனவாகக் கூறப்படும் செய்திகள், பாரதக் கருத்துகள் இடம் பெறாமைக்குக் காரணங்கள் திருமால் பற்றிய பெயர்கள், அவை இடம்பெறும் சூழல்கள், உணர்த்தும் பண்புகள், திருமால் பற்றிய பல்வேறு செய்திகளில சிவனது பாகமாகத் திருமால், திரிபுரம் அழிக்க அம்பானவன், சிவனிடம் சக்கரம் பெற்றவன், சிவனை உள்ளத்தில் கொண்டவன், வழிபட்டவன் முதலான செய்திகளும் இகழ்ச்சிக் குறிப்பாக அமையும் திருமால் பற்றிய செய்திகளும், திருமால் மோகினி வடிவு கொண்டது, அமுது கடையத் துணை நின்றது, திருமாலின் அருள் திறம் விளக்கும் செய்திகளும், மும்மூர்த்தி பற்றிய செய்திகள், திருக்கோவில்கள், அடியவர்கள், அருட்கோலம், இயற்கைப் பொருளின்பம், திருமால் பற்றிய புராணச் செய்திகள், புராணம் பற்றிய 'செய்திகள் திருமால் பற்றிய செய்திகளில் வளர்ச்சி என்ற முறையில் இடம்பெறும் செய்திகளும், தளர்ச்சி என்ற முறையில் இடம் பெறாமற்போன செய்திகளும், சைவ இலக்கியங் களில் திருமால் பற்றிய செய்திகள் அமையும் விதம், அவற்றின் நோக்கம் இவை அனைத்தும் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

## இயல் நான்கு

### நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் திருமால் வழிபாடு

**ஒன்று - அவதாரங்கள் :** பக்திக் காலச் சூழல், ஆழ்வார்களின் தோற்றம், அவர்களது தொண்டுகள், பக்திப் பாசுரங்களின் சிறப்பு, அவதாரங்கள், அவற்றின் நோக்கம், சிறப்புகள், ஆழ்வார்கள், திருமாலின் அவதாரங்கள், முந்தைய கால இலக்கியங்களில் காண்பதைக் காட்டிலும் வள்ர்ச்சி நிலையில் அமைந்த அவதாரச் செய்திகள், இடம் பெறும் சூழல், பத்து அவதாரங்களும் இடம் பெற்றுள்ளமை, திருமால் நெறியின் பிறப்பிடம் தமிழகம், மன்னர் களைப் பாடும் நெறி மறைந்து இறைவனைப் போற்றும் தன்மை மிகுந்த நிலை, இறைவன் எளியவன் என்று வலியுறுத்த அமைந்த செய்திகள், கிருட்டிணன், இராமன் பற்றிய செய்திகள் மிகுதியும் இடம் பெறக் காரணங்கள் முதலியன இங்கு இடம் பெற்றுள்ளன.

**இரண்டு - பொதுச் செய்திகள் :** திருமால் பற்றிய பல்வேறு புராணச் செய்திகள், புதியனவாகக் கூறப்படும் செய்திகள், திருமால் பரம்பொருளாகக் காட்டப்படல், மூவரில் முதல்வன்,

திருமால் சிவனைத் தோற்றுவித்தவன், திருமால் பெருமைகளாகக் கூறப்படும் செய்திகள் போன்றவை இத்தலைப்பில் ஆய்ந்து கூறப் பெற்றுள்ளன.

**மூன்று - அகத்துறைச் செய்திகள் :** திருமால் வழிபாட்டில் புதிய நெறியாக ''நாயக - நாயகி பாவம்'' சங்க கால அகப் பொருள் மரபு, பக்திக் காதலுச்குப் பயன்பட்டமை, அகப் பொருள் இலக்கணத்துடன் திருமால் பற்றிய செய்திகளை ஒப்பிட்டுக் காட்டல், அகத்துறைச் செய்திகளாக ஆழ்வார்களின் உணர்வுகள், அவற்றை மிகுதியும் கையாண்டவர்கள், அவை இடம் பெறக் காரணங்கள், சமுதாயச் சூழல் முதலியன இத்தலைப்பில் கூறப் பெற்றுள்ளன.

**நான்கு - திருமால் வழிபாட்டு நிலை :** சங்க கால வழிபாட்டு நிலைக்கும், திவ்வியப் பிரபந்தங்கள் தோன்றிய பக்திக் கால வழிபாட்டு நிலைக்கும் உள்ள வளர்ச்சி நிலைகள், திருமால் பற்றிய வருணனைகள், புதிய முறையில் அமைந்த புனைந்துரைகள் அவை இடம் பெறக் காரணங்கள், ஆழ்வார் பாசுரக்கருத்துகளை முந்தைய கால இலக்கியக் கருத்துகளோடு ஒப்பிட்டுக் காண்கின்ற நிலை, காலந்தோறும் ஏற்பட்ட வழிபாட்டு நிலைகள், மாற்றங்கள், திருக்கோவில் வழிபாட்டு வளர்ச்சி நிலைகள், வழிபாட்டிற்குரிய பொருட்கள், மலர்கள், மிகுதியும் காட்டப் பெற்றுள்ளமை, திருமாலின் கோலங்கள், மூன்று கோலங்கள், வைணவத்தின் வளர்ச்சி நிலை பற்றிய செய்திகள் இப்பகுதியில் வகை தொகை செய்து விளக்கப் பெற்றுள்ளன.

## இயல் ஐந்து

**நிறைவுரை :** இவ்வாய்வின் வழிக்கண்ட முடிபுகளின் தொகுப் பாகவும், மேற்கொண்டு நிகழ்த்த இயலும் திருமால் வழிபாட்டைப் பற்றிய ஆய்வுக் களங்களில் குறிப்பாகவும் விளங்குகிறது ''நிறைவுரை'' என்னும் இயல், இன்னும் பல வளர்ச்சி நிலைகளை வெளிப்படுத்தக் கூடியதாக விளங்கும் திருமால் வழிபாட்டைப் பற்றிய செய்திகளை ஆய்வாளர்களிடயே அறிமுகப்படுத்தி முன்னிறுத்தும் முயற்சியாக இவ்வாய்வு நிகழ்ந்துள்ளது.

# சங்க இலக்கியங்களில் திருமால் வழிபாடு

**சங்க** காலம் தமிழகத்தின் பொற்காலம் என அனைவராலும் போற்றப்படுகின்றது. சமயத்துறையில் இன்று காணப்படும் குழப்பம் எதுவுமில்லாமல், சங்ககாலத் தமிழர்கள் வாழ்ந்து வந்தார்கள் என்பதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம்.

பண்டைக் காலந்தொட்டே தமிழரிடம் தெய்வ வழிபாட்டு முறைகள் இருந்து வந்திருக்கின்றன என்பதைச் சங்க நூல்கள் வாயிலாக அறிய முடிகின்றது. தொல்காப்பியத்தில் நானிலங்கள் பற்றிய பாகுபாட்டையும் அவ்வந்நிலங்களில் வழிபடப்பெறும் கடவுளரின் பெயர் பற்றிய தகவல்களையும் அறிய வருகின்றோம்.

தெய்வ வழிபாடு என்பது மக்கள் வாழ்க்கையில் இரண்டறக் கலந்த ஒன்றாகும். சங்க இலக்கியங்களில் ஒன்றான பரிபாடலில் திருமால் பற்றியும், முருகன் பற்றியும், மிக விளக்கமாக அறிய முடிகின்றது. அக்கடவுளரின் வழிபாடு சங்க காலத்தில் செல்வாக் கோடு இருந்தது என்பதை அந்நூல் தரும் தகவல்களைக் கொண்டு துணியலாம். புறநானூறு, அகநானூறு முதலான தொகை நூல் களிலும் தெய்வ வழிபாடு பற்றிய குறிப்புகள் உள்ளன.

**''மாயோன் மேய காடுறை உலகமும்**
**சேயோன் மேய மைவரை உலகமும்**
**வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**
**வருணன் மேய பெருமணல் உலகமும்''** [1]

என்ற அடிகளால் தெய்வ வழிபாடு அன்று முதல் தொடர்ந்து இருந்து வருகின்றது என்பதை அறியலாம்.

சங்க காலத்தில் பல தெய்வ வழிபாடுகள் இருந்தன என்பதைச் சங்கச் சான்றோர் பாடல்களால் அறிய முடிகின்றது. திருமால், முருகன், கொற்றவை, வருணன், இந்திரன் முதலான தெய்வங்களைப் பற்றிய தகவல்கள் உள்ளன. சிவன் பற்றிய தகவல்களைப் புறநானூறு முதலான நூல்களில் காண்கின்றோம். பல தெய்வ வழிபாடுகள் மக்களிடையே இருந்தபோதிலும் சமயக்

1, தொல் அகத்திணை - நூற்பா, 5

காழ்ப்புணர்ச்சியோடு மக்கள் நடந்துகொண்டதற்கான சான்றுகளை அந்த நூல்களில் காண முடியவில்லை. திருமாலும் முருகனும் அன்றைய மக்களால் பெரிதும் போற்றப்பட்டு வந்த தெய்வங்கள் என அறிய முடிகின்றது. அவற்றுள்ளும் திருமாலைப்பற்றிய பரிபாடல்களைப் பார்க்கும்போது ''திருமாலே எல்லாம்'' என்ற உணர்ச்சி தோன்றுமாறு அப்பரிபாடல் வரிகள் அமைந்துள்ளன. திருமாலுக்கே ''முழு முதன்மை'' பேசப்படுகின்றது என்று வைணவ சமயத்தார் கூறுமளவிற்குத் திருமால் வழிபாடு சங்க நூல்களில் பேசப்பட்டுள்ளதால் அத்திருமால் வழிபாடு சங்க காலத்தில் எவ்வாறிருந்தது என்பதைக் காணும் முயற்சியே இங்கு மேற்கொள்ளப்பெறுகின்றது.

சங்க இலக்கியங்களில் திருமாலைக் குறிக்கப் பல்வேறு பெயர்கள் வழங்கப்பட்டமை, அவன் பல்வேறு தொடர்களால் அழைக்கப் பட்டமை, திருமால் பற்றிய வருணனைகள், திருமகளோடு திருமாலுக்கு உள்ள உறவு, திருமாலின் அவதாரங்கள் பற்றிய பல செய்திகள் ஆகியவை இக்கட்டுரையில் ஆராயப்பெறுகின்றன. திருமால்பற்றிய ஆய்வு நிகழ்த்தும் இப்பகுதியில் சங்க இலக்கியங்களின்று பெறப்படும் தகவல்கள் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன. சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பெற்ற நூல்களும், திருமால் பற்றி எழுதப் பெற்றுள்ள பிற நூல்களும் இவ்வாய்வில் எடுத்தாளப் பெறுகின்றன. எனினும், அவை துணைமை ஆதாரங்களுக்கான தரவு நூல்களாகவே கொள்ளப்பெறுகின்றன. இவ்வாய்வில் தொல்காப்பியச் செய்திகள் ஆய்வின் தரத்தை உயர்த்தும் நோக்கில், ஆங்காங்கு எடுத்தாளப்பெற்றுள்ளன. சங்க இலக்கியங்கள் முதன்மை ஆதாரமாக அமைந்திருப்பதால் அவற்றிற்கு எழுதப் பெற்ற பண்டைய உரை விளக்கங்களும் ஆங்காங்கு கருத்துத் தெளிவிற்காக நாடப்பெற்றுள்ளன. மேலும், திருமால் வழிபாடு வைதிக சமயத்தைச் சார்ந்திருப்பதால், வேத நெறியை விளக்கும் வடமொழி நூற்களின் கருத்துகளும் இவ்வாய்வில் உண்மை காணும் நோக்கில் ஒப்பவைத்து ஆராயப்படுகின்றன,

**திருமால்:** தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப் பாட்டு ஆகியவற்றில் திருமால் பற்றிய குறிப்புகள் கிடைக்கின்றன. வடமொழியில் அமைந்துள்ள இருக்குமறை, அரிவம்சம், விஷ்ணு புராணம் ஆகியவற்றிலும் திருமால்பற்றிய செய்திகள் அமைந்துள்ளன. அரிவம்சம், விஷ்ணு புராணம் கூறும் திருமாலின் பெயர்கள் சங்க நூல்களில் எங்கும் இல்லையெனினும் அவை

உரைக்கும் திருமால் பண்புகளை விளக்கும் வகையில் பல்வேறு பெயர்கள் இடம் பெறக் காண்கின்றோம்.

மாயோன்[2], மால்[3], திருமறுமார்பன்[4], நேமியான்[5], திகிரியோன்[6], செல்வன்[7], முதல்வன்[8], நெடியோன்[9], முந்நீர் வண்ணன்[10], வெய்யோன்[11], மாயவண்ணன்[12], அறிதுயிலோன்[13], கேசவன்[14], போன்ற பெயர்களால் திருமால் சங்க இலக்கியங்களில் போற்றப்படக் காண்கின்றோம்.

திருமால் என்னும் தெய்வத்தைப் பல பெயர்களால் வழங்கினர். அவற்றுள் ஒன்று ''மாயோன்'' என்பது. மாயோன் என்ற சொல்லுக்கு மாயையில் வல்லவன் எனப் பொருள் கூறுவர். மாயையில் வல்ல பண்பாளனை 'மாயோன்' என்ற திருநாமத்தால் விளித்து வழிபட்டு வந்தனர் போலும்! தொல்காப்பியத்திலும், சங்கப் பாடல்களிலும் திருமாலை 'மாயோன்' என அழைத்திருப் பதைப் பலவிடங்களில் காண்கின்றோம். முல்லை நிலத்திற்குரிய கடவுளாகத் தொல்காப்பியர் கூறுமிடத்து ''மாயோன்'' எனக் குடுப்பிடுகின்றார். 'மாயோன்' என்ற சொல் பெரியன், கரியவன் என்ற பொருளில் ப்ண்டை இலக்கியங்களில் வழங்கி வந்துள்ளது. கரிய நிறத்தன் என்ற பொருளில் 'மாயோன்' என்ற சொல் ஆளப் பெற்றிருத்தல் வேண்டும். ஏனென்றால் பிற்காலத்து வந்த திருமாலடியார்கள் அவனைக்''கண்ணன் என்னும் கருந்தெய்வம்''[15] எண்றும் அவன் நிறத்தைப் ''பச்சை மாமலை போல் மேனி''[16] என்றும் பாடியிருத்தல் கொண்டு உணரலாம். நற்றிணையில் கபிலர் நீலமலையினையும் அதில் வீழ்கின்ற அருவியையும் பற்றிக் கூறுமிடத்துக் கண்ணனையும் அவனுக்குமுன் தோன்றிய பலராமனையும் உவமித்துக் காட்டுகின்றார். இதிலும் கண்ணன் நிறம்நீலமலை போன்றது என்ற உண்மையைஉணர்கின்றோம். நீலம் ஒரு வகையில் கருமையை அன்றோ குறிக்கும்! திருமாலின் அவதார மாகிய கண்ணனும், பலராமனும் இங்கு வண்ணத்தால் வேறுபட்டு நிற்பதைக் காண்கின்றோம்.[17] மாயோனாகிய திருமாலின் தொழில்

2. பரி. பகுதிகள் - 7-1-3
3. முல்லை, பா - 1-3
4. பரி. 1 - 36-39
5. முல்லை, கலி - 5-9-10
6. முல்லை, கலி - 4-78-79
7. பரி - 4-4-9
8. பரி - 3-41-45
9. மதுரை — 456-60
10. பெரும்பாணா, - 29-30
11. புறம் - 56-5-6
12. ஏழாம்பத்து - பக் 9-10
13. பரி - 13-26-27
14. பரி - 3-31-35
15. நாச். திரு. - 13-1-1
16. திருமாலை - 2-1
17. நற். - 32

காத்தல் தொழில். அத்தொழிலை அவன் செம்மையாகச் செய்வதால் அவனுக்குப் புகழ் கிட்டுகின்றது. அவன் செய்யும் காத்தல் தொழிலின் சிறப்பைக் குறிக்குமிடத்து ''மாயோன் விழுப்புகழ்'' என்று பாராட்டுப் பெறுகின்றது.

பரிபாடலில் உலகத் தோற்றத்திற்கு ஆதி காரணனாக விளங்குபவன் திருமால் என்று கூறுமிடத்தும், பிறவிப்பிணியினின்றும் விடுபட்டு உய்வதற்கு உதவும் பெருமானே என்று போற்றுமிடத்தும் ஆசிரியர் ''மாயோன்'' என விளிக்கின்றார்[18].

திருமாலின் உந்தியில் தோன்றும் நான்முகன் வாழும் தாமரை மலரை மதுரை மாநகருக்கு உவமை காட்டுமிடத்தில் அவன் ''மாயோன்'' என்று வழங்கப்படுகின்றான்[19].

முல்லைக் கலியில் வீரர்களின் மறச்செயலுக்கு உவமை கூறுமுகத்தான் திருமாலின் அவதாரமாகிய கண்ணனது அவதாரமும் அவனது மறப்பண்பும் விளங்க உரைக்கின்றார் ஆசிரியர். கட்டுக் கடங்காத வேகத்துடன் தன் மேற்சென்ற சிவந்த ஏற்றினை வென்று நிற்கும் காயாம்பூக் கண்ணி சூடிய வீரனுக்கு, பகைவர் விடுத்த கூந்தற் குதிரையை வாயைப் பிளந்துகொன்ற காலத்தில் மாயவனும் இப்படித்தான் இருந்திருப்பானோ என்று தன் நெஞ்சம் நடுங்குவதாக ஒரு தலைவியின் கூற்றாகப் பாடுமிடத்தில் கண்ணன் மாயோனாகக் குறிக்கப்படுகின்றான்[20]. இத்தகைய மறச்செயல் காரணமாகத் திருமாலுக்குக் ''கேசவன்'' என்ற பெயரும் வழங்கப்படுதலைக் காண்கின்றோம். புறநானூற்றில் பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனைக் காரிக்கண்ணனார் பாடுமிடத்து அவனது காக்கும் புகழினைக்கூறவந்தவர் காத்தற் கடவுளாகிய திருமாலுடன் உவமிக்கின்றார். வல்லவராயினும், அல்லாதவரானாலும் நின்னைப் புகழ்ந்து போற்றியவருக்கு மாயோன்போலத் துணை நின்று அருளிக் காக்கும் புகழ் அமைந்தவனே என்கிறபோது திருமால் தன்னைப் போற்றியவருக்குத் துணை நின்று அருளிக் காக்கும் பண்பினன் என்பது தோன்ற மாயோனாகக் குறிக்கப்படுகின்றான்[21].

பதிற்றுப்பத்தில் 7-ம் பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாடுமிடத்து திருமாலைக்குருவாகக் கொண்டு சிறந்த நெல் விளைகின்ற ஒகந்தூரை இறையிலியாகத் தந்தான் என்று சிறப்பிக்கு மிடத்து மாயையே தன் வண்ணமாகக் கொண்டவன் திருமால் என்ற பண்பு தோன்ற மாயவண்ணன் என்று குறிக்கின்றார்[22].

18. பரி. - 3-1-3
19. பரி. பகுதிகள் - 7-1-3
20. முல்லை. கலி - 3-51-55
21. புறம் - 57-1-3
22. பதிற்றுப். - 7-ம்பத்து-பதிகம்

இவ்வாறு ''மாயவன்'' என்ற சொல், திருமாலின் அருட்பண்பு, மறப்பண்பு முதலியவற்றை இன்ன வண்ணத்தன் என்ற நிலையில் திருமாலைக் குறிக்கப் பண்டை இலக்கியங்களில் பயன்படுத்தப் பெற்று வந்துள்ளது என அறிகின்றோம்.

**மால் :** திருமால் ''மால்'' என்ற பெயரோடும் பல இடங்களில் போற்றப்படக் காண்கின்றோம். 'மால்' என்பதற்குப் ''பெரியோன்'' என்றும், ''மாயோன்'' என்பதற்குக் ''கரியவன்'' என்றும் பொருள் கூறுவர்.

முல்லைப்பாட்டில் அகன்ற இடத்தையுடைய உலகத்தை வளைத்துச் சக்கரமும் சங்குமாகிய குறிகளையுடையவனும், திருமகளை அணைத்ததுவுமாகிய வலிய கையினையுடையவனும், மாவலி வார்த்த நீர் தன் கையிலே சென்ற அளவிலே விண்ணிடத்து வளர்ந்தவனுமாகிய திருமால் போல என்று திருமால் உத்தம இலக்கணங்கள் பொருந்திய கைகளை உடையவன் என்றும், வாமன அவதாரத்திலே உலகளந்த தன்மையோடு கூறப்படுமிடத்துப் பேராற்றலும் பேருருவும் தோன்ற ''மால்'' என அழைக்கப் படுகின்றான்[23].

படைப்புக்குக் காரணமாகிய இருவர்க்கும் தாதையாகியவன் என்று படைப்போரைப் படைத்தானும் திருமாலே என்றும், அவனை அறிதல் அரிது என்றும், ஆதலின் அவனே வந்து அருளிச் செய்தல் வேண்டும் என்றும், வேண்டுமிடத்து படைப்போரைப் படைத்தவனாகக் காட்டுமிடத்து ''இலங்கு பூண்மால்'' என்று குறிக்கப்படுகின்றான்[24].

கொடியோனைக் கொன்று புகழால் சிறப்புற்ற ஒரு கையினையும், நடுநிலை பிறழ்ந்த நயமற்ற ஒரு கையினையும் ஆக இரு கைகளைக் கொண்ட திருமாலே என்று அவனைப் போற்று மிடத்துத் திருமாலின் அவதாரமாகிய கண்ணன் அவதாரத்தில் அவனது வீரப்பண்பு தோன்ற 'கூந்தல்' என்னும் பெயரோடு வந்த குதிரையை அழித்தவன் என்னும் பொருளில் ''இருகைமால்'' என்று குறிப்பிடப்படுகின்றான்[25].

திருமாலின் ஊர்தியாகிய கருடச்சேவல் ஒரு சமயம் ஊன்றிய அவனது ஒரு விரலின் அழுத்தத்தை தாங்கானாகி ''செங்கண்மாலே என்னைக் காத்தருள்க'' எனக் கூறியவனாக ஓவெனக் குரலெழுப்பிக் கதறினான் என்று திருமாலின்

23. முல்லை, பா. - 1-3
24. பரி - 1-29-33
25. பரி - 3-31-35

பேராற்றலைப் பேசுமிடத்து ''மால்'' என்று வழங்கக் காண்கிறோம்[26].

திருமாலுடைய துதிகளாக அவனது பல்வேறு சிறப்புகளை யெல்லாம் ஒவ்வொன்றாகக் கூறுமிடத்துப் பொன்னிறக் கண்களை யுடைய பச்சை மேனியனாக, ''பொன் கண் பச்சை, பைங்கண்மால்'' என்று போற்றப்படுகின்றான்[27].

முல்லைக்கலியில், இவன்தான் இவளுக்கு உரியவன் என்று உறுதி காட்டுகின்ற, திருமணத்திற்கு அருள் கொடுக்கின்ற தெய்வமாகத் திருமாலைத் தோழி கூற்றிலே வைத்து ஆசிரியர் ''தெய்வமால்'' என்று போற்றக் காண்கின்றோம்[28].

மலைநாட்டுத் தலைவனை விளிக்குமிடத்து புலியைக் கொன்ற களிறு மல்லரை வென்ற திருமாலைப்போலக் கம்பீரமாக மலைச் சாரலில் தன் கூட்டத்திடையே உலவிக் கொண்டிருந்தது என்று கூறுகின்றார். இங்கு புலியைக் கொன்ற களிற்றை உவமிக்கு மிடத்துத் திருமால் கிருட்டிணாவதாரத்திலே மல்லரை வென்ற மறப்பண்பு தோன்ற ''மால்'' என்று வழங்கப்படுகின்றமையை உணர்கிறோம்[29].

அகநானூற்றில் திருமாலின் கிருட்டிணாவதாரச் செய்தியை உவமை காட்டுமிடத்து 'மால்' என்று வழங்கப்படுகின்றான். வடக்கின் கண்ணதாகிய யமுனையாற்றின் அகன்ற நீர்த்துறையிலே நீராடிய ஆயர் மகளிர், தண்ணிய தழையாடையினை உடுத்திக் கொள்ளுமாறு குருந்த மரம் வளைந்திட மிதித்து தந்து உதவிய திருமாலான கண்ணனைப் போல என்று அவனது செயலை உவமை காட்டுமிடத்து திருமால் ''மரம் செலமிதித்த மாஅல்போல'' என்று கூறப்படுகின்றான்.[30] இச்செய்தி, கண்ணனின் திருவிளை யாடல்கள் பழந்தமிழகத்துப் பரவியிருந்த பெருக்கத்தைக் காட்டுவதாக அமைகின்றது.

**திருமறுமார்பன் :** சங்க காலத்தில் சமுதாயத்தில் பெண்களுக்குச் சிறப்பும், பெருமையும் கொடுக்கப்பட்டிருந்த முக்கியத்துவத்தைக் காண்கின்றோம். பல பெண்பாற் புலவர்களையும் அறிகிறோம். ''அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வம்'' என்று ஔவை

26. பரி. - 3-59-62
27. பரி. - 3-81-90
28. முல்லைக்கலி - 7-32-33
29. குறிஞ்சிக்கலி - பாடல் 16-5
30. அகம் - பாடல் 59-3-6

கூறியது போல ஆணும், பெண்ணும் கூடி வாழும் அன்பு வாழ்க்கை சங்க காலத்தில் போற்றப்பட்டதை அறிகின்றோம். சங்கம் மருவிய காலத்தில் பெண்களுக்கு முக்கியத்துவம் தரப்படவில்லை. சமணர்களும், பௌத்தர்களும் பெண்களைப் பாவத்தின் சின்னமென்றும், அவர்களுக்கு வீடுபேறு இல்லை என்றெல்லாம் கூறி பெண்களுக்குச் சிறப்புத் தர மறுத்த சூழ்நிலையை காண்கின்றோம். இத்தகைய சூழ்நிலையை மாற்றித் தமிழுக்கும், சமயத்திற்கும் ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோன்றி மறுமலர்ச்சி உண்டாக்கினர். பெண்களைத் தெய்வத்தின் ஒரு கூறாகப் போற்றியதையும் அவர்தம் பாசுரங்களால் அறிகின்றோம். நதிகளையும் பெண்களாக உருவகிக்கின்ற நிலையைத் தமிழ் இலக்கியங்களால் அறியலாம். கருணைக்கு இருப்பிடமான பெண்களை முன்னிறுத்தித் தெய்வங்களும் போற்றப்பட்ட தன்மையை அறிகின்றோம். சிவனை உமையொரு பாகனாகக் கண்டது போலவே, திருமாலும் திருமகளை மார்பில் ஏந்தியவனாக, திருமறுமார்பனாக வழங்கப்பட்டான். திருமால் தோன்றியபோதே ஸ்ரீவத்சக்குறியுடைய மார்பினனாகத் தோன்றினான் என்று விஷ்ணு புராணம் கூறுகின்றது. ''திருமறுமார்பன்'' என்ற இப்பொருள் தோன்ற முதற் பரிபாடலும்,[31] முல்லைக்கலியிலும்,[32] பெரும்பாணாற்றுப் படையிலும்[33] திருமால் குறிப்பிடப்படுகின்றான். திருமகளைத் தன் மார்பிலே மறுவாகக் கொண்டவன் என்ற புராணக் கருத்துத் தோன்ற இங்ஙனம் வழங்கப்படுதல் காண்கிறோம். இச்செய்திகள் சங்க இலக்கியங்களில் குறிப்பாக ஆங்காங்கே இடம் பெறக் காண்கிறோம். அக்குறிப்புகள் திருமால்-திருமகள் பற்றிய செய்திகள் அமைந்த தலைப்பில் இடம் பெறுகின்றன,

'நேமியான்', 'திகிரியோன்' என்று திருமால் பல்வேறு இடங்களில் சக்கரப் படையின் ஆற்றல் விளங்க அழைக்கப் படுகின்றான். ''வள்ளிருள் நேமியான்''[34], ''ஆடுகொள் நேமியான்''[35], ''இகல்மிகு நேமியான்''[36], ''செருமிகு நேமியான்''[37], நீலநிற உருவின் நேமியான்''[38] என்ற திருமால் நேமியோனாகக் குறிப்பிடப்படுகின்றான். நெய்தற்கலியில்

31. பரி - 1-36-39
32. முல்லைக்கலி - 4-9-10
33. பெரும்பாணா. - 29-30
34. முல்லைக்கலி - 5-9-10
35. முல்லைக்கலி - 5-71-72
36. நெய். கலி - 2-3
37. நெய். கலி - 10-4-5
38. புறம் - 58-14-18

பகைகொண்டு வந்த மல்லர்களாகிய கொல்லேறுகளின் மத்தகத்தின் மேல் வீசிய சக்கரப் படையானது, அம்மத்தகங்களைப் பிளந்து செந்நிறமாக விளங்கியதுபோலக், கதிர்களை ஒடுக்கிக்கொண்டு மலை சேர்ந்த ஞாயிறும் செஞ்ஞாயிறாக விளங்கிற்று என்று உவமையாகச் செய்தி அமைகின்றது[39]. இக்குறிப்புகள் வாணனது ஆயிரம் கைகளையும், அந்தகன், நிகும்பன் தலைகளையும் இன்னும் பகைவர் பலரையும் அழித்த திருமாலின் சக்கராயுதத்தின் பெருமையைக் குறிப்பாக விளக்கி வெற்றிகொள் நேமியோன் திருமால் என்பதை உணர்த்துகின்றன.

திகிரியோன் என்று திருமால் ஒருசில இடங்களில் வழங்கப் படுகின்றான். இந்து புராணத்தில் பகலவன் மனைவி சங்கணா தன் கணவன் ஒளியைப் பொறுத்தற்கு இயலாது, மூன்று குழந்தை களைப் பெற்றபின் தன் இடத்தில் ''சாயை'' என்பாளை இருத்தி விட்டு அகன்றாள். கடமையில் ஒன்றியிருந்த கதிரோன் சாயை இட்ட சாபம் ஒன்று தன் மகனிடம் பலித்தபோதுதான், பலநாள் கழித்து அவள் தன் மனைவி அல்லள் என்பதை உணர்ந்து சங்கணாவைத் தேடிப் புறப்பட்டான். அவள் குதிரை வடிவில் இருப்பது கண்டு தானும் குதிரை வடிவம் பெற்றுச் சில நாள் கூடி வாழ, பின் அவ்வாழ்க்கை அலுத்துவிட மறுபடியும் உண்மை உருக்கொண்டு திரும்பினர். அப்பொழுது சங்கணாவின் தந்தை கதிரவன் ஒளியில் எட்டில் ஒரு பங்கை ஒரு கல்லின் மீது குவித்துக் குறைத்து விட்டு, அக்கல்லிலிருந்து திருமாலின் நேமி, சிவன் சூலாயுதம், முருகனின் வேல் போன்றவற்றைச் செய்தான் என கதைக் குறிப்பு கூறப்படுகின்றது.

கலித்தொகையில் பழையதாகிய கதிரை உடைய சக்கரப்படை உடையவனாகிய திருமாலைப் போற்றுவோம் என்று குரவையின் முடிவிலே மனம் உறுதி பெற்ற ஆயர் மகளிர் நாட்டையும், மன்ன னையும் வாழ்த்தித் திருமாலை வழிபடச் செல்லுகின்ற காட்சி காட்டப்படும். அவ்விடத்தில் ''நேர்கதிர் நிறைத்த'', ''தொல் கதிர்''[40] என்னும் அடைமொழிகளில் நேமி பிறந்த கதை குறிப்பாக அமையக் காண்கின்றோம். மேலும் திருமாலை வேத முதல்வனாகக் காட்டும் நற்றிணைக் கடவுள் வாழ்த்துப் பகுதியில் திருமாலின் தோற்றப் பொலிவு வருணிக்கப்படுமிடத்திலும் ''தீதற விளங்கிய திகிரியோனே''[41] என்று போற்றப்படுகின்றான். இங்கு திருமாலின் பேராற்றலும், பேருருவும் தோன்ற தீமையை அழிக்கும் திகிரிப் படையோனாகக் காட்டப்படுகின்றான்.

39. நெய். கலி - 17-1-4
40. முல்லைக்கலி - 4-78-79
41. நற். - கடவுள் வாழ்த்து

**செல்வன்:** ''துளசி மாலையை அணிந்த செல்வன்''[42] என்றும், ''சிவந்த கண்களையுடைய செல்வன்''[43] என்றும் ''மலை போன்ற மார்பமைந்த செல்வன்''[44] என்றும் திருமால் சங்க இலக்கியங்களில் செல்வனாகச் சிலவிடங்களில் வழங்கப்படுகின்றான்.

**வேத முதல்வன்** என்று திருமால் பலவிடங்களில் பேசப்படு கின்றான். ''இயன்ற எல்லாம் பயின்றகத்தடக்கிய வேத முதல்வன் என்ப''[45] என்று பாரதம் பாடிய பெருந்தேவனாரும், ''பதினாயிரம் கைமுதுமொழி முதல்வ''[46], ''வாய்மொழி ஓடை மலர்ந்த நீ''[47] என்ற பரிபாடலடிகளும் வேதத்தின் உட்பொருளாகவும், முதல்வ னாகவும் திருமால் திகழ்வதை உணர்த்துகின்றன, இவ்வாறு வேத முதல்வனாகப் போற்றப்படும் செய்தி, திருமாலைப் பிரமன், தேவர் களின் தாய் அதிதி, நாரதன் போன்றோர் வேதத்தின் உட்பொருள் எனப் பாராட்டுவதாக விஷ்ணு புராணம் கூறும் கருத்திற்கிணங்க அமைவதைக் காண்கின்றோம்.

**நெடியோன்:** இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பற்றிய இரண்டாம் பதிற்றுப்பத்தில் உலகைக் காக்கும் தன்மையிலும், அழியாத நல்ல புகழைப் பெற்றிருப்பதிலும், நெடியோனான திருமாலை ஒத்திருக்கிறான் சேரன் என்று பாராட்டப் படுகின்றான்.[48] இச் செய்திகள் சங்க காலத்தில் சேரநாட்டில் திருமாலுக்குப் பல சீர்கெழு விழாக்கள் நடைபெற்றன என்பதை உணர்த்துகின்றன. இங்கு ''நெடியோன்'' என்று சேரன் குறிக்கப்படுமிடத்து இப்பெயரினால் உலகளந்த திருமாலின் முழுமுதன்மை காட்டப்படுகின்றது. பத்துப் பாட்டில்பெரும்பாணாற்றுப்படையில் கச்சியின்சிறப்பைச் சொல்லும் பகுதியில் நீல நிறமுடைய நெடியவனுடைய உந்தியிலிருந்து நான்முக னாகிய ஒருவனைப் பெற்றெடுத்த பல இதழ்களுடைய தாமரையின் கொட்டை போல் அழகு விளங்கத் தோன்றிற்று கச்சி என்று கூறு மிடத்தில், எல்லா உலகையும் படைத்த பிரமனையும் படைத்தவன் நீலநிற உருவுடைய நெடியோனான திருமாலே என்று அவன் பரம்பொருளாகக் காட்டப்படுகின்றான்.[49] மதுரைக் காஞ்சியில் கோயில்களில் அந்தி விழாவைக் கூறுமிடத்திலும், பஞ்ச பூதங்

42. பதிற்.நான்காம்பத்து - 31-7-10
43. பரி. - 4-4-9
44. முல்லைக் கலி - 8-55-59
45. நற். - கடவுள் வாழ்த்து
46. பரி. - 31-41-45
47. பரி. - 3-13-15
48. பதிற்றுப்பத்து பாடல் - 15-35-40
49. மதுரை - 456-60

களையும் படைத்த தேவர் தலைவன் நெடியோனான திருமாலே என்று கூறப்படுகின்றது. முல்லைப் பாட்டின் தொடக்கத்தில் திருமால் மாவலியிடம் நீர் ஏற்று ஓங்கி வளர்ந்த நிலை பணிக்கடல் பருகிக்கோடு கொண்டு எழுந்த மேகத்திற்கு உவமையாகக் காட்டப் படுகின்றது. மாவலி வார்த்தநீர் கையில் சேர்ந்தவுடன் உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக் கொண்டு நிமிர்ந்தான் என்று அவனது முதன்மை தோன்ற, திரிவிக்கிரமனாகக் காட்சி தந்தமை கூறப் படுகின்றது.[50] இவ்வாறு திருமாலின் பரத்துவத்தைக் காட்டும் இடங்களில் இருநிலம் கடந்த, உலகளந்த மாண்பினை விளக்கும் வகையில் ''நெடியோன்'' என்ற பெயரால் குறிக்கப் பெறக் காண் கின்றோம்.

**வெய்யோன் :** புறநானூற்றில் நக்கீரனார் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் பாடுமிடத்து அவனது காத்தற் தொழிலைக் கடவுளரோடு உவமித்துப் போற்றுகின்றார். இங்கு வலியில் பலராமனையும், புகழால் பகைவரை அழிக்க மாயோ னையும் நீ ஒப்பவனாவாய் என்று போற்றுமிடத்தில் கருடக் கொடியையுடைய வெற்றி வெய்யோனாகத் திருமால் காட்டப்பெறு கின்றான்.[51] திருமாலுக்கு ஊர்தியாகக் கருடன் இருந்தமையும், நினைத்த பொழுதெல்லாம் அவன் வாகனமாகிப் பகைவரைப் பதற வைத்த செய்திகளையும் விஷ்ணு புராணமும் அரி வம்சமும் கூறுகின்றன. இச்செய்தி மேற்குறித்த புறநானூற்று வரிகளில் குறிப்பாகப் புலப்படக் காண்கின்றோம்.

**முந்நீர்வண்ணன், மாயவண்ணன்:** பெரும்பாணாற்றுபடையில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் திருமாலை முந்நீர் வண்ணனாகக் கண்டுப் போற்றுகின்றார். இங்கு திருமாலின் அவதாரமாகிய இராமனைப் பெரிய நிலத்தைத் திரிவிக்கிரமனாகி அளந்தவன் என்றும், திருவையும் மறுவையும் மார்பில் தரித்தவன் என்றும், முந்நீர்வண்ணன் என்றும் குறிப்பிட்டுச்சோழ அரசர்கள் அவனுடைய மரபில் வந்தவர்கள் என்றும் குறிப்பிடுகின்றார்.[52] இங்கு திருமாலின் முதன்மையைக் காட்டும் இருநிலம் கடந்த ஆற்றலோடு அவனது நிறமும் தோன்ற, முந்நீர்வண்ணனாகக் குறிக்கப்படுகின்றான். பதிற்றுப்பத்தில் செல்வக் கடுங்கோவாழியாதனைக் கபிலர் பாடு மிடத்து ''மாயவண்ணன் மன்னுறப் பெற்று'' என்று போற்று கின்றார்.[53] இங்கு திருமால் யாகப்புரோகிதனாகவும், மாயையே தன் வண்ணமாகக் கொண்ட தன்மையனாகவும் சுட்டப்படுகின்றான்.

50. முல்லை.பா - 1-3
51. புறம் - 56-5-6
52. பெரும்பாணா. - 29-30
53. பதிற். ஏழாம் பத்து - பதிகம் 9-10

**அறிதுயிலோன்** : பரிபாடலில் திருமால் அவனது காத்தற்பண்பு தோன்ற அறிதுயிலோனாகக் காட்டப்படுகின்றான். இங்கு தன்னுருவின் வண்ணத்தோடு மாறுபட்டதான பாற்கடலின் நடுவிடத்தே மின்னொளி பரப்பும் சுடர்மணிகளைக் கொண்டு ஆயிரம் தலைகளை விரித்தபடியிருக்கும் ஆதிசேடனாகிய பாம்பணையின் மேலாகத் திருத்துழாய் மாலையைச் சூடியவனாய் அறிதுயில் கொள்ளும் காட்சி காட்டப் பெறுகின்றது. இங்கு ஒருவனாயிருந்து அறிதுயிலோனாக, பலராமனாக, வராகமாக என்று மூவேறு உருவங்கொண்டு முதற்கண் பிரிந்து நின்று விளங்கிய பெருமானே என்று திருமாலைப் போற்றுமிடத்து, உலகைக் காக்கும் பொருட்டு அறிதுயிலோனாகப் பாற்கடலில் பள்ளிகொண்ட தன்மை தோன்ற அழைக்கப்படுகின்றான்[54].

**கேசவன்:** மூன்றாம் பரிபாடலில் குதிரை வடிவமாக வந்த ''கேசி'' எனப்படும் அசுரனை வதைத்த மாலின் முதன்மை கூறப்படுகின்றது. கூந்தல் என்னும் பெயரைக் கொண்டவனாய் வந்தே கூந்தலை அழித்தான் என்னும் சுவை மிக்க பொருள் படும்படியாக இத்தொடரால் குறிக்கப்படுகின்றான். கொடியோனைக் கொன்று புகழால் சிறப்புற்ற ஒரு கையினையும், நடுநிலை பிறழ்ந்த நயமற்ற ஒரு கையினையும் ஆக ''இருகைமாலே'' என்று தீமையை அழித்த நற்பண்பு தோன்ற கூந்தல் என்னும் பெயரைக் கொண்டவனாய், அழகிய கூந்தலையுடைய ''கேசவன்'' என்னும் பொருள் படத் திருமால் இங்கு குறிக்கப்படுகின்றான்.[55]

**அச்சுதன் :** இருபத்து ஒன்றாம் பரிபாடலின் ஆசிரியர் அச்சுதன் என்னும் திருமாலின் பெயர் கொண்டவராக இருந்தமை அறிகின்றோம். பரம்பொருளாக அனைத்திற்கும் தலைவன் திருமாலே என்று பொருள்படும்படியாக இப்பெயர் விளங்கக் காண்கின்றோம். இச்செய்திகளிலிருந்து சங்க இலக்கியங்களில் திருமால் அவனது பண்பு தோன்றப் பல்வேறு பெயர்களால் விளிக்கப்படக் காண்கின்றோம்.

திருமாலின் பெயர்கள் பற்றிய இச்செய்திகளில் திருமாலின் அவதாரங்களாக இடம் பெறுவன கிருட்டிணாவதாரமும், வாமன அவதாரமும், இராமாவதாரமுமேயாகும்.

வண்ணத்தால் வேறுபட்ட நிறம் பற்றிய வருணனையில் கிருட்டிண-பலராமர் பற்றிய செய்தி உவமை காரணமாக இடம் பெறுகின்றது. முல்லைக்கலியில் வீரர்களின் மறச் செயலுக்கு உவமை கூறுமுகத்தான், ''இருகைமால்'' என்று போற்றப்பட்டுத் திருமால் கிருட்டிணாவதாரத்தில் செய்த மறப்பண்பு பேசப்படுகின்றது.

54. பரி - 13-26-37
55. பரி - 3-31-35

குறிஞ்சிக் கலியில் புலியைக் கொன்ற களிற்றுக்குத் திருமால் உவமிக்கப்பட்டு மல்லரை வென்ற கண்ணனாகக் காட்டப்பட்டு கிருட்டிணாவதாரச் செய்திக் குறிப்பு இடம் பெறக் காண்கிறோம். அகநானூற்றில் ''மரம்செல மிதித்த மால்'' என்று கிருட்டிணா வதாரத்தில் ஆயமகளிரின் துயர் தீர்த்த கண்ணனது கருணைச் செய்தி பேசப்படுகின்றது. புறநானூற்றில், பாண்டியனின் காத்தற் தொழிலைக் கடவுளரோடு உவமிக்கும் இடத்தில் வலிமைக்கு பலராமனும் புகழுக்கு மாயோனுமாக உவமிக்கப்பட்டுப் புகழை யுடையவன் என்று திருமால் போற்றப்படுகின்றான்.

முல்லைப்பாட்டின் தொடக்கத்தில் திருமாலின் உத்தம இலக்கணங்கள் பேசப்படுமிடத்தில் வாமன அவதாரம் போற்றப் படுவதைக் காண்கின்றோம். பதிற்றுப்பத்தில் ''நெடியோன்'' என்று திருமால் உலகளந்த முதன்மை தோன்றக் காட்டப்பெறுகின்றான்.

பெரும்பாணாற்றுப்படையில் ''முந்நீர் வண்ணன்'' என்று திருமால் குறிப்பிடப்படுமிடத்து இராமனைப் பற்றிய செய்தி இடம் பெற்று இராமனை உலகளந்த திரிவிக்கிரமனாகத் திருமாலின் தோற்றமாகக் காட்டுகின்றார் ஆசிரியர்.

இக்குறிப்புகள் மூலமாகப் புராணங்களில் கூறப்பெறும் கதைக் குறிப்புகள் சங்க காலத்தில் ஓரளவு மக்களிடையே விளக்கம் பெற்றிருந்தமை அறிகின்றோம். சங்கப் புலவர்களும் புராணங்களில் இடம்பெறும் கதைக் குறிப்புகளைத் தத்தம் பாடல்களில் தேவைக் கேற்ப விளக்கமாகவும், குறிப்பாகவும், அமைத்துக் கூறியிருப்பதை யும் நாம் காண்கின்றோம்.

**திருமால் — திருமகள் :** சங்க இலக்கியங்களில் ''திரு'' என்ற சொல்லாட்சியும் திருமகள் பற்றிய குறிப்புகளும் பலவிடங்களில் காணப்படுகின்றன. தொடக்கக் காலத்தில் அழகு, செல்வம், இறையருள் எனப் பொருள் பெற்ற ''திரு'' காலப்போக்கில் மாற்றம் அடைந்துள்ள நிலையைக் காண்கின்றோம்.

அரிவம்சம், விஷ்ணு புராணம், பத்ம புராணம் ஆகிய நூல்களில் திருமகள் பற்றிய கதை கூறப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் வழங்கும் திருமகள் பற்றிய குறிப்புகள் மேற்கண்ட புராணக் குறிப்புகளுடன் ஒத்துள்ளன. அது மட்டுமின்றித் தொடக்க காலத்தில் திருமால் மார்பில் மறுவாகிப் பின் உருவாகி அதன்பின் திருமாலினின்றும் பிரிந்து தனித்த உருவமாகிக் காலப் போக்கில் தனித்தெய்வ வணக்கத்துக்குரியவளாக மாறிய திருமகளின் வளர்ச்சி நிலைகளைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன.

**மாயவன்மார்பில் திருமகள் :** திருமால் ''ஸ்ரீவத்சக்குறி'' தாங்கிய மார்பினனாகவே திகழ்ந்தான் எனப் பல இடங்களில் அரிவம்சமும்,

விஷ்ணு புராணமும் கூறுகின்றன. சங்க இலக்கியங்களும் திருமால் பற்றிய கதைகளைப் பலவிடங்களில் கூறும்போது இக்கருத்தை ஏற்கும் முறையில் பேசுகின்றன. ''திருஞெமர் அகலம்''[56] என்று காப்பியாற்றுக் காப்பியனாரும் ''மாயுடை மலர் மார்பு''[57] திருஞெமர்ந்து அமர்ந்த மார்பினை[58] ''மதிமறுச்செய்யோள் சேர்ந்த நின் மாசில் அகலம்''[59], ''பொன்னிற்றோன்றிய புனைமறு மார்ப''[60], ''திருவின் கணவ''[61] என்று பலவிடங்களில் பரிபாடலாசிரியரும், ''திருமறுமார்பன்''[62] என்று முல்லைக் கலியாசிரியரும் ''திருமறுமார்பு''[63] என்று பெரும்பாணாற்றுப் படையாசிரியரும் திருமாலைப் போற்றுகின்றனர். இக்குறிப்புகளில் எல்லாம் திருமாலின் மார்பில் மறுவாகவும், உருவாகவும் திகழும் திருமகளைக் காண்கின்றோம். திருமகளின் கணவன் திருமால் என்றும் அறிகின்றோம். ''மாயவன் மார்பில் திருப்போல் பவள் சேர''[64], ''திருவரையகலம்''[65] ''செய்யவள் அணி அகலம்''[66] ''மதிமறுச் செய்யோள் சேர்ந்த நின் மாசில் அகலம்''[67] போன்ற தொடர்கள் மாயவன் மார்பில் சேர்ந்த திருமகளைக் காட்டுகின்றன. பத்துப்பாட்டில் ஒன்றான முல்லைப்பாட்டின் தொடக்கத்தில் திருமால் மாவலியிடம் நீர் ஏற்று ஓங்கி வளர்ந்த நிலை பனிக்கடல் பருகிக் கோடு கொண்டு எழுந்த மேகத்திற்கு உவமையாகக் கூறப் படுகின்றது.[68] இவ்விடத்தில் ''மாதாங்கு தடக்கை'' என்ற தொடர் இடம் பெற்றுள்ளது. இங்குத் திருமகள் தனித்தோர் உருவமாக உருப்பெற்றதை உணரலாம்.

நெய்தற்கலி வரியில் நெய்தல் நிலத்தலைவிக்கு உவமமாகத் திருமகள் அமைவது குறிப்பிடத்தக்கது. திருமால் மன்னவனுக்கும், முல்லை நிலத் தலைவனுக்கும் உவமமாக அமைவது போலவே திரு மகளும் மக்களுள் ஒருத்திக்கு உவமமாக அமைவதைக் காணலாம்.

56. நான்காம்பத்து - 31-7-10
57. பரி - (1-3) கடவுள் வாழ்த்து
58. முதற்பரி - 6-13
59. பரி - 2-28-35
60. பரி - 3-90
61, பரி - 3-90
62. முல்லைக்கலி - 4-9-10
63. பெரும்பாணா. - 29
64. நெய்.கலி - 28-64
65. பரி - 13, 1-13
66. பாலைக்கலி - 27-5-6
67. பரி - 2-28-35
68. முல்லை. பா - 1-3

இவ்வழக்குகளே சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகியை முறையே கண்ணனாகவும், நப்பின்னையாகவும் உவமமாக்குவதற்கு வித்தாக அமைந்தன எனலாம்.[69]

நாடாளும் மன்னனைத் திருமாலின் அம்சமாகக் கருதும் வழக்கம் உண்டு. இதனையே நம்மாழ்வார் ''திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே'' என்கின்றார். மன்னனைத் திருமாலாகக் காட்டி ஏத்தும் வழக்கம் தொல்காப்பியர் காலத் திலேயே உள்ளதால் திருமாலின் ஸ்ரீவத்சக்குறி படைத்த இயல்பினை மன்னர்மீதும் ஏற்றிக் கூறும் புலவர்கள் கூற்றை ''திருவீழ் நுண்பூண் பாண்டியன்''[70], ''மாமறுத்த மார்பின......வளவ''[71] ''திருவார் மார்பன்''[72] என்ற தொடர்களில் குறிப்பாக உணர்கின்றோம்.

**திருமகளின் தோற்றம் :** தொல்காப்பியத்தில் ''ஏனது சுவைப் பினும் நீகை தொட்டது வானோர் அமுதம் புரையுமால் எமக்கு''[73] எனத் தலைவன் கூற்றாக அமைந்த வரிகள் அமுதம் பற்றிய குறிப் பினைக் கூறுகின்றன. குறுந்தொகை, புறநானூறு, அகநானூறு போன்ற இலக்கியங்களில் அமிழ்தம், அமுதம், அமுது எனும் சொற் பொருள் வழக்குகளைக் காண்கின்றோம். இவையன்றி அமுதம் கடைந்த கதையுடன் தொடர்பு கொண்ட பகுதிகளையும் காண் கின்றோம். வானோர் அமுதம் பற்றிய செய்திகளைப் படிக்கும்போது விஷ்ணு புராணச் செய்தியைச் சங்ககால மக்கள் அறிந்திருப்பர் போலும் என்று கருத வேண்டி உள்ளது.

**விஷ்ணு புராணம் கூறும் அமுது கடைந்த கதை :** துர்வாச முனிவர் அளித்த மாலையின் பெருமை உணராத இந்திரன் அதைத் தன் யானைக்குத் தர, யானை மாலையைத் தரையில் எறிந்தது. அதுகண்ட துர்வாசர் சாபமிட தேவர்களின் செல்வங்கள் அனைத்தும் கடலில் மறைந்தன. அவர்கள் பிரமன் உதவியோடு திருமாலிடம் முறையிடத் திருமால் ஆமை வடிவில் கடலடியில் தங்கித் துணை செய்ய, மந்திரமத்தும், வாசுகி நாணும் கொண்டு தேவர்கள் ஒரு பக்கமும், அசுரர்கள் ஒரு பக்கமும் நின்று கடைய அங்குத் தோன்றிய பல பொருள்களில் திருமகளும் ஒருத்தி. அவள் தோன்றிய மகிழ்வில் இசைவாணர் பாட, கந்தர்வ மகளிர் ஆடினர். தேவலோக யானைகள் நீரைப் பொற்குடங்களில் ஏந்தித் திருமகள் மேல் பொழிந்தன. பாற்கடல் அழியாத முத்துமாலை ஒன்றை அவளுக்குப்

---

69. சிலம்பு : கொலைக்களக்காதை - 46-53
70. புறம் - 179-5
71. புறம் - 7-5-10
72. மலைபடுகடாம் - 356
73. தொல். நூற்பா 1092-12-13

பரிசளித்தது. திருமகள் மாயவன் மார்பைச் சார்ந்து மகிழ்ச்சியுற்று அவனுக்கே சொந்தமானாள். இது விஷ்ணு புராணம் கூறும் அமுதம் கடைந்த கதையின் சாரம்.

இத்தகைய திருமகளின் தோற்றத்தோடு ஒத்தனவாக, கலித்தொகை பரிபாடற் பகுதிகள் சில ஆங்காங்கே அமைவதைக் காண்கின்றோம். திருமால் அமுது கடைவதற்குத் தான் ஆமை வடிவெடுத்துத் தன் தலைமீது மந்திர மலையைத் தாங்கியமை[74], திருமகளின் சிவந்த நிறம் பாற்கடல் அவளுக்கு தந்த முத்து மாலை[75], அம்மாலையுடன்[76] பின்னிக்கிடக்கும் வானவில் போன்ற மற்றோர் அணி, மதியினைப் போன்ற முகம், வைத்திருக்கும் அழகிய பொட்டு[77], இரு யானைகள் புனித நீராட்ட நடுவே தாமரைமலர் மீது இறும்பூது எய்தி அமர்ந்திருக்கும் தோற்றம்[78] முதலியன படிப்படியாக வரிசையாக வளர்ச்சியுற்றமையை மேற்குறித்த (கலித்தொகை, பரிபாடல்) சங்க இலக்கியங்களில் காண்கின்றோம். திருமகள் பற்றிய விஷ்ணு புராணச் செய்திகள் சங்க இலக்கியச் செய்திகளுடன் ஒத்துள்ளமையையும் காண்கின்றோம்.

மேலும் சங்க காலத் தமிழர்களால் கஜலட்சுமியாகிய திருமகளின் வடிவம் மிகவும் போற்றப்பட்டு வந்தது என்பதையும், இத்தகைய வடிவம் வீடுகளுக்குச் செய்யும் சித்திர வேலைப்பாடுகளிலும், வீட்டுவாயில் நிலைகளிலும் அமைக்கப் பெற்றிருந்தது என்பதையும் பத்துப்பாட்டிலுள்ள நெடுநெல் வாடையிலும் மதுரைக் காஞ்சியில் திருமகளின் திருவுருவம் செதுக்கப்பட்ட மதிற் கதவுகளைப் பற்றிய செய்தியாலும், திருமால் வழிபாட்டைப் போலத் திருமகள் வழிபாடும் சங்க காலத்தில் பரவியிருந்ததெனக் காண்கின்றோம். பட்டினப் பாலையும் திருமகளை நகரின் காவல் தெய்வமெனக் குறிப்பிடுகின்றது.

இவ்வாறு தொடக்க காலத்தில் சங்க இலக்கியங்களில் ''திரு'' என்ற சொல் உணர்த்திய பொருள் காலப் போக்கில் மாற்றமுற்றுத் திருமாலின் மனைவி திருமகள் என்னும் சிறப்புப் பொருளில் வழங்கப் பட்டமையினையும், தொடக்க காலத்தில் கதைக் குறிப்புகளின்றிச் சுட்டப்பட்ட ''திரு'' பின்னர் கதைப் பின்னணியோடு சுட்டப்படும் திருமகளாகக் காட்சியளித்தமையை, திருமால் மார்பில் மறுவாகத் தொடக்கத்தில் இருந்து பின் உருப்பெற்ற திருமகளாகியப் பின்

74. பரி. திரட்டு - பாடல் 1-63-64
75. பாலைக்கலி . 27-5-7
76. பரி - பாடல் 2-29-31
77. பரி. பகுதிகள் - 9-1-4
78. குறிஞ்சி. கலி - 8-1-7

அவனிடமிருந்து பிரிக்கப்பட்டுத் தனித் தெய்வமான செய்தியினையும் மேற்குறித்த சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம்.

**திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறுதல் :** சங்க இலக்கியங்களில் கடவுட் கருத்துக்களும், தெய்வ வழிபாடுகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன. மக்கள் வாழ்க்கையோடு தெய்வ வழிபாடுகளும் பிணைந்து நின்ற பிணைப்பினைச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெளிவாக அறிவிக்கின்றன. வேத நெறியும் அதற்குப் புறம்பான சில நெறிகளும் அந்நாளில் நிலவி வந்தன எனலாம்.

சங்க இலக்கியத்தில் மால், மாயோன், நெடியோன் என்று வழங்கப்படும் திருமால், கரியன்[79], நீலவுருவத்தன்[80], கையில் சக்கரம் ஏந்தியவன்[81], மார்பில் திருமகளை மறுவை உடையவன்[82], திருத்துழாய் மாலையன்[83], உடம்பில் பீதாம்பர ஆடையைக் கொண்டவன்[84], சேவலூர்தியையும், கருடக் கொடியையும் கொண்டவன்[85], பாற்கடலில் அரவணையில் அறிதுயில் கொள் கிறான்[86], அவனது நாள் ஓணநாள்[87], அவன் வேத முதல்வன்[88], முல்லை நிலக் கடவுள்[89], ஞாலம் அளந்தவன்[90], ஊழிக்காலத்தில் ஆலிலையில் கிடந்தவன்[91], பத்துருவம் பெற்றவன்[92], மதி சேர்ந்த அரவினைக் கோள் விடுத்தவன்[93], கதிரவனை மீட்டுக் கொண்டு வந்தவன்[94], ஆய்ச்சியர் துகில் கவர்ந்தவன்[95] வேத முதல்வன்[96] என்று பல்வேறு சிறப்புக்களுடன் குறிக்கப் பெறுகின்றான்.

---

79. நெய். கலி - 2 அடி 3
80. பரி - 13-42-43
81. பரி - 1-51-58
82. முல்லை. கலி - 4-9-10
83. பரி - 13-57-64
84. பரி - 4
85. பரி - 13-38-39
86. பெரும்பாணா. - 372-73
87. மதுரை - 9-16
88. நற் - கடவுள் வாழ்த்து
89. தொல்.அ.நூ. - 5
90. பதிற்றுப்பத்து - 15-35-40
91. புறம் - 108
92. பரி - 15-51-52
93. முல்லை. கலி - 105-43-46
94. புறம் - 174-1-5
95. அகம் - 59-3-6
96. பரி - 3-13-15

சங்க இலக்கியங்களில் விளக்கப்படும் திருமாலின் இயல்புகள் வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் ஆகியவற்றில் குறிக்கப் பெற்றிருப்பதோடு ஒத்துள்ளன எனலாம். இவ்வியல்புகளோடு கூடிய நிலையிலும், இவற்றினும் வளர்ச்சியடைந்த நிலையிலும் சங்க இலக்கியங்களை அடுத்துத் தோன்றிய சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற இலக்கியங்களில் காண்கிறோம். வேதநூல்களில் காணப் படும் திருமால் இயல்புகள் பின்னர்த் தோன்றிய பக்தி இலக்கியங் களில் காணப்படும் இயல்புகளோடு ஒத்துள்ளமை காண்கிறோம். சுருங்கக் கூறின் இந்திய நாட்டின் தெய்வ வழிபாட்டு வளர்ச்சியின் எதிரொலியாகவே திருமால் போன்ற கடவுளரின் இயல்புகள் தமிழ் இலக்கியங்களில் அமைந்துள்ளன எனலாம். திருமாலின் நிறம், தார், படை, ஊர்தி, மறு, மனைவி, மகன் மற்றும் பல்வேறு அவதாரங்களில் அவன் புரிந்த அருஞ்செயல்கள் இவற்றையெல்லாம் விளக்கும் வகையில் சங்க இலக்கியங்களில் வரும் தொடர்கள் அமைந்துள்ளன.

**திருமாலின் நிறம்:** கலித்தொகையில் சூரியன் மேற்குத்திசையில் மலையிற் சென்று மறைய இருள் வந்த காட்சியினை விளக்கு மிடத்தில் ''போரில் வல்ல சக்கரப் படையினையுடைய திருமாலின் நிறம் போல எம்மருங்கும் இருள் சூழ்ந்தது''[97] என்று அவனது கரிய நிறத்தின் தன்மை தோன்ற இயற்கைக் காட்சியில் வர்ணிக்கப்படு கிறான். பரிபாடலில் திருமாலின் திருமேனியழகு கூறப்படுகின்றது. ''நீருண்ட மேகம், காயாம் பூ, கடல், இருள், நீலமணி என்னும் ஐந்து பொருள்களையும் ஒக்கும் அழகு விளங்கும் திருமேனியை உடையாய்''[98] என்று போற்றப்படுகின்றான். இதுபோலச் சாத்திரங் களிலும், ஆழ்வார் பாடல்களிலும் காரொளி வண்ணனென்றும், காயாம்பூ வண்ணனென்றும், மணி வண்ணனென்றும், கடல் வண்ண னென்றும், இருளன்ன மாமேனியன் என்றும் பிற்காலத்தில் புகழப் படுகின்றமை காண்கிறோம்.

புறநானூற்றில் அரசர் இருவர் ஒருங்கிணைந்த தோற்றத்தை விளக்குமிடத்தில் ''பால் நிறப் பனைக் கொடியோனும், நீல வண்ணத் திருமாலும் ஒருங்கே இருந்த தோற்றத்திற்கு ஒப்பிடுகையில் அந்தக் காட்சியைக் காட்டிலும் இனியது வேறில்லை என்கின்றார் ஆசிரியர்.[99] இங்குத் திருமாலின் திருமேனி நிறம் புகழப்படக் காண்கிறோம். திருமால் கழுவப்பட்ட அழகிய நீல மணி போன்ற திருமேனியுடன், வானுற ஓங்கிய கருடக் கொடியையும்,

97. நெய், க - பாடல் 2 - அடி 3
98. பரி - 13-42-42
99. புறம் - 58-15

ஆழியையும் ஏந்தியவன் என்று உரைக்கப்படுகின்றான். பெரும் பாணாற்றுப் படையில் திருமாலின் திருவுந்தித் தாமரையில் நான்முகன் தோன்றியிருக்கும் பண்பை விளக்க வந்த ஆசிரியர் அவனது நிறத்தின் பொலிவு தோன்றவும், உலகளந்த மாண்பு தோன்றவும் கூறுகின்றார்.[100] நீலநிறத்தை உடையநெடியோனாகிய திருமால் தனது உந்திக்கமலத்திலிருந்து நான்முகனாகிய படைப்புக் கடவுளைத் தோற்றுவித்த புராண மரபையும் இவ்வடிகளில் சொல்லப்படக் காண்கிறோம்.

திருமாலின் திருமேனி, ஆடை, திருச்சக்கரம் ஆகியவற்றின் சிறப்புக்கள் பேசப்படுகின்றன. நீலமணியைப் போன்ற அழகையும் அலை கிளர்ந்து ஒலித்தலில்லாத அமைதியாக இருக்கும் கடலையும், நீர்சுமந்த கார்மேகத்தையும் ஒத்திருக்கும் மேனி என்று ஒன்றை உவமை சொல்லி உள்ளம் நிறைவடையாதவர் போல ஆசிரியர் மூன்றையும் உவமையிடுகிறார்.[101] கறுத்த திருமேனியோடு முரண் கொண்ட பொன்னிறமான பீதாம்பர ஆடையை உடையவன் என்றும், பகைவர் உயிரோடு மாறு கொண்ட சக்கரப்படையை உடையவன் என்றும் திருமால் காட்டப்படுகின்றான். இங்கு இறைவனுக்குக் குணமில்லை, உருவில்லை என்றெல்லாம் கூறுகின்றவர்களுக்கு ஒரு விளக்கமாகத் திருமாலின் நிறம், ஆடை, ஆயுதம் முதலியன பேசப்படக் காண்கிறோம். ''மாயோனன்ன மால்வரைக் கவாஅன்''[102] என்று நற்றிணை மாயோனாகிய திருமாலைப் போன்ற உயர்ந்த மலையின் சாரல் எனக் கூறுகிறது. மாயோனாகிய திருமால் உயர்ந்தவன், எல்லையற்ற பரம்பொருள் என்றும் அவனது திருமேனியின் நிறம் பச்சை என்றும் ''பச்சை மாமலை போல் மேனி'' என்று ஆழ்வார் ஒருவர் கூறுவது போல இங்குக் கூறப்படுகின்றது. திருமாலின் திருமேனியைப் போன்று மலைச்சாரலும் பசுமையுடன் அமைந்துள்ளதாகக் கபிலர் கூறுகின்றார். அளக்கலாகா அளவினை உடைய மலை போன்று அளந்து கூறமுடியாத அளவற்ற பரம்பொருள் திருமால் எனலாம். எனவே பரம்பொருள் எல்லையற்றது என்னும் தத்துவம் சங்க நூலாகிய நற்றிணையில் ஓரளவு கூறப்படுவதைக் காண்கிறோம். திருமாலின் நிறம் பற்றிப் புராணங்கள் கூறும் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் காட்டப்படும் திருமாலின் நிறம் பற்றிய செய்திகளோடு ஒத்துள்ளதைக் காண்கிறோம்.

---

100. பெரும்பாண் - 403-5
101. பரி - 4-6-7
102. நற். பாடல் 32

**திருமாலின் ஆடை :** பரிபாடலில் திருமாலிருங் குன்றத்தில் மக்கள் திருமாலிடத்து மிக்க அன்பு கொண்டிருப்பார்களென்று கூறி, இக்குன்றத்தில் அவன் அமர்ந்திருக்கும் நிலையை எல்லா மக்களும் நினைத்துப் போற்றவேண்டும் என்று கூறும்போது நிலைபெற்ற குளிர்ச்சியை உடைய இளவெயில் சூழ அதனிடையே இருள் வளர் வதைப் போல, பொன்னாலான ஆடையினையுடைய இருளன்ன மாமேனியனான கண்ணன் பலராமனுடன் கூடி அமர்ந்திருக்கும் நிலையை நினையுங்கள் என்று ஆசிரியர் அறிவுறுத்துகிறார்.[103] இங்கு கண்ணனும், பலராமனுமாகிய அவதாரங்களைக் கூறும்போது அவர்களது வண்ணமும் ஆடையின் அழகும் தோன்ற இளம்பெரு வழுதியார் புனையக் காண்கிறோம். மூன்றாம் பரிபாடலில் பொன்னிறத்தையுடைய ஆடையை உடையவனே, வலம்புரிச்சங்கை யொத்த நிறத்தையுடையவனே என்று திருமாலின் பெருமைகளைச் சொல்லுமிடத்து அவனது ஆடையும், நிறமும் போற்றப்படக் காண்கிறோம்.[104] நான்காம் பரிபாடலில் கறுத்த மேனியோடு முரண்பட்ட பொன்னிறமான பீதாம்பரத்தை உடையவனாக, நீல மலையொன்றைச் செந்நெருப்புச் சூழ்ந்து கொண்டிருப்பது போன்ற பொன்னாலான பீதாம்பரத்தை உடையவனாகத் திருமால் ஆடையின் வண்ண அழகு தோன்றக் காட்டப்படுகின்றான்.[105] சங்க இலக்கியங்களில் கூறப்படுவதைப் போலவே அரிவம்சம், விஷ்ணு புராணம் இரண்டிலும் திருமால் மஞ்சள் ஆடையிலேயே காட்டப்படுகின்றான். வேதத்தில் திருமால் பீதாம்பரதாரியாகக் குறிக்கப்படுகின்றான்.

**திருமாலின் கொடி : ஊர்தியும் கொடியுமாகக் கருடன் :** பண்டைக்காலத்தில் நாடாண்ட மன்னவர்கள் ஒவ்வொருவரும் தங்களை அடையாளம் காட்டிக் கொள்ள இலச்சினை பொறித்த கொடிகளைப் பயன்படுத்தியுள்ளனர். தமிழக வரலாற்றில் பாண்டியனுக்கு மீனக் கொடியும், சோழனுக்குப் புலிக் கொடியும், சேரனுக்கு விற்கொடியும் இருந்ததை அறிகிறோம். மண்ணை ஆளும் மன்னனுக்குக் கொடி இருந்ததுபோல மண்ணில் வழிபடுந் தெய்வங்களுக்கும் கொடி இருந்தமையை அறியலாம். சிவனுக்கு விடைக் கொடியும், முருகனுக்குச் சேவற் கொடியும் இருந்ததை அறிகிறோம். இதுபோல் முல்லை நிலத் தெய்வமாகிய திருமாலுக்குரியதாகக் கருடக்கொடி இருந்ததைச் சங்கப் பனுவல் களில்[106] பலவிடங்களில் காண்கிறோம். மக்களை ஆளும் மன்னர் களுக்குக் கொடியிருந்தது போலவே மன்னுயிர்களை எல்லாம்

103. பரி. 4-6-7
104. பரி. 3-81-90
105. பரி. 4
106. பரி. 3-59-60

ஆட்டிப் படைக்கும் இறைவனுக்கும் கொடி கற்பிக்கப்பட்டிருப் பதைப் பண்டைய பனுவல்களில் காணுகிறோம். திருமாலின் ஊர்தியான கருடன் பற்றிய கருத்துக்களைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. திருமாலின் கொடியில் கருடன் இடம் பெற்றுள்ள செய்தி பல இடங்களில் கூறப்பட்டுள்ளது. ''விரிந்த சிறகுகளை உடையவனாய்ப் பல நிறங்களைக் கொண்ட பாம்புகளுக்குப் பகைவனான கருடனைக் கொடியாகக் கொண்டு குறைவற்ற செல்வத்தை உடையவன் திருமால்''[107] என்றும், அவன் நச்சரவம் போன்று நல்லோருக்குத் தீங்கியற்றும் அரக்கர் முதலியோரை அடர்த்து உயிர்களைப் பாதுகாப்பான் என்பதைக் குறிப்பால் உணர்த்துவது போல ''பலவாகிய வரிகளை உடைய அழகிய சிறகுகளையுடைய கருடனை அணியாகக் கொண்ட கொடியை உடைய செல்வன்''[108] என்று திருமுருகாற்றுப்படையிலும் போற்றப் படுகின்றான். பரிபாடலில் பரம்பொருளுக்கேயுரிய இயல்புகளைத் திருமாலுக்கு வைத்துக் கூறுகின்ற இடத்தில் கருடன் எனும் பறவையாகிய உயர்ந்த கொடியை உடையவனான அவனே அப்பெருமைகளையுடையவன் என்று உயர் கடவுளுக்கு உயர் கொடியாகக் கருடன் காட்டப்படுகின்றான்.[109]

மேலும் மூன்றாம் பரிபாடலில் திருமாலின் ஊர்தியும் கொடியுமான கருடன் பெருமையும், திருமாலின் திருவடிச் சிறப்பும் ஒருசேர உணர்த்தப்படுகின்றன. இங்கு அழகு விளங்குகின்ற ஆபரணங்களை அணிந்த தேவர்களை வென்று அவர்களிடத் திலிருந்து கவர்ந்து வந்த அமுதத்தால் தன்னைப் பெற்ற தாயாகிய வினதையின் துன்பத்தைப் போக்கிய கருடப் பறவையை ஊர்தியாக உடையவன் நீ என்கின்றார் புலவர். திருமாலுக்கு உயர் கொடியாகக் கருடனைக் கூறுமிடத்தில் அவனது ஊர்தியாகிய கருடனே தன்னவர்களின் துன்பத்தைக் களைபவனும், தேவர்களை வெற்றி கொள்ளக்கூடியவனுமாகில், திருமால் தனது அடியார்களின் துன்பத்தைப் போக்குவான் என்ற உணர்வு தோன்றவும், தேவர்கள் தலைவன் (தேவாதி தேவன்) என்பது சொல்லாமலே பெறப்படும் என்ற கருத்திலும் இங்குக் கருடக் கொடியின் சிறப்பும், திருமாலின் பெருமையும் ஒருசேர விளங்கும்படி ஆசிரியர் உணர்த்துகின்றார்.[110] நான்காம் பரிபாடலில் ''கருடனாகிய ஓங்கி நிற்கும் உயர்கொடி உடையவனே''[111] என்று இக்கொடிக்குள்ள உயர்வு தோன்றக் கூறப்படுகிறது. எட்டாம் பரிபாடலில் மலர்ந்த துழாய்

107. பரி. 13,-38-39
108. திருமுருகு. 148-51
109. பரி. 2-50-60
110. பரி. 3. 12-20
111. பரி. 4,-36-41

மாலையையும், அளவற்ற செல்வத்தையும், கருடக் கொடியையும் உடைய திருமாலாக, வேத முழு முதல்வனாக[112] அழைக்கப்படுகின்றான். விண்ணுயர் புட்கொடியோடும், வெற்றி வெய்யோனாகவும் புறநானூற்று அடிகளால் திருமால் சுட்டப்படுகின்றான்.[113]

இந்து புராணத்தில் இடம் பெறும் திருமாலின் ஊர்தியான கருடன் பற்றிய பல கதைச் செய்திகள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் கருத்துகளோடு ஒத்துள்ளன. கருடனின் தாய் வினதை தன் உடன் பிறந்தாள் கத்ருவிடம் அடிமைப்பட, அவளை விடுதலை செய்ய அமுதத்தைக் கருடன் எடுத்து வந்தபோது இந்திரன் முதலான தேவர்கள் எதிர்த்து தோல்வியுற இறுதியில் திருமாலே கருடனுடன் போரிட்டு அவனை வெல்ல நெடுநேரமாயிற்று. அதன் விளைவாகக் கருடன் அழியாவரம் பெற்றது. திருமாலும் தன் ஊர்தியாகக் கருடனைக் கொண்டார் என்ற இந்து புராணக் கதைக் கருத்தைப் பரிபாடல் அடிகளால் அறிய முடிகின்றது.

**பாம்புப் பகையோன் கருடன்:** விரிந்த சிறகுகளையுடையவனாய் பல நிறங்களைக் கொண்ட பாம்புகளுக்குப் பகைவனான கருடனைக் கொடியாகக் கொண்டு குறைவற்ற செல்வத்தை உடையவனே[114] என்றும், கருடப் பறவையாகிய மிக உயர்ந்த கொடியையுடைய தலைவனே[115] என்றும் திருமால் போற்றப்படுகின்றான். மேலும் திருமுருகாற்றுப்படையில் ''பலவாகிய வரிகளையுடைய அழகிய சிறகுகளையுடைய பாம்புப் பகையோன் கருடனை அணியாகக் கொண்ட கொடியை உடைய செல்வன்''[116] என்றும் போற்றுமிடங்களில் பாம்புப் பகையாகக் கருடனைக் காண்கிறோம். இந்து புராணமும், பாம்புப் பகையோனாகக் கருடனைக் கூறுகின்றது. கருடனின் தாய் வினதைக்கும் அவள் உடன் பிறந்தாள் கத்ருவிற்கும் ஏற்பட்ட வாக்குவாதத்தில் தோற்ற வினதை கத்ருவின் பணிப் பெண்ணாகச் சிறைப்பட அதுமுதல் கருடனுக்கும் கத்ருமக்களாகிய ஆயிரம் தலை கொண்ட பாம்புகளுக்கும் தீராப்பகை உண்டாயிற்று. அப்பாம்புகளுடன் போரிட்ட கருடன் அவை அனைத்தையும் அழித்து ஒரே ஒரு பாம்பை மட்டும் தான் பற்றிக் கொண்டிருப்பதாக இந்துப் புராணம் கூறுகிறது. ''ஆயிரம் அணர்தலை அரவுவாய்க் கொண்ட சேவல்''[117] என்ற பரிபாடல் தொடராலும், ''பாம்பு படப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறை புள்ளணி நீள்கொடிச் செல்வ[118] என்ற திருமுருகாற்றுப்படை அடிகளாலும் இக்கதைக் குறிப்பினைக்

112. பரி. 8-1-2
113. புறம். 56,-3-6
114. பரி. 13-38-39
115. திருமுருகு. 148-151
116. திருமுருகு - 148-151
117. பரி - 3-59-60
118. திருமுருகு - 148-151

குறிப்பாக அறிகின்றோம். இங்கு இந்து புராணச் செய்திகள் சங்க இலக்கியச் செய்திகளோடு ஒத்துள்ளதைக் காண்கின்றோம்.

புறநானூற்றில் ''பூவைநிலைத்துறையில்'' அமைந்த பாடலில் சிவபெருமானுக்கும் முருகனுக்கும் இணையாகத் திருமாலின் அவதாரங்களாகிய கிருட்டிணனும், பலராமரும் பேசப்படுவதையும், உலகங்காத்தலாகிய பண்பு நால்வருக்கும் பொதுவாக இருப்பினும் அவரவர்க்குச் சிறந்த பண்புகள் எனச் சிலவற்றால் குறிக்கப் படுவதையும் காண்கிறோம்.[119] இங்கு ஆனேற்றுக் கொடியோன் சிவன் என்றும், பனைக்கொடியோன் என்று பலராமனும், கருடக் கொடியோன் என்று திருமாலும் சேவற்கொடியோன் என்று முருகனும் போற்றப்படுவதிலிருந்தும், நாற்பெருந் தெய்வங்களாகப் போற்றப்படுவதையும் சிவன் முருகன் ஆகியோருக்கு இணையாகக் கிருட்டிண-பலதேவர் வணக்கம் சிறப்புற்றிருந்ததையும் அறிகின்றோம்.

**திருமாலின் மாலை:** சங்க காலத்தில் மன்னர்களுக்கென அடையாளப் பூவும், மாலையும் இருந்தமையை அறிகிறோம். சோழனுக்கு ஆத்திப்பூ மாலையும், சேரனுக்குப் பனம்பூ மாலையும், பாண்டியனுக்கு வேம்பும் அடையாள மாலையாக இருந்தன. மேலும் மன்னர்கள் போருக்குச் செல்லும்போது அடையாளப் பூமாலை அணிந்து செல்வர் என்ற செய்திகளையும் சங்க இலக்கியங்களால் அறிகிறோம். நாடாண்ட மன்னர்களைப் போல, உயிரினங்களை யெல்லாம் காக்கும் தெய்வங்களுக்கும் அடையாள மாலைகளை இட்டு வணங்கிய நிலையை அவ்விலக்கியங்கள் தெரிவிக்கின்றன. முருகன் கடம்பனாக, சிவன் கொன்றை மாலையனாகப் போற்றப் படுவது போலத் திருமால் துழாய் மாலையனாகப் போற்றப்படு வதைச் சங்க இலக்கிய அடிகளால் அறிகிறோம். மணம் வீசும் கொத்துக்களையுடைய துளசி மாலையணிந்த சிறப்பினையுடை யவன்திருமால் என்று பதிற்றுப்பத்தும்,[120] மணம் மிக்கு வீசுகின்ற பூங்கொத்துக்களையுடைய பூவிற்சிறந்த துழாய் மாலையையுடைய திருமால் என்று பரிபாடலிலும்[121] திருமால் துளசி மாலையை அணிந்தவனாகச் சிறப்பிக்கப்படுகின்றான்.

**கமழ்குரல் துழாய்:** துழாயின் தழைக் கொத்துக்களாலே கட்டிய மாலையினை அணிபவன் திருமால். துழாயின் தழைக்கும் நறுமணம் உண்டு. இதனைக் ''கமழ்குரல் துழாய் அலங்கற்செல்வன்''

119. புறம் - 56-1-8
120. பதிற்றுப்பத்து - 31, 8-9
121. பரி - 13, 57-64, 15, 1-6

என்று சொல்லும் சொல் நயத்தால் காண்கிறோம். ''நக்கலர் துழாய் நாறிணர்க் கண்ணியை'' எனப் பரிபாடலும் கூறுகின்றது. பிறவெல்லாம் பூக்களாலே நறுமணத்தை உடையன. துழாயோ தன் தழையையே நறுமணமாகக் கொண்டது. சாத்திரங்களிலும் இத்துழாய் மலர்க்கே வீடுபேற்றை அளிக்கும் தன்மை முதலான பெருமைகள் சொல்லப்பட்டிருக்கின்றன. எனவே இதை அணிந்த திருமால் உயிர்களை ஈடேற்றுவான் என்ற கருத்தும் பெறப்படு கின்றது. இந்து புராணத்தில் துளசி பற்றிய கதைக் குறிப்பில் திருமாலுக்கு உகந்த மாலையாகத் துளசி மாலை அவன் மார்பில் எப்பொழுதும் இடம் பெற்ற செய்தி கூறப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் துளசி மாலையனாகத் திருமால் சிறப்பிக்கப்படு மிடங்களில் குறிப்பாக இக்கருத்தை உணரலாம்.

**பாம்பணைப் பள்ளி கொண்டோன் திருமால் :** அரவு அணை என்பது பாம்புப் படுக்கை. ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் துயில் கொள்ளும் திருமாலைப் பற்றிச் சங்க நூல்கள் கூறுகின்றன. பாம்புப் படுக்கையில் பள்ளிகொண்டிருப்பவனாகத் திருமால் சொல்லப்படுகின்றான். திருமாலுக்கு நாராயணன் என்ற பெயரும் உண்டு. ''நாரம்'' என்றால் நீர். அயனம் என்பது படுக்கை எனப் பொருள்படுகின்றது. எனவே நாராயணனாகிய திருமால் திருப்பாற் கடலில் பாம்புப் படுக்கையில் பள்ளிகொண்டிருக்கின்றான் என்பது ''நாராயணன்'' என்ற சொல் அமைப்பால் தெரிய வருகின்றது. திருவெஃகாவில், காந்தள் அடர்ந்த அழகிய மலையிடத்தே யானை கிடந்தாற் போன்று பாம்பணையிற் துயில் கொண்டவனாகிய திருமால் என்று பெருமிதம் பற்றித் தோன்றிய உவமையாகத் திருமாலுக்குக் களிற்றை உவமிக்குமிடத்திலும்,[122] பாண்டிய மன்னன் சிறப்புற்று விளங்க, முழங்கும் கடற்பரப்பிலே அரவணையில் துயிலும் வெற்றிச் சக்கரத்தினையுடைய திருமாலைப் பாடிக் குரவையாடலாம் என்று தோழி கூற்றாக முல்லைக் கலியிலும்,[123] நெய்தற் கலியில் வண்டொலி முழங்கும் கடற்கானலின் இயற்கைக் காட்சியைச் சிறப்பிக்குமிடத்து, பெருங்கடலும் துயில்வது போல ஒலியவிந்து கிடக்கின்ற காட்சி, அரும்பொருள்கள் முறையோடு இசைந்து வருகின்ற பாடலோடு, கலந்து கேட்கும் யாழிசையை அனுபவித்தவாறே, திருமால் பாற்கடலின்மீது கிடந்து உறங்குவது போன்று இருந்தது''[124] என்றும் கூறுமிடங்களில் பாம்பணையில் அமர்ந்த கோலத்திலும், தங்கிய நிலையிலும், கிடந்த தோற்றத் திலும், உள்ள திருமாலாகக் காட்சிதரக் காண்கிறோம்.

---

122. பெரும்பாண். 372-3
123. முல்லை. கலி 5-71-72
124. நெய், கலி 6-3-5

**சங்கு—சக்கரம் உடையவன் திருமால்:** மூன்றாம் பரிபாடலில் ''தோலாக் கோட்ட'' என்று தோல்வியே அறியாத சங்கினை உடையவனே என்று புகழப்படுகின்றான். யுத்தங்களில் தன் முழக்கத்தாலேயே பகைவர்களை உயிர்விடச் செய்யும் சங்கையுடையவன் என்ற கருத்துப்பட இவ்வாறு அழைக்கக் காண்கிறோம். வெற்றிச் செல்வனாகத் திருமாலை உருவகிக்குமிடங்களில் எல்லாம், நேமியோடு சார்த்தித் திருமால் புகழப்படுகின்றான். சக்கரம் என்பது ஆளும் மன்னனுக்குரிய அடையாளச் சின்னமாகக் கொள்ளப் படும். அதுபோல மன்னுயிர்களையெல்லாம் காக்கும் தெய்வமாகிய திருமாலும் அவனது சக்கராயுதப் பெருமை தோன்றப் பல இடங்களில் போற்றப்படுகின்றான். முதற்பரிபாடலில் அழகியதாய், திருமாலுக்கு ஆயுதமாக மட்டுமின்றி அணிகலனாகவும் விளங்கும் திருச்சக்கரத்தை வலங்கொண்டு ஏந்திய முதல்வனே என்று போற்றுமிடத்தில் தன்னை எள்ளிய கார்க்கியா எனும் அந்தணனுக்குப் பிறந்த ''காலயவனன்'' என்பானை அழித்த திருமாலின் கிருட்டிணாவதாரச் செய்தி குறிப்பாக உணர்த்தப்படுகிறது.[125]

மூன்றாம் பரிபாடலில் சக்கரத்தை வலக்கையில் தரித்தவனே, சாணூரன், முஷ்டிகன் முதலான பெரிய மல்லர்களோடும் போர் புரியவல்ல மிக வலிமை வாய்ந்த மல்லனே என்றும் போற்றப் படுகின்றான்.[126] ''ஆடு கொள் நேமியோன்'', ''தொல் கதிர்த் திகிரியோன்''[127] என்றும் முல்லைக் கலியில் போற்றப்படுகின்றான். வாணனது ஆயிரங் கைகளையும், அந்தகன், நிகும்பன் தலைகளையும், இன்னும் பகைவர் பலரையும் அழித்த கிருட்டிணாவதாரச் செய்தியில் திருமாலின் சக்கராயுதப் பெருமையை மேற்குறித்த முல்லைக்கலியில் ''வெற்றி கொள் நேமி'' என்னும் பொருளில் குறிப்பாக வழங்கப்படக் காண்கின்றோம்.

**மகன் - காமன்:** கலித் தொகையிலும், பரிபாடலிலும், காமனைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவனைத் திருமாலின் மகன் என்பர். அவனது வில், கணை, படை, கோட்டம், விழா, மனைவி ரதி, தம்பி சாமன் முதலிய செய்திகளும் சங்க இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன. ''நெடியோன் மகன்''[128] என்று நெடியோனாகிய திருமாலின் மகனாகக் காமன் குறிக்கப்படுகின்றான். ''இருவர் தாதை இலங்கு பூண் மாஅல்''[129] என்று

125. பரி. 1-51-56
126. பரி. 3, 81-90
127. முல்லை கலி. 5-72, 4-78
128. நெய். கலி. 23-8
129. பரி. கடவுள் வாழ்த்து. 1-28

காமன் அவன் தம்பி சாமன் இவர்தம் தந்தையாகத் திருமால் குறிப்பிடப்படுகின்றான்.

**பிரமனைப் படைத்தவன் திருமால் :** பெரும்பாணாற்றுப் படையில் திருமாலின் உருவினை விளக்கி அதனைக் காஞ்சி மாநகருக்கு உவமமாக்கிக் காட்டப்படுகின்றது. இங்கு நீலநிறமுடைய வடிவினையுடைய திருமாலின் திருவுந்தியாகிய நான்முகனைப் பெற்ற பல இதழ்களையுடைய தாமரையினது கொட்டை போல, சுடுமண் ஓங்கிய நெடுநகர்[130] என்று உவமிக்கப்படுகின்றது. திருமாலின் உந்தித் தாமரையில் பிரமன் தோன்றும் உருவ விளக்கத்தை விஷ்ணு புராணம் கூறுவதுபோல இச்செய்தி அமையக் காண்கிறோம். மேலும் பரிபாடலும் ''மாயோன் உந்தித் தாமரையில் தோன்றும் பிரமனை மதுரையம்பதிக்கு உவமமாகப் படைத்துக் காட்டுகின்றது''. சிறந்த மதுரையாகிய நகர் மாயோனாகிய திருமாலின் உந்தியில் பூத்த தாமரைப் பூவைப்போல் அமைந்துள்ளது. அப்பூவின் உள்ளிதழ்களைப் போன்றவை அவ்வூரின் தெருக்கள். அவ்விதழ்களின் நடுவிலே உள்ள அழகிய தாமரைக் கொட்டை போல விளங்குவது அண்ணல் கோயில். அந்நகரிலே குளிர்ந்த தேனின் இனிய தமிழ் பேசும் மக்கள், அத்தாமரை மலரில் உள்ள மகரந்தப் பொடிகளை ஒப்பர். அம்மக்களிடம் பரிசு பெற்று வாழ்வதற்காக வேற்று நாட்டிலிருந்து வருகின்றவர்கள் அம்மகரந்தப் பொடிகளை உண்ணவரும் வண்டுகளை ஒத்திருப்பர் என்கிறார் ஆசிரியர். அத்தகைய திருமாலின் திருவுந்தித் தாமரையில் பிறந்தவன் பிரமன் என்று மாயோனாகிய திருமாலே பிரமனைப் படைத்தவன் என்று முழங்குகையில்[131] திருமாலே பரம்பொருள் என்ற தத்துவத்தையும், படைக்கும் கடவுளாகிய பிரமனைக் காக்கும் கடவுளாகிய திருமால் தோற்றுவித்தார் என்ற புராண மரபும் பொருந்த உணர்த்தப்படக் காண்கிறோம்.

**திருமால் - முல்லை நிலத் தெய்வமாக வணங்கப்பட்டமை :** பண்டைத் தமிழர்கள் தாம் வாழும் நிலப்பரப்பை நான்கு வகையாகப் பகுத்தனர். மலையும் மலை சார்ந்த பகுதியையும் 'குறிஞ்சி' என்றனர். காடும் காடு சார்ந்த பகுதியையும் 'முல்லை' என்றனர். வயலும் வயல் சார்ந்த பகுதியையும் 'மருதம்' என்றனர். கடலும் கடல் சார்ந்த பகுதியையும் 'நெய்தல்' என்றனர். மனித இனத்தின் படிப்படியான வளர்ச்சியை நில அமைப்போடு பாகுபடுத்தி வழங்கியிருக்கும் தன்மையை இந்நிலப் பாகுபாட்டால் அறிய வருகிறோம். நான்காகப் பிரிக்கப்பட்டு வந்ததால்தான் பூமியை

130. பெரும்பாண் - 402-405
131. பரி திரட்டு - 7,1-11

''நானிலம்'' என்றனர் போலும். இவ்வாறு பாகுபாடு செய்து வாழ்ந்த தமிழர்கள் தாங்கள் வாழ்ந்த நிலங்களில் வழிபாட்டிற்குத் தெய்வங்களையும் கற்பித்து வழிபாடு செய்தனர். அந்த முறைப்படி நானிலத்திற்கும் நான்கு கடவுளர்கள் கற்பிக்கப்பட்டனர்.

இலக்கியங்களில் முல்லை நிலத்திற்கு முதன்மை கொடுத்துப் பேசப்படுகிறது. முல்லை நில மக்கள் ஆயர்கள். ஆயர்களின் வாழ்க்கை முறையையும் பெருமையுடன் பேசுகிறார்கள். முல்லை நில வாழ்க்கை முறையே முதன் முதலில் மனித குலத்தில் வாழ்க்கை முறையாக அமைந்தது எனவும் கூறுவர். தொடக்க காலத்தில் மக்கள் தங்களுடைய ஆடு, மாடு முதலிய கால்நடைகளுடன் விளைச்சல் நிலங்களைத் தேடிச்சென்று விளைச்சல் இயற்கையாக அமைந்த முல்லை நிலத்தை வாழ்விடமாக அமைத்துக் கொண்டார்கள். Sheperds Calender என்னும் ஆங்கிலக் கவிதையில் முல்லை நிலமும், ஆயர்களின் வாழ்வும் சிறப்பித்துச் சொல்லப் படுகின்றன. ஏசுநாதரின் வாழ்வும் முல்லை நிலத்தைப் பின்னணியாகக் கொண்டதென்பர். அவரை ''மேய்ப்பர்'' என அழைக்கக் காண்கிறோம். தமிழ் மக்களின் தெய்வ வழிபாடு சங்க காலத்தில் ஒரு தனிப் பண்பாட்டுடன் விளங்கியது. தொல்காப்பியம் தமிழரின் அக வாழ்க்கை, புற வாழ்க்கைகளைக் கூறுகையில் அவர்கள் வழிபட்ட பழந்தமிழ்த் தெய்வங்களின் பெயர்களைக் கூறுகிறது. அது மாயோன், சேயோன், வேந்தன், வருணன் ஆகிய தெய்வங்கள் முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் நிலங்களில் வழிபடப் பட்டதைக் கூறுகிறது. முல்லை நிலத்திற்கென அமைத்துக் கொண்ட கடவுள்தான் திருமால் என அறிகிறோம்.

''மாயோன் மேய காடுறை உலகமும்''[132] எனத் தொல் காப்பியர் முல்லை நிலத்திற்கும், முல்லை நிலத் தெய்வமான திருமாலுக்கும் முதலிடம் கொடுத்துள்ளார். அத்திருமாலை முல்லை நிலத்திற்குரிய சிறப்புத் தெய்வமாகக் கொண்ட போதிலும் சில இடங்களில் அனைவருக்குமுரிய தெய்வமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட நிலையைச் சங்கச் சான்றோர் செய்யுள்களில் காண்கிறோம்.[133] திருமாலின் முழுமுதன்மையை வேதத்தின் துணை கொண்டு நிறுவ முயன்றோர், திருமாலே அனைத்துத் தெய்வங்களுக்கும் மேம்பட்ட தெய்வமென்று சாதிப்பதற்கு இத்தகைய சங்க இலக்கிய வரிகளைச் சான்றாதாரங்களாகக் [134]காட்டுவர். இத்தகு இடங்களில் திருமால் அனைவருக்கும் உரிய தெய்வமாகப் போற்றப்படுவதைக்

132. தொல் அகத்திணையியல்-நூற்பா 5
133. தொல் புறத்திணையியல்-நூற்பா 1006 புறம் 37, 1-3
134. புறம் - 229 - அடி 27

காண்கிறோம். எனவே தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள தெய்வங்கள் சிறப்பாக அந்தந்த நிலத்திற்கு உரியனவாகக் கூறப்பட்டாலும் எல்லா நிலத்து மக்களும் எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டனர் என அறிகிறோம். குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன் நெய்தல் நில ஊராகிய திருச்செந்தூரிலும், முல்லை நிலத் திருமால் திருவேங்கடம், அழகர் மலை முதலான குறிஞ்சி நிலங்களிலும், காவிரிப்பூம்பட்டினம் முதலான நெய்தல் நிலங்களிலும் வணங்கப்பட்டதைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம்.

**திருமால் - கோயில்கள் :** திருக்கோயில்களில் தெய்வங்களுக்குத் திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இத்திருவுருவங்கள் நிற்பவை, அமர்ந்திருப்பவை, கிடப்பவை என்று மூன்று நிலைகளில் அமைந்துள்ளன. திருமலை, காஞ்சி, திருநாவாய், பேலூர் முதலிய இடங்களில் திருமால் நின்ற கோலத்திலும், திருவரங்கம், திருவனந்தபுரம் முதலிய தலங்களில் கிடந்த கோலத்திலும், காஞ்சி, வைகுண்டப் பெருமாள் கோயில், மதுரை அழகர் கோயில் முதலிய தலங்களில் இருந்த திருக்கோலத்திலும் காணப்படுகின்றான். பொதுவான முறையில் இவ்வுருவங்களைக் கூறினாலும், திருமாலினுடைய திருவுருவங்களே இம்மூன்று வடிவ நிலையில் பெரும்பாலும் அமையக் காண்கிறோம். இம்மூன்று கோலங்களில் உள்ள திருமாலின் திருவுருவங்கள் ஒவ்வொன்றையும் யோகம், போகம், வீரம் என்ற மூன்று நிலைகளில் பிற்காலத்தில் பாகுபாடு செய்துள்ளனர். ஆன்மீகத் துறையில் ஈடுபட்டுள்ளவர்கள் யோக உருவத்தை வழிபாடு செய்வார்கள் என்றும், உலகில் இன்பமாக வாழ வேண்டும் என்று விரும்புவோர் போக உருவத்தை வழிபடுவார்கள் என்றும், போர்த்துறையில் வல்லுநர் ஆக விரும்புவோர் வீரவுருவத்தை வழிபடுவார்கள் என்றும் கருத்துக்கள் நிலவுகின்றன.

சங்க இலக்கியங்களில் திருமாலைப் பற்றிய பல செய்திகள் காணப்படுகின்றன. திருமால் அச்சம் ஊட்டும் தெய்வமாகச் சில இடங்களில் கூறப்படுகின்றார். இன்னும் சில இடங்களில் நன்மை செய்யும் தெய்வமாகப் போற்றப்படுகின்றார். மாநிலத்தின் பேருலகத்தின் காவலனாக விளங்குகிறான் திருமால் என்று மதுரைக் காஞ்சி அறிவிக்கக் காண்கிறோம். சங்க இலக்கியங்களுள் பதிற்றுப்பத்தும், பரிபாடலும் திருமாலைக் கோயிலில் வைத்து வணங்கிய செய்திகளைத் தருகின்றன. பதிற்றுப்பத்தில் களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரலைக் காப்பியாற்றுக் காப்பியனார் பாடிய பாடலில் சேரமக்களால் திருமால் கோவிலில் வைத்து வணங்கப்பட்டமையைத் தெளிவாக அறிகிறோம். மக்கள் புலர்காலைப் பொழுதில் நீராடி உண்ணாநோன்பு மேற்கொண்டவராகித் திருமறுமார்பும், துளசி

மாலையும், கண்கள் கூசிடும் ஒளிச்சக்கரமும் கொண்ட திருமாலை வணங்கினர் என்னும் செய்தியை ஆசிரியர் கூறுகின்றார்.[135] இங்குத் திருமாலின் பெருங்கடவுள் நிலையும் உணர்த்தப்படு கின்றமை அறிகிறோம், இன்றும்கூடக் கேரள அரசர் குலத் தெய்வமாகத் திருவனந்தபுரத்துத் திருமால் விளங்குவதை நாம் இங்கு நினைவு கூறலாம்.

பரிபாடலில் திருமாலிருஞ்சோலை, இருந்தையூர் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. துறக்கவுலகத்திற்கு ஈடான திருமா லிருங்குன்றம் திருமால் கோயில் கொண்ட இடமாகச் சங்க காலத்தில் திகழ்ந்தமையையும் சிலம்பாறு கடந்துவரும் சோலை பலவற்றைக் கொண்டு செறிந்த நிழலோடு கூடிய இம்மலையில் அமர்ந்த கோலத்தில் மஞ்சள் வண்ண ஆடையில் திருமால் காட்சி தந்தமையும், இவன் பேரழகு படைத்தவனாய்ப் பார்ப்போர் காட்சிக்கு விருந்தாய் ''அழகன்'' என்று பிற்காலத்தில் வழங்கும் இயல்போடு ''மயர்'' அறுக்கும் காமக் கடவுளாக விளங்குவதையும், அதாவது தன்னை யார் வந்து கண்டாலும் அவருடைய பிறவிக்குக் காரணமாகிய மயக்கத்தை ஒழிக்கும் வழிபடு தெய்வமாகத் திருமால் விளங்குவதையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம். திருமால் எழுந்தருளியிருக்கும் மாலிருங்குன்றமே தன்னைக் கண்ட வர்களுக்குப் பிறவியை அறுத்து வீடுபேற்றை நல்குவது என்றும் உணர்த்தப்படுகின்றது.[136]

**இருந்தையூர் :** பரிபாடல் திரட்டில் ஆசிரியர் நான்மாடக் கூடலில் வையைக்கரையிலுள்ள இருந்தையூர் என்னும் பதியில் அமர்ந்த கோலத்திருந்த திருமாலின் திருவடிகளைத் தொழுது போற்றுகின்றார்.[137] இந்நகர் கடலிலே இருப்பதாகவும், அங்கு திருமால் வீற்றிருந்த திருக்கோலத்தில் எழுந்தருளியிருப்பதாகவும் கூறுகையில் ''இருந்தையூர்'' என்பது இப்பொழுது கூடலழகப் பெருமாள் கோவில் இருக்கும் மதுரைப் பகுதியைக் குறிக்கிறது என விளங்குகிறது. ''இருந்த எந்தை ஊர்'' என்பதே இருந்தையூர் என் மருவிற்று எனலாம். அடுத்து வருமிடங்களிலே இருந்தையூரின் மலை, குளம், வயல் ஆகியவற்றின் சிறப்பையும் பேசுகிறார்.[138] எனவே திருமால் உறையும் கோவில்களைப் பற்றிக் கூறும்பொழுது திருமாலின் கோலத்தைக் குறிப்பிட்டுச் சொல்லும் பழக்கத்தைக் காண்கின்றோம். எடுத்துக்காட்டாகத் திருவேங்கட மலையில்

135. பதிற்றுப்பத்து - 31-1-10
136. பரி. 15-17-37
137. பரி. திரட்டு ~~1, 1~~-6
138. பரி. திரட்டு 1, 7-17

இறைவன் நின்ற கோலத்தில் இருப்பதாகவும், திருவரங்கத்தில் கிடந்த கோலத்தில் இருப்பதாகவும் சிலப்பதிகாரத்தில் காண்கிறோம். இவ்வாறு திருமாலைக் ''கோலத்துடன்'' சித்தரிக்கும் பண்பு சங்க காலத்திலேயே தோன்றியிருக்கக் காண்கிறோம். இதனை மேற்கூறிய ''இருந்தையூர்'' பற்றிய செய்தியால் அறியலாம்.

**திருமால் பற்றிய வருணனைகள்:** சங்க இலக்கியப் பாக்களில் திருமால் பற்றிய குறிப்புகள் மிகுதியாகக் கிடைக்கின்றன. அவற்றுள்ளும் பரிபாடலில் திருமாலின் சிறப்பு வெகுவாகப் புகழப் பெற்றுள்ளது. திருமாலின் தன்மைகளை அறிவுறுத்துவதுபோல் பல தொடர்கள் அமைந்துள்ளன. அவனது பண்புகளைப் பல தொடர்கள் பறைசாற்றுகின்றன. பிறப்பறுத்து வீடுபேறு அடைதல் மனித வாழ்வின் இலட்சியமாகக் கொள்ளப்பெற்றது. அவ் வீடுபேற்றை எப்படி அடைவது, யார் அதைத் தருவார்? போன்ற சிந்தனைகளுக்குத் திருமாலே வீடுபேற்றை நல்கக் கூடியவர் என்ற உண்மை உணர்த்தப்படுகிறது.[139] பிறப்பறுத்து வீடுபேறு நல்குபவன் திருமால் என்றும்,[140] திருமாலின் பாதம் தொழுவோர்க்கு வீடுபேறு உரிமையுடையதாகிவிடும்[141] என்றும், திருமாலின்றி வீடுபேறு பெறுதல் எளிதன்று[142] என்றும், பெறுதற்கு அரிதாகிய துறக்கம் கூடத் திருமாலை வழிபட்டால் எளிதாகி விடுமென்றும்,[143] அவனே பிறவித் துன்பத்தைக் களையும் தன்மையன் என்றும்[144], சங்க இலக்கியங்களில் பலவிடத்தும் பலவிதங்களில் திருமால் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. இவற்றின் மூலம் பண்டைத் தமிழரின் திருமால் பற்றிய கடவுட் கோட்பாடு நன்கு புலனாகின்றது. மேலும் 15-ம் பரிபாடலில் திருமால் உலகில் அவதரிப்பது உயிர்களுக்குப் பிறவித் துன்பத்தை நீக்கி வீட்டுலகை அளிப்பதற்கே என்று ஆசிரியர் காட்டுகின்றார்[145]. இவை போன்ற சான்றுகளால் பிறவாமையை அளித்து வீடுபேறாகிய துறக்கத்தைத் தருபவன் திருமால் என்று காட்டப்பட்டுப் பரம்பொருளாகக் காட்சி தந்து, அவன் உலகனைத்தையும் படைத்தளித்து அழிக்கும் முதல்வனாகச் சங்க இலக்கியங்களில் போற்றப்படுகின்ற தன்மையைப் பார்க்கிறோம்.

தமிழ்நாட்டுப் பழங்குடியினராகிய முல்லை நிலத்து ஆயரிடையே முகிழ்த்த மாயோன் தமிழ் வேத நெறிகள் கலப்பின் விளைவாக முதல் தெய்வமாக வளர்ந்து பக்தியியக்க காலத்தில் முழுமுதற்

139. பரி - 3-1-3
140. பரி - 3-1-3
141. பரி - 13-12-13
142. பரி - 13-15-16
143. பரி - 13-17-18
144. பரி - 13-51-53
145. பரி - 13 - 51 - 52

பொருளாகச் செங்கோலோச்சத் தொடங்கிய நிலையை நாம் காண்கிறோம். தொல்காப்பியர் கருத்துப்படி திருமால் ''மாயோன்'' என்றழைக்கப்பெறும் முல்லை நிலத் தெய்வமாகும். அத்தெய்வம் ஆநிரைகளைக் காக்கின்ற காப்புத் தெய்வமாக கருதப்பெற்றது ஒருகாலத்திய நிலை. பின்னர் சங்க இலக்கிய வளர்ச்சியில் அத்தெய்வம் பற்றிய கருத்து மாறுபடத் தொடங்கியது. அளித்தல் தெய்வமாகப் போற்றப்பெற்ற திருமால், ஆக்கல் தெய்வமாகவும், அழித்தல் தெய்வமாகவும் கருதப்பெறும் வளர்ச்சி படிப்படியாக ஏற்பட்டது. பின்னர், பரிபாடல் போன்ற இலக்கியங்கள் எழுதப் பெற்ற காலத்தில் திருமாலே எல்லாம் என்ற நிலை தமிழகத்தில் ஏற்படத் தொடங்கிய நிலையினைக் காண்கின்றோம். சங்க இலக்கியங்களில் சிவன், முருகன் போன்ற தெய்வங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெருமைகளை நோக்கும்போது திருமாலுக்கே 'பரம்பொருள்' என்ற முதன்மை பேசப்படுகின்ற தன்மையினைக் காண்கின்றோம்.

**சிவன் :** சங்கச் செய்யுட்களில் சிவன் என்னும் பெயர் காணப் படவில்லை. பத்துப்பாட்டில் சிவனைப் பற்றிய குறிப்புகள் வருமிடங் களில்கூடச் சிவன் என்ற பெயர் காணப்படவில்லை. எட்டுத் தொகை நூல்களிலேயும், சிவனைப் பற்றிய குறிப்புகளைத்தான் காண்கிறோம். அடைமொழிச் சொற்களால் சிவனைச் சங்கச் செய்யுட்கள் கூறுகின்றன. ''கறைமிடற்றண்ணல்''[146] காரியுண்டிக் கடவுள்''[147], முக்கட்செல்வன்''[148], ''கணிச்சியோன்''[149] என்றெல்லாம் சிவபெருமான் கூறப்படுகின்றான். மதுரைக் காஞ்சி ஐம்பூதங்களைப் படைத்தவன் என்றும், மழவிடை உடையவன் என்றும் சிவனைக் குறிக்கின்றது. நஞ்சை உணவாகக் கொண்டவன் என மலைபடுகடாம் பாடுகின்றது. திருமுருகாற்றுப்படை சிவனை ஆல்கெழு கடவுள் எனக் குறிப்பிடுகின்றது. முக்கண்களையுடைய சிவனது கோயில் புறநானூற்றில் ''முக்கட் செல்வன் நகர்'' என்று கூறப்பட்டுள்ளது. சிவன் உமையுடன் வீற்றிருந்த கயிலை மலையை இராவணன் எடுக்கத் தொடங்கி எடுக்க முடியாமல் துன்புற்ற செய்தி குறிஞ்சிக் கலியில் கூறப்படுகின்றது.[150] இங்கு சிவன் திருமாலின் திருவடியிலிருந்து பிறந்த கங்கையைத் தலையில் தரித்த ஈர்ஞ்சடை அந்தணனாகக் காட்டப்படுகின்றான். திருமாலின் முழுமுதல் தன்மையைப் பரிபாடல் முதலானவற்றில் பலவிடங் களில் வலியுறுத்துவதுபோலச் சிவனுக்கு எங்கும் பரத்துவம் சொல்லப்படவில்லை. சிவனைப் பற்றிக் கூறும் அடிமுடி தேடிய

146. புறம் - 55
147. மலைபடுகடாம் - 83
148. புறம் - 6, அகம் - 181
149. கலி - 2
150. குறிஞ்சிக்கலி - 2

தை முதலான புராணக் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் எங்கும் றப்படவில்லை என்பதும் கருதத்தக்கது. எனவே சங்க காலத்தில் வ வழிபாடு அவ்வளவு செல்வாக்குப் பெறவில்லை எனத் தரிகிறது.

**முருகன் :** சங்க கால மக்களின் தெய்வமான முருகன் சேயோன்'' எனப்பட்டான். ''வெல்லும் போரை வல்ல ருகன்'' என மலைபடுகடாம் அவனைச் சிறப்பிக்கின்றது. பார் வன்மை மிக்க முருகன் என்ற குறிப்பும், முருகனுடைய காயில் பற்றிய குறிப்புகளும் புறநானூற்றிலும், அகநானூற்றிலும் ாணப்படுகின்றன. சங்க நூல்களில் முருகு என்ற சொல்லே ருகனைக் குறிக்க வழங்கப்படுகிறது. முருகன் புகழைக் திருமுரு ாற்றுப்படை கூறுகிறது. இந்நூலிலும், திருமாலின் பெருமை பசப்படக் காண்கிறோம். முருகனுக்கோ, சிவனுக்கோ பரிபாடல் தலானவற்றில் திருமாலுக்குக் கூறியிருக்கும் பரம்பொருளுக்குரிய ன்மைகள் ஒன்றும் கூறப்படவில்லை. இந்நூலில் முருகன் பல பயர்களால் அழைக்கப்பட்டு மலைத் தெய்வமாகத் தமிழ் க்களால் வழிபடப்படுகின்ற நிலையைப் பார்க்கிறோம். திருமுரு ாற்றுப்படையிலும் முருகனுக்குரிய வீரம், வலிமை முதலான பருமைகள் கூறப்பட்டிருக்கின்றனவேயொழியத் திருமாலுக்குச் சால்லப்படுவது போல எல்லா உலகையும் படைத்து, இடந்து, ண்டு, உமிழ்ந்து, அளந்து, தேர்ந்து அளிக்கும் தன்மைகள் ஒரு றிதும் பாடப்படவில்லை என்பதைக் காணலாம். இந்நூலில், தவர்கள் முருகனைக் காண வந்ததைக் குறிப்பிடும்போது சிவன் தலான மற்ற தேவர்களுக்கு முன்னால் திருமாலையே கூறி, வனது கொடியை நீள்கொடி என்று நக்கீரர் குறித்திருப்ப லிருந்து[151] சங்க காலத்தில் திருமாலே தேவர்கள் தலைவனாகக் நதப்பட்டு வந்தான் என்று எண்ணத் தோன்றுகிறது. இவ்விடத் ல் முருகனைக் காண வரமுடியுமே தவிர வழிபட வரமுடியாது ன்பது தோன்ற ''வந்து உடன் காண்'' என்று கூறுவது குறிப்பிடத் க்கது. முருகன் தந்தைக்கு உபதேசம் செய்தான், பிரமனைச் றையில் அடைத்தான், திருமாலின் உலகையே அவன் மயில் ழித்துவிட்டது, முதலான கதைகளில் ஒன்றைக்கூட, முருகனின் பருமையைப் பேச எழுந்த இந்நூலும் குறிப்பிடாததிலிருந்து வை பிற்காலத்தில் எழுந்த கதைகள் எனலாம். திருமாலைக் ாட்டிலும் சிவனோ, முருகனோ, காளியோ சிறந்தவர்கள் ன்பதைத் காட்டும் ஒரு கதையும், ஒரு தொடரும் சங்க இலக்கியங் ளில் காணப்படவில்லை என்பதை அறிகிறோம். திருமாலே

151. திருமுருகு - 148 - 151

உலகனைத்தையும் படைத்தளித்தழிக்கின்ற பரம்பொருள் என்று பல விடங்களில் காட்டப்படுகின்றான். ஐந்து தலையும், பேராற்றலும் உடைய சிவனும், அவனது அழித்தல் தொழிலும் வேத முதல்வனான பிரமனும், அவன் படைத்த உலகமும் திருமாலே என்று போற்றப்படுகின்றான். படைக்கும் தொழிலைப் பிரமனும், அழிக்கும் தொழிலைச் சிவனும் செய்வதாகச் சாத்திரங்களிலும், உலகிலும் நிலை கொண்டுள்ள கருத்தை மாற்றி, முத்தொழிலையும் செய்பவன் திருமாலே என்று கூறுவது பொருந்துமோ என்ற ஐயத்தை நீக்குவது போல முதற் பரிபாடலில் பூவிற் பிறந்த பிரமனும் அவன் செய்யும் படைப்புத் தொழிலும் உன்னதே[152] என்றும், ஐந்து தலைகளை உடையவனாய், பகைவர்க்கு அச்சத்தை விளைப்பவனாய், மிக்க வீரத்தையும் வலிமையும் உடையவனான சிவ்னும், அவன் செய்யும் அழிக்கும் தொழிலும் நின்னதே என்று கூறுமிடத்துப்[153] பிரமனும், சிவனும் செய்யும் படைக்கும் தொழிலும், அழிக்கும் தொழிலும் அவர்களுக்குள்ளிருந்து புரிபவன் திருமாலே என்று இருப்பு வருணனையாகப் பேசப்படுகிறது. எல்லாப் பொருள்களையும் தன்னுள் கொண்டு எல்லாமாய தன்மையில் பரம்பொருளுக்கே உரிய பெருமைகளைத் திருமாலுக்குக் கூறுகையில் ''மூவுரு ஆகிய தலைபிரி ஒருவனை'' என்று மும்மூர்த்திகளும் அவனே என்று புலவர் நல்லெழுநியார் காட்டுகின்றார்.

மூன்றாம் பரிபாடலில் ஐம்பூதங்களும், சூரிய சந்திரர்களும், யாகம் செய்பவனும், மற்ற ஐந்து கிரகங்களும், அசுரரும், பன்னிரு ஆதித்தர்களும், எட்டு வசுக்களும், பதினொரு உருத்திரரும், அசுவினி தேவர்களும், யமனும், உற்றமும் எல்லா உலகங்களும், அவ்வுலகிலுள்ள உயிர்களும், மாயோனாகிய அவனிடமிருந்தே உண்டானாவர் என்பதை அழிதலில்லாத வேதம் கூறுகிறது. அவ்வேதமாகிய ஓடையில் மலர்ந்த தாமரைப்பூவில் பிறந்தவனாகிய பிரமனும் நீ, அவனுக்குத் தந்தையும் நீ என்றும், அந்தணர் ஓதும் அருமறைகள் திருமால் பற்றி முழங்குவதாகவும்[154] கூறப்படுகிறது. இங்கு உலகிலுள்ள எல்லாப் பொருள்களும் திருமாலிடமிருந்தே உண்டாயின என்றும், படைப்புக் கடவுளாகிய பிரமனையும் உந்தித் தாமரையில் படைத்து மற்றப் பொருள்களை அவனுக்குத் துணை நின்று திருமாலே படைக்கின்றான் என்றும் வேதங்கள் ஓதுகின்றன என்று ஆசிரியர் திருமால் பற்றிய வர்ணனையை அமைக்கின்றார்.

152. பரி - 1-52
153. பரி - 1-49-52
154. பரி - 3-4-14

புராணங்கள் பேசும் பல்வேறு தெய்வங்கள் அனைவரும் திருமாலே எனும் கருத்தோடு இணைந்த போக்கில் ஐம்பூதமும், இருசுடரும் அவனே எனும் தத்துவக் கருத்தோடு இவ்வடிகள் அமையக் காண்கின்றோம்.

பல்வேறு அவதாரங்கள் எடுத்ததாகத் திருமால் குறிக்கப் பட்டாலும், அவனுக்குப் பலர் தாய் தந்தையராக உரைக்கப் பட்டாலும் உண்மையில் அவனைப் பிறப்பித்தோர் யாருமில்லை என்றும், தான்தோன்றி என்ற கருத்திலே ''பிறவாப்பிறப்பில்லை, பிறப்பித்தோரிலையே'' என்று பரிபாடல்[155] காட்டுகின்றது. முத்தொழில்களையும் செய்யும் வேத முதல்வனாகிய திருமால் மூன்று காலங்களையும் கடந்தவன் என்றும், அக்காலங்கள் வந்து தங்கியிருக்கும் திருவடி நிழலையும் உடையவன் என்றும், காலத்தைக் கடந்தவனும், கால முதல்வனாக உலகனைத்தையும் படைத்த பரம் பொருளாகக் காட்டப்படுதலைக் காண்கிறோம்''[156]. ''ஒருமை வினை மேவும் உள்ளத்தினை'' என்று போற்றுமிடத்தில் திருமால் முத்தொழில்களையும் செய்யும் முதல்வன் ஆனாலும் காத்தல் தொழிலிலேயே அவன் திருவுள்ளம் பொருந்தியிருப்பதாக ஆசிரியர் காட்டுகின்றார்.[157] பரிபாடல் திரட்டில் மாயோனாகிய திருமாலின் உந்தியிலேயே உலகனைத்துக்கும் காரணமான தாமரை மலர்ந்தது என்றும் பிரமனும் அப்பூவினுள் பிறந்தவனே என்றும் திருமாலே முழுமுதல்வன் என்று உணர்த்தப்படுகின்றான்.[158]

பெரும்பாணாற்றுப் படையில் நீலநிறத்து நெடியவனாகிய திருமாலது திருவுந்தித் தாமரையிலிருந்தே நான்முகன் படைக்கப் பட்டான் என்று மேற்கூறும் கருத்து வலியுறுத்தப்படக் காணலாம்.[159] பத்துப்பாட்டில் ஒன்றான மதுரைக் காஞ்சியில் கோயில்களில் அந்தி விழாவைக் கூறும் பகுதியில், ஐம்பெரும் பூதங்களையும் படைத்தவன் தேவர் தலைவன் நெடியோனாகிய திருமாலே என்று காட்டப்படு கின்றது.[160] இறைவனுக்குரிய பதினாறு ஆயுதங்களில் மழு என்பது ஒன்று. இறைவனின் பஞ்சாயுதங்களில் நாந்தகம் எனும் வாள் ஒன்று. பரசுராம அவதாரத்தில் மழு எனும் பரசுவை ஏந்தி நின்றதைக் கொண்டு மழுவைச் சொன்னதாகக் கொள்ளலாம்.

பழைய இலக்கியங்களில் நெடியோன் என்று பல இடங்களில் திருமாலே குறிக்கப்படுவதாலும் சிவன் அவ்வாறு எவ்விடத்தும் குறிக்கப்படவில்லை என்பதாலும் மழுவைச் சொல்லியிருப்பதால்

155. பரி - 3-7
156. பரி - 13
157. பரி - 13
158. பரி.—திரட்டு-8
159. பெரும்பாண்-402
160. மதுரைக்காஞ்சி-54

இங்கு சிவனைச் சொல்லுவதாகக் கூறுவது பொருந்தாது எனலாம். மேலும் பஞ்ச பூதங்களையும் படைத்த பெருமை பரிபாடல் முதலான சங்க இலக்கியங்களில் திருமாலுக்கு குறிக்கப்படுவதுபோலச் சிவனுக்கு எங்குமே குறிக்கப்படவில்லை. எனவே இங்கு ஐம்பெரும்பூதங் களையும் படைத்தவனாகக் கூறப்படும் மழுவாள் நெடியோன் திருமாலே என்பது தெளிவாகப் பெறப்படுகின்றது. பரிபாடலில் இக்கருத்து மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. மதுரைக் காஞ்சி யிலும் ஓணநாள் விழாவில் மறவர் மகிழ்ந்து திரிதலைக் கூறும்போது அரக்கர்களைக் கூட்டம் கூட்டமாக அழித்தவன் மாயோனான திருமாலே என்றும் அவனுடைய திருவோணத் திருநாளைத் தமிழர் விழாவெடுத்து வழிபாடு செய்து கொண்டாடினர் என்றும் போற்றப்படுவது காணத்தக்கது. சங்க காலத்தில் திருமாலே உலகனைத்தையும் படைத்த தேவர் தலைவனாக வழிபடப்பட்டு வந்தான் என்பதும் இப்பெருமைகள் வேறு எந்தத் தெய்வத்திற்கும் ஓரிடத்திலும் காட்டப்படவில்லை என்பதும் தெளிவாகவிளங்குகிறது. எங்கும் நிறைந்தவனாகவும் உலகனைத்தையும் அங்கமாகக் கொண்ட வனாகவும், உலகனைத்துமாயிருப்பவனாகவும் எல்லாம் அத்திருமாலே என்று போற்றப்படுகின்றான். இரண்டாம் பரிபாடலில் குற்றமற்ற கொள்கைகளையுடைய குணம் மிக்கவர் களால் ஆராயப்படுவதும், ஆதி இல்லாததனால் அழிவுமில்லாததும், காதால் கேட்கப்பட்டே பரவுவதால் ''கேள்வி'' எனப்படுவதுமான வேதத்தினுள் அனைத்துக்கும் ஆதியாகச் சொல்லப்படுபவனும் அவனே என்று திருமால் வேதமுதல்வனாகக்[161] கூறப்படுகின்றான். மூன்றாம் பரிபாடலில் திரிவிக்கிரமனாக, கீழ் ஏழுலகமும் உற்ற அடியினை என்றும்[162] நாலாம் பரிபாடலில் ''எவ்வயினோயும் நீயே''[163] என்றும் எங்கும் நிறைந்த தன்மையில் பேசப்படுகின்றான். இங்கு அடியவர்க்காகத் திருமால் எடுத்த பல அவதாரத் தன்மைகள் கூறப்படுதலைக் காணலாம்.

மேலும் தீயினுள் ஒளியாக, பூவினுள் மணமாக, கல்லினுள் மணியாக, சொல்லினுள் வாய்மையாக, அறத்தினுள் அன்பாக, மறத்தில் வலிமையாக என்றெல்லாம் திருமால் போற்றப்பட்டு, அனைத்தும் நீ, அனைத்தின் உட்பொருளும் நீ என்று[164] வெம்மையாய், நறுமணமாய், வாய்மையாய் திண்மையாய், அன்பாய், வலிமையாய் நுண்பொருளாகத் திருமால் போற்றப்படக் காண்கிறோம். இங்கு அவன் எள்ளுக்குள் எண்ணெய்போல எல்லாப் பொருள்களின் உள்ளேயும் உறைந்து நிற்கின்ற உள்ளுறை

161. பரி - 2-25-28
162. பரி - 3-20
163. பரி - 4-70
164. பரி - 3 - 63 - 68

நிலையினைக் காண்கிறோம். இங்கு காட்சிப் பொருளிற் கடவுளியல்பைக் கண்டு கூறும் அழகு பண்புடையதாக திகழ்கிறது.

நூறாயிரம் கைகளை உடையவனாய் மனத்தினால் அறியத்தக்க இறைவனே என்றும், கணக்கற்ற கைகளையுடையவனாகவும்[165] திருமால் காட்டப்படும்போது உயிர்கள் தன்னை வந்து அடைவதற் குரிய நெறியினை அறிந்த கடவுள் என்ற கருத்தோடும் போற்றப் படுகின்றான். அத்தகைய பரம்பொருளாகிய அவன் பெருமைகளை நோக்கும்போது அவன் பெருமையை அவனைத் தவிர யாராலும் அளவிட்டு அறிய முடியாத வேத முதல்வனாகவும்[166] என்றும் ''நீங்காத அறிவுடையோனாகவும்''[167] காட்டப்படுகின்றான். எல்லாம் வல்லவனாகத் திருமால் பல இடங்களில் நிறுவப்படு கின்றான். மூன்றாம் பரிபாடலில் கேசியைக் கொன்ற அவனது கையைப் பலவாறு துதிக்கிறார் ஆசிரியர். அவனது புகழை ஒத்தவை அவன் கைகள் என்றும், அவனது புகழ் எப்படிக் கணக்கிட முடியாததோ அவ்வாறே அவன் கைகளும் கணக்கிட முடியாதவை[168] என்கிறார். ''தோள்களாயிரத்தாய், முடிகளாயிரத்தாய், துணை மலர்க் கண்களாயிரத்தாய், தாள்களாயிரத்தாய் என்று திருவாய் மொழி கூறுவதும் இங்கு நினைவு கூறத்தக்கது. கைகளைப் பற்றிக் கூற வந்ததனால் அக்கை செய்த மற்றொரு அருஞ்செயலையும் பாடு கின்றார். தேவர்களுக்கு, அமிழ்தத்தை தந்து நல்லவர்களான தேவர்களை அளிப்பதும், தீயவர்களான அசுரர்களை அழிப்பதுமான செயல்களைச் செய்பவனே என்றும் துதிக்கின்றார். மேலும் இரண்டு கைகளையுடைய திருமாலே, மூன்று கைகளையுடைய முனிவனே, நான்கு கைகளையுடைய தலைவனே என்று வரிசையாகக் கூறிக்கொண்டே வந்து மேற்கூறப்பட்ட எண்கள் எல்லாம் கிடக்கப் பலவாக அடுக்கு தலையுடைய ஆம்பல் என்னும் பேரெண்ணாலும் இவ்வளவு என்று எண்ணின் வரம்பு கூறமுடியாத உடலினையுடையவனே என்று இறைவன் எண்ணிறந்த செயல்களை இடையறாது செய்து கொண்டிருத்தலால், இவ்வியல்பினைச் செயலைச் செய்தற்குரிய கைகளின் மேலிட்டு எண்ணிறந்த கைகளை உடையவனாகத் திருமாலைக் கூறுமிடத்துக் கடுவன் இளவெயினனார் ''எல்லாம் வல்லவனாகத்'' திருமாலைக் காட்டு கின்றார். அனைத்துலகையும் படைத்தளித்தழிப்பவன் இவனே என்று காட்டப்படும் இடங்களிலும், பிறப்பறுத்துத் துறக்கப் பேற்றை அளிக்க வல்லவன் இவன் ஒருவனே என்று காட்டப்படும் இடங்களிலும், எல்லாம் வல்லவனாகத் திருமால் போற்றப்படக்

165. பரி - 3 - 43 - 45
166. பரி - 3 - 46 - 47
167. பரி - 3 - 84
168. பரி - 3 - 31 - 50

காண்கிறோம். இவ்வண்ணம் வேறு தெய்வங்களுக்குச் சங்க இலக்கியச் சான்றோர்கள் இத்தகைய சிறப்புக்களைக் குறிக்காமையையும் காண்கின்றோம். நற்குணங்கள் அனைத்துக்கும் இருப்பிடமாகவும், தேவர்கள் தலைவனாகவும் திருமால் சங்க இலக்கியங்களில் பல இடங்களில் காட்டப் பெறுகின்றான். முதற்பரிபாடலில் ''உன் நற்குணங்களின் ஒளி உன்னைப்போல் எங்கும் பரவியுள்ளது என்றும், கணக்கில்லாத குணங்களையுடையவனாயிருக்கிறாய் என்றும் திருமாலின் நற்குணங்கள் கணக்கற்றவையாக எங்கும் பரவியுள்ளன''[169] எனக் காட்டப்படுகின்றது. திருமாலின் வாய்மை, பொறுமை ஆகிய இரண்டு குணங்களின் பெருமை இரண்டாம் பரி பாடலில் பேசப்படுகின்றன.[170] மூன்றாம் பரிபாடலில் உனது புகழை ஒத்தவை உன் கைகள் என்னும்போது திருமாலின் மங்கல குணங்கள் கணக்கற்றவையாகக் காட்டப்படுகின்றன.[171] இங்கு முப்பத்து முக்கோடி தேவர்களும் திருமாலை விரும்பிப் பாடுவார்கள் என்று போற்றியும், அமரர்க்கு முதல்வன் நீ! ''உலகாள்மன்னவ''[172] என்று பாடுவதன் மூலமும் தேவர்கள் தலைவனாகத் திருமாலை ஆசிரியர் அறுதியிடக் காண்கிறோம். நான்காம் பரிபாடலிலும் ''திருமாலாகிய உன்னிடத்தில் சிறந்ததும், நிறைந்ததுமான கடவுள் தன்மை உள்ளது'' என்று தேவர்கள் தலைவனாகத் திருமால் காட்டப்படுகின்றான்.[173] மேலும் கருடனாகிய மிகவுயர்ந்த கொடியை உடைய செல்வனே! ஒருவராலும் ஏவப்படாததாய் ஆதியான வேதங்களும் ஓதும் நற்குணங்கள் உடையவன் நீ என்று திருமாலது குணங்கள் வேதத்தில் கூறப்பட்டவை என்று முழங்கப்படுகின்றது. திருமாலிருஞ்சோலைத் திருமால் அன்பே வடிவெடுத்தவன் என்றும்[174], குளவாய் என்னும் திருப்பதியும் அதில் அமர்ந்திருக்கும் திருமாலும் நல்ல குணங்கள் எல்லாம் சேர்ந்தவன் என்றும்[175] போற்றப்படுகின்றான். தொல்காப்பியரும் பூவை நிலையைக் கூறும்போது அழியாத சீர்மைமிக்க குணங்களையுடையவன் திருமால்[176] என்று காட்டுகின்றார். ''தேயாவிழுப்புகழ்த்தெய்வம்''[177] என்று முல்லைக் கலியிலும் வலியுறுத்தப்படுகின்றான். புறநானூற்றிலும்[178] அரசனின் புகழுக்குத் திருமாலின் புகழ் உவமை காட்டப்படுகின்றது. இவற்றிலிருந்து எல்லா நற்குணங்களும் நிறைந்தவனாகத் தாழ்வுகள் அற்றவனாகத்

169. பரி - 1 - 58 - 60
170. பரி - 2 - 54 - 55
171. பரி - 3 - 32
172. பரி - 3
173. பரி - 4
174. பரி - 15-53
175. பரி - திரட்டு-1, 63-64
176. தொல். புறத்திணையியல் -நூற்பா-40
177. முல்லைக்கலி-பாடல் - 3
178. புறம் - 57-1-3

தேவர்கள் தலைவனாகத் திருமாலைச் சங்க இலக்கியப் புலவர்கள் பாடியுள்ளதை அறிகிறோம்.

சங்க காலத்திற்குப் பிற்காலத்தில் திருமால் பல பிறவிகள் (அவதாரங்கள்) எடுப்பது தாழ்வென்றும், அப்படிப் பிறவாம லிருப்பதே சிவனுக்குப் பெருமை என்றும், எனவே பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவனே பரம்பொருள் என்னும் கொள்கை நிலவக் காண்கிறோம். ஆயினும் சங்க இலக்கியங்களில் திருமால் பல பிறப்புக் களை எடுப்பது அவனுக்குச் சிறப்புக்களைத் தருவதற்கேயொழிய, தாழ்வை விளைக்காது என்று பல இடங்களில் தெளிவாகக் காட்டப் பட்ட செய்திகளை அறிகிறோம். கூர்மாவதாரம்,' நரசிம்ம அவதாரம், வராக அவதாரம், திரிவிக்கிரமாவதாரம், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், ஆலிலைக் கண்ணன் முதலான பல அவதாரங்களின் பெருமைகள் சங்க இலக்கியங்களில் ஆங்காங்கு விரிவாகப் பேசப்படுகின்றன. பிரமன், சிவன் இந்திரன் முதலான எல்லாத் தேவர்களும் திருமாலால் படைக்கப்பட்டவர்களாகச் சங்க இலக்கியங்களில் புலவர்கள் கூறவும் காண்கிறோம். ஐந்தாம் பரிபாடலிலும் கடுவன் இளவெயினனார் சிவனும், பார்வதியும் புணர்ந்ததனால் ஏற்பட்ட கருவிலிருந்து முருகன் உண்டானான்[179] என்று பாடுகின்றார். திருமால் இவ்வாறு படைக்கப்பட்டவனாகச் சங்க இலக்கியங்களில் எங்கும் காட்டப்படவில்லை. ''பிறவாப் பிறப்பில்லை, பிறப்பித்தோர் இலையே''[180] என்று பரிபாடல் கூறுவதிலிருந்து திருமால் பிறப்பிலி என்னும் உண்மை உணர்த்தப் பெறுவதை அறிகிறோம்.

அளவிட்டு அறியவொண்ணாத இயல்புகள் கொண்டவனாகத் திருமால் காட்டப்படுகின்றான்.[181] திருமாலை அறிவது அவன் ஒருவனைத் தவிர வேறு எவர்க்கும் எளிதன்று என்றும், பல்லூழிக் காலங்களில் ஒவ்வோர் ஊழிக்கண்ணும் ஒவ்வொரு வினையாற்றி நிலைத்தவன் என்றும் அவன் மனத்தாலும் அறிவாலும் அடைவதற் கரியவன் என்றும் ஆசிரியர் கடுவன் இளவெயினனார் உணர்த்து கின்றார். ''காணாமரப'' என்று விளிப்பதன் மூலம் திருமால் எவராலும் அளவிட்டு அறிய முடியாத முறைமையினை உடையவன் என்று காட்டுகின்றார்.

நான்காம் பரிபாடலில் உலகியலைக் கடந்த ஞானிகளே திருமாலின் புகழைப் பாட முடியும், மற்றையோரால் பாட இயலாது எனக் கூறி[182], அப்புகழுரைகளும் அவன் இயல்புகளையே கூறுகின்றன என்று கூறி அளத்தற்கரியவனாக விளங்கும் திருமாலைப்

179. பரி - 5, 28-33
180. பரி - 3-7
181. பரி - 3, 44-45
182. பரி - 4-1-3

புனைந்துரைக்கின்றார். புறநானூற்றிலும் இவ்வுலகில் எவராலும் அளவிடமுடியாத புகழை உடைய பாண்டியனுக்குத் திருமாலை உவமையாகக் காட்டியிருப்பதும் அளத்தற்கரிய பரம்பொருள் திருமால் என்பதை வலியுறுத்துகின்றது.[183] உயிர்களோடு இரண்டறக் கலந்தவன் திருமால் என்று போற்றப்படுகின்றான். மூன்றாம் பரிபாடலில் திருமால் தேவர்க்கும், அசுரர்க்கும் பொதுவான முதல்வனாயிருப்பதாகக் கூறி, இவர்கள் எதிரிகள், இவர்கள் நண்பர்கள் என்னும் பாகுபாடு திருமாலாகிய அவன் இயற்கை உறவை அறிந்தவர்களுக்குக் கிடையாது என்று அனைவர்க்கும் இயற்கை உறவினனாகக் காட்டப்படுகின்றான்.[184] பதின்மூன்றாம் பரிபாடலில் திருமால் அனைத்துயிர்களுக்கும் தாய் போன்ற இயற்கை உறவை உடையவன் என்று கூறப்படுகின்றான்.[185] 15-ஆம் பரிபாடலில், அனைத்துயிர்க்கும் எல்லா உறவுமாக இருப்பவனாகையால் உயிர்களிடத்துக் கொண்ட பேரன்பினால் உயிர்களைக் காக்கவே அவதாரங்கள் எடுக்கின்றான்[186] என்ற கருத்துப்பட வலியுறுத்தப்படுவதையும் காண்கின்றோம்.

வேத முதல்வனாகத் திருமால் போற்றப்படுவதைச் சங்க இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன. ''வேதமே'' பாரத நாட்டில் காலந்தோன்றிய நாள் முதல் வழங்கிவரும் சாத்திரம் என்பர். அவ்வேதங்கள் எவராலும் படைக்கப்படாதவை. அதனால் ''முதுமொழி'' ''தொல்லியல்'' எனப்படுகின்றன. ''வாய்மொழி'' என்றும், ''கேள்வி'' என்றும் வழங்கப்படுபவை, என்றும் அழியாதவை, அதனால் ''கெடுஇல் கேள்வி'' என்றும் ''மாயா வாய்மொழி'' என்றும் குறிக்கப்படுபவை. அனைத்துயிர்க்கும் நன்மையைக் கூறுவதால் ''நலம் புரீஇ அம்சீர் நாம வாய்மொழி'' என்று சங்கப் பாடல்களில் சொல்லப்படுகின்றது. ஒருவராலும் உண்டாக்கப் படாத தன்மையுடைமையால் "ஏவல் இல்முது மொழி" என்றுகூறப்படுபவை. அறிஞர்களுக்குப்பொருள்களைப்புலப்படுத்தும் தன்மையில் ''புலம்'' என்றும், அறிவிலோர்க்குப் பொருள்களை மறைத்துச் சொல்லுபவையாகையால் ''மறை'' என்றும் வழங்கப் படுபவை. இத்தகைய வேதங்களில் சொல்லப்பட்ட கருத்துக்கள் உண்மை என்பது வைதிகர்களின் கொள்கையாகும். வேதங்களோடு முரண்படுமாயின் ஆகமங்கள், புராணங்கள் முதலானவற்றில் சொல்லியிருப்பவை ஏற்கத் தகாதவை என்றும் இவர்கள் வலியுறுத்துவர். எனவே சங்க காலச் சான்றோர்கள் ''திருமாலை வேதங்கள் முழு முதல்வனாக முழுங்குகின்றன'' என்று பல இடங்களில் குறிக்கின்றமை காணலாம்.

183. புறம் - 57-1-3
184. பரி - 3
185. பரி - 13
186. பரி - 15

முதற்பரிபாடலில் திருமாலை விரிவாக வர்ணித்து அவனது பெருமைகளை எல்லாம் கூறி எல்லா உலகும் அவனுடைய ஏவலுக்குப் பணிந்து நிற்கின்றமையை நாவன்மையுடைய அந்தணர் ஓதும் அரிய மறையாகிய பொருள் கூறும் என்று சொல்லப்படுகின்றது.[187] இங்கு உயிர்கள் அனைவர்க்கும் நன்மைகளை ஒன்று விடாமல் காட்டுவதும், எந்தக் குற்றமும் அற்றதும், அனைத்தையும் அறிவிப்பதும், பொருள்களைப் புலப்படுத்துவதுமான வேதமும் அதை அவனிடமிருந்து ஓதிய அவன் உந்தித் தாமரையில் பிறந்த பிரமனும் அவனுடைய படைப்புத் தொழிலும் திருமாலதே என்று வேதமும் திருமாலுக்கு வசப்பட்டது என்றும், அதனால் திருமாலே பரம்பொருள் என்றும் ஆசிரியர் காட்டுகின்றார்.[188] ''வாய்மொழியாகிய வேதத்தில் புலப்படுகிறவனே''[189] என்று பாடுவதன் மூலமும் இக்கருத்து வலியுறுத்தப்படக் காண்கிறோம்.

இரண்டாம் பரிபாடலில் குற்றமற்ற கொள்கைகளையுடைய குணம்மிக்கவர்களால் ஆராயப்படுவதும், அழிவில்லாததும், காதால் கேள்விப்பட்டே பரவுதலால் ''கேள்வி'' எனப்படுவதுமான வேதத்தினுள் அனைத்துக்கும் தலைவனாகச் சொல்லப்படுகிறவனும் நீயே என்று வேதம் திருமாலையே அனைத்துக்கும் ஆதி என்று கூறுவதாகக்[190] காட்டப்படுகின்றது.

மூன்றாம் பரிபாடலில் ''மாயோனே! அழிவில்லாத வேதம் சொல்லுகிறபடி உன்னிடமிருந்து உண்டாகும் பொருள்களை முறைதப்பிக் கூறினோம் நாங்கள் வேதமாகிய ஓடையிலே மலர்ந்த தாமரைப் பூவில் பிறந்தவனாகிய பிரமனுக்கும் தந்தையாயிருப்பவனும் நீயே என்று அந்தணர்களுடைய அருமறை முழங்குகின்றன[191] என்று கூறும் ஆசிரியர் பிரமன் முதலான அனைவரையும் படைத்து அவனுக்கு ஆதியாய், தந்தையாய் இருப்பவனும் திருமாலே என்று வேதம் கூறுவதாக மொழிகின்றார். வேதத்தில் முதல்வனாகக் கூறப்படுபவன் திருமாலே என்று போற்றப்படக் காண்கிறோம். ''வேதத்து மறை நீ'' என்று வேதத்தில் மறைந்து நிற்கும் பொருள் திருமாலே என்றும் ''தொல்லியல்புலவ'' என்று ஆதியான வேதத்தில் புலப்படுபவன் திருமாலே என்று அறுதியிடப்படுகின்றது. நான்காம் பரிபாடலிலும், திருமாலின் திருமேனிச் சிறப்பையும், பெருமையையும் கூறி, அவை திருமாலைப் போன்றே தலைசிறந்த வேதங்களில் ஓதப்படுகின்றன என்று கூறப்படுகின்றது[192].

---

187. பரி - 1
188. பரி - 1
189. பரி - 1
190. பரி - 2
191. பரி - 3
192. பரி - 4

13-ஆம் பரிபாடலில் பாம்புக்குப் பகையான கருடனைக் கொடியாகக் கொண்ட அழியாத செல்வத்தையுடைய செல்வனே! உனது பெருமைகளை எவராலும் இயற்றப்படாத முதுமொழியாகிய வேதம் கூறும் என்று வேதமே திருமாலைத் தலைவனாக ஓதிற்று என உணர்த்தப்படுகின்றது.[193] 15-ம் பரிபாடலிலும் திருமாலின் பெருமைகள் பேசப்பட்டு அனைவர்க்கும் நலத்தை விரும்பி அழகிய சிறப்பையும், புகழையும் உடைய வேதமானது இப்பெருமைகளைத் தேவர்க்குக் கூறுகின்றது என்று திருமாலைப் பரம்பொருளாகிய தலைவனாக வேதங்கள் கூறுவது வலியுறுத்தப்படுகின்றது.[194]

மேலும் பல சங்கப் பாடல்கள் திருமாலை வேத முதல்வன் என்று சிறப்பிக்கின்றன. சில வேத வாக்கியங்களை அப்படியே தமிழில் அமைத்திருக்கவும் காண்கிறோம். வேதத்தில் போற்றப்படும் திருமால், உருத்திரன் முதலான தெய்வங்கள் சங்கப் புலவர்களாலும் பாடப்பெற்றுள்ளன. வேதத்தில் கூறப்படும் வேள்விகள் வருணிக்கப் பெற்றிருக்கின்றன. திருமாலை வேத முதல்வனாகப் பாடும் பாடல்கள் பல உள்ளமை அறிகிறோம்.

இயற்கையில் இறை உணர்வைக் கண்டு உணர்ந்து அனுபவித்துப் போற்றியவர்கள் நம் முன்னோர்கள். நற்றிணைக் கடவுள் வாழ்த்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார், ''பெரிய நிலம் தன் சிவந்த அடிகளாகவும், தூய நீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல் ஆடையாகவும் ஆகாயம் மெய்யாகவும், திசை கைகளாகவும், தண்ணிய கதிர்களையுடைய திங்களும், ஞாயிறுமாகிய இரண்டும் இரு கண்களாகவும் கொண்டு, எல்லா உயிர்களிடத்தும் தான் பொருந்தியிருப்பதன்றி நில முதலாய எல்லாப் பொருள்களையும் தன்னுறுப்பகத்தடக்கிய வேதத்தால் கூறப்படும் முதற்கடவுள் குற்றந்தீர விளங்கிய திகிரியை உடைய மாயோனே'' என்று ஆன்றோர் கூறுவதாகக் கூறுகின்றார்.[195]

இறைவனுக்குத் தனிப்பட்ட வடிவம் இல்லை. உருவம் அற்ற பரம் பொருளே இறைவடிவம். பெரிய ஞானிகளின் அகத்து உணர்வாக விளங்கும் அருவ வடிவம் கொண்ட பரம்பொருளைச் சாதாரண மனிதர்களும் கண்ணால் கண்டு உள்ளத்தில் பதித்து வழிபாடு செய்தல் வேண்டும் என்ற பெரு நோக்கோடு நம் முன்னோர்கள் பரம்பொருளுக்கு உருவ வடிவமும் கற்பித்தார்கள். அதே சமயம் அளவிட முடியாத அகன்ற முழுமையுடையவன் இறைவன் என்பதையும் அறிந்திருந்தார்கள். எனவே இவ்வுலகையே

193. பரி - 13
194. பரி - 15
195. நற். கடவுள் வாழ்த்து

திருமாலின் திருவடிகளாகச் சொல்கின்றார் இளந்தேவனார். அளவிட முடியாத இறைவனுக்கு உடுத்தக்கூடிய உடையாகச் சொல்கிறார். எல்லையில்லாத ஆகாயத்தை உடம்பாகக் கூறி எல்லாத் திசைகளையும் கைகளாக, சூரிய சந்திரர்களைக் கண்களாகவும் கூறுகின்றார். இயற்கையே இறை வடிவம் என்று கொண்டு இயற்கைப் பொருள்களையே அங்கங்களாகக் கூறிவிட்டார் புலவர்.

இங்கு ஐம்பெரும் பூதமும், மதியமும், ஞாயிறும், திசையும், துறக்கமுமாய் அமைந்த மூவுலகமும் திருமாலின் ஒரு வடிவமே எனவும், அவன் அவ்வடிவாக விளங்குவதால் உலகமும், உலகத்துயிர்களும் அவ்வுயிர்களால் துய்க்கப்படும் பொருளும் அவனேயென்றும், அவனியல்பை உள்ளத்தாலுணர வல்லாரே ஆன்றோரெனவும் அவரே உயிர்களின்பால் பேரருளுடைமையின் அவன் புகழை விரித்துக் கூறுவர் என்றும் கூறுகிறார்.

பெருந்தேவனார் உயிர்கள் திருமாலின் திருவடிகளைச் சரண் அடைதல் காரணமாகத் திருமாலின் பாதங்களை முதலாகக் கூறினார். மனம், காட்சி இரண்டிற்கும் அப்பாற்பட்டவன். எனவே ஆகாயத்தை உடம்பாக்கினார். இறைவன் முழுமுதன்மை உடையவனாகையால் வேத முதல்வன் என்று திருமாலைக் கூறுகின்றார். திருமாலின் கையில் உள்ள சக்கரம் தீமையை அழித்துத் தூய்மை தருவது. அதனால் ''தீது அற விளங்கிய திகிரி'' என்று சிறப்புக் கொடுத்தும் கூறுகின்றார். இவ்வாறு எல்லாப் பொருள்களையும் பரம்பொருளின் ஒவ்வோர் உறுப்பாகப் பாடியிருக்கக் காணும்போது காண்பனவும், கேட்பனவுமாகிய எல்லாப் பொருள்களின் உள்ளும், புறமும் நீக்கமற நிறைந்து விளங்கும் அவனது ''எங்கும் பரந்த தன்மை'' புலப்படத் திருமால் காட்டப்பெறுவதைக் காண்கிறோம். ''ஆகாயம், காற்று, நீர்....'' என்று எல்லா உயிர்களிடத்தும் பரந்து பெருகி நிற்கிறான் திருமால் என்று திருவாய்மொழி கூறுவதும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

**அவதாரங்களில் திருமால் வர்ணனை :** சங்க இலக்கியங்களில் பெரும்பாலான இடங்களில் திருமால் கருப்பொருளாக, பின்னணியாகப் பாடத்தக்க அமைப்புடைய நிலையில் காண்கிறோம். எனவே பின்னணியாகக் கொள்ளும்போது முல்லைநிலக் கடவுளை முதல், கருவுக்கு ஏற்பக்காட்டும் அமைப்பைக் காண்கிறோம். உதாரணமாகக் காட்டுப்பகுதியில் மழைக்காலநிலையைக்காட்டும் பின்னணியில் பத்து அவதாரங்களுள்ஓங்கிஉலகளந்த 'வாமனாவதாரம்'' பேசப்படுகின்ற தன்மையை முல்லைப்பாட்டின் தொடக்கத்தில்[196] காண்கின்றோம்.

196. முல்லை. பா - 1-3

15-ஆம் பரிபாடலில் திருமாலிருங்குன்றத்தின் பெருமையைக் கூறி அக்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் திருமாலைப் போற்றிக் கூறும் ஆசிரியர் ''பலராமன், கிருட்டிணன்'' இருவர் வடிவையும் மாற்றி, மாற்றி, புனைந்து வர்ணிக்கின்றார். இங்கு தேன் துளிக்கும் அழகிய பசிய துளவ மாலையினை யுடையவன், கரிய மலையை ஒத்தவன், மிக்க ஒளியினை யுடையவன், ஒற்றைக் குழையினையுடையவன், கருடப்பறவை எழுதிய அழகிய கொடியினை யுடையவன், கூர்மை அணிந்த வளைந்த கலப்பையினையுடைவன், சினமிக்க தண்டுப்படை ஏந்தியவன், வலம்புரிச் சங்கினோடு வெற்றி மிக்க ஆழிப்படையினையும் உடையவன், விரிந்த விற்படையுடன் வெற்றிமிக்க அம்புகளையுடையவன், புள்ளி ஒருங்கு சூழ்ந்த பாரா வளையினையுடையவன், புள்ளிகள் அமைந்த வாட்படையினை யுடையவன் என்று திருமாலைப் போற்றும்போது பலதேவனுக்குரிய சிறப்புக்களோடும் கண்ணனுக்குரிய சிறப்புக்களோடும் புனைந்து அக்கலவையே திருமால் உருவெனக் காட்டித் திருமாலின் தோற்றமும், பலராமன் தோற்றமும் புலப்படக் காட்டுகின்றார்.[197] இவ்வர்ணனையில் திருமாலின் நேமி, ஆழிப்படை, வட்டம், பாரா வளை, சுழல்படை முதலிய திருமாலின் ஐந்து படைக்கலனும் பாடப்ப்டுவது சிறப்புடைத்து.

பாம்பணை மீது கிடந்த தோற்றத்திலே உள்ள திருமாலே நாஞ்சில் படை ஏந்திய பலராமனாகவும், நிலமகளை மறுபடியும் தோற்றுவித்த வராகமாகவும் அமைவதுடன் ஒரே நேரத்தில் திருமால், பலராமன், வராகம் ஆயமுத்தலை கொண்டவனாகவும் இருப்பதை நல்லெழுநியார் காட்டுகின்றார்.[198] பல்வேறு தெய்வங்களும் திருமாலே என்ற கருத்தில் பலவிடங்களில் புலவர்கள் போற்றுகின்ற தன்மையைக் காண்கிறோம். இச்செய்திகள் புராணங்கள் பேசும் கருத்தோடு இணைந்த போக்கில் உள்ளன. ஐம்பூதமும், இருசுடரும் அவனே எனும் மெய்ப்பொருட் கருத்தை விளக்குவனவாக அமையக் காண்கிறோம். மூன்றாம் பரிபாடலில் ஆசிரியர் மாயவனே நின்வயின் பரந்தவை உரைத்தேம் என்று மாயக் கடவுளிடமிருந்து உண்டானவற்றை வகை, வகையாகக் கணக்கெடுப்பவர், முதலில் எல்லாவற்றிற்கும் மூலமான தீ, காற்று, ஆகாயம், நிலம், நீர் என்னும் ஐந்து பூதங்களும் உன்னிடமிருந்து உண்டானவையே என்கின்றார்.[199] மேலும் இங்குத் திருமாலாகிய தெய்வத்திடமிருந்தே எல்லாப் பொருள்களும் உண்டாயின என்றும் எல்லாப்

197. பரி - 15-54-62
198. பரி - 13-27-37
199. பரி - 3-3-10

பொருள்களையும் உண்டாக்கும் பிரமனும், அவனுக்குக் கருவி யாகவே இருப்பவன் என்றும் அவனையும் இவனே படைத்தவன் என்றும் வேதத்தைச் சான்றாகக் காட்டி அறுதியிடுகின்றார்.

மேலும் பல்வேறு மரங்களில் தெய்வம் இருப்பதாக நம்பும் பழக்கமும், ஒவ்வொரு தெய்வத்திற்கும், ஒவ்வொரு பூவினை உரிமையாக்கும் வழக்கமும் தமிழகத்தில் சங்க காலத்திலேயே இருக்கக் காண்கிறோம். திருமாலும், சிவனும், முருகனும், உறைவ தாகக் கருதப்படும் ஆற்றிடைக்குறை, ஆலமரம், கடம்பு, குன்றம், அனைத்துமே திருமாலுக்குரியன என்று,

''ஆலமும், கடம்பும், நல்யாற்று நடுவும்
கால் வழக்கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறு வேறு பெயரோய்
எவ்வயினோயும் நீயே''

என்ற பரிபாடலடிகள் தெரிவிக்கக் காணலாம்.[200] இவை கடம்பு மரத்தருகே கடம்பவனமான சிவனாயும், அழகர் மலை, திருவேங்கடம் மலைகளில் திருமாலாயும், கடம்ப மலர் சூடியோ னாகிய முருகனாகவும் இருப்பதுடன் பொதுவாக வழங்கப்படும் அனைத்துத் தெய்வமும் திருமாலே என்றும் நினைந்தார்க்கு நினைந்த படியே அமைபவன் என்றும் இவ்வடிகள் புலப்படுத்துகின்றன. மேலும் இவ்வரிகள் ஒரு குறிப்பிட்ட நிலத்திற்கு, இனத்திற்குத் தெய்வமாக இருந்த மாயோன் வளர்ந்து திருமாலாகிய பெருந்தெய்வமாக மாறிய வளர்ச்சி நிலையைப் புலப்படுத்தக் காண்கின்றோம்.

திருமால் சிவனோடு இணைந்த தோற்றம் பற்றிய செய்தி அகநானூற்றில் கூறப்படுகின்றது. திருமால் மோகினி வடிவம் கொண்ட கதை இந்து புராணத்தில் கூறப்படுகின்றது. அமுது கடைந்த பொழுது அவுணர்களை மயக்கித் தேவர்கட்கு அமுதம் தருவதற்காகத் திருமால் மோகினி வேடம் புனைந்து வந்து அமுது கொடுத்தபோது அப்பெண்ணுருவ அழகில் சிவனும் மயங்கி அவள் மீது மோகமுற்று அவளைப் பற்ற ஓடினான். அவனிடமிருந்து அவள் தப்பி ஓட, ஆயினும் அவனைப் பின் தொடர்ந்து பற்றி அணைத்த போது அவள் திருமாலாக மாற, இறுக அணைத்ததனால் சிவனுடன் திருமால் ஒட்டிக் கொள்ள சிவனணைந்த பெருமானாகச் சங்கர நாராயணன் (ஹரிஹரன்) தோன்றியதாகப் புராணம் கூறுகிறது. இவ்வாறு இருவரும் ஒன்றிய நிலையை ''வெருவரு கடந்திறல் இருபெருந் தெய்வத்து உருவுடன் இயைந்த தோற்றம்போல்''[201]

200. பரி - 4, 67-70
201. அகம் - 360-6-8

என்ற அகநானூற்று வரிகள் கூறுகின்றன. இவ்வாறு திருமால் கொண்ட மோகினி வடிவையும் அவதாரம் என ''செவ்வைச் சூடுவார் பாகவதம்'' கூறுகிறது. இங்ஙனம் திருமால் சிவனோடு இணைந்த தோற்றம்வழிபாட்டுக்குரியதாக அமைந்திருந்த சமயப்பொதுமையை நாம் காண்கிறோம். இத்தகைய செய்திகளால் திருமாலது பேராற்றலும் பெருந்திருவும் தோன்றப் பரம்பொருளாகப் பல்வேறு புனைவுகளுடன் புலவர் பெருமக்களால் பாடப்பட்டிருப்பதை அறிகிறோம்.

**திருமாலின் அவதாரங்கள் :** திருமால் தாமே மானிடராய் மண்ணுலகிற்கு இறங்கி வந்ததையே ''அவதாரம்'' என்கிறோம். தெய்வத்தின் முழு ஆற்றலுடன் உருவெடுப்பது அவதாரம் என்பர். இந்த அவதாரங்கள் பற்றிய செய்திகள் ''பாகவத புராணத்தில் உள்ளன. பாகவதம் திருமாலின் பெருமைகளையும், சிறப்புக் களையும், கருணைத் திறத்தையும் விளக்குதற்கென்றே எழுதப் பட்டதாகும். ''அவதாரம்'' என்ற சொல் ''இறங்குதல்'' என்னும் பொருள் கொண்டதாகும். சங்க இலக்கியங்களில் ''அவதாரம்'' என்ற சொல் எங்கும் இல்லையாயினும் அவதாரங்கள் பற்றிய குறிப்புகள் சங்க இலக்கிய வரிகள் பலவற்றில் பொதிந்து கிடக்கின்றன. புராணங்கள் கூறும் பத்து அவதாரங்களில் மச்சாவதாரம், கல்கி அவதாரம் ஆகிய இரு அவதாரங்களைப் பற்றிய செய்திகள் சங்கச் சான்றோர் பாடல்களில் இடம் பெறவில்லை. ஏனைய எட்டு அவதாரங்கள் பற்றிய செய்திகளைப் பலவிடங்களில் காண்கிறோம். இறைவனின் அவதார நோக்கம் மக்களைக் காப்பாற்றுதலே. பிறவிக் கடலில் கிடந்து உழலும் மனிதர்களைக் கரையேற்றக் கருணை மிகுந்த திருமால் எடுத்த முயற்சிகளே ''அவதாரங்கள்'' என அழைக்கப்பெறுகின்றன.[202] திருமாலின் அவதாரங்களைச் சங்கச் சான்றோர் பாடல் கொண்டு தெரிவிப்பது நோக்கமாகக் கொள்ளப் பெற்றிருப்பதால் அது குறித்த செய்திகள் இங்கு ஆய்வு நோக்கில் அணுகப் பெறுகின்றன. வரன்முறையாக அவதாரங்களை எடுத்துக் கூறி, அவ்வவதாரங்களைப் பற்றிய இலக்கிய வரிகளின் கருத்துக்களை ஆய்வு நோக்கில் அணுகிப் பார்த்தல் இங்கு மேற்கொள்ளப் பெற்றுள்ளது. இவ்வவதாரச் செய்திகளைப் பட்டியலிட்டு விளக்கிக் காட்டுவதன் நோக்கம் திருமால் வழிபாடு சங்க காலத்தில் எவ்வாறு சிறப்புற்றிருந்தது என்பதை ஆய்வு நோக்கில் கண்டு தெரிவிப்பதேயாகும். திருமால் வழிபாட்டைக் குறித்த ஆய்வில் திருமாலின் பெருமை கூறுவதும், திருமால் வழிபாட்டின் நோக்கம், சிறப்பு குறித்து விளக்குவதும்,

202. பரி - 13

சங்ககாலச் சமுதாய வாழ்வில் திருமால் வழிபாட்டிற்கிருந்த சிறப்பைத் தெளிவுறுத்துவதும் இவ்வாய்வின் நோக்கமாகக் கொள்ளப் பெற்றிருப்பதால் அவ்வகையில் இப்பகுதி அமைக்கப் பெற்றுள்ளது.

சங்க இலக்கியங்களில் இராமாவதாரமும், வராக அவதாரமும் அவதாரப் பெயர்களோடு விளக்கம் பெற்றுள்ளன. பிற அவதாரங்கள் செய்தி விளக்கங்கள் மூலமாகச் சங்க இலக்கியங்களில் இடம் பெறுகின்றன.

**கூர்மாவதாரம் :** பரிபாடலில் திருமாலின் அடியவனான ஆதிசேடனின் திருக்கோயிலைத் துளங்கா விழுச் சீர்த்துறக்கத்திற்கு ஒப்பிட்டுக்காட்டி வழிபடும் நிலையிலே அமுது கடைவதற்குத் திருமால் துணைபுரிந்த அமிழ்தம் கடைந்த நிகழ்ச்சி சித்தரிக்கப் படுகின்றது.

பாற்கடலைக் கடையும்போது திருமால் அமரர்க்கு உதவும் நோக்கத்தோடு, தான் ஆமை வடிவம் கொண்டு மேருமலையின் அடியில் நின்று அதனைத் தாங்கித் துணைப்புரிந்தான். திருமாலின் அருட்செயலால் கிடைத்த அமுதம் தேவர்களை அழியாமல் நிலை நிறுத்தியது. அதுபோல மக்களை அழியாத வீடு பேற்றிலே சேர்ப்பது சேடனது கோயில் என்ற மேலான கருத்தை இங்கு பெற வைக்கின்றார் ஆசிரியர்.

திருமாலின் அருட் பண்பினை விளக்கவே இங்கு ''கூர்மாவதாரம் விளக்கமாகப் புனையப்படுகின்றது.[203] இப்பாடலில் ''நின் திருந்தடி தலையுறப்பரவுதும்'' என்று தொடங்கி ''நல் அடி ஏத்தி நிற்பரவுதும்'' என்று முடிக்கின்றமையால் திருமால் பற்றிய பக்திக் கூறுகள் சங்க காலத்தில் தமிழர்களிடயே மிகவும் பரவியிருந்தமை அறிகிறோம். சேடனின் கோயிலைத் துறக்கத்திற்கு ஒப்பிடுவதிலிருந்தும், சிவனுக்குத் திரிபுரமெரித்த பெருமை ஆதி சேடனால் வந்தது என்று பாடுவதிலிருந்தும் சங்க காலத் தமிழ் மக்கள் திருமாலையே பரம்பொருளாகக் கருதினர் என்று எண்ணத் தோன்றுகிறது. ''அழியாத வீடு பேறாகிய துளங்கா விழுச்சீர்த்துறக்கம்'' ஒன்று இருப்பதாகப் பாடுவதை எண்ணும்போது அத்தகைய உலகம் ஒன்று இல்லை எனக் கூறும் புறச்சமயங்கள் சங்க காலத்தில் நடைமுறையில், இல்லை என்ற கருத்தையும் உணர்கிறோம்.

**வராக அவதாரம் :** வராகமாக உலகைச் சுமந்து வெளிக் கொணர்ந்த திருமாலின் அருட் பண்பு தோன்றக் கூறுமிடங்களில் இவ்வவதாரம் புனையப்படக் காண்கிறோம். நான்காம் பரிபாடலில் பரம்பொருளான திருமால் வராகவுருக்கொண்டு

203. பரி. திரட்டு - 1-64-67.

நிலமகளைக் கடலிலிருந்து கொணர்ந்து நிலைநாட்டிய புகழைப் பாடுகின்றார் ஆசிரியர். இங்கு அழியவிருந்த இவ்வுலகை உண்டாக் கித்தந்து நிலைநாட்டிய செயலும், திருவிக்கிரமனாக உலகை யெல்லாம் அடிப்படுத்திக் கொண்ட செயலை உள்ளடக்கியதுமாக, ''அடிப்படுத்ததை'' என்றும் கூறி, அச்செயலால் மேரு மலையைப் போல் மிகவுயர்ந்து என்றும் நிலைத்திருப்பவை திருமாலின் வராக வதாரப் புகழ் என்று பேசுமிடத்து இவ்வவதாரத்தைக் காட்டு கின்றார்.[204]

மூன்றாம் பரிபாடலில் நிலமகளைக் கொம்பினால் தந்த செயல் விளக்கப்படுகின்றது. ''கீழ் ஏழ் உலகமும் உற்ற அடியினை'' என்று கூறி, மேலும் அவனது பரத்துவத்தைக் காட்டும் மற்றும் இரு அருஞ்செயல்கள் நினைவிற்கு வர அவற்றை விளக்குமிடத்து ஆசிரியர் வராக அவதாரத்தைப் பேசுகின்றார்.[205]

ஊழிக்கால முடிவில் நிலவுலகை வராகமாகித் தந்தத்தால் பெயர்த்தெடுத்தான் என்றும், ஏழு ஊழிக்கால மேகங்களும் பொழிந்த நீரானது வற்றும்படியாக அன்னச் சேவலாய் அவதார மெடுத்துச் சிறகுகளாலே அந்நீரை வற்றச் செய்தான்[206] என்றும் அவனது அருஞ்செயல்களைச் சொல்லி வாழ்த்துமிடத்தில் வராக அவதாரம் பேசப்படுகின்றது.

இதே போலக் கீரந்தையாரும், ''கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய ஊழி ஒருவினை உணர்த்தலின் முதுமைக்கு ஊழியாவரும் உணரா ஆழி முதல்வ''[207] எனத் தமது பாடலில் திருமாலைப் போற்றுகின்றார். இங்கு திருமாலே அனைத்துலகையும் படைத்து அளிக்கும் ''ஆதியஞ்சோதி'' என்று அறிவிக்கின்ற இடத்து வராக அவதாரம் போற்றப்படுவதைக் காண்கிறோம். மேலும் மன்னர் களுக்குத் திருமாலை உவமிக்கும் வழக்கத்தைப் போலத் திருமால் அவதாரங்களையும் அம்மன்னர்கள் மீதோ அவர்களின் முன்னோர் மீதோ சார்த்திக் கூறும் வழக்கையும் நாம் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். அத்தகைய இடங்களில் வராக அவதாரப் பெருமை பேசப்படுகின்றது. ''நிலந்தந்த பேருதவிப் பொலந்தார் மார்பின் நெடியோன்''[208] என்று தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் முன்னோருள் ஒருவனும், ''நிவந்தருதிருவின் நெடியோன்''[209] என்று நெடுஞ்செழியனும் பாராட்டப் படுமிடங்களில் அமைந்துள்ள ''நிலந்தந்த'' என்ற அடைமொழி வராக அவதாரத்தைக் குறிக்கின்றமை காண்கிறோம்.

204. பரி - 4-23-25.
205. பரி - 3-22-24.
206. பரி - 3-25-26
207. பரி - 2-16-19
208. மதுரை - 60-61
209. மதுரை - 763

**வாமனாவதாரம் :** முல்லைப் பாட்டின் தொடக்கத்தில் ஆசிரியர் பனிக்கடல் பருகிக் கோடு கொண்டெழுந்த மேகத்திற்கு மகாபலியிட மிருந்து நீர் பெற்றவுடன் பேருருக் கொண்டெழுந்த திருமாலின் தோற்றத்தை உவமித்துக் காட்டுகின்றார். சக்கரத்தோடு வலம்புரிச் சங்கத்தைத் தாங்கும் பெருங்கையையுடைய திருமார்பில் திருவைத் தரித்த மால் என்று திருமாலுக்கேயுரிய சிறப்புக்களைக் கூறி, திரிவிக்கிரமனாகிய செய்தியைத் தெளிவாக விளக்குகின்றார். முல்லைப்பாட்டில் முல்லை நிலத்திற்கேயுரிய தெய்வமாகிய திருமால் முல்லை நிலக் காட்சியில் அவனது நிறத்தோடு ஒப்புமையுடைய மேகத்தின் தோற்றத்திற்கு உவமையாகச் சொல்லப்பட்டிருப்பதும் சிறப்புடையதாகும்.[210] பெரும்பாணாற்றுப் படையில் தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருந்திரங் கண்ணனார் பாடும்போது முந்நீர்வண்ணனாகிய இராமனது குடியில் (சோழர் குலத்தில்) உதித்தவன்[211] என்று குறிக்குமிடத்து வாமனாவதாரத்தைச் சுட்டுவதைக் காணலாம். திருமாலின் பரத்துவத்தைக் காட்டும் இருநிலங்கடந்த செய்தி .மற்றும் பல விடங்களில் குறிக்கப்படுவதுபோல இங்கும் குறிப்பிடப்பட்டிருப்பது காணத்தக்கது. நெய்தற்கலியில் ஒரு இயற்கை வருணனையில் ''தோழி கூற்றில் வாமனாவதாரத்தைச் சுட்டுகின்றார் ஆசிரியர்.[212] இயற்கைப் புனைவில் கூட இறையருள் காட்சி மேலோங்க, நீலநிறக் கடலையும், வெண்மணற் பரப்பையும் நோக்கிய அளவிலே கண்ணனும் பலராமனும் நினைவிற்கு வர அக்காட்சியை விளக்கும் ஆசிரியரின் வழிபாட்டு உணர்வு புலப்படுவதைக் காண்கிறோம். மூன்றாம் பரிபாடலில் ''அனைவர்க்கும் முதல்வன்''[213] என்று திருமால் புகழை விளக்குமிடத்து வாமனாவதாரப் பெருமை போற்றிப் பேசப்படுவதையும் காண்கிறோம்.

**நரசிம்மாவதாரம் :** நான்காம் பரிபாடலில் மட்டுமே இவ்வவதாரக் கருத்து இடம் பெறக் காண்கிறோம். ''செயிர்தீர் செங்கண் செல்வ'' என்று திருமாலை விளித்து இடியாகிய முரசம் வானத்தே ஒலிக்க வெடிபட்டுத் துண்டாய்ப்போன தூணின் துண்டங்களோடு இரணியனின் தசைத் துண்டங்களும் பலவாகக் கலந்து வீழுமாறு, அவன் மார்பைப் பிளந்த நரசிங்கப் பெருமானாகத் திருமாலைக் கண்டு வழிபடுகின்றார் கடுவன் இளவெயினனார்.[214]

---

210. முல்லை. பா - 1-3
211. பெரும்பாண் - 29-31
212. நெய். கலி - 7-1
213. பரி - 3-54-56
214. பரி - 4-9-21

இப்பரிபாடல் அடிகளில் முதலில் திருமாலின் திருமேனி, ஆடை, ஆயுதங்கள் ஆகியவற்றின் பெருமைகளைக் கூறி, அடுத்த அடிகளில் நரசிங்கவுருக் கொண்டு இரணியனை வதைத்துப் பிரகலாதனைக் காத்ததை விவரிக்குமிடத்து நரசிம்மாவதாரப் புகழ் விளக்கமாகப் பேசப்படுகின்றது. திருமாலே பரம்பொருள் எனக் கொண்டு அடியவர்களைக் காக்க அவதாரமெடுத்துத் தீமையை அழிக்கும் அவனது அருஞ்செயல்களை விளக்குமிடத்திலே நரசிம்மா வதாரப் பெருமை வருணிக்கப்பட்டுத் திருமால் போற்றப்படவும் காண்கிறோம்.

**பரசுராம அவதாரம் :** அகநானூற்றில் நெய்தல் திணையில் அமைந்த பாடல் ஒன்றில் தலைவனைத் தோழி வரைவு கடாவுகின்ற இடத்தில் பரசுராம அவதாரத்தை ஆசிரியர் சுட்டக் காண்கிறோம். அவ்வாறு கூற வந்தவர் நெடுமாலின் தோற்றமாகிய பரசுராமனை நினைந்து அவனது வெற்றிச் சிறப்பு விளங்க அவன் செய்த யாகத்தில் இடம் பெற்ற தூணைத் தலைவியின் ஆகத்திற்கு உவமித்து ''நெடியோன் முடித்த வேள்வித் தூண்போலக் காணலாகா ஆகம்''[215] என்ற தொடரால் குறித்திருக்கும் சிறப்பையும் காண்கிறோம்.

**இராமாவதாரம் :** இராமாவதாரம் பற்றிய செய்திகள் சங்க நூல்களில் இரு இடங்களில் இடம்பெறக் காண்கிறோம். கடற்கரை அருகே ஆலமரத்தடியில் கூடி இராவணனுடன் போர் தொடுக்கும் முறை பற்றி வானர வீரர்களோடு ஆராய்ந்து கொண்டிருக்கும்போது ஆலமரத்துப் பறவைகள் பேரொலி செய்து தொல்லை கொடுத்தன என்றும் அது தவிர்க்கத் தன் கையால் இராமன் சைகை செய்ய பறவைகள் ஒலி அடங்கி அமைதியாயின என்ற செய்தி அகநானூற்றில் இடம் பெறுகிறது.[216] இங்கு அகப்பொருளிலே தலைவி கூற்றாக ஆசிரியர் பாடுமிடத்துத் திருமாலின் அவதாரமாகிய இராமனின் பேராற்றலும், தெய்வத் தன்மையும் தோன்ற இராமனின் ஆணையால் ஆலமரத்துப் பறவைகள் ஒலியடங்கிப் போனதுபோலத் தலைவனின் வரைவால் ஊராரின் அலர் அடங்கிப் போயிற்று என்று கூறி ''அருமறைக் கவித்த ஆலம்போல ஒலியவிந்தன்று'' என்ற தொடரால் உவமை கூறிச் சிறப்பிக்கக் காண்கிறோம்.

---

215. அகம் - 220 - 5 - 9

216. அகம் - 70, 15 - 17

இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது சீதை தன் அணிகள் அனைத்தையும் விட்டெறிந்தனள் எனவும், வானர வீரர்கள் அவற்றை எடுத்து, இராமனைச் சந்திக்கும்போது அவனிடம் காட்டினர் என்றும் கம்பர் கூறுகிறார், இதனின்றும் சிறிது மாறுபட்ட செய்தி ஒன்று புறநானூற்றில் இடம் பெறுகின்றது. சீதை தன் அணிகலன்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கீழே விட்டெறிந்தாள் என்றும் அவற்றை எடுத்த குரங்கினங்கள் எவற்றை எங்கெங்கு அணிவது என அறியாது இடைக்கு அணிவதை மார்பிலும், மார்பில் அணிவதை இடையிலும் என, இவ்வாறு மாற்றி, மாற்றி அணிந்தமை நகைப்பிற்குரியதாக இருந்தது என்று புறநானூற்றுச் செய்தி கூறுகின்றது.[217] சோழன் இளஞ்சேட் சென்னியைத் தம் சுற்றத்தாருடன் காணச் சென்ற ஊன் பொதி பசுங்குடையார் பாடிய இப்பாடலில் அவனிடம் பரிசில் பெற்ற நிலையில் தன் சுற்றத்தினரின் வறுமை காரணமாக ஏற்பட்ட அறியாமைக்குக் குரங்கினங்களின் அறியாமையை உவமை கூறி நகைச்சுவை தோன்ற இராமாயணச் செய்தியைக் காட்டுகின்றார். இக்குறிப்புகளிலிருந்து சங்க இலக்கிய காலத்தில் இராமாவதாரம் பற்றிய பல்வேறு கதைகள் தமிழகத்தில் செவிவழிக் கதைகளாக உலவி வந்துள்ளமையை அறிகிறோம். இவை தமிழகத்தில் மட்டுமே வழங்கப்படுவனவாகும்.

**பலராமர் அவதாரம்:** சங்க இலக்கியங்களில் பலராமன் பால் நிற வண்ணனாக[218] குறிக்கப்படுகின்றான். திருமால் தன் தலையினின்று ஒரு கரிய முடியுடன் ஒரு வெண் முடியையும் நிலமகள் மீது விட்டெறிந்து அவ்வெண் முடி பலராமனாகப் பிறக்கும் எனக் குறித்ததாக விஷ்ணு புராணம் கூறும் கருத்திற்கிணங்க அவனது நிறம் சங்க இலக்கியங்களில் இவ்வாறு அமைவதைக் காண்கிறோம். வலிமையுடையவன் பலராமன் என்பதை ''வலிமையுடைய பலராமன் போன்று விளங்கும் வெள்ளருவி''[219] என்ற நற்றிணைக் குறிப்பாலும், நாஞ்சில் படையையுடையவன் என்பதைப் பாலைக் கலியில் வரும் குறிப்பாலும்[220] அறிகின்றோம். ''வெள்ளணிவளை நாஞ்சிலவை'' என்று பரிபாடலில்[221] திருமாலே பலராமனும், கண்ணனும் என்று காட்டப்படுகின்ற தன்மையைப் பார்க்கிறோம்.

**கிருட்டிண - பலராமர்:** அரிவம்சமும் விஷ்ணு புராணமும் ஆயர் குலத்திடையே நிகழ்ந்த நிகழ்ச்சிகள் அனைத்திலும் கிருட்டிண — பலராமரை இணையாகவே காட்டுகின்றன, சங்க இலக்கியங்

217, புறம் - 378, 15 - 22
218. முல்லை கலி - 4 - 8
நெய். கலி - 7 - 1
புறம் - 56 - 3
219. நற். 32 - 2
220. பாலைக்கலி - 35-1
221. பரி - 7-2-4

களிலும் பல இடங்களில் இருவரும் இணைந்தே பேசப்பட்டுள்ளனர். பலராமனைக் குறிக்கும் கலித்தொகை, புறநானூற்றுப் பகுதிகள் இருவரையும் இணையாகவே காட்டுகின்றன.

முல்லைக் கலிப் பாடலில் ''திருமாலின் சங்கம்'' போல நெற்றியிலே சங்கு வெள்ளைச் சுட்டியுடன் விளங்கிய கரிய ஏறு ஒன்று'', ''பலராமன் மார்பிலே சிவந்த மாலை விளங்குவது போலச் சிவப்பு மறு விளங்கும் வெள்ளைநிற ஏறு ஒன்று''[222] என்று காளைகளுக்கு உவமமாக அவர்களது வீரமும், வலிமையும் தோன்றக் கிருட்டிண, பலராமர் குறிக்கப்படுகின்றனர். இரு அழகிய காளை களைப் போலப் பிருந்தாவனம் முழுவதும் சுற்றி மகிழ்ந்தனர் என்று அரிவம்சமும் இக்கருத்தைக் கூறுகின்றது.

இரு பெருந்தெய்வங்களாகக் கிருட்டிண - பலதேவரைப் புலவர் காரிக்கண்ணனார் தமது பாடலில் காட்டுகின்றார்.[223] இங்கு சோழனும், பாண்டியனும், நட்பு மாறா தொழுக வேண்டும் என்று வற்புறுத்த வந்தவர் கிருட்டிணன் பலராமர் இருவர் ஆற்றலும் போல சகோதர உறவும் தோன்ற அவர்கள் இணைந்து செயலாற்ற வேண்டும் என்று கூறுகின்றார்.

சிவனுக்கும், முருகனுக்கும் இணையான கிருட்டிண பலராமரைப் புறநானூற்றுப் பாடலில் நக்கீரனார் காட்டுகின்றார்.[224] இப்பாட் டின்கண் பாண்டிவேந்தனான இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனை உலகங்காக்கும் நால்வராகிய மணிமிடற்றிறைவனும், பலராமனும் திருமாலும் முருகவேளும் செயல் வகையில் ஒப்பரெனக் கூறி, அவனை இருள் நீக்கி ஒளி விளக்கும் ஞாயிறும், திங்களும் போல நிலை பெற்று வாழ்கவெனத் தெய்வங்களோடு உவமித்துப் ''பூவை நிலைத் துறையில்'' வாழ்த்திப் பாடுகின்றார். எனவே சிவன் முருகன் ஆகியோருக்கு இணையாகக் கிருட்டிண—பலதேவர் வணக்கம் சிறப்புற்றிருந்தமை அறிகிறோம்.

**பரிசு பெற்றவன் :** வட மதுரையினின்றும் பிருந்தாவனம் வந்த பலராமன் யமுனையில் குளித்து எழுந்தபோது அவனுக்கு இலக்குமி ஒரு தாமரையை ஒரு காதில் அணியவும், காதுவளையம் ஒன்றை மறு காதில் அணியவும் பரிசாகக் கொடுத்தாள், வருணன் ஒரு வாடாத தாமரை மாலையைப் பலராமனுக்குக் கொடுத்ததாகவும், விஷ்ணு புராணத்தில் கூறப்படுகின்றது. இக்கருத்துக்கள் ''ஒரு குழை ஒருவன்'' என்று பாலைக்கலி அடியிலும்,[225] ஒரு குழையவன்

222. முல்லைக்கலி - 5, 9-12
223. புறம் - 58 - அடி - 14-18
224. புறம் - 56 - அடி - 1-8
225. பாலைக்கலி - 25-1

மார்பின் ஒண்தார்''[226] என்ற முல்லைக் கலி அடியிலும் குறிப்பாக இடம் பெறக் காண்கிறோம். நாஞ்சில் ஏந்திய பலராமன் கோபம் மிக்கவன் என்பதை அரிவம்சமும், விஷ்ணு புராணமும் கூறுகின்றன. இதனைக் ''கொடுமிடல் நாஞ்சிலான்''[227] என்ற பாலைக்கலி அடியால் குறிப்பாக அறிகின்றோம்.

பலராமன் தன் வலிமையால் புகழ் பெற்றவன் என்பதையும் பல போர்களில் பங்கேற்றவன் என்பதையும் பரிபாடல் செய்தியால் அறிகின்றோம். புழதிச் சேற்றை உழுவதுபோலப் பகைவர்களின் மார்பை உழுகின்ற வளைந்த வாயுடைய கலப்பை ஆயுதத்தைக் கொண்ட பலராமன்[228] என்று இங்கு குறிக்கப்படுகின்றான். இத்தகு செய்திகளால் ஒரு குழை ஒருவனாக, ஒண்தார் மார்பினனாக, கொடுமிடல் நாஞ்சிலானாகப் பலராமன் போற்றப்பட்டு அழகும், ஆற்றலும் உடையவனாக வருணிக்கப் படுவதைக் காண்கிறோம்.

பலராமனே ஆதிசேடன் என்ற கருத்துப் பரிபாடலில் இடம் பெறுகின்றது. முதற்பரிபாடலில் ''ஐந்து தலைகளை உயிர்த்துள்ள நாகம் கவிழ்ந்து நிழல் செய்ய விளங்கும் அச்சத்தைப் பகைவர்க்குத் தருதலையுடைய அரிய ஆற்றலைக் கொண்ட பெரு வலியுடையோனாகிய ஒப்பற்றவனும் நீயே''[229] என்று திருமாலை முத்தொழிலுக்கும் ஆதியெனப் போற்றுகிறார் ஆசிரியர். இங்கு கிருட்டிண - பலராமன் இருவரையும் மதுராபுரிக்கு அழைத்து வந்த அக்ரூரர் வழியில் சந்தியாவந்தனம் செய்தபோது பலராமன் ஆதிசேடனாகவும், அதன்மீது கண்ணன் திருமாலாகவும் இருப்பதைக் கண்டார் என்று விஷ்ணு புராணம் கூறும் கருத்து இப்பரிபாடல் அடிகளில் இயைந்து, பலராமனே ஆதிசேடன் என்னும் கருத்து இயைகின்ற தன்மையினைக் காண்கிறோம்.

பலராமனும் கிருட்டிணனும் இணைந்த தோற்றமே திருமால் என்ற செய்தி பரிபாடலில் காட்டப்படுகின்றது. திருமாலிருங் குன்றத்தின் அடியில் பொருந்தி வாழ விரும்புகின்ற ஆசிரியர், பெரும்புகழ் பெற்ற இருவராகிய கண்ணனும், பலதேவரும் ஆகிய திருமாலது திருவடிகளைத் தொழுது பரவுவோம் என்று போற்றுகின்றார். இங்குத் திருமாலின் படைகளைக் கூறி அவற்றை ஏந்திய அவனையும் நினைந்து போற்றுமிடத்தில் பலராமன் - கண்ணன் இருவர் வடிவையும் மாற்றி, மாற்றிப் புனைந்து அக்

226. முல்லைக்கலி - 5 - 11
227, பாலைக்கலி - 35- 1
228. பரி - 13, 30-33
229. பரி - 1, 46 - 47

கலவையே திருமால் உருவெனக் காட்டுகின்றார்.[230] இத்தகைய சங்க இலக்கியங்களில் கிடைக்கும் பலராமன் பற்றிய குறிப்பு களிலிருந்து சங்க இலக்கியப் புலவர்கள் குறிப்பிடும் பலராமன் பற்றிய கதைக் குறிப்புகள் அரிவம்சம், விஷ்ணுபுராணம் தரும் குறிப்புக்களோடு ஒத்துள்ளமையும், கண்ணனும். பலராமனும் இணையாகச் சங்க காலத்தில் வழிபடு கடவுளராகப் போற்றப் பட்டனர் என்பதனையும், திருமாலின் படுக்கையாகிய ஆதிசேடனே பலராமன் எனச் சங்கப் புலவர்கள் கூறுவதையும், பல கதைக் குறிப்புகளில் கண்ணனோடு இணைந்து வளர்ந்து, வணக்கத் திற்குரியவனாகப் பலராமன் விளங்குவதையும் அறிகின்றோம்.

**கிருட்டிணாவதாரம்:** சங்க இலக்கியங்களில் கிடைத்துள்ள திருமால் பற்றிய குறிப்புக்களில் கிருட்டிணன் பற்றிய செய்தி களையே மிகுதியாகக் காண்கிறோம். சங்க காலத் தொடக்கத்தில் கிருட்டிண வழிபாடு ஓரினத்தார்க்கு, ஒரு குறிப்பிட்ட நிலத்தவர்க்கு உரியதாயிருந்து பின்பு அனைத்து நிலத்தவர்க்கும், இனத்தார்க்கும் உரியதாகிக் காலப்போக்கில் ''திருமால்'' எனும் பெரும் தெய்வ வழிபாட்டில் கலந்து கோவில் வழிபாட்டிற்குரியதாவதைக் காண்கிறோம்.

வேதத்தில் ஆறு இடங்களில் கிருட்டிணன் தொடர்பான குறிப்புக்கள் கிடைக்கின்றன. வடமொழியில் அமைந்துள்ள இருக்கு வேதம், அரி வம்சம், விஷ்ணு புராணம் ஆகியவற்றிலும் கிருட்டிணன் பற்றிய குறிப்புக்கள் அமைந்துள்ளன. தொல் காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவற்றில் கிருட்டி ணாவதாரம் பற்றிய பல செயதிகள் கிடைக்கின்றன.

கிருட்டிணன் என்னும் பெயர் சங்க இலக்கியங்களில் இடம் பெறாவிடினும் அவனது பண்புகளை விளக்கும் வகையில் ''மால்''[231] ''மாயோன்''[232] ''மாயவண்ணன்''[233] ''அஞ்சனவுருவன்''[234] போன்ற பெயர்களால் அழைக்கப்படுவதைக் காண்கிறோம். ''திருமறுமார்பனாக''[235] மாயோன் பல இடங்களில் காட்டப்படு

230. பரி - 15, 54 - 61
231. குறிஞ்சிக்கலி - 16 - 5
அகம் - 59, 3 - 6
232. தொல். அகத்திணையியல் - நூற்பா - 5
புறத்திணையியல் - நூற்பா - 40
233. ஏழாம்பத்து - பதிகம் அடி - 9 - 10
234. நெய். கலி - 2 - 3
235. பரி - 1 - 36 - 39

கின்றான். ''குலத்தோடு'' குறிக்கப்படுவதுபோல ''கோவல''[236] என்று பரிபாடலில் ஓரிடத்தில் மட்டும் திருமால் கிருட்டிணாவதாரத் திற்குரிய ஆயர் குலத்தவனாகக் காட்டப் பெறுகின்றான்.

மஞ்சள் வண்ண ஆடையன் என்பதைப் ''பொன்புனை உடுக்கையோன்''[237] போன்ற தொடர்களால் அறிகிறோம்.

கண்ணன் கரிய நிறமும் நீலநிறமும் உடையவனாகக் காட்டப் படுகின்றான். நெய்தற்கலியில் பகல் மறைந்து மாலையில் இருள் பரவும் கோலத்தைக் கூறவந்த ஆசிரியர், ''போரின்கண் மிக்க சக்கரப் படையையுடைய[238] மாயோனிறம்போல இயல்பாகவுள்ள இருள் பரந்துவர'' என்றும் நீல நிறத்தையுடைய உலகளந்தோன்''[239] என்றும் அவனது நிறத்தோடு போற்றிக் கூறுவ்தைக் காண்கிறோம். நற்றிணை, கலித்தொகை, புறநானூறு போன்ற சங்க இலக்கியங் களில் கண்ணனும், பலராமனும் பல கதைக் குறிப்புக்களோடு இணையாகவே குறிக்கப்பெறுகின்றனர். இதுபோலவே இருவரையும் இணையாகவே அண்ணன் தம்பியராகவே அரிவம்சமும், விஷ்ணு புராணமும் காட்டக் காண்கிறோம்.

**கேசி வதம் புரிந்த கண்ணன் :** ''கஞ்சன்'' முதலியோர் ஏவிய கழுத்தில் மயிரினையுடைய குதிரையின் வாயைப் பிளந்து கொன்ற ஞான்று கண்ணன் இத்தன்மையன் என்று கூறும்படியாக ஒழியாத சினத்துடன் தன் மேலே சென்ற சிவந்த ஏற்றைச் செவியடியில் கொம்புகளைப் பிடித்துக்கொண்டு அதன் வலியை மீட்டுத் தழுவுங் காயாம்பூக் கண்ணியையுடைய பொதுவன் அழகைப் பாராய்''[240] என்று தோழி தலைவிக்குக் கூறும் முல்லைக்கலியின் செய்தியாலும் ''கூந்தல்மா'' என்னும் உருவோடு தன்னைக் கொல்ல வந்த எரியை ஒத்த சினத்தோடு வத்த கேசி என்னும் அரக்கனைத் திருமால் கொன்றழித்தவன்''[241] என்று பரிபாடலில் திருமால் கொடி யோனைக் கொன்று புகழால் சிறப்புற்ற கையினையுடையவனாகப் போற்றப்படுமிடத்திலும், கேசி வதம் புரிந்த கண்ணனாகப் போற்றப்படுவதைக் காண்கிறோம். அரி வம்சமும், விஷ்ணு புராணமும் கூறும் கேசியை அழித்த செய்திக் குறிப்புக்களோடு மேற் கூறிய சங்க இலக்கிய கதைக்குறிப்பு ஒத்துள்ளமையும் காண்கிறோம்.

**கண்ணனின் மற்போர் :** பற்றிய செய்தி நெய்தற்கலியில் இடம் பெறுகின்றது. ''மல்லர்கள் பகைகொண்டு வர அவரை அழித்த

236. பரி - 3 - 82
237. பரி - 15 - 28
238. நெய்.கலி-2-3
239. புறம். 58-15, பெரும்பாண்-403-5
240. முல்லை. க. 3, 53 - 55
241. பரி - 3 - 31 - 32.

மாயவன்'' என்று குறிக்கப்படுகின்றான்''[242] இங்கு கதிரவன் தோற்றத்தை, திருமாலின் சக்கரப் படையோடு உவமித்து வருணிக்கும் இடத்தில் திருமால் கிருட்டிணாவதாரத்திலே செய்த மற்போர் பற்றிய குறிப்பு இடம்பெறக் காண்கிறோம்.

முல்லைக்கலியில் ''வள்ளிய உருண்ட நேமிப்படையவன் ஊதிய சங்கு போலத் தெள்ளிதாக விளங்குஞ் சுட்டியையுடைத்ததாகிய நெற்றியினையுடைய கரிய ஏற்றையும்''[243] என்று வருகின்ற செய்தியால் சங்கு முழக்கம் புரிந்தவன் கண்ணன் என்ற செய்தியைப் பெறுகிறோம். இங்கு மாயோனுக்குரிய முல்லை நிலத்தில் முல்லை நிலத்திற்கே உரிய ஏறு தழுவுதலாகிய செய்தியைக் காட்டுமிடத்துப் பல்வேறு காளைகளின் பண்பினை விளக்க வந்த ஆசிரியர் வருணனையாகத் திருமாலைக் காளைக்கு உவமை கூறக் காண்கிறோம்.

''பாஞ்சசன்னியம்'' என்னும் சங்கினை உடையவன் கண்ணன் என்ற செய்தி, பெரும்பாணாற்றுப் படையில் ''நூலோர் புகழ்ந்த மாட்சியமால் கடல்'', ''வளைகண்டன்ன வாலுளைப்புறவி''[244] என்ற அடிகளில் குறிப்பாகக் கூறப்பட்டிருப்பதை அறிகிறோம்.

முல்லைக்கலியில் ''முழங்குகின்ற கடலிடத்துப் பாம்பணையிலே பள்ளி கொண்ட வெற்றி கொண்ட சக்கரத்தினை யுடையோனை வாழ்த்துவோம்''[245] என்று தோழி கூற்றாக வரும் இடத்தில் இல்லறம் நிகழ்த்தி இனிதிருக்குமாறு காக்கின்ற தெய்வமாகப் போற்றப்பட்டு வெற்றிகொள் சக்கரம் ஏந்தியவனாகத் திருமால் காட்டப்படுகின்றான். நக்கீரனார், ''அழகிய நீலமணிபோலும் திருமேனியையும், வானுற ஓங்கிய கருடக் கொடியையுமுடைய வென்றியை விரும்புவோனும்''[246] என்று பாண்டிய மன்னனைச் செயல் வகையில் உலகங்காக்கும் நாற்பெருந்தெய்வங்களோடு உவமித்துப் புகழால் பகைவரைக் கொல்லும் மாயோனை ஒப்பாய் என்று போற்றிக் கூறுமிடத்தில் கருட வாகனனாகத் திருமால் காட்டப் படுகின்றான்.

கண்ணன் தொடர்பான பாரதக்கதை நிகழ்ச்சிகளும் சங்க இலக்கியங்களில் இடம்பெறக் காண்கின்றோம்.

---

242. நெய். கலி - 17 - 1 - 4
243. முல்லை க - 5,9-10
244. பெரும்பாண் - 486-487
245. முல்லை க - 5-72
246. புறம் - 56,5-6

குறிஞ்சிக் கலியில் இரவுக் குறிவரும் தலைவனைத் தோழி ஏதம் கூறி வரைவு கடாவுகின்ற இடத்தில் ''புலியினது மாறுபாட்டைத் தீர்த்த யானையின், செயல் மல்லரின் மறத்தைக் கெடுத்த திருமாலின் செயலை ஒத்தது என்று பாரதக் கதைக் குறிப்பான கண்ணன் பற்றிய செய்தி ''உள்ளுறை உவமமாக'' அகப்பொருள் கருத்தை விளக்க இடம் பெறுகின்றது.[247]

கண்ணன் மக்கள் துன்பம் தீர்க்க அவுணர்கள் கொண்டு ஒளித்த ஞாயிற்றை ஆகாயத்தில் கொண்டு வந்து நிறுத்தினான் என்பது புறநானூற்றில் காணப்படும் ஒரு குறிப்பாகும்.[248] பாரதப் போரில் அருச்சுனனின் மகனைக் கொன்ற சயந்திரதனை அழிப்பதற்கு அருச்சுனனுக்கு உதவி செய்யும் பொருட்டுக் கதிரவனைக் கொண்டு வந்து நிறுத்திய இச்செய்தியே புறநானூற்றில் இடம் பெறுகின்றது. இங்கு மலையமான் சோழியவேனாதி திருக்கண்ணனை, மாறோக்கத்து நப்பசலையார் பாடுமிடத்து, சோழனில்லாத காவிரி நாட்டிற்கு இருள் சூழ்ந்தவுலகும், சோழனைக் கொணர்ந்த மலையமானுக்குத் திருமாலும் உவமையாக இக்கதைக் குறிப்பு அமையக் காண்கிறோம்.

முல்லைக்கலியில் ''பால் போலும் மதியினைச் சேர்ந்து பாம்பு மறைத்ததாகவும், அப்பாம்பினைக் கண்ணன் அகற்றியதாகவும்[249] ஒரு செய்தி இடம் பெறுகின்றது. ஏறு தழுவும் வீரன் அரவாகவும், அவன் தழுவிய பால் நிற ஏறு நிலவாகவும், அவனைக் குத்தி அகற்றும் கரிய ஏறு கண்ணனாகவும் உவமிக்கப்படுகின்றன. கண்ணனின் இச்செயல் ஆழ்வார்களும் பாடாதது, அரியது எனலாம். இக்குறிப்புக்களிலிருந்து சங்க கால மக்கள் இதிகாசங்களில் கூறியபடி கண்ணனை அறிந்திருந்தனர் என அறிகிறோம்.

திருமாலின் அவதாரமே கண்ணன் என்ற குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. இதனைக் ''காந்தள் அடர்ந்த அழகிய மலையிடத்தே யானை கிடந்தாற் போன்று பாம்பணையிற் துயில் கொண்டவனுடைய திருவெஃகாவின் கண்''[250] என வரும் பெரும்பாணாற்றுப் படையில் திருமாலைக் களிற்றுக்கு உவமை கூறும் செய்தியிலும், முல்லைக் கலிப்பாடலிலே மன்னனை வாழ்த்தி அவன் நீடு வாழ தெய்வத்தைப் பரவுவோம் எனக்கூறும் தோழி கூற்றாக, ''முழங்கும் கடற்பரப்பிலே அரவணையில் துயிலும்,

247. குறிஞ்சி க - 16-1-6
248. புறம் - 174, 1-5
249. முல்லை க - 105-43-46
250. பெரும்பாண் - 372 - 73

வெற்றிச் சக்கரத்தினையுடைய திருமாலைப் பாடிப் பாடிக் குரவை யாடலாம்''[251] என்று தலைவியை அழைக்குமிடத்திலும் முல்லை நிலத்திற்கேயுரிய தெய்வமாகக் கண்ணன் காட்டப்படுமிடத்திலும், நெய்தற் கலியில் ''திருமால் பாட்டோடே யாழையுங் கேட்டுப் பள்ளி கொண்டவனைப்போலப் பெரிதாகிய கடலும் ஒலியவிந்து உறக்கத்தைக் கொண்டது''[252] என்று தலைவி தன் நெஞ்சிற்குக் கூறும் செய்தியில் இறைச்சிப் பொருளாக அவளது துன்பத்தை விளக்கும் பகுதியிலும் கண்ணன் திருமாலின் அவதாரமே என்ற கருத்து சங்கப் புலவர்களால் பாடப்பட்டுள்ள தன்மையினைக் காண்கிறோம்.

சங்க இலக்கியங்களில் மால், மாயோன் என்று திருமாலுக்குரிய பெயர்களின்மீது கண்ணனின் பண்புகளும், செயல்களும் சார்த்திப் பேசப்படுவதைக் காண்கிறோம். ''உலகளந்த முதல்வனுக்கு மூத்த முறையினையுடைய பால் போன்ற நிறத்தையுடைய பலராமன்''[253] என்ற நெய்தற் கலிச் செய்தியாலும் கண்ணனே திருமாலின் மறு அவதாரம் என்பது பெறப்படுகின்றது. இக்கருத்துக்களிலிருந்து, கண்ணனைத் திருமாலின் அவதாரங்களில் ஒன்றாகச் சங்கப் புலவர்கள் காட்டியிருப்பதையும், சங்க இலக்கியங்களில் மற்ற அவதாரங்களிலும் கிருட்டிணாவதாரச் செய்திகளே அதிகம் கூறப் பட்டிருப்பதையும் அறிகிறோம். மேலும் அரிவம்சம், விஷ்ணு புராணம் இரண்டிலும் கூறப்படும் செய்திகள் அனைத்தும் மேற்கூறிய இலக்கியச் செய்திகளில் கூறப்படும் கண்ணன் பற்றிய செய்திகளுடன் ஒத்துள்ளமை காண்கின்றோம்.

**சங்க காலத் தமிழருடைய வழிபாட்டு முறைகள்:** தமிழருடைய வழிபாட்டிலே வெறியாட்டு முதலிய ஆட்டங்கள் முக்கிய இடம் பெறுகின்றன. வெறியாட்ட மரபினை மதுரைக் காஞ்சியில் காணலாம். ஐங்குறு நூற்றில் வெறிப்பத்து என ஒரு பகுதி உள்ளது. போரில் இறந்த வீரரைக் கல்லில் அமைத்து வழிபடும் வழக்கமும் சங்க காலத்தில் இருந்தது. நடு கல்லைப் பற்றிய செய்தி மலைபடுகடாம், ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு ஆகிய வற்றில் காணப்படுகின்றது. நடுகல் அமைத்தலுக்குத் தொல் காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். சங்க நூல்களில் நடுகல் தெய்வங்கள் பற்றி அடிக்கடி குறிப்பிடப்படுவதால் அக்காலத்தில் அவை சிறப்புற்றிருந்தன எனத் தெரிகிறது.

---

251. முல்லை. க. - 5, 71 - 72
252. நெய். க. - 5, 3 - 4
253. நெய். க. - 7, 1 - 2

கொற்றவை வழிபாடு வெறியாட்டுடன் நடைபெற்றதாக அறிகிறோம். நெடுநல்வாடையில் வெற்றித் தெய்வம் கொற்றவையை வணங்கிய செய்தி கூறப்படுகிறது. கொற்றவைக்குப் பலி கொடுத்து வாழ்த்துதலைக் கொற்றவை நிலை எனக் குறிக்கின்றது தொல்காப்பியம். கொற்றவைப் பற்றிப் பதிற்றுப்பத்து (79-ம் பாட்டு) குறுந்தொகை முதலியன கூறுகின்றன.

பிற தெய்வங்களைக் குறித்து அறியும்போது கார் நிறக் கடவுளான திருமாலின் உந்தியில் நான்முகன் பிறந்தான் எனப் பெரும்பாணாற்றுப் படை கூறுகிறது. பிரமன் வழிபாடு இருந்ததாகத் தெரியவில்லை. ''படையிடுவான் மண் கண்டீர் காமன் மடையடும், பாலொடு கோட்டம்புகின்'' என்று காமனது கோயில் இருந்ததாக முல்லைக் கலிச் செய்தியால் மட்டும் அறிகிறோம். இங்கு காமனது வழிபாடு இருந்திருக்க வேண்டும் என்றும், பெண்கள் பால் முதலியன படைத்து வழிபடுவது வழக்கம் என்பதும் பெறப் படுகின்றது.

கண்ணன் வழிபாடும், பலராமன் வழிபாடும் சங்க இலக்கியங் களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அக்காலத்தில் மலையிலும், நீரிலும், மரங்களிலும், கடவுள் உறைவதாக மக்கள் நம்பினர் எனத் தெரிகிறது. தெய்வம் உறைந்த ஓர் ஆலமரம் ''கடவுள் ஆலம்'' என வழங்கப்பட்டதாகப் புறநானூறு காட்டுகின்றது. ''ஆல்அமர் கடவுள்'' என்று திருமாலை ''ஆலின் இலை மேல் பள்ளிகொண்ட திருமால்'' என்று புறநானூறு போற்றுகின்றது. ஊழிக்காலத்தில் உலகம் முழுவதையும் ஒடுக்கிய பிறகு திருமால் ஒரு சிறு குழந்தையாக ஆல மரத்து இலையின் மீது பள்ளி கொண்டிருப்பான் என்ற புராணக் கருத்தோடு ஒப்புடைய தாக மேற்குறித்த புறநானூற்று வரிகள் அமைகின்றன.

**ஐம்படைத்தாலி :** புறநானூறு 77-ஆம் பாடலில் பாண்டியன் தலையாலங்கானத்து செருவென்ற நெடுஞ்செழியனை இடைக் குன்றூர் கிழார் பாடும்போது ''தாலிகளைந்தன்றும் இவனே'' என்னும் அடியில் தமிழர்கள் சிறுவர்களுக்கு ஐம்படைத் தாலியைப் பாதுகாப்பிற்காக இடும் வழக்கத்தைப் பாடுகின்றார். இவ்வழக்கம் சங்க காலத்திற்குப் பிற்காலத்திலும் தொடர்ந்து வந்தது என்பது மணிமேகலையிலிருந்தும், கம்பராமாயணம் நாட்டுப் படலத்தி லுள்ள ''தாலியைப் படைதழுவும் மார்பிடை'' என்னும் பாடலடி யிலிருந்தும் விளங்குகிறது. திருமாலின் ஐம்படைகளையும் சிறுவர் களுக்குப் பாதுகாவலுக்கு அணிவது தமிழர் பண்பாடு என இதிலிருந்து விளங்குகிறது. சிவன் முதலான மற்ற தெய்வங்களின்

ஆயுதங்களை இவ்வாறு அணிந்ததற்கான சான்றுகள் எந்த நூலிலும் இடம் பெறவில்லை. அனைவரையும் காக்கும் கடவுளான திருமாலின் ஆயுதங்களே தீயவர்களை அழித்து நல்லோரைக் காக்கும் தகைமையுடையன என்று தமிழ் மக்கள் நம்பி வந்தனர் என இச்செய்தியால் அறிகிறோம்.

தமிழ் மொழிக்கே சிறப்பாக அமைந்த அகப்பொருள், புறப் பொருள் ஆகிய இரண்டையும் தழுவி ஆன்றோர்களால் ஆக்கப்பட்டு ''ஓங்கு பரிபாடல்'' எனப் போற்றப்படும் பரிபாடலின்கண் பண்டைத் தமிழ்ச் சான்றோர் கொண்டிருந்த இறைவனைப் பற்றிய உயர்ந்த கொள்கைகள் பலவற்றைக் காண்கிறோம். இளம்பெருவழுதியார் திருமாலிருஞ்சோலை மலையில் எழுந்தருளி யிருக்கும் கண்ணபெருமானையும், நம்பி மூத்த பிரானையும் அவர்கள் எழுந்தருளியிருக்கும் திருப்பதியையும் வணங்கும் பொருட்டுப் பரிந்து கூறும் பாடல் (15) இறைவன்பால் அன்புடை யார் உள்ளத்தை உருக்கும் நலம் வாய்ந்ததாக அமையக் காண் கிறோம். இப்பாடலில் அவர் கூறும் உவமைகளும் போற்றுதற் குரியதாக அமைகின்றன. இப்பாடலின் அருமையை உணர்ந்து சுவைத்துத் திருமாலைக் கண்ட நம்மாழ்வார் இதில் இடம் பெறும் சொற்களையே போற்றி, ''திருமாலிருஞ்சோலை மலை என்றேன், என்னத் திருமால் வந்து என் நெஞ்சம் நிறையப் புகுந்தான், தென்னன் திருமாலிருஞ்சோலைத் திசை கைகூப்பிச் சேர்ந்த யான் இன்னும் போவேனே கொல்லோ என் கொல் அம்மான் திருவருளே'' என்று பாடி மகிழக் காண்கிறோம். புராணக் கதைகளின் இடை யிடையே இப்புலவர் பெருமக்கள் கடவுளியல்பினைத் தாம் உணர்ந்தவாறு பாடும் பகுதிகள் சிறப்புடையதாக அமைகின்றன. இறைவனால் படைக்கப்பட்ட இவ்வுலகப் பொருள்களிலே அவ்விறைவனுடைய கைவண்ணமும், அறிவு வண்ணமும் திகழப் பெறுதலையும் பிற இறை இயல்புகளையும் ஆசிரியர் இளவெயின னார் கண்டு கூறும் திறம் போற்றுதற்குரியதாக அமைகின்றது.

''அவ்வவைமேய வேறு வேறு பெயரோய்
எவ்வயினோயும் நீயே''.....

அவரவர் செய்பொருட்கரணமும் நீயே என்று போற்றும்போது ''சமயம் கடந்த பொது நிலை'' என்று தாயுமான அடிகள் கூறும் நிலையினைக் காண்கிறோம். ஆழ்வார்களின் நிலையில் நின்று திருமாலைப் போற்றும் நிலையினையும் காண்கிறோம்.

இவ்வாறு கூறப்படும் செய்திகள் மூலமாகச் சங்க இலக்கியங் களில் திருமால் பல்வேறு பெயர்களால் அவன் பண்பு தோன்ற

அழைக்கப்படுவதையும், அவன் ''நீலவுருவத்தன்'' என்றும் நீலமணி, கடல், முகில், பூவை ஆகியன அவனது நிறத்திற்கு உவமைகளாகக் கூறப்பட்டுள்ளன என்றும் அவன் மார்பில் அணியும் கௌத்துவ மணியும், துழாய் மாலையும், கையில் கொண்டுள்ள ஆழியும், சங்கும் மார்பில் உறையும் திருமகளும் அவனுடைய சிறப்பு அடையாளங் களாகக் கூறப்பட்டுள்ளன என்றும் அறிகின்றோம்.

ஸ்ரீதேவி, பூதேவி எனப்படும் திருமகளையும், மண் மகளையும் திருமாலின் தேவியராகக் கூறுவது பொதுவான கருத்தாகும். சங்க இலக்கியங்களில் திருமாலுக்குத் தேவியாகத் திருமகள் மட்டுமே சுட்டப்படக் காண்கிறோம். அவனுக்குத் தேவியாகக் குறிக்கப்படுகின்ற இராதை அண்மைக்காலம் வரை தமிழ் இலக்கியங்களில் இடம் பெறவில்லை எனலாம். நப்பின்னை பற்றிய செய்தி சங்க நூல்களில் காணப்படவில்லை. சிலம்பிலேயே காணப்படுகின்றமை அறிகிறோம். திருமால் மார்பில் மறுவாகத் தொடக்கத்தில் இருந்த திருமகள் பின் உருப்பெற்ற திருமகளாகி, அவனிடமிருந்து பிரிக்கப்பட்டு, தனித்தெய்வமான செய்திகளையும் இக்கட்டுரையில் இடம் பெற்ற சங்க இலக்கியச் சான்றுகளால் அறிகிறோம்.

திருமாலைப் பல்வேறு தொடர்களால் விளக்கும் போது திருமாலின் கோலத்தைக் குறிப்பிட்டுச் சொல்வதையும் அறிகிறோம். திருமால் பற்றிய வர்ணனைகளால் அவனே பேராற்றலும், பேருருவும் கொண்ட பரம்பொருள் எனப் புலவர் பெருமக்கள் காட்டக் காண்கிறோம். மக்கள் துன்பம் தீர்க்கவே திருமால் அவதார மெடுத்ததாகப் புலவர் பெருமக்களால் போற்றப்படுவதையும் காண்கிறோம். அவற்றினுள்ளும் கண்ணனுக்குரிய அவதாரக் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுவதை அறிகிறோம். இக் கருத்துக்களை யெல்லாம் நோக்கும்போது காட்சிப் பொருளிற் கடவுளியல்பைக் கண்ட சங்கப் புலவர்களின் தெய்வ வழிபாட்டு உணர்வுகளையும், திருமால் பரம்பொருளுக்கே உரிய பண்புகளோடு சங்கப் புலவர்களாலும், சங்க காலத்துத் தமிழ் மக்களாலும் போற்றி வழிபடப்பட்டு வந்தான் என்பதையும் அறிகின்றோம்.

# சங்கம் மருவிய கால இலக்கியங்களில்

# திருமால் வழிபாடு

சங்க இலக்கியங்களில் கடவுள் பற்றிய கருத்துகளும் இறை உணர்வுபற்றிய செய்திகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன. மக்கள் வாழ்க்கையோடு இறை உணர்வு பிணைந்து நின்ற பிணைப்பினைச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெளிவாக அறிவிக்கின்றன. சமய உணர்வின் அடிப்படையில் பல பாடல்கள் தோன்றாது போயினும் சங்க இலக்கியத்தைப் பயிலும் போது அந்நாளைய தமிழர்கள் வாழ்க்கை இறை உணர்வோடு கலந்திருந்தது என்பதை அறிந்து கொள்வதற்குச் சங்க இலக்கியங்களில் சான்றுகள் உள்ளன. அகம், புறம் பாகுபாட்டில் நின்று பாட விழைந்த புலவர்களும் அந்நாளைய இறை அனுபவங்களை அகப்புறப் பாடல்களில் கலந்தும் பாடியுள்ளனர். பல்வேறு இறை வழிபாட்டுக் கோட்பாடுகள் தமிழகத்தில் நிலவி வந்ததாயிலும் இலக்கியப் படைப்பைப் பொறுத்த வரையில் சங்க காலப் புலவர்கள் காதல் வீரம் பற்றிப் பாடுவதையே சிறப்பு என்று கருதினர் போலும்.

சங்க இலக்கியக் கட்டில் நின்றும் விடுபடத் தூண்டியதே இறை உணர்வு என்றுதான் கூற வேண்டும். சங்க இலக்கியங்களை அடுத்து நீதி நூல்களும், அவற்றை அடுத்துப் பக்தி நூற்களும் தோன்றின எனினும் சங்க காலத்திற்குப் பின் இறை உணர்வே பல்வேறு இலக்கியங்களையும் படைக்க உந்திற்று எனலாம். இத்தகு சமய இலக்கியங்களை நீதி இலக்கியங்கள், காப்பியங்கள், பக்திப் பாடல்கள் என்ற மூன்று நிலைகளில் காணலாம். இம்மூவகை இலக்கியங்களும் இறை உணர்வை வெளிப்படுத்தும் சமய இலக்கியங்களாகவே காட்சி தருகின்றன.

கடைச்சங்க நாளில் தமிழில் தனி நீதி நூல்கள் தோன்றக் காரணம் தமிழரிடையே தொன்று தொட்டு இருந்து வந்த அறவொழுக்கமும், நாகரிகமும் சிதைந்தொழியாதவாறு காப்பது அக்காலத்தில் தூய வாழ்க்கை நடத்தி வந்த தொல்லாணை நல்லாசிரியர்களின் மாபெரும் கடமையாக மாறியதேயாகும். அவற்றின் விளைவாகத் தோன்றியனவே திருக்குறள் முதலான நீதி நூல்கள். அவைகளெல்லாம் தமிழ் மக்கள் தம் பண்டை அறவொழுக்கங்களைப் பொன்னே போற்போற்றி அவற்றின் வழியே நல்வாழ்க்கை நடத்தி இன்புறுவதற்குப் பெரிதும் பயன்படுத்து வதற்காக எழுதப் பெற்றவையாகும்.

கி. பி. 250 முதல் கி. பி. 600 வரையில் களப்பிரர் ஆட்சி ஓர் இருண்ட காலமாக இருந்தபோதிலும், அந்நிலையிலும் சில தமிழ் நூல்கள் தோன்றச் சிறிது வாய்ப்பு ஏற்பட்டுள்ளது. அக்காலப் பகுதியில் இயற்றப் பெற்ற நூல்களுள் சில சமய நூல்களாகவும், ஒரு நூல் சேர, சோழ பாண்டியரின் பண்டைய பெருமைகளைக் கூறும் நூலாகவும், ஏனையவெல்லாம் நீதி நூல்களாகவும் அமைகின்றன. தமிழ் புலமையிற் சிறந்த சிவனடியார்கள் சிலரும் அக்காலப் பகுதியில் வாழ்ந்து வந்தனர். அவர்களுள் காரைக்கால் அம்மையார், திருமூலர் முதலான பெரியோர்கள் சிலர் குறிப்பிடத்தக்கவராவர்.

சங்க இலக்கிய மரபை மீறிய முதல் நூல் திருக்குறள் எனலாம். அவர் வகுத்தளித்த அறநூல் இந்திய நாட்டில் தோன்றிய பெரும் முனிவர்கள் சுட்டிக் காட்டிய உயர்ந்த குறிக்கோளை நோக்கியே நம்மை அழைத்துச் செல்கிறது. இந்தியப் பண்பாட்டிலும் அதன் விளைவாக எழுந்த தெய்வ நாட்டத்திலும் அவர் கொண்டிருந்த உறுதி, எக்கோட்பாட்டிற்கும் எதிராக அவரை உருவாக்காது. அனைத்துச் சமயங்களின் அடிப்படையினையும் பாராட்டி அவற்றில் ஒற்றுமையினைக் காணச் செய்து எல்லோராலும் பாராட்டப்படும் நிலையில் அவரை உயர்த்தியது. அந்நிலையிலும் சமண சமயத் தவர்களின் அடிப்படை அறங்களான கொல்லாமையையும் வாய்மையையுமே அவர் எல்லாவற்றையும்விட மேலாகப் போற்றினார்.

சமய அடிப்படையில் தனி இலக்கியம் படைக்கும் முயற்சியும் சமணச் சமயச் செல்வாக்கால் எழுந்ததென்றே கொள்ளலாம். சமண, பௌத்த நெறியினராக வாழ்ந்த புலவர்கள் சங்க நாளிலும் வாழ்ந்தனர். இளம்போதியார், உலோச்சனார், நிகண்டன், கலைக்கோட்டுத் தண்டனார், இவர்கள் சமயத்தால் பெயர் பெற் றவர்கள் என்பர். இருப்பினும் சமய அடிப்படையில் இலக்கியம் படைக்கும் முயற்சி அந்நாளில் அவர்களிடமில்லை. அதற்கேற்ற நிலையில் சமுதாயம் அமையவில்லை என்பது காரணமாக இருக்கலாம்.

திருக்குறள் சங்க காலத்திற்குப் பிற்பட்ட நூல் என்பது இப் போது தெளிவாக உணரப்பட்டு வருகிறது. சங்க நாளை அடுத்துத் தோன்றியனவாகக் கூறத்தக்கன சிலம்பு, மேகலை ஆகிய காப்பி யங்கள். இவை சமயப் படைப்புக்களாயினும் இந்நூல் ஆசிரியர் களின் தனித்தன்மை எதுவாயினும் இவர்கள் படைத்த இரு காப்பியங்களும் தமிழர்களிடையே வளர்ச்சியுற்றிருந்த இறைவழி பாட்டு உணர்வுகளை அறிதற்குப் பெரிதும் உதவுகின்றன. சங்க இலக்கியங்களிலும், மற்றும் இவ்விரு காப்பியங்களிலும் காணும்

செய்திகளை வகைப்படுத்தி ஆராய்ந்தால் அவ்வளர்ச்சி தெளிவாகப் புலனாகும்

திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்கள் ''அறம்'' பற்றிய கருத்தில் ஒரு வளர்ச்சியினைக் காட்டுவன. தத்துவம் பற்றிய வளர்ச்சியினை மணிமேகலையில் கண்டு கூறு மளவுக்குப் பிற இலக்கியங்களில் கண்டு கூறலருமையாகின்றது. சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில் கூறப்படும் செய்திகளைக் காணும்போது சமயத் தத்துவக் கோட்பாடுகள் பெரிதாக வளர்ந்துள்ள ஒரு காலத்திலேயே மணிமேகலை தோன்றி யிருக்க வேண்டும் என்று கூறலாம். வைதிக தரிசனங்களைப் பற்றிய விளக்கங்களையும், அவற்றிற்கு வேறாக எழுந்த கோட்பாடுகளைப் பற்றிய விளக்கங்களையும் அறிந்து கொள்ள இக்காதை உதவுகிற தெனலாம். தத்துவங்களோடு கூடிய சமயவுலகு பண்டைத் தமிழ் இலக்கியங்களில் மணிமேகலையிலேயே காணப்படுகின்றது.

மணிமேகலையாசிரியர் காலத்தே தமிழகத்தில் ஆறுவகைச் சமயங்கள் இருந்தமை விளங்கும். நாவரசர், ஞானசம்பந்தர் முதலாயினோர் காலத்தே விளங்கியிருந்த பாசுபதம், காபாலம் முதலிய சமயங்கள் மணிமேகலையாசிரியர் காலத்தில் இல்லை எனலாம். இக்காப்பியக் காலத்தில் வேத வாதத்தின் வேறாகச் சைவமும், வைணவமும் பிரித்துக் கூறப்படுதல் குறிக்கத்தக்கது. அளவை வாதமும் இப்போது மறைந்தொழிந்தது. ஏனையவற்றுள் நிகண்ட வாதம் மட்டில் சமண சமயமென்ற பெயரால் நிலவு கின்றது. பௌத்தம் அதனினும் குறைந்து விட்டதேயன்றிச் சீனம், ஜப்பான், சயாம், பர்மா, இலங்கை முதலிய நாடுகளில் பரவி யுள்ளது. பிற சமயங்கள் இருக்குமிடம் தெரியாது நூலளவில் ஒடுங்கிவிட்டன.

திருமாலை வணங்கும் கொள்கை முற்காலத்தில் புகழ் பெற் றிருந்ததென்பது மணிமேகலை சமயக் கணக்கர் தந்திறங்கேட்ட காதையுள் வைணவ வாதம் கூறப்படுதலால் அறியப்படும். இக் காலத்திலிருந்த நல்லிசைப் புலவர் பலர் பரம பக்தர்களாக விளங் கினர். பரிபாடலில் திருமாலைப் பற்றி சிறப்பித்த கடுவனிள வெயினனார், கீரந்தையார், நல்லெழுனியார் முதலியோர் பாடல்கள் அக்கடவுளரிடம் அன்னோர் கொண்டிருந்த பேரீடு பாட்டுக்குச் சான்றாயுள்ளன. வைணவ சமய மூலத் தத்துவங்கள் பலவும் ஆழ்வார்கள் வாக்கிற்போல இவர்கள் பாடல்களிலும் காணப் படுதல் ஆய்தற்குரியது. இவரன்றி விளக்கத்தனார் கவிசாகரப் பெருந்தேவனார் முதலாகவுள்ள வேறு புலவர்களும் வைணவ சமயிகளாகவே தெரிய வருகின்றனர்,

திருவள்ளுவரைப் பற்றி வழங்கும் கதைகளிலுண்மை எத்தகைய தாயினும் அவரது மொழிகளைக் கொண்டு நோக்குமிடத்துத் திருமால் வழிபாட்டிற்கு அவர் காலத்திலிருந்த சிறப்பியல்பு பெறப் படுகின்றதெனலாம். ''சமயக் கணக்கர் மதி வழி கூறாது உலகியல் கூறிப் பொருளிது வென்ற வள்ளுவன்'' என்று சிறப்பிக்கப்படும் அத்தெய்வப் புலவர் (கல்லாடம்) பிற கடவுளர் எவரையும் குறிப்பிடாத நிலையில், ''மடியிலா மன்னவனெய்தும் அடியளந்தான் தாஅய தெல்லா மொருங்கு''[1] என்றும் ''தாம் வீழ்வார் மென்றோட்டுயிலி னினிது கொல் தாமரைக் கண்ணானுலகு[2]'' என்றும் கூறுதல் அவருள்ளக் கிடையைத் தெள்ளிதிற் புலப்படுத்தக் காணலாம். இக்குறள்களினின்றும், விளையாட்டுலகம், வீட்டுலகம் என்ற இருவகைப் பெருஞ்செல்வங் கட்கும் தனியிறைமை திருமாற்கேயுரியதென்ற வைணவ சமயக் கொள்கை வள்ளுவனார் திருவுள்ளத்துக்கும் ஒத்ததென்பது நன்கு பெறப்படுகின்றது.

சைவம், வைணவம் என்னும் கோட்பாடுகள் சிலப்பதிகாரத் திலும், காணப்படுகின்றன. சிலம்பும், மேகலையும் சமண பௌத்த காப்பியங்களாயினும் இவ்விரு நூற்களும் தோன்றிய காலத்தில் தாங்கள், தங்கள் வழிபடு கடவுளரின் முதன்மையினை நிலை நிறுத்தும் பக்திக் கோட்பாடு தமிழ்நாட்டில் சிறப்பாக இருந்தது என்று கூறலாம். இவ்விரு நூற்களும் சமய அடிப்படையில் எழுந்தவை என்பதை மறுக்க இயலாது. சிலம்பாசிரியர் பிற சமயக் கோட்பாடுகள் பலவற்றுக்கும் வேறாகவும், மேலாகவும் அமைந்துள்ள ''ஊழ்'' என்னும் கோட்பாட்டை நம் உணர்ச்சிக்கு விருந்தாக அமையும் வகையில் விளக்குகிறார். இவரிடம் தருக்க அடிப்படையில் தம் கருத்தை விளக்கும் பாங்கில்லை. பௌத்த சமயத்தைச் சார்ந்த மேகலையாசிரியரோ உணர்ச்சிக்கு விருந்தாகவும், அதே சமயத்தில் தருக்க நிலையில் தம் கோட் பாட்டை விளக்கி அறிவைத் தூண்டும் வகையிலும் படைத்துள்ளார் எனக் கூறலாம். பிற்காலத்தே சைனர்களும், பௌத்தர்களும் தருக்க அடிப்படையில் வாது செய்தலையே மிகுதியாக நம்பித் தத்தம் கோட்பாடுகளை நிலைநிறுத்த முயன்றமையினைத் தமிழக வரலாறு உணர்த்துகின்றது.

இக்காப்பியங்களில் சமண, பௌத்த நிலையங்கள் இயக்கி— கோவில் போன்றவற்றையும் காணலாம். சமணத் தலைவர்கள் பலர் நாடு முழுவதும் சுற்றிவந்ததையும் காவிரிப்பூம்பட்டினம், மதுரை போன்ற பகுதிகளில் இவர்கள் சிறப்பாக வாழ்ந்ததையும்

1. திருக்குறள் - 610    2. திருக்குறள் - 1103

அறிய முடிகின்றது. இச்செய்திகளை இந்த அளவு சங்க இலக்கியங்களில் காண முடியவில்லை. எனவே சமயச் சிந்தனைகள் தெளிவாக வளர்ந்துவிட்ட நிலையை இந்நூல்களில் காண முடிகின்றது. மேலும் பக்தி நெறியும் வளர்ந்து வந்துள்ளதை ஆய்ச்சியர் குரவையில் வரும் பாடல்களும் பிறவும் தெளிவாக உணர்த்துகின்றன. புராண, இதிகாசச் செய்திகளும் சங்க இலக்கியங்களிலும் பலவாக இக் காப்பியங்களில் இடம் பெறுவதைக் காண முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் திருமால் வழிபாடு எவ்வாறிருந்தது என்று கண்டது போலவே, சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் வழிபாடு எவ்வாறு இருந்தது என்பதைக் காண்பதே இவ் வியலின் நோக்கமாகும். இங்கு நீதிநூல்களும், சிலம்பு, மேகலை போன்ற காப்பியங்களும், மூவேந்தர் புகழ்பாடும் முத்தொள் ளாயிரமும் முதன்மை ஆதாரங்களை வழங்கும் நூல்களாகக் கொள்ளப்படுகின்றன. திருமந்திரம், காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஆகிய இரண்டும் சைவ இலக்கியங்களாதலின் அவற்றில் காணப்படும் திருமால் பற்றிய குறிப்புகள் அடுத்து வரும் ''சைவ இலக்கியங்கலில் திருமால் பற்றிய குறிப்புகள்'' என்ற தலைப்பில் ஆராயப்பெறும் பகுதியில் கூறப்பெற உள்ளன.

திருமாலைக் குறிக்கும் பெயர்களும் அவை இடம் பெறும் சூழல்களும் திருமாலின் தேவியாகிய திருமகள் பற்றிய செய்திகளும், திருமாலின் அவதாரமாகிய கிருட்டிணாவதாரத்தில் கண்ணனின் காதலியாக வரும் நப்பின்னை பற்றிய செய்திகளும் திருமாலின் தங்கையாகக் கூறப்படும் கொற்றவை பற்றிய செய்திகளும், திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறும் நிலைகளும் திருமால் பற்றிய வர்ணனைகளும், திருமாலின் அவதாரங்கள் பற்றிய செய்தி களும் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

**திருமால் – பெயர்கள் :** சங்க நூல்களில் திருமால் குறிக்கப்படுவது போலவே சங்கம் மருவிய கால இலக்கியங்களான பதினெண்கீழ்க் கணக்கு போன்ற நீதி இலக்கியங்களிலும், மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற காவியங்களிலும், முத்தொள்ளாயிரம் போன்ற சிற்றிலக்கியத்திலும், திருமந்திரம், காரைக்கால் அம்மையார் படைத்த சைவ இலக்கியங்களிலும் குறிக்கப் படுகின்றான். அரிவம்சம், விஷ்ணு புராணம் கூறும் ''திருமால் ''அரி'' நாராயணன் என்ற பெயர்களோடு சிலம்பிலும், ''விஷ்ணு'' என்ற பெயரோடு மேகலையிலும் குறிக்கப்படுகின்றான். இப்பெயர்கள் சங்க இலக்கியங்களில் காணப்படாதவை.

இவ்விலக்கியங்களில் மாயவன், மாயோன், மால், மாலவன், திருமால், திருவமால், செங்கண் அரிமால், நெடுமால், கடல் வண்ணன், பூவண்ணன், மாமணி வண்ணன், அஞ்சன வண்ணன், புதுமலர் வண்ணன், கரியவன், ஆழியான், சக்கரத்தான், திகிரிப்பொருபடையான், நெடியோன், நெடுமுடி அண்ணல், நீணில மளந்தோன், வையம் அளந்தான், பெரியவன், புள்ளூர் கடவுள், மண்ணுயிர் முதல்வன், திருவமர்மார்பன், சேவகன், நாராயணன், அறிதுயில் அமர்ந்தோன், அரவணைக் கிடந்தோன், விஷ்ணு என்று திருமால் பலவாறு அவனது நிறத்தோடும், படைகளோடும், அவதாரப் பெருமைகளோடும் பண்புகள் தோன்ற அழைக்கப் படுகின்றான். அவை பற்றிய தகவல்கள் தொடர்ந்து வரும் பத்திகளில் விளக்கப்பெற உள்ளன.

இவற்றுள் திருமால், திருவமால், செங்கண் அரிமால், நெடுமுடி அண்ணல், நீணிலமளந்தோன், வையம் அளந்தோன், பெரியவன், புள்ளூர் கடவுள், நாராயணன், அரவணைக் கிடந்தோன், விஷ்ணு போன்ற பெயர்களும், நிறம் பற்றிய தன்மையில் அமைந்த பூவ்ண்ணன், மாமணி வண்ணன், அஞ்சன வண்ணன், புதுமலர் வண்ணன். கரியான் போன்ற பெயர்களும் சங்க இலக்கியங்களில் காணப்படாதவை. ஆயினும் பெயர்களாகச் சுட்டப்பெறாவிட் டாலும் இப்பெயர்கள் உணர்த்தும் பண்புகள் சங்க இலக்கியங்களில் காட்டப்பெற்றுள்ளன.

**மாயவன் :** மாயவன் என்ற சொல், திருமாலின் மாயையில் வல்ல பண்பைக் குறிக்கும். பல அவதாரச் செய்திகளை விளக்கு மிடங்களிலும், பரம்பொருளாகக் கொண்டு அவனைப் போற்று மிடங்களிலும் ''மாயவன்'' என்ற சொல் ஆளப்படுகிறது.

திணைமாலை நூற்றைம்பதில் கடற் சோலையையும், அச்சோலை சூழ்ந்த வெண்மணல் பரப்பையும் உவமையால் விளக்க முற்படும்போது திருமாலுக்கு மறிகடலையும், தம் முன்னவனுக்குக் கானல்சேர் வெண்மணலையும் உவமேயங்களாகக் காட்டுமிடத்து மாயவன் என்ற சொல் அவனது கரிய நிறப் பண்பு தோன்றக் குறிப்பிடப்படுகின்றது.[3] மற்றொரு இயற்கைப் புனைவில், கண்ணபிரான் இயல்பாகவே வலியுடையவன் என்பதும், கரிய நிற முடையவன் என்பதும் ஒருசேர விளங்க ''மாயவன்'' என்று குறிப்பிடப்படுகின்றான்.[4] இங்ஙனம் முல்லைத் திணைப் பாடல்களில் கருப்பொருளாகிய மாயவனையே உவமை காட்டுவது சிறப்பாக

3. திணைமாலை நூற்றைம்பது - பாடல் 58
4. திணைமாலை நூற்றைம்பது - பாடல் 97

அமைந்துள்ளது. நான்மணிக் கடிகையின் ஆசிரியர் நூலின் காப்புச் செய்யுளில் திருமாலைப் போற்றிப் பரவுகின்றார். இவர் வைணவர் என்பதும் இதனால் பெறப்படுகின்றது. இங்குத் திருமாலின் தோற்றம் வருணிக்கப்படுகின்றது. நிலவு திருமாலின் வாள்முகத்தை ஒக்கும் என்று புகழுமிடத்துத் திருமால் வியக்கத்தக்க ஆற்றலுடையவன் என்ற பொருள்பட மாயவனாகக் காட்டப்படு கின்றான்.[5] மாயவன் என்ற சொல் இலக்கியங்களில் பலவிடத்தும் பயின்று வருகின்றது. அச்சொல் திருமாலின் அவதாரமாகிய கிருட்டிணனைக் குறிக்குமிடத்து வருகின்றது. அதுபோன்று திருமாலின் பல்வேறு பண்புகளை விளக்கிக் கூற வருமிடங்களிலும் அச்சொல் ஆராயப் பெற்றுள்ளது.

இளங்கோவடிகள் கடலாடு காதையில் திருமால் காத்தற் கடவுளாதலின் அவனை முதலில் வாழ்த்துகின்றார். கொடு கொட்டி முதலிய பதினோராடற்கும் முக நிலையாகிய தேவபாணி ''மாயோன்பாணி'' என்று குறிப்பிடுகின்றார். இங்கு திருமாலைப் பெருங்கடவுளாகப் பாடி வாழ்த்துகின்றவிடத்து மாயோனாகக் காட்டுகின்றார்.[6] அவர் திருமாலை மாதரியின் குல தெய்வமான கண்ணபெருமானாகக் காட்டுமிடத்தும், நப்பின்னையோடும், பலராமனுடன் ஆடிய குரவைக் கூத்து நிகழ்ச்சிகளை விளக்கு மிடத்தும் ''மாயவன்'' என விளிக்கின்றார்.[7] குரவைக் கூத்தின் இயல்பினை மாதரி வாயிலாகக் காட்டுமிடத்தும்[8] கிருட்டிணாவ தாரத்தில் கன்றினையே குறுந்தடியாகக் கொண்டு விளவினை உதிர்த்தவன்[9], வாசுகி நாணாகப் பாற்கடலைக் கடைந்து தேவர் களுக்கு அமிழ்தம் ஈந்தவன்[10] வஞ்சனையோடு நின்ற குருந்த மரத்தினை முறித்தவன்[11], என்றும் திருமாலின் பெருவலி தோன்றக் கூறுமிடத்து அவனது குழலின் இனிமை தோன்றவும் ''மாயவனாகக்'' காட்டப்படுகின்றான்.

கடவுளருள் வைத்து முழு முதலாகிய பெரிய கடவுள், அறிய வொண்ணா மாயங்கள் பலவும் செய்ய வல்லவன், நான்முகன் தோன்றும் உந்தித் தாமரையை உடையவன் என்றும், திருமாலின் பேராற்றலும், பேருருவும் தோன்ற வருணிக்கும்போது ''மாயவன்''

5. நான்மணிக்கடிகை - கடவுள் வாழ்த்து
6. சிலம்பு. கடலாடு காதை - அடி. 35
7. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - அடி - கருப்பம் - பாடல் 6
8. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் 14 - 16 - (கொளு)
9. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 19
10. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 20
11, சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 21

என்றும், ''பெரியவன்'' ''விண்ணவன்'' என்றும் போற்றப்படுகின்றான். அத்தகையவனைக் காணாத கண்கள் கண்களாகா என்று கண்பெற்ற பயன் அவனைக் காண்பதே என்று போற்றிப் பரவுமிடத்து இளங்கோவடிகள் ''மாயவன்'' என்ற சொல்லை ஆளுகின்றார்.[12] பூவைநிலைத்துறையில் சோழனைத் திருமாலாகப் போற்றுமிடத்துத் திருமால் வாமன அவதாரத்தில் உலகளந்த (பேராற்றலாகிய) மாயம் செய்தவன் என்ற பண்பு தோன்ற ''மாயவன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[13]

இக்குறிப்புக்களையெல்லாம் நோக்கும்போது மாயவன் என்ற பெயர் அமையும் இடங்களிலே ''கிருட்டிணாவதாரக் குறிப்புப் பெரும்பாலும் இடம் பெறுவதையும், உலகளந்த சிறப்பு ஒரு சில இடங்களில் குறிக்கப்படுவதையும், கண்ணன் என்னும் பெருந் தெய்வமாகக் கரியநிறப் பண்போடு இயற்கைப் புனைவில் போற்றப் படுவதையும் காணலாம். சங்க இலக்கியங்களிலும் ''மாயவன்'' என்ற பெயர் அமையுமிடங்களில் இவை போன்றே திருமாலின் அருட் பண்பும், மறப்பண்பும், நிறப்பண்பும் தோன்றப் பேசப்படுவதைக் காண முடிகின்றது.

**மால் :** திருமாலின் திருவடி நிழலைச் சேர்தற்குரிய அறவினையைப் புரிவதே மாந்தர் கடமை என்று வற்புறுத்துகின்ற விடத்துத் திருமாலை ''மால்'' என்று குறிப்பிடுகின்றார்.[14] கொடி தாங்கிய நீண்ட தோளாற்றலை உடையவன் திருமால் என்பது பெற ''மால்'' என்று பழமொழிப் பாடல் ஒன்றில் குறிக்கப் படுகின்றான்.[15]

**வையை நெடுமால் :** வையைப் பேரியாற்றின் கரையின்மேல் திருக்கோயில் கொண்டருளிய நெடிய திருமாலை மாதரி நறுமணப் பொருள்கள் கொண்டு வணங்கச் சென்ற குறிப்பு இடம் பெறுகின்றது.[16] ''வையை நெடுமால்'' என்றது ''இருந்தவளமுடையார்'' என்னும் திருப்பெயரை உடைய திருமால் என்பர். இத்தகைய வழிபாட்டைப் பரிபாடலிலும் காணலாம்.[17]

சோழன் திருமாலாகப் போற்றப்படுமிடத்துத் திருமால் காத்தல் தொழிலாலும், செல்வத்தாலும் சிறந்தவன் என்பது படவும்

12. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 36
13. முத்தொள்ளாயிரம் - 64 - 1 - 4
14. இன்னிலை - அறப்பால் - பாடல் 3
15. பழமொழி - பாடல் 79
16. சிலம்பு. துன்பமாலை - 4 - 5
17. பரி - பாடல் 10

துளசி மாலையின் சிறப்புத் தோன்றவும், துழாய் மாலாகப் போற்றப் படுகின்றான்.[18] சோழன் வெற்றியைப் பாடுமிடத்து, அவன் காக்கும் உலகைத் திருமால் தன் ஓரடிக் கீழ் வைத்தான் என்று வாமன அவதாரத்தின் புகழும் பேராற்றலும் தோன்றச் செங்கண் மாலாகக் காட்டப்படுகின்றான்.[19]

சங்க இலக்கியங்களில் ''மால்'' என்ற பெயர் அமையுமிடங் களில் பெரும்பாலும் கிருட்டிணாவதாரச் செய்தியும், சிலவிடத்து வாமனாவதாரச் செய்தியும் மேலும் சிலவிடத்து, துதிகளும் பேசப் படுகின்றன. இச்சங்கம் மருவிய இலக்கியங்களில் கிருட்டிணாவதாரப் பண்பு எங்கும் கூறப்படவில்லை. ஓரிடத்தில் வாமனாவதாரச் செய்தியும், சிலவிடங்களில் அவனது பேராற்றலும், காத்தற் பண்பும் கூறுகின்ற பொழுது இப்பெயர் பேசப்படுகின்றது.

**நாராயணன் :** திருமாலை உணர்த்தப் பல பெயர்களைக் கூறி னாலும் அவனது திருப்பெயராகவும், நாம மந்திரமாகவும் பாராட்டப்படுவது ''நாராயணன்'' என்பதே. பிற தெய்வத் திருக் கோலங்களுக்குக் கூறுவதுபோல் திருமாலுக்கும் ஆயிரம் நாமங்கள் கூறுவது உண்டு. நாமங்கள் ''ஆயிரமுடைய நம் பெருமான்'' என்பது நம்மாழ்வார் பாடல். ஆயின் வைணவர்களைப் பெரிதும் கவர்ந்த திருநாமம் ''நாராயணா'' என்பது. இந்நாமம் இம்மை நலனும், மறுமை நலனும் தரவல்லது என்றும் கூறுவர். ''குலம் தரும் செல்வம் தந்திடும் நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன், நாராயணாவென்னும் நாமம்'' என்பது திருமங்கை மன்னன் பாடல். ''நாராயணா என்னும் சொல்லை நாமமாகக் கூறுவதோடு எட்டெழுத்து மந்திரமாகவும் கொள்வர். அவ்வாறு கொள்ளும்போது ''ஓம் நமோ நாராயணாய'' எனக் குறிப்பிட் டாலும், ''நமோ நாராயணாய'' என்ற அளவிலேயே பலரும் பாடுவர். சங்க கால இலக்கியங்களில் இப்பெயரால் திருமால் அழைக்கப் பெறவில்லை. இச்சங்கம் மருவிய இலக்கியங்களிலும் சிலம்பில் ஓரிடத்திலும் மட்டுமே இந்நாமத்தால் விளிக்கப் பெறு கின்றான். கஞ்சனுடைய வஞ்சத்தைக் கடந்தவன் என்றும், பஞ்ச வர்க்குத் தூது சென்றவன் என்றும், கண்ணன் அவதாரத்திலே செய்த வீரமும், அறத்திற்குத் துணைநின்ற பேரருளும் தோன்ற அத்தகையவனைப் போற்றாத ''நா'' இருந்தும் பயனில்லை என்கிறார். தன்னை மறந்து போற்றும் இவ்விடத்தில் இம்மை நலமும் மறுமை நலமும் ஒருங்கே தரவல்லவன் என்ற பண்போடு ''நாராயணா'' என்று குறிப்பிடுகின்றார்.[20]

18. முத்தொள்ளாயிரம் - 64 - 1 - 4
19. முத்தொள்ளாயிரம் - 79 - 1 - 4
20, சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - பாடல் - 37

**கோவலன் :** சங்க இலக்கியத்தில் பரிபாடலில் ஓரிடத்தில் மட்டும் ''கோவல'' என்று கிருட்டிணாவதாரத்திற்குரிய ஆயர்குலத் தலைவனாகக் காட்டப்படுகின்றான். அதுபோல, சங்கம் மருவிய இலக்கியங்களில் முத்தொள்ளாயிரத்தில் ஓரிடத்தில் மட்டும், கிருட்டிணாவதாரத்தில் செய்த வீரச்செயல்களும், ஆனேறு தழுவி நப்பின்னையை மணந்த பண்பும், வளர்ந்த ஆயர் குலத்தின் சிறப்பும், திருமார்பின்கண் மறுவை ஏந்திய மாண்பும் ஒருசேரத் தோன்றும்படியாகக் குலப் பண்பு தோன்றத் திருமால் கோவலனாகப் போற்றப்படுகின்றான்.[21]

**நிறம் பற்றிய பெயர்கள் :** சங்க இலக்கியங்களில் காணப்படுவது போலவும், அவற்றினும் மிகுதியாகவும் திருமால் தனது நிறத்தைக் குறிக்கும் வகையில் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றான்.

**கடல் வண்ணன் :** கார்நாற்பதில் முல்லைத் திணைக்குரிய முதல், உரி, கருப்பொருள்களையும் ஆசிரியர் காட்டுகின்றார். கருப் பொருளாகிய மாயவனது மார்பில் தார்போல இனிய தீம்பெயல் பொழிவதாகக் காட்டுமிடத்துப் ''பொருகடல் வண்ணன்'' என்றழைக்கின்றார்.[22] திருமாலின் புராணத்தைக் காதல் கொண் டோதிய வைணவ வாதியின் கூற்றிலே கடல் வண்ணனாகப் போற்றப்படுகின்றான்.[23] ஆய்ச்சியர் குரவையில் ''கதிரைத் திகிரியால் மறைத்தவன்'' என்ற பாரதக் கதைக் குறிப்பும்[24] அசோதை மகனாக வளர்ந்த பெருமையும், கடல் கடைந்த மாண்பும் ஆகிய வியக்கத்தக்க செயல்கள் புரிந்தவன் என்பது தோன்றவும்[25] கடல் வண்ணனாகப் போற்றப்படுகின்றான். திருப்பாற் கடலைக் கடைந்தபோது உண்டான போர்ச் சிறப்பு இலங்கையில் உண்டான வெற்றிப் புகழ், பாரதப் போரில் கொண்ட வெற்றி ஆகிய முப்பெரும் புகழையும் கொண்ட திருமால் என்று கூறி அவனைச் சேரன் செங்குட்டுவனாக உருவகித்துப் பூவை நிலைத் துறையில் வாழ்த்தும்போதும்[26] சோழனைத் திருமாலாகப் போற்றுமிடத்துத் திருமாலின் திருவடிச் சிறப்பும் தோற்றப் பொலிவும் விளங்க, ஆழ்ந்த கடல் வண்ணனாக நிறம் தோன்றவும் காட்டப் பெறுகின்றான்.[27]

---

21. முத்தொள்ளாயிரம் - 4 - 1 - 4
22. கார்நாற்பது - முதல்பாடல்
23. மணி - சமயக் கணக்கர் தம் திறம்கேட்ட காதை - 98-99
24. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 26
25. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 32
26. சிலம்பு. கால்கோட் காதை - 237 - 41
27. முத்தொள்ளாயிரம் - 105 - 1 - 4

சங்க இலக்கியங்களில் முந்நீர் வண்ணனாகத் திருமால் சுட்டப்படு மிடத்தில் இராமாவதாரக் குறிப்பும் மாயவண்ணனாகச் சுட்டப்படு மிடத்தில் திருமால் யாகப் புரோகிதனாகவும் அமைந்த குறிப்பும் இடம் பெறுகின்றன. இச்சங்கம் மருவிய இலக்கியங்களில் கிருட்டிணாவதாரக் குறிப்புக்களும், பாரதக் கதைக் குறிப்புக்களும், இராமாவதாரக் குறிப்பும் அமையக் ''கடல் வண்ணனாக'' அழைக்கப்படுகின்றான்.

**பூவண்ணன் :** திருமாலின் திருவடிகள் பல்வேறு அவதாரங்களில் புரிந்த மூன்று அருஞ்செயல்கள் கூறுமிடத்துப் ''பூவண்ணன்'' எனப் போற்றப்படுகின்றான். இங்கு ''அளந்தது'' என்பதனால் பேரருளும், ''சாய்த்தது'' என்பதனால் பேராற்றலும்., ''உதைத்தது'' என்பதனால் பேரறிவும் ஆகிய இம்மூன்று கடவுட் குணங்களும் தோன்றக் குறிக்கப்படுகின்றான்.[28] இக்கருத்துத் திரிகடுக வழிபடுகடவுள் வணக்கச் செய்யுளாக இருப்பதனால் ஆசிரியர் நல்லாதனார் வைணவர் என்ற கருத்தும் அறியப்படு கின்றது.

கண்ணகி கோவலனுக்கு அமுது படைக்கின்ற காட்சியைக் கண்டு வியந்த மாதரியின் கூற்றிலே ''புதுமலர் வண்ணன்'', ''தூமணி வண்ணன்'' என்று திருமால் போற்றப்படுகின்றான். இங்கு கண்ணகியையும் கோவலனையும் மாதரியின் வழிபடு தெய்வங் களாகிய நப்பின்னையும் கண்ணனுமாகக் கண்ட தெய்வ உணர்வு புலப்பட இப்பெயர்களால் அழைக்கின்றார் ஆசிரியர்.[29]

**மாமணி வண்ணன் :** இயற்கைக் காட்சியில் அன்னமும் மயிலும் ஆடுகின்ற காட்சியைப் புனைந்துரைக்க வந்த சாத்தனார் ஆண் அன்னத்திற்குப் பலராமனையும், ஆண் மயிலுக்கும், பெண் மயிலுக்கும் முறையே கண்ணனையும் நப்பின்னையையும் உவமை காட்டுமிடத்தில் கிருட்டிணாவதாரச் செய்தி புலப்பட மாமணி வண்ணனாகத் திருமாலைச் சுட்டுகின்றார்.[30] கோவலனும், கண்ணகியும் திருமால் கோயிலை வலஞ்செய்த செய்தி இடம் பெறுமிடத்து மணிவண்ணனாகக் காட்டப்படுகின்றான்.[31]

**அஞ்சனவண்ணன் :** திருமால் கிருட்டிணாவதாரத்தில் ஆடிய பத்துவகை ஆடல்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் கஞ்சன் ஏவிய

---

28. திரிகடுகம் - கடவுள் வாழ்த்து
29. கொலைக்களக் காதை - 46 - 53
30. மணி. சிறைக்கோட்டம் அறக்கோட்டம்
    ஆக்கிய காதை - 61 - 66
31. சிலம்பு. காடுகாண் காதை - 8 - 10

வஞ்ச யானையின் கொம்பை ஒடிப்பதற்குக் கண்ணன் ஆடிய கூத்து ''அல்லியத் தொகுதி'' என்ற செய்தி அமையும் இடத்தில் திருமாலின் வெற்றியும், நிறமும் தோன்ற அஞ்சனவண்ணனாகச் சுட்டுகின்றார் இளங்கோவடிகள்.[32] இவ்வாறே அஞ்சனவுருவனாகச் சங்க இலக்கியத்திலும் காட்டப்பெறுகின்றான்.

**கரியவன் :** திருமாலின் திருமேனியில் கண்களும், அடிகளும் கைத்தலங்களும், வாயும் சிவந்த நிறமும் ஏனைய உறுப்புக் களெல்லாம் கருநிறமும் உடையவன் என்று போற்றும் இளங்கோவடிகள் அவனைக் காண்பதே கண்பெற்ற பயன் என்றும், அவனைக் கண் இமைக்காமல் காணும் கண்களே மிகச்சிறந்தன என்றும் கூறவந்து, ''கரியவன்'' என்று பரவுகின்றார்.[33] திருமாலின் மகனாகக் காமன் குறிக்கப்படுமிடத்தும் திருமால் கரிய நிறத் தனாகவே காட்டப்படுகின்றான்.[34] இத்தகைய நிறம் பற்றி அமையும் பெயர்களை நோக்கும்போது பிற அவதாரக் குறிப்புக் களிலும் கிருட்டிணாவதாரச் செய்திகளே பெரும்பான்மையும் இடம் பெறுகின்றன.

மேற்குறித்த பூவண்ணன், புதுமலர் வண்ணன், மாமணி வண்ணன், தூமணி வண்ணன், கரியவன் போன்ற பெயர்களால் சங்க இலக்கியங்களில் சுட்டப்படா விட்டாலும் இப்பெயர்கள் கரிய நிறப்பண்போடே பேசப்படுவதைக் காண முடிகின்றது.

**நெடியோன் :** திருமால் வாமன அவதாரத்தின் பெருமையும், ஆற்றலும் தோன்றப் பல இடங்களில் குறிப்பிடப்படுகின்றான். பழமொழி நானூற்றில் கிருட்டிணாவதாரத்தில் ஆநிரை காத்த குறிப்போடு, காத்தற் கடவுள் என்பது தோன்ற நெடியோனாகக் காட்டப்படுகின்றான்.[35]

காயசண்டிகையின் பெரும்பசிக்கு உவமை கூறமுகத்தான் இராமாயணச் செய்தியை அமைக்கும் சாத்தனார் இராமனை ''நெடியோன்'' என்று திருமாலின் அவதாரம் என்பது தோன்றக் குறிப்பிடுகின்றார்.[36] மற்றொரு இடத்தில் மாவலியின் சிறப்பைக் கூறுகின்றார். இங்குத் திருமாலின் உலகளந்த பேராற்றல் தெளிவாக விளங்குமாறு 'நெடியோன்' என்று போற்றப்படுகின்றான்.[37]

32. சிலம்பு, கடலாடு காதை - 54 - 57
33. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 36
34. முத்தொள்ளாயிரம் - 106 - 1 - 4
35. பழமொழி - பாடல் - 75
36. மணி. உலக அறவிபுக்க காதை - 9 - 13
37. மணி. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை - 31 - 54

மூங்கிலுடன் வெண் கடம்பு தோன்றும் இயற்கைப் புனைவில் கண்ணனும் பலதேவனும் நிற்பதாகக் கண்டு தொழுதனர் என்ற குறிப்பில் திருமால் கண்ணனாக அவதரித்த பண்பு தோன்ற ''நெடியோன்'' என்று கூறப்படுகின்றான்.[38] திருமாலின் தோற்ற மாகிய பரசுராமனது புகழ் கூறுமிடத்து, அவ்வவதாரத்தின் பேராற் றல் தோன்ற மழுவாள் நெடியோனாகக் காட்டப்படுகின்றான்.[39] சிலம்பில் கோயில்களைப் பற்றியும், அங்கு உறையும் தெய்வங்களுக்கு மரபு வழியான பூசனைகளை மக்கள் செய்தனர் என்ற குறிப்பும் கூறப்படுகின்றது. திருமால் கோயிலைக் குறிப்பிடும் போது உலகளந்த நீலமேனி நெடியோனாகத் திருமாலைச் சுட்டுகின்றார் ஆசிரியர்.[40] வேனிற்காதையில் வடக்கின் எல்லையாகத் திருவேங்கட மலையைக் கூறுகின்றார். நிலம் கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகம் தவஞ் செய்து வீடு பெற்ற மலை என்றும், எல்லோ ராலும் அறியப்படும் தன்மையது என்றும் சிறப்பிக்கும்போது திருமாலை ''நெடியோன்'' என்று குறிப்பிடுகின்றார்.[41] திருவரங்கத்து இறைவன் ''திருவமர்மார்பன்'' என்று பொருத்த முறக் காட்டப்படுவது போலத் திருவேங்கடத்து உச்சியில் நின்ற திருமாலின் கோலத்தைக் கூறுமிடத்தில் ''செங்கண் நெடியோனாகக்'' காட்டப்படுகின்றான்.[42]

பெருமலையைக் குறிக்கிட்டுச் செல்லும் பேரியாற்றுக்குத் திருமாலினது திருமார்பில் அணிந்த மணி ஆரத்தை உவமிக்கும் அடிகள் பெருமலையின் ஆற்றலுக்கும், தோற்றத்துக்கும், கருநீல நிறத்திற்கும் திருமாலை ஒப்புமை கூறி அதற்குப் பொருத்தமாக உலகளந்த பேராற்றல் தோன்ற ''நெடியோன்'' என்று கூறுகின்றார்.[43]

முத்தொள்ளாயிர ஆசிரியர் பாண்டியன் புகழைப் பாடுமிடத்தில் பாரதக் கதைக் குறிப்பொன்றை அமைக்கின்றார். கண்ணனைத் திருமாலின் அவதாரம் என்பது தோன்றவும், உலகளந்த வாமன அவதாரத்தின் பெருமை விளங்கவும் ''செங்கண் நெடியோனாகக் காட்டுகின்றார்.[44] சங்க இலக்கியங்களில் மன்னர்களைப் பூவை

38. மணி. சிறைக் சோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை - 75 - 78
39, மணி. சிறைசெய் காதை - 25 - 26
40. சிலம்பு. இந்திரவிழவூரெடுத்த காதை - 169 - 74
41. சிலம்பு - வேனிற் காதை - 1 - 2
42. சிலம்பு - காடுகாண் காதை - 41 - 52
43. சிலம்பு - காட்சிக் காதை - 21 - 22
44. முத்தொள்ளாயிரம் - 3 - 1 - 4

நிலைத்துறையில் பாடும்போதும், பிரமனைப் படைத்த பரம் பொருளாகக் காட்டும்போதும், தேவர் தலைவனாகப் போற்றும் போதும், திருமால், நெடியோன் என்ற பெயரால் குறிக்கப் படுகின்றான். இச்சங்கம் மருவிய இலக்கியங்களில் கிருட்டிணா வதாரம் இராமன், பரசுராமன் போன்ற அவதாரக் குறிப்புகளும் வாமன அவதாரப் பண்பை விளக்கும் நெடியோன் பெயரில் இடம் பெறுகின்றன. இப்பெயராட்சி திருமால் பற்றிய அவதாரக் கருத்துக்கள் பெரிதும் போற்றப்பட்டு வந்தமையைக் காட்டுகின்றது.

**நீணிலமளந்தோன் :** காமனைத் திருமாலின் மகன் என்று கூறுமிடத்திலும், அநிருத்தனைச் சிறை மீட்பதற்காகச் ''சோ'' என்னும் நகரத்தில் ஆடிய ஆட்டத்தைக் குறிப்பிடுமிடத்திலும் திருமால் ''நீணிலமளந்தோன்'' என்று சுட்டப்படுகின்றான்.[45] விநோதக்கூத்து ஆறனுள் ஒன்றாகிய குடக்கூத்து ஆடிய மாயவன் வெற்றியைச் சிறப்பிக்குமிடத்திலும் இப்பெயரால் ஆற்றல் தோன்றக் குறிக்கப்படுகின்றான்.[46] உலகளந்த பேராற்றலை விளக்கும் இப்பெயரும், இங்கு அமையும் செய்திகளும் சங்க இலக்கியங்களில் சுட்டப் பெறாவிட்டாலும் இப்பெயருக்குரிய பண்பு ''நெடியோன்'' என்று பலவிடங்களில் சுட்டப்படுகின்றது.

**நெடுமுடி அண்ணல் :** முழுமுதல் என்றும் திருவடிப் பெருமை உடையவன் என்றும் மாடலன் கூற்றில் வரும் திருமால் சேவடி மாண்புடன் நெடுமுடி அண்ணலாகக் காட்சி தருகின்றான்.[47] இப் பெயர் சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறவில்லை. ஆயினும் இப் பெயருக்குரிய பண்பு சங்க இலக்கியத்தில் சுட்டப்பெறுகின்றது. இக்குறிப்புகளையெல்லாம் நோக்கும்போது வாமன அவதாரப் பண்புகளை விளக்கும் வகையில் நெடியோனாகத் திருமால் காட்டப் பெறுவதையும், அவ்வவதாரப் பேராற்றலுடன் ஒருசிலவிடங்களில் பிற அவதாரப் பண்புகளும் சேர்த்து விளக்கமுறுவதையும் காண முடிகின்றது.

**அரி :** முப்பெருங் கடவுளர்களாகத் திருமாலும், சிவனும், பிரமனும் குறிக்கப்பட்டு அவர்களது நெஞ்சத் தாமரையின் மேல் நிலை பெற்ற அறிவு விளக்காகக் கொற்றவையைக் காட்டுகின்றார் இளங்கோ. முத்தொழிலும் அவளருள் கொண்டே நிகழ்த்தப்படு கின்றன என்று கூறுபவர், முதலில் 'அரி' என்ற பெயரோடு திருமாலைப் போற்றுகின்றார்.[48] இப்பெயரும், இச்செய்தியும் சங்க இலக்கியத்தில் இடம் பெறவில்லை.

45. மணி. மலர்வனம்புக்க காதை - 123-125
46. சிலம்பு - கடலாடு காதை - 54 - 57
47. சிலம்பு - காடுகாண் காதை - 147 - 149
48. சிலம்பு. வேட்டுவ வரி - பாடல் 8 - 3 - 4

**அரிமால் :** கொற்றவையின் குமரிக் கோலப் புனைவின்போது சங்கு சக்கரத்துடன் உள்ள அவள் ''அரிமால்''[49] என்று அழைக்கப் படுகின்றாள். திருமாலின் தங்கையாகச் சுட்டப்படும் போது ''திருவமால்'' என்று போற்றப்படுகின்றாள்.[50] கொற்றவை பற்றிய இச்செய்திகளும் திருமால் இப்பெயர்களால் அழைக்கப்பட்டமையும் சங்க இலக்கியத்தில் காணப்பெறாத புதிய செய்திகள்.

**திருவமால் :** வழித்திறம் கூறுகின்ற மாடல மறையோன் கூற்றில் ''திருமால்'' என்ற பெயரோடு விளக்கம் பெறுவதையும், அழகர் மலை பற்றி மறையோன் கூறுவன மருட்கையணிக்கு எடுத்துக் காட்டாக அமைவதையும் காண முடிகின்றது.[51] ஆய்ச்சியர் குரவையில், பஞ்சவர்க்குத் தூது சென்றமையும், வாமன அவதாரப் பெருமையும் தோன்றத் திருமால் பரம்பொருளாகக் காட்டப்படுகின்றான். உலகளந்தோன் இராமனாக அவதரித்துக் காடு சென்றமை, இராவணனை அழித்தமை கூறி, அவனது புகழைக் கேளாத செவி செவியாகாது என்றும், செவிகள் வாய்க்கப்பெற்றதன் பயனே திருமாலின் புகழ் கேட்பதற்காகத்தான் என்றும் போற்று மிடத்துத் திருமாலாகக் காண்கின்றார், இளங்கோவடிகள்.[52]

சங்க இலக்கியங்களில் இங்ஙனம் ''திருமால்'' என்ற பெயரோடு குறிக்கப்பெறாமை அறியத்தக்கது. மேற்குறித்த செய்திகளால் அவதாரப் பண்புகளுடன் ''பரம்பொருளாக'' காட்டுமிடங்களில் இப்பெயரால் போற்றப்பட்டமை பெறப்படுகின்றது.

**மன்னுயிர் முதல்வன் :** திருமாலை நான்முகனது தந்தையாகக் கூறுமிடத்தில், நிலைபெற்ற உயிர்களுக்கு முழுமுதல்வன் என்று குறிக்கப்படுகின்றான்.[53] சங்க இலக்கியங்களில் வேத முதல்வனாகப் பல இடங்களில் போற்றப்படுகின்றான்.

**திருவமர் மார்பன் :** திருவரங்கத்தில் தேவர் முதலிய பலரும் பரவி உய்வதற்காகப் பணை மீது அருள் வண்ணக் காட்சியில் கிடந்தான். இதற்குத் தக்கவாறு திருமகளை மார்பிலே கொண் டவன் என்ற பொருள் தோன்றத் ''திருவமர் மார்பன்'' என்று இளங்கோவடிகளின் சொற்றிறம் தோன்றப் பாராட்டப்படு கின்றான்.[54] சங்க இலக்கியங்களில் இப்பெயர் பலவிடங்களில்

---

49. சிலம்பு. வேட்டுவ வரி - பாடல் 9 - 1 - 2
50. சிலம்பு. வேட்டுவ வரி - பாடல் 3 - 4
51. சிலம்பு. காடுகாண் காதை - 89 - 91
52. சிலம்பு. ஆய்ச்சியர் குரவை - பாடல் 34
53. மணி. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை - 57 - 59

பயின்று வரக் காணலாம். சங்கம் மருவிய இலக்கியங்களில் இப் பெயர் மிகுதியாகக் காணப்படவில்லை. சங்க காலத்தைவிட இந் நாளில் செல்வாக்குப் பெற்றிருந்த சமண பௌத்தர்களால் பெண் களுக்கு முக்கியத்துவம் தரப்படாத நிலையே இதற்கு ஒரு காரணமாக இருக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது.

**துழாய் மாலையன்:** பூதஞ் சேந்தனார் திருமாலைத் தொழுவது இனிமை தரும் என்று உலகோர்க்கு உணர்த்துமிடத்து மணம் கமழும் துழாய் மாலையனாகக் கண்டு போற்றுகின்றார்.[55] சங்க இலக்கியத்திலும் துழாய் மாலைச் செல்வனாகத் திருமால் குறிக்கப் பெறுகின்றான்.

**அறிதுயில் அமர்ந்தோன்:** திருமால் சேடத்தின் பெருமை யினையும், அதைத் தோளின்மேல் அணிந்துகொண்ட செங்குட்டு வனின் சமயப் பொதுமையையும் காட்டும் இளங்கோவடிகள் திருவனந்தபுரத்துத் திருமாலை "அறிதுயில் அமர்ந்தோன்" என்று கிடந்த கோலம் தோன்றப் போற்றுகின்றார்.[56] சங்க இலக்கியத் துள்ளும் காத்தற் பண்பு தோன்றுமாறு இப்பெயரால் திருமால் அழைக்கப்படுகின்றான்.

**அரவணைக் கிடந்தோன்:** மாதரி கண்ணகியின்மேல் வைத்த அன்பினாலும், குரவைக் கூத்தாடிய காரணத்தாலும் திருமாலின் அடித்தொண்டு பூண்ட குடும்பத் தலைவனுக்கு மகளாகத் தோன்றினாள் என்ற குறிப்பை அமைத்து, இவற்றையெல்லாம் செய்து திருவிளையாடல் புரியும் ஆடகமாடத்துத் திருமாலை நினைவு கூர்ந்து அரவுப் பாயலின் அறிதுயிலோனாக இளங்கோ காட்டுகின்றார்.[57] அரவணைத் திருமால், சங்க இலக்கியத்திலும் காட்டப்படுகின்றான்.

**ஆழியான்:** இருள் நிலவு ஆகிய இயற்கைக் காட்சிகளைப் புனையும் பொழுது பலராமனுடன் சேர்த்து ஆற்றல் தோன்ற ஆழிப் படையானாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[58]

**சக்கரத்தான்:** கபிலர் "சக்கரத்தானை மறப்பின்னா" என்று திருமாலைப் போற்றுமிடத்துப் பகையை அழிப்பவன் என்ற பொருள் தோன்றச் சக்கரத்தானாகக் குறிப்பிடுகின்றார்.[59]

---

54. சிலம்பு. காடுகாண் காதை - 35 - 40
55. இனியவை நாற்பது - முதற்பாடல் - அடி 3
56. சிலம்பு. கால்கோட் காதை - 61 - 67
57. சிலம்பு. வரந்தரு காதை - 51 - 52, 132 - 135
58. திணைமாலை நூற்றைம்பது - 96
59. இன்னாநாற்பது - பாடல் 3 - 3

**திகிரிப் பொருபடையான் :** மூவேந்தரையும் திருமாலாகப் புனைந்து பூவை நிலை என்னும் துறையில் பாடும்போது இளங்கோவடிகள் கிருட்டிணாவதாரச் செயல்களையும் அவர்களுக்கு ஏற்றி உரைக்கின்றார். அங்ஙனம் சோழ மன்னனைக் கண்ணனாகக் காட்டுமிடத்துத் திருமாலின் ''வெற்றிச் சிறப்புத் தோன்றத் ''திகிரிப் பொருபடையான்'' என்று போற்றுகின்றார்.[60]

இங்ஙனம் திருமால் அவனது ஆயுதப் பெருமைகளோடு பேசப் படுமிடங்களில் ஆற்றல் உடையவனாக, மறத்தற்கரியவனாக, வெற்றிப் பெருமிதம் தோன்றக் குறிப்பிடப்படுகின்றான். சங்க இலக்கியங்களில், இயற்கைப் புனைவிலும், வேத முதல்வனாகக் காட்டுமிடத்திலும், நேமியோன், திகிரியோன் என்று பேராற்றலும் பேருருவும் தோன்றவும் தீமையை அழிக்கும் மாண்பினனாகவும் திருமால் காட்டப்படுகின்றான்.

**சேவகன் ,** படர்க்கைப் பரவலாகத் திருமால் புகழ் பாடும் இளங்கோவடிகள் அவன் ''சோ'' என்ற மதில் அழித்தது, மூவுலகும் ஈரடியால் அளந்தது, இராமனாக நிலவுலகத்தே தோன்றிக் கான் போந்தது, இலங்கை கட்டழித்தது ஆகியன எல்லாம் தன் அன்பர் களுக்காகச் செய்த செயல்களே என்பது பெறப் போற்றுகின்றார். இங்கு அன்பர்களுக்குத் தொண்டனாக விளங்கும் அருள் தோன்றக் கேசவனாகத் திருமால் போற்றப்படுகின்றான்.[61]

**விஷ்ணு :** விஷ்ணு புராணம் பற்றிய குறிப்பைச் சாத்தனார் கூறுகின்றார்.[62] அனைத்துலகையும் உடலாகக் கொண்டு உள் நின்று எங்கும் எல்லா உயிர்களிலும் பரந்து நிற்பவன் திருமாலே என்ற கருத்து வேதங்களில் காணப்படுகின்றது. ''விஷ்ணு'' என்ற சொல்லுக்கு எங்கும் பரந்தவர், நன்மை தருகிறவர், மாயையி லிருந்து அகற்றுபவர், எல்லாப் பொருள்களுக்கும் உயிர் நாடியாய் இருப்பவர் என நான்கு பொருள் விளக்கங்கள் உண்டு. இந்த விஷ்ணுவின் தொடர்பு பெற்றிருப்பதைத்தான் ''வைஷ்ணவம்'' என்பது. இங்ஙனம் எங்கும் பரந்திருப்பவன் என்னும் பொருள் தோன்ற திருமால் ''விஷ்ணு'' என்று குறிக்கப்படுகின்றான்.

இக்குறிப்புக்களையெல்லாம் நோக்கும்போது திருமால் சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுவது போன்றே சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் நற்பண்புகளும், அவதாரப் பெருமைகளும்,

60. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 29, 30, 31
61. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 35
62. மணி. சமயக்கணக்கர் தம் திறம்கேட்ட காதை - 98 - 99

ஆற்றலும் நிறமும், அருள் உள்ளமும் வெளிப்படும் வண்ணம், பல்வேறு பெயர்களால் அழைக்கப்படுகின்றமை பெறப்படுகின்றது.

சங்க இலக்கியங்களில் காணப்பெறாத திருமால், அரி, நாராயணன் என்ற பெயர்களோடு சிலம்பிலும் விஷ்ணு என்ற பெயரோடு மேகலையிலும் திருமால் இடம் பெறுவதைக் காண முடிகின்றது. இந்நிலை பெயரளவில் திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சியினை உணர்த்துகின்றது எனலாம்.

**திருமால் — திருமகள் :** சங்க இலக்கியங்களில் காணப்பட்டது போன்றே சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் ''திரு'' என்ற சொல்லாட்சியும், திருமகள் பற்றிய குறிப்புகளும் பலவிடங்களில் காணப்படுகின்றன. தொடக்க காலத்தைப் போலவும், அழகு, செல்வச் செழிப்பு, இறையருள் போன்ற பொருள்களில் திருமகள் சிலவிடங்களில் இவ்விலக்கியங்களில் குறிக்கப்படுகின்றாள். திருமாலின் மார்பில் மறுவாகிப் பின் உருவாகித் தனித் தெய்வமான குறிப்புக்களும் மூன்று வேறு சத்திகளுள் ஒருத்தியாகவும் திருமகள் குறிக்கப்படுகின்றாள்.

**திருவமர் மார்பன் :** மாங்காட்டு மறையவன் கூற்றிலே திருவரங்கத்துத் திருமாலின் கிடந்த வண்ணக் கோலம் சித்தரிக்கப் படும்போது திருமால் மார்பில் திருமகள் விரும்பி உறைவதாகக் குறிப்பிடப்படுகின்றாள்.[63] உலகளந்த திருமாலின் திருமார்பில் வீற்றிருக்கின்றவளாகத் திருமகள் குறிக்கப்படுகின்றாள்.[64] கேசியை வதம் செய்த காலத்தும், குடக்கூத்தாடிய காலத்தும் நப்பின்னையை மணந்த காலத்தும் திருமகள் அவன் மார்பில் மறுவாகத் தோன்றி விளங்கியிருந்த செய்தி முத்தொள்ளாயிரத்தில் இடம் பெறு கின்றது.[65] மாநிலங்காக்கும் சோழனைக் காத்தற் கடவுளாகிய திருமாலாகக் காணும் முத்தொள்ளாயிர ஆசிரியர், கண்ணனாக அவன் குருந்தம் ஒசித்த காலத்தில் அவன் மார்பில் மறுவாகத் திருமகள் வீற்றிருந்த செய்தியைப் பாடும்போதும் திருமகள் மறுவாக அமைந்த செய்தியை அறிகிறோம்.[66]

**பாற்கடலில் திருமகளின் தோற்றம்** பற்றிய செய்திக் குறிப்பு சிலம்பில் இடம் பெறுகின்றது. திருப்பாற்கடலைக் கடையும் காலத்தில் வச்சிரப் படையும், திருமகளும், அமிழ்தமும் நிரலே

---

63. சிலம்பு. காடுகாண் காதை - 35 - 40
64. ஆய்ச்சியர் குரவை - 14 - 16 (கொளு)
65. முத்தொள்ளாயிரம் - பாடல் 4 - 1 - 4
66. முத்தொள்ளாயிரம் - பாடல் 63 - 1 - 4

பிறந்தன என்னும் செய்தி, கண்ணகியைத் திருமகளாக மதித்துப் போற்றும் கோவலன் கூற்றிலே காண்கிறோம். இங்குப் பாற்கடலில் திருமகள் தோன்றியதையும் உடன் தோன்றிய பொருட்களையும் பற்றி அறிகின்றோம். இங்ஙனம் கடல் கடைகின்ற காலத்தில் திருமகளுடன் வச்சிரமும் அமிழ்தமும் பிறந்தனவெனப் புராணம் கூறுவதாக அடியார்க்கு நல்லாரும் உரைக்கின்றார்.[67] இங்குத் திருப்பாற்கடலில் திருமகள் தோன்றிய செய்தி, முழுமையாக விளக்கம் பெறவில்லை. செய்திக் குறிப்பாகவே அமைகின்றது. சங்க இலக்கியங்களில் காணப்படும் செய்திகளைக் கோவைப்படுத்திக் காணும்போது திருமகள் தோற்றம் பற்றிய செய்தி, படிப்படியாக முழு விளக்கத்துடன் அமைகின்றது.

சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டது போலவே திருமால் மன்னர்களுக்கு உவமமாக அமையும்போதும், திருமகள் அமர்ந்த மார்பினராகவே காட்டப் பெறுகின்றனர். அவ்விடங்களில் எல்லாம் செங்கோலாட்சிக்குத் துணை நிற்பவளாகத் திருமகள் குறிக்கப்படுகின்றாள். மன்னனைத் திருமாலாகப் புகழும் வழக்கில் திருமாலின், ஸ்ரீவத்ச அடையாளத்தை மன்னர் மீதும் ஏற்றிக்கூறும் வழக்கையே சங்க இலக்கியங்களில் காண முடிகின்றது. திருமகளை அரசர்களின் செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் தொடர்பு படுத்திப் பார்க்கும் முறையைச் சங்கப் பாக்களில் காண முடியவில்லை. எனவே, திருமகள் வழிபாட்டில் மற்றொரு வளர்ச்சி யாக இதனைக் கொள்ளலாம்.

திருமகள் விரும்புதற்குரிய மார்பினையுடைய நெடுஞ்செழியன் திருமகள் கழிகின்ற மார்புடையவனானான் என்று ஒரு பொருள் தருமாறு ''திருவீழ் மார்பின் தென்னவர் கோவே'' எனப்படு கின்றான். இங்கு, மன்னன் செங்கோல் தவறுமிடத்துத் திருமகளும் நீங்குவாள் என்ற கருத்தைப் புலவர் பெற வைக்கின்றார்.[68] திருமகள் வீற்றிருக்கின்ற மார்பினனாகச் சேரன் செங்குட்டுவனைக் குறிக்குமிடத்தில் செங்கோல் செலுத்தும் வேந்தனிடம் விரும்பி உறைபவள் என்று திருமகள் குறிக்கப்படுகின்றாள்.[69]

**வளத்திற்குக் காரணமாகத் திருமகள் அமைதல் :** ''திருவிழை மூதூர்'' என்று புகார் நகரச் சிறப்பைக் கூறுமிடத்தில் பல்வேறு செல்வ வளங்களும் மிகுந்த நகரம் என்ற உட்பொருள் தோன்றவும், வளத்தின் மிகுதி காரணமாகத் திருமகளும் விரும்பி உறைகின்ற

67. சிலம்பு, மனையறம்படுத்த காதை - 47 - 48
68. சிலம்பு வழக்குரை காதை - 23
69. சிலம்பு நடுகற் காதை - 57

நகரம் என்று கூறும்போது செல்வச் செழிப்பு இருக்குமிடத்தே திருவுக்கெல்லாம் தலைவியான திருமகள் ஆங்கு நிலைபெற் றிருப்பாள் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்ததையும் உணர்கிறோம்.[70]

திருமகள் தானே வளங்காட்டப் புகுந்தாள் என்று கூறுமிடத்தில் நகரங்களின் வளத்தைக் குறிக்கத் திருமகள் உறையும் பதியாகக் கூறுவது வழக்கம். இதனைக் காணும்போது வளம் நிறைந்த இடம் திருமகள் தங்கும் இடமாகக் காட்டப்படுவதை அறியலாம். மேலும், தாமரை மலரிலிருந்து நீங்கி இங்கு உறைந்தாள் என்னு மிடத்தில் செந்தாமரை மலரிலே வீற்றிருப்பவள் என்ற கருத்தும் பெறப்படுகின்றது.[71]

கொழுநிதி குவிந்து கிடந்ததனால் பட்டினப்பாக்கத்தை, ''திருமகள் இருக்கை'' என்கின்றார் இளங்கோவடிகள். ''வளம்'' என்றவுடன் திருமகளை நினைவு கூர்கின்ற போக்கை இங்குக் காண்கிறோம்.[72]

**மக்களுள் ஒருத்திக்குத் திருமகள் உவமமாக அமைதல்:** கண்ணகியின் அழகினைக் கூறும் இளங்கோவடிகள் ''அவள் அழகு செந்தாமரை மலரில் எழுந்தருளியிருக்கின்ற திருமகளுடைய புகழ் நிறைந்த அழகையே ஒக்கும் என்று ஒப்பிட்டுக் கூறுகின்றார். செந்தாமரையை இருப்பிடமாகக் கொண்டவள் என்பதும், புகழ் நிறைந்த அழகிய தோற்றம் உடையவள் என்ற கருத்தும் பெறப்பட இங்கு மானிடப் பெண் ஒருத்திக்குத் தெய்வமாகிய திருமகளின் அழகு ஒப்பிடப்படுகின்றது.[73]

கோவலன் கண்ணகியையும், அவள் நுதலையும் திருமகளோடும், பிறை நிலவோடும் அவள் பிறந்த குடியைத் திருப்பாற் கடலோடு ஒப்பிட்டுப் பாராட்டுகின்ற இடத்தில் திருமகள் மானிடப் பெண்ணின் அழகுக்கு உவமையாக்கப்படுகின்றாள்.[74]

ஈமத்தீயில் அமர்ந்த ஆதிரைக்கு, மணம் பொருந்திய செந்தாமரை மலரில் ஒப்பின்றி வீற்றிருக்கும் திருமகளை, உவமை காட்டுகின்றார் சாத்தனார். சிறந்த மணம் பொருந்திய தாமரை மலரை இருப்

---

70. மணி. விழாவறை காதை - 32
மலர்வனம்புக்க காதை - 34
71. சிலம்பு - இந்திரவிழவூரெடுத்த காதை - 213 - 217
72. சிலம்பு - கடலாடு காதை - 126 - 127
73. சிலம்பு - மங்கல வாழ்த்துப் பாடல் 25 - 27
74. சிலம்பு - மனையறம்படுத்த காதை - 38 - 41

பிடமாகக் கொண்டு வீற்றிப்பவள் என்ற பண்பு தோன்ற திருமகள் இங்கு அமைவதைக் காண்கிறோம்.[75]

திருமகள், ''திரு'', ''நல்லாள்'', ''செய்யாள்'' போன்ற பெயர்களால் போற்றப்படுகின்றாள்.[76] திருமகள் எவரையும் சினவாத பெரியோர்கள் கருதியவற்றையே முடித்து வைப்பாள் என்னுமிடத்தில், அன்புள்ளம் கொண்டோர்க்கு அருள் துணையாக நின்று உதவுவாள் என்னும் விளம்பி நாகனார் கூற்றில், காத்தற் கடவுளின் துணைவி அம்மாயவனின் பண்புக்கேற்ப அருள் பண்புடையவளாக ''நல்லாள்'' என்று போற்றப்படுகின்றாள்.[77]

திருமகள் அருள் செய்தால் செல்வம் கிட்டும். அவள் அருள் நீங்கினால் உள்ள செல்வமும் அழிந்து போகும் என்று கூறுமிடத்தில், பொருட் செல்வமும், மேலான அருட்செல்வமும் நல்கும் தேவியாகப் போற்றப்படும்போது ''செய்யாள்'' என்று செம்மை நிறமும் அழகும் தோன்றவும் அருள் கொண்ட செம்மைப் பண்புடனும் திருமகள் போற்றப்படுகின்றாள்.[78]

**திருமகளாடிய பாவைக் கூத்து :** போர் செய்வதற்குச் சமைந்த கோலத்துடன் அவுணர் மோகித்து விழும்படி திருமகளாடிய கூத்து பாவைக் கூத்து என்றும், அது பதினோராடலுள் ஒன்று என்றும் மணிமேகலை, சிலம்பு இவற்றில் கூறப்பெறுகின்றது. சிவந்த திருமேனியை உடைய திருமகள் அசுரர்கள் போராற்றுவதற்கு மேற்கொண்ட கொடிய உருவம் நீங்கி, மோகித்து விழும்படி கொல்லிப் பாவை உருவம் கொண்டு நின்று ஆடிய கூத்தே பாவைக் கூத்து எனப்படுகின்றது. திருமாலின் துணைவியாதலால் தீமையை அழிப்பதற்குத் துணை நின்று காப்பவள் என்ற காத்தற் பண்புடன் சிவந்த நிறம் படைத்தவள் என்ற கருத்தையும் பெறுகின்றோம்.[79]

**மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகத் திருமகள்:** கண்ணகியைத் திருமகளும், கலைமகளும், கொற்றவையுமாகிய மூவேறு சக்திகளும் ஒன்று கூடிய ஆதி சக்தியின் உருவமாகவே பாவித்தும் போற்றுகிறார் இளங்கோவடிகள். இங்கு மூன்று சக்திகளில் ஒருத்தியாகத் திருமகள் போற்றப்படுகின்றாள்.[80]

---

75. மணி, ஆதிரைபிச்சையிட்ட காதை - 33 - 34
76. நான்மணிக்கடிகை - 41, 43, 67
77. நான்மணிக்கடிகை - பாடல் - 41
78. நான்மணிக்கடிகை - பாடல் - 43 - 67
79. சிலம்பு. கடலாடு காதை - 61
    மணி. மணிமேகலாதெய்வம் வந்து தோன்றிய காதை - 4
80. சிலம்பு. அழற்படு காதை இறுதி வெண்பா - 1 - 2

**திருமால் - திருமகள் - நிலமகள் :** திருவுடை மன்னனாகிய நெடுஞ்செழியனைத் திருமாலாகக் கொண்டு அவன் மார்பில் எப்பொழுதும் திருமகள் வீற்றிருப்பதாகவும் கூறுமிடத்தில் நில மகளும் திருமாலின் மீது தணியாத வேட்கையுடைய தேவியாகக் குறிக்கப்படுகின்றாள்.[81]

இங்ஙனம் திருமாலின் துணைவியாகிய திருமகள் பாற்கடலில் தோன்றினாள் என்ற குறிப்பும், மானிடப் பெண்ணுக்கு உவமமாக அமைவதும், பேரழகும் சிவந்த நிறமும் படைத்தவள் என்பதும் செங்கோலாட்சியை விரும்புபவள் என்பதும், வளத்திற்குக் காரணமானவள் என்பதும், பாவைக்கூத்தின் மூலம் காத்தற் பண்பு நிறைந்தவள் என்பதும் மூவேறு சக்திகளுள் ஒருத்தி என்பதும் அமையக் கூறப்படும் செய்திகளைக் காண முடிகின்றது.

சங்க இலக்கியங்களில் திருமகள் பாற்கடலில் தோற்றம் பற்றிய செய்தி ஓரளவு விளக்கமாக அமைகின்றது. இங்கு செய்திக் குறிப் பாகவே அமைகின்றது. வளத்திற்குக் காரணமானவள் திருமகள் என்ற செய்தி சங்க இலக்கியங்களிலும் மிகுதியாகக் காணக் கிடக்கின்றது. செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் திருமகளைத் தொடர்புபடுத்திப் பேசும் புதிய செய்திகளும் வளர்ந்திருக்கின்ற நிலை அறியத்தக்கது. பாவைக்கூத்து பற்றிய செய்தியும் மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகப் போற்றப்படும் நிலையும் சங்க இலக்கியங் களில் காணப்படவில்லை. நிலமகள் பற்றிய குறிப்பு சங்கம் மருவிய இலக்கியங்களில் ஓரிடத்தில் மட்டுமே காணப்படுகின்றது. இத்தகு செய்திகளுக்கு அரசியல், சமுதாயம், பொருளாதாரம் இவைகளில் ஏற்பட்ட மாற்றமும், சூழ்நிலையுமே காரணம் எனலாம்.

**திருமால் - நப்பின்னை :** ஆயர் குலத்துள் ஒளித்து வளர்ந்த கண்ணபிரானே முல்லை நில மக்கள் தொழுகுலமாக வணங்கி வந்த திருமாலவதார மூர்த்தியானான். அவனது பால சரித்திரங் களாகத் தமிழாயர்கள் வழங்கி வந்தவை பல. ''தமிழ் நாட்டில் வழங்கிய கண்ணபிரான் சரிதங்கள்'' பற்றிய மு. இராகவையங்கார் எழுதியுள்ள குறிப்புக்களால் அறியலாம். அவற்றுள் அப்பெருமான் நப்பின்னை என்ற ஆயர் குல அணங்கை ஆய்க்குல வழக்கப்படி ''மகட் கொடையாக'' விடுக்கப்பட்ட எழுவிடைகளையுந் தழுவியடர்த்து மணம் புரிந்த சரிதம் ''ஏறுகோடல்'' தமிழ் நாட்டில் மிகுதியாகப் போற்றப்பட்டதோடு நாடகமாக நடிக்கப்பெற்றும் வந்தது. இளங்கோவடிகளும், சாத்தனாரும் கூறுவனவற்றாலும் இச்செய்திகள் நன்கு விளங்கும். வடநாட்டார் இராதா தேவியைக்

81. சிலம்பு - கட்டுரை காதை - 121 - 122.

கண்ணன் காதலியருட் சிறந்தவளாகக் கொண்டாடுதல் போலத் தென்னாட்டவராற் பண்டைக்கால முதலே பாராட்டப்படுந் தேவி இந்நப்பின்னைப் பிராட்டியே என்பதும் அறியத்தக்கது.

ஆதியில் முல்லை நிலத்துக்கு உரிமையாயிருந்த திருமால் கோவில்கள் பிற்காலத்தில் குறிஞ்சி, மருதம் முதலிய நிலங்களிலும் பரவின. இவற்றினும் கண்ணபிரான் வழிபாடே மிகுதியாக வழக்குப் பெற்றிருந்த தெனலாம். கண்ணபிரானை, அப்பிரானது காதல் தேவியான நப்பின்னைப் பிராட்டியுடனும் தமையனான பலதேவருடனும், வணங்கிச் சிறப்பித்து வந்த செய்தி இச்சங்கம் மருவிய இலக்கியங்களால் நன்கறியப்படும். கண்ணன் பலதேவருடனும் நப்பின்னையுடனும் எழுந்தருளியுள்ள நிலை பழைய திருப்பதிகளிலொன்றான திருவல்லிக்கேணியில் இன்றும் காணப் படுதல் அறியத்தக்கது.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கிருட்டிணாவதாரம் பற்றிய செய்திகள் இடம் பெறும்போது பெரும்பாலான இடங்களில் பலதேவருடனும், நப்பின்னையுடனும் சேர்த்துப் போற்றப் படுவதைக் காண்கிறோம். சங்க இலக்கியங்களில் நப்பின்னை பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை. சங்கம் மருவிய கால இலக்கியங் களில் இடம் பெறுகின்றது. சிலம்பில் அதிகம் காணப்படுகின்றது. நப்பின்னை கண்ணனின் உள்ளம் கவர்ந்த துணைவி என்றும், பேரழகு படைந்தவள் என்றும், கரிய நிறத்தவள் என்றும் போற்றப் படக் காண்கிறோம்.

**கண்ணன் துணைவியாக நப்பின்னை :** நப்பின்னையும் கண்ணனும் காதலுடன் கூடி இல்லறம் நடத்தியதுபோல ஒருவர் தமக்கு வாழ்க்கைத் துணையையறிந்து மணம் புரிந்து மென்மையுடன் இல்லறம் நடத்த வேண்டும் என்று அறிவுறுத்துமிடத்தில் ''வேட்டோன் ஆழ்ந்த செயல்'' நப்பின்னை வாழ்விற் காணலாம் என்கின்றார் இன்னிலை ஆசிரியர். இங்கு இருவருக்கும் உள்ள பிணைப்பும் அன்பின் ஆழமும் வெளிப்படக் காண்கின்றோம்.[82] கண்ணன் தன் முன்னவனோடும், நப்பின்னையோடும் துவரா பதியில் தாதெரு மன்றத்தில் குரவையாடிய செய்தியைச் சாத்தனார் இயற்கைக் காட்சிக்கு உவமம் காட்டுகின்றார். இங்கு, ''பிஞ்ஞை'' என்று நப்பின்னையை விளித்து, பெண் மயிலுக்கு உவமம் காட்டு கின்றபோது கண்ணனையொத்த கருநிற முடையாள் என்பதையும் அறிகின்றோம்.[83]

82. இன்னிலை - இன்பப்பால் - பாடல் - 22
83. மணி. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை - 61 - 66

கண்ணன் வடமதுரையில் பிறந்து ஆயர்பாடியில் நப்பின்னையை மணந்து அவள் அன்பால் துயர் தீர்ந்தான் என்பர். கோவலனுக்குக் கண்ணகி அமுது படைக்கும் காட்சியைக் கண்டவிடத்து ஐயையும், மாதரியும், கண்ணனும் நப்பின்னையுமாகிய தம்முடைய வழிபடு தெய்வங்களையே கண்கூடாகக் கண்டு பாராட்டுவதாகக் காட்டுகின்றார் இளங்கோவடிகள். கண்ணனுடைய துயரத்தைத் தீர்த்த குலவிளக்காக நப்பின்னை பேசப்படுவதை இங்குக் காண்கின்றோம்.[84]

**கண்ணன் ஏறு தழுவி நப்பின்னையை மணத்தல் :** ஏழு கொல்லேறுகளைத் தழுவிக் கண்ணன் பூங்கொடியாகிய நப்பின்னையை மணந்த செய்தி முத்தொள்ளாயிரத்தில் இடம் பெறுகின்றது. முல்லை நிலத்துக்குரிய கொல்லேறு தழுவும் செய்திக்கேற்ப, அந்நிலத் தெய்வமாகிய திருமாலே கொல்லேறு தழுவினான் என்பது மிகச் சிறப்பாக அமைகின்றது.[85]

**பேரழகு படைத்தவள் :** உலகளந்த திருமால் தன் திருமார்பில் வீற்றிருக்கின்ற திருமகளை நோக்காமைக்குக் காரணம், கையில் வளை பெய்து அணிந்த நப்பின்னையே என்று பேரழகு தோன்ற ஆய்ச்சியர் குரவையில் போற்றப்படுகின்றாள்.[86]

**யமுனைத் துறையில் ஆடல் :** யமுனைத் துறையில் கண்ணனும், நப்பின்னையும் விளையாடி மகிழ்ந்ததும், கண்ணன் அவளது துகிலை வஞ்சித்துக் கவர்ந்து ஒளித்து விளையாடியதும், கண்ணனின் உள்ளம் கவர்ந்தவள் என்பதும் கண்ணனின் அழகு, நெஞ்சத்து நிறை, கைவளை இவற்றையெல்லாம் கண்ணன் கவர்ந்தான் என்பதும் அவள் பேரழகுடையவள் என்பதும் இங்கு போற்றியுரைக்கப்படுகின்றது. இங்கு, மெல்லிய இடையும் மிகுந்த அழகும், சிறந்த நிறமும் கொண்டவளாகவும் அழகிய தோற்றப் பொலிவுடையவளாகவும் நப்பின்னை குறிக்கப்படுகின்றாள்.[87]

**குரவையாடல் :** கண்ணபெருமான் பண்டு ஆயர் பாடியில் தாதெரு மன்றத்தில் பலதேவனுடன் ஆடிய இளம்பருவ வரலாற்று நாடகங்கள் பல. அவற்றுள் வேல் நெடுங்கண் நப்பின்னையோடும், முன்னவனோடும், ஆய மகளிர் சூழ ஆடிய குரவை நாடகம் சிறப்பாகப் பேசப்படுகின்றது. இக்குரவைக் கூத்து வினோதக்

---

84. சிலம்பு - கொலைக்களக் காதை - 46 - 58
85. முத்தொள்ளாயிரம் - பாண்டியன் புகழ் - பாடல் 4 - 1 - 4
86. ஆய்ச்சியர் குரவை - 14 - 16 (கொளு)
87. ஆய்ச்சியர் குரவை - 22, 23, 24, 25

கூத்து ஆறனுள் ஒன்று, காமத்தையும் வென்றியையும் பாடு பொருளாகக் கொண்ட குரவைச் செய்யுட்களைப் பாடி எழுவ ரேனும், எண்மரேனும், ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது குரவைக் கூத்து எனப்படும்.

அசோதைப் பிராட்டியார் அக்காட்சியைக் கடவுட் காட்சியாகக் கண்டு தம்மை மறந்து கைகளைத் தலைமேற் கூப்பித் தொழுது புகழும்படி ஆடியருளிய அக்குரவைக் கூத்து மாதரியின் கூற்றிலே பேசப்படுகின்றது. ''தீ நிமித்தம்'' காரணமாகக் கறவைகளும், கன்றுகளும் எய்திய துன்பம் நீங்குவதற்காகக் கண்ணனை வேண்டி ஆடியதாக ஆய்ச்சியர் குரவையில் இக்கூத்து இடம் பெறுகின்றது,

பாவைக்கூத்து, திருமகள் தனியாக ஆடியது, குரவைக்கூத்து கண்ணனோடு சேர்ந்து நப்பின்னை ஆடியது. கண்ணனும் நப்பின் னையும் தெய்வங்களாகவே போற்றப்பட்டதை உணர்கிறோம்.[88] மணிமேகலையிலும் குரவைக் கூத்து பற்றிய செய்தி இடம் பெறு கின்றது.[89]

இங்ஙனம் சங்க இலக்கியங்களில் கூறப்படாத நப்பின்னை இவ் விலக்கியங்களில் கிருட்டிணாவதாரச் செய்தி பேசப்படுமிடங்களில் திருமாலுக்குத் துணைவியாகவும் திருமகளைவிடப் பேரழகு படைத்தவளாகவும், அவன் உள்ளம் கவர்ந்தவனாகவும், துயர் தீர்த்த குலவிளக்காகவும் போற்றப்படும் செய்திகளை இக்குறிப்புக் களால் அறிகின்றோம்.

திருமகள் என்ற ஒரு துணைவியையுடைய திருமாலைச் சங்க காலத்திலும், திருமகள் - நப்பின்னை என்ற இரு மனைவியரை யுடைய திருமாலைச் சங்கம் மருவிய காலத்திலும் காணும் நாம், இதில் வளர்ச்சியுற்ற ஒரு நிலையை உணர்கிறோம். வடநாட்டார் தொடர்பு மிகுதியாக ஏற்பட்டமை இத்தகு வளர்ச்சிக்கு ஒரு காரணம் எனலாம்.

**திருமால்-கொற்றவை:** சங்க இலக்கியங்களில் திருமாலின் தங்கை யாகவோ, திருமாலுடன் தொடர்புடையவளாகவோ கொற்றவை எங்கும் இடம் பெறவில்லை. சங்க இலக்கியங்களில் திருமாலின் தங்கையாகச் சொல்லப் பெறாத கொற்றவை சங்கம் மருவிய கால இலக்கியங்களில் சிலம்பில் ''திருவமாற் கிளையாள்'' என்று

88. ஆய்ச்சியர் குரவை - பாடல் 28
89. மணி - 19 - 15 - 16

திருமாலுக்குத் தங்கையாகக் குறிக்கப்படுகின்றாள்.[90] முப்பெருங் கடவுளருள் ஒருவனான திருமால், காத்தல் தொழிலைக் கொற்றவையின் அருள்கொண்டே நிகழ்த்துவதாகக் கூறப்படுகின்றது.[91] கொற்றவை அமரர்க்கு ஆடிய குமரிக் கோலம் சித்தரிக்கப்படுகின்றது. இக்கோலம் அசுரரை அழித்தற்கும், அமரரைக் காத்ததற்கும் கொண்ட கோலமாகச் சங்கமும், சக்கரமும் தாமரைக் கையிலேந்தி அழித்தற் கடவுளாகிய அரனுக்குரிய கொன்றையும், காத்தற் கடவுளாகிய திருமாலுக்குரிய துளபத்தையும் குழுமத் தொடுத்த பிணையலைத் தோள் மேலிட்டு ஆடியதாகவும் அமைகின்றது.[92]

இங்கு, தெய்வங்களை உள்நின்று இயக்கும் சக்திகளாக அவர்களது துணைவியர் பேசப்படும் நிலையைக் காணலாம். முப்பெருங் கடவுளரை இயக்கும் சக்தியாகக் கொற்றவை இங்கு பேசப்படுகின்றாள். அங்ஙனம் பேசப்படும்போது திருமாலின் தங்கையாகக் குறிக்கப்படுகின்றாள். கொற்றவை சிவனின் சக்தியாகிய உமா தேவியே எனலாம். உமையம்மை திருமாலுக்குத் தங்கை என்று புராணம் கூறும். எனவே திருமாலின் பண்புகளும் தங்கையாகிய கொற்றவையின் மேல் ஏற்றிப் பாடப்பட்டதெனலாம். உலகில் அனைத்துயிர்களையும் தோற்றுவிப்பவள் பெண் என்னும் ஆற்றலே எனலாம். எனவே திருமாலின் காத்தற் பண்பே பெண்ணின் ஆற்றலாக உருவகிக்கப்படுகின்றது. கொற்றவையையே திருமாலாகக் காட்டுகின்றார் இளங்கோவடிகள். திருமால் வழிபாட்டில் இதனை ஒரு குறிப்பிடத்தக்க வளர்ச்சி எனலாம். இங்கு கிருட்டிணாவதாரத்தில் செய்த தீரச் செயல் பேசப்படுகின்றது. தீமையை அழித்து உயிர்களைக் காக்கும் திருமாலின் பண்பு கொற்றவைக்கு ஏற்றி உரைக்கப்படுகின்றது. இறைவனுடைய காக்கும் ஆற்றலே திருமால் எனக் கொள்வர் ஒரு சமயத்தார். அங்ஙனம் கூறினும் அதுவும் இறைவனுடைய ஆற்றலே எனலாம். இங்குத் திருமாலின் செயலை இறைவியின் செயலாகவே ஓதுகின்றார் இளங்கோவடிகள்.[93]

இக்குறிப்புக்களிலிருந்து கொற்றவை திருமாலின் தங்கையே என்றும், முப்பெருங் கடவுளரின் தொழிலை உள்ளிருந்து இயக்குபவள் என்றும், காக்கும் பண்புகளில் திருமாலாகவே காட்டப்படுகிறாள் என்றும், திருமாலின் காக்கும் ஆற்றலே கொற்றவை என்று கூறுவதையும் அறிய முடிகின்றது.

---

90. சிலம்பு - வேட்டுவவரி - 3 - 4
91. சிலம்பு - வேட்டுவவரி - 8, 3 - 4
92. சிலம்பு - வேட்டுவவரி – 9 - 1 - 2, 10 - 1 - 4
93. சிலம்பு - வேட்டுவவரி - 22 - 3 - 4

**திருமால் - பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறுதல் :** சங்க இலக்கியங்களைப் போலவே கடவுட் கருத்துக்களும், தெய்வ வழி பாடுகளும் மக்கள் வாழ்க்கையோடு பிணைந்து நின்ற தன்மையினைச் சங்கம் மருவிய கால இலக்கியங்களும் தெரிவிக்கின்றன. சங்க இலக்கியங்களில் காணப்படாத ''சமயம்'' என்ற சொல் சிலம்பு, மேகலை இவைகளில் காணப்படுகின்றது. சங்க இலக்கியங்களில் காணப்படும் இயல்புகளோடும், அவற்றினும் வளர்ச்சியடைந்த நிலையிலும் திருமால் இயல்புகள் பேசப்படுகின்றன. நப்பின்னை மணாளன், பஞ்சவர்க்குத் தூது சென்றவன், விசயனுக்குத் தேர்ப்பாகனாயிருந் தவன், பல்வகை ஆடல் புரிந்தவன் போன்ற கிருட்டிணாவதாரச் செய்திகள் சங்க இலக்கியங்களில் காணப்படாதவை. இத்தகைய செய்திகளும் வடமொழி வாணரின் சிந்தனைத் தாக்கம் காரணமாக அமைந்திருக்கலாம். சங்க இலக்கியங்களில் காணப்பட்டது போலவே அவன் பண்புகளை விளக்கும் வகையில் இவ்விலக்கியங் களில் பயின்று வரும் பல்வேறு தொடர்கள் அமைந்துள்ளன. அவை அடுத்து வரும் பத்திகளில் தெளிவுறுத்தப் பெறுகின்றன.

**நிறம் :** ''ஐந்திணை ஐம்பது'' நூலின் ஆசிரியர் முல்லையை முதலில் பாடுகின்றார். இது மாயோன் மேய காட்டில் நிகழ்வதால் ''மல்லர்க்கடந்தான் நிறம்'' என அந்நிலத்துக் கருப்பொருள்களுள் முதன்மையானதை முன்னர் வைத்துப் போற்றுகின்றார். கறுத்து விசும்பின் கண் தோன்றும் மேகத்திற்கு உவமையாகக் கஞ்சனாற் செலுத்தப்பட்ட மற்போர் வீரர்களை வென்ற மாயவனின் நிறத்தைக் கிருட்டிணாவதாரத்து ஆற்றலும் மறமும் தோன்ற உவமித்துப் போற்றுகின்றார்.[94] திருமாலின் திருமேனியை மேகம் ஒத்திருப்பதற்குக் காரணம் உலகத்தை ஊட்டி வளர்த்துக் காப் பதற்காக அது தன்னையே முழுவதுமாகக் கொடுத்து விடுவதுதான் எனலாம். பலவிடங்களில் திருமால் கிருட்டிணாவதாரச் சிறப்புத் தோன்ற முன்னோனாகிய பலராமனுடன் சேர்த்தே போற்றப்படு கின்றான். அத்தகைய இடங்களில் இருவர் தம் நிறப்பண்பும் தோன்றுமாறு போற்றப்படுவதைக் காண்கிறோம். மாயவனுக்கு மறிகடலும். முன்னோனுக்குக் கானல்சேர் வெண்மணலும் உவமேயங்களாகக் காட்டப்படுகின்றன.[95] மற்றொரு பாடலில் மாலைப் பொழுதில் எங்கும் இருள் பரந்த பொழுது பால் வெண்ணிலவு தோன்றும் காட்சியில் மாயவன், பலராமன் இருவர் நிறங்களையும் உவமை காட்டி இயற்கைக் காட்சியில் தன்னை மறந்து சக்கராயுதப் பெருமை தோன்ற மாயவனைப் பரவு

94. ஐந்திணை ஐம்பது - முல்லைத்திணை - பாடல் 1
95. திணைமாலை நூற்றைம்பது - பாடல் 58

கின்றார்.[96] மீண்டும் கண்ணபிரான் இயல்பாகவே வலியுடையவன் என்ற பெருமை தோன்ற மாயோன் பற்றார் களிற்றின் முகத் தெறிந்த சக்கரம்போல ஞாயிறு குடமலையைச் சேர, பலராமன் நிறம்போல மதி தோன்றியது என்று ஒரு இயற்கைக் காட்சியை அமைக்கின்றார். முல்லைத் திணையின் முதல் தெய்வமாக மாயவன் போற்றப்படுவதால் அவன் நிறமும், ஆற்றலும் ஒருங்கே தோன்றப் போற்றப்படுவதைக் காண்கிறோம்.[97] திருமாலின் திருவடிச் சிறப்பைப் பேசுமிடத்தில் ''பூவைப் பூவண்ணன்'' என்று காயாம்பூ நிறத்தவனாக நிறம் தோன்றப் போற்றப்படுகின்றான்.[98] அசோதையின் மகனாகக் கண்ணனைக் குறிப்பிடுமிடத்தில் இளங்கோவடிகள் பூவைப் புதுமலரை அவன் நிறமாகக் காட்டுகின்றார். கடல் போலும் நீலநிறமுடையான் என்றும், மயிலினது புறக்கழுத்துப்போன்ற திருமேனியையுடையவன் என்றும் கண்ணபிரான் குறிக்கப்படுகின்றான்.[99] திருவுருவத்தில் திருக்கண்களும், திருவடிகளும், திருக்கைத்தலங்களும், திருவாயும் சிவந்தவனாக ஏனைய உறுப்பெல்லாம் கரிய நிறமுடைய இறைவனாகக் திருமால் திருநிறச் சிறப்புத் தோன்றப் போற்றப் படுகின்றான்.[100] சோழன் உலாக்காட்சி கண்ட தலைவி ஒருத்தியின் கூற்றில் செந்தாமரை மலர் போன்ற திருவடிச் சிறப்புடனும், கடல் போன்ற கருநிறத்துடனும் திருமால் குறிக்கப்படுகின்றான்.[101]

சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டது போலவே மேகம், கடல், இருள், காயாம்பூ, மாமணி போன்றவை திருமாலின் நிறமாக உவமிக்கப்படுகின்றன. மயிலினது புறக்கழுத்து, மயில் இரண்டும் சங்க இலக்கியங்களில் உவமிக்கப்படாதவை. இவை திருமாலின் நிறம் பற்றிய செய்தியில் ஒரு புதிய சேர்க்கை எனலாம். திருமாலின் கண்களும், கைகளும், வாயும், திருவடிகளும் சிவந்த செந்தாமரை மலர் போன்றன என்று பலவிடங்களில் காட்டப்படுகின்றது. இந்நிறம் பற்றிய செய்திகளில் கிருட்டிணாவதாரக் குறிப்பே இவ்விலக்கியங்களில் மிகுதியாக இடம் பெறுவதுடன், பலராமனோடு சேர்த்துப் பேசப்படுவதையும் காண முடிகின்றது. திருமாலின் நிறம் பற்றிய செய்திகள் பெயர்களில் சற்று விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

96. திணைமாலை நூற்றைம்பது - முல்லைத்திணை - பாடல் 96
97. திணைமாலை நூற்றைம்பது - முல்லைத்திணை - பாடல் 97
98. திரிகடுகம் - பாடல் 1
99. சிலம்பு - கொலைக்களக் காதை - 46 - 53
ஆய்ச்சியர் குரவை - 26, 27
100. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - பாடல் 36
101. முத்தொள்ளாயிரம் - பாடல் 105 - 1 - 4

**ஆடை :** பொலம்பூ ஆடையிற் பொலிந்து தோன்றும் திருமாலாக, நின்ற வண்ணத்திற்கேற்ப ஆடையின் பொன்னிறம் தோன்ற மஞ்சள் வண்ண ஆடையுடன் காட்டப்படுகின்றான்.[102] ஆடை பற்றிய இக்குறிப்பு சிலம்பில் ஓரிடத்தில் மட்டுமே அமைகின்றது. சங்க இலக்கியங்களில் மூன்று இடங்களில் ஆடை பற்றிய குறிப்புக்கள் அமைகின்றன. பீதாம்பரம் அணிந்தவனாகக் காட்டும் இக்கருத்து, இருகால இலக்கியங்களிலும் ஒத்தே காணப் படுகின்றது.

**கொடி :** திருமாலின் ஊர்தியான கருடன் திருமாலின் கொடியில் இடம் பெற்றுள்ள செய்தி சிலவிடங்களில் கூறப்படு கின்றது. திருவேங்கடப் பெருமானின் பெருமை கூறப்படும்போது 'புள்ளணி நீள் கொடிச் செல்வ'னாக அவன் காட்டப்படுகின்றான்.[103] திருமாலின் கோயில் பற்றிய செய்தியைக் கூறும் இளங்கோவடிகள் செம்பருந்தாகிய கருடச் சேவலைக் கொடியாக உயர்த்தியவன் என்ற பண்பு தோன்ற ''உவணச் சேவலுயர்த்தோன்'' என்று கொடிச் சிறப்புத் தோன்றப் போற்றுகின்றார்.[104]

**ஊர்தி :** கருடப் பறவையை ஊர்ந்து வருகின்ற செங்கண் மாலாகிய கடவுள் என்று, பரம்பொருளாகத் திருமால் காட்டப்படு கின்றான்.[105] இக்குறிப்புக்களால் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டது போலவே ஊர்தியும் கொடியுமாகக் கருடன் விளங்கக் காண்கிறோம். எனினும் இக்குறிப்புக்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியாக அமைந்துள்ளன. புராணங்களில் இடம்பெறும் கருடன் பற்றிய பல கதைச் செய்திகள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் செய்திகளோடு ஒத்துள்ளன. அவை போன்ற செய்திகள் சங்கம் மருவிய இடங்களில் எங்கும் குறிப்பாகவோ, வெளிப்படையாகவோ அமையவில்லை. சங்க இலக்கியங்களில் பூவை நிலைத் துறையில் மன்னர்களைப் பாடுமிடத்தில் கருடன்பற்றிய செய்திகள் இடம் பெறுவதைப்போல, இங்கு எவ்விடத்தும் அக்குறிப்பு இடம் பெறவில்லை.

**மாலை :** திருமால் மாலையணிந்தவன் என்பதும், துழாய் மாலை அவனுக்குரியது என்றும் பலவிடங்களில் காட்டப்படுகின்றது.

**மாலையணிந்தவன் :** கார் நாற்பது ஆசிரியர் முல்லைத் திணைக் குரிய முதல், உரி, கருப்பொருள்களை அமைத்துக் காட்டுகின்றார்.

102. சிலம்பு - காடுகாண் காதை - 41 - 52
103. சிலம்பு - காடுகாண் காதை - 133 - 139
104. சிலம்பு - ஊர்காண் காதை - 8 - 9
105. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - பாடல் 28

இங்குப் பொருகடல் வண்ணனாகத் திருமாலைக் காட்டி அவனது அழகிய மார்பில் அமைந்த மாலைக்குத் தீப்பெயலை உவமிக்கின்றார்.[106] பெருமலையைக் குறுக்கிட்டுச் செல்லும் பேரியாற்றுக்குத் திருமாலின் மார்பில் அணிந்த மணி ஆரம் உவமை கூறப்படுகின்றது. பெருமலைக்கு உவமையாக அமைவதற்கேற்ப் நெடியோனாக ஆற்றல் தோன்றக் காட்டப்படுகின்றான்.[107]

**துழாய் மாலையன்:** திருமாலைத் தொழுவது இனிமை தரும் செயல் என்னுமிடத்தில் மாலையின் மணமும் பக்தி மணமும் கமழத் ''தொல் மாண் துழாய் மாலையான்'' என்று பரவப்படுகின்றான். பழம் பெருமையுடையதாகத் துளசிமாலை சிறப்பிக்கப்படக் காண்கிறோம்.[108] மாயவன் தோளின் மேல் துளப மாலையை அணிந்தவனாகப் பேசப்படுகின்றான்.[109] அமரர் கூட்டமெல்லாம் தொழும் பரம்பொருளாகத் திருமால் காட்டப்படுமிடத்துத் துளப மாலையணிந்து காட்சி தருகின்றான்.[110] கௌத்துவ மணி மாலையைத் தனது திருமார்பிலே அணிந்தவனாக, நின்ற கோலத் திற்கேற்பக் காட்டப்படுகின்றான்.[111] கொற்றவையின் குமரிக் கோலம் புனையப்படும்பொழுது திருமாலின் மாலையாகத் துளப மாலை கூறப்படுகின்றது.[112] திருவனந்தபுரத்து திருமாலுக்கு வழிபாடு செய்யப்பட்ட சேடத்தை அந்தணர் சிலர் சேரன் செங்குட்டுவனுக்கு வழங்கிய செய்தி வஞ்சிக்காண்டத்தில் இடம் பெறுகின்றது. 'சேடம்' என்பது பிரசாதம். இங்குத் திருமாலுக்குரிய துளப மாலை முதலியன சேடமாகக் குறிக்கப்படுகின்றன.[113] முத்தொள்ளாயிர ஆசிரியர் சோழனைத் திருமாலாகக் காட்டிப் பாடும்போது துளப மாலையணிந்த வாமனாவதாரப் புகழ் விளங்கப் பாடுகின்றார்.[114]

இக்குறிப்புக்களால் திருமால் மாலையணிந்தவன் என்பதையும், துளப மாலை அவனுக்கேயுரியது என்பதையும், பல்வேறு அவதாரச் செய்திகள் குறிப்பிடப்படுமிடத்தும், மன்னர்களுக்குத் திருமாலின் செயலை ஏற்றிப் பாடுமிடத்தும் துளபமே மாலையாக அமையும்

106. கார்நாற்பது - முதற்பாடல்
107. சிலம்பு - காட்சிக் காதை - 21 - 22
108. இனியவை நாற்பது - முதற்பாடல் - அடி 3
109. ஆய்ச்சியர் குரவை - 14 - 16
110. ஆய்ச்சியர் குரவை - பாடல் 33
111. சிலம்பு - காடுகாண் காதை - 41 - 52
112. சிலம்பு - வேட்டுவவரி - 10 - 1 - 4
113. சிலம்பு - கால்கோட் காதை 61 - 67
114. முத்தொள்ளாயிரம் - பாடல் 64 - 1 - 4

என்பதையும், சங்க இலக்கியக் கருத்துக்களோடு இவை ஒத்து அமைவதையும் அறிகிறோம்.

**பாம்பணையான் :** சங்க இலக்கியங்களைப் போன்றே பாம்புப் படுக்கையில் துயில் கொள்பவனாகத் திருமால் காட்டப்படுகின்றான்.

திருவரங்கத்துத் திருமாலின் கிடந்த வண்ணக் கோலத்தைப் புனைந்துரைக்கும்போது, பாம்பணையில் அறிதுயில் கொண்டு அமரர் தலைவன் உள்ளிட்ட பலருக்கும் அருள் வழங்கும் தன்மையனாகக் காட்டப்படுகின்றான்.[115] திருவனந்தபுரத்தின்கண் ஆடக மாடத்து அரவணையின் மீது அறிதுயில் கொண்டு கிடந்தருளிய திருமாலாகக் காட்சி தருகின்றான்.[116] திருமாலின் கோயில் பற்றிய செய்தியில் அழகு மிக்க பாம்பணையின்மீது கிடந்து அறிதுயில் கொண்டுள்ள நீலமணி நிறத்தையுடையவனாக யோக நித்திரையில் காட்டப்படுகின்றான்.[117] சங்க இலக்கியங்களில் திருமாலின் மூன்று கோலங்களும் பாம்பணையில் சித்தரிக்கப்படுகின்றது. இங்குக் கிடந்த கோலம் மட்டுமே காட்டப்படுகின்றது.

**நாராயணன் :** ''நாரம்'' என்றால் நீர் என்றும், ''அயனம்'' என்றால் இடம் எனப் பொருள்படுகின்றது. எனவே நாராயணனாகிய திருமால் திருப்பாற்கடலில் பாம்புப் படுக்கையில பள்ளி கொண்டிருக்கின்றான் என்பது ''நாராயணன்'' என்ற சொல் அமைப்பால் தெரியவருகின்றது. இப்பெயர் இதன் காரணமாக அமைந்தமையும் புலப்படுகின்றது. திருமால் அறிதுயில் கொள்வது உயிர்களைக் காத்தற்கே என்பர். வைணவ வாதியின் கூற்றிலே நிறம் தோன்றவும், முறை செய்தலேயன்றிக் காத்தலும் இறைவன் கடனாகும் என்னும் இயல்பு தோன்றவும் திருமால் நாராயணன் என்ற பெயரோடு குறிக்கப்படுகின்றான்.[118]

**சங்கு - சக்கரங்களுடன் திருமால் :** தன் இருமருங்கினும் பகைவரை வருத்தும் ஆழிப்படையையும், பால்நிறச் சங்கினையும் அழகு மிகுந்த செந்தாமரையொத்த திருக்கைகளிலே, ஏந்தியவனாக, நின்ற வண்ணத்திற்கேற்ப வேங்கடத்துச்சியில் உறையும் திருமாலின் தோற்றம் காட்டப்படுகின்றது.[119]

---

115. சிலம்பு - காடுகாண் காதை 35 - 40
116. சிலம்பு - வரந்தரு காதை 51 - 52, 132 - 135
117. சிலம்பு - நாடுகாண் காதை 8 - 10
118. மணி. சமயக் கணக்கர் தம் திறம்கேட்ட காதை 98 - 99
119. சிலம்பு - காடுகாண் காதை 41 - 52

அமரரைக் காக்கக் குமரிக் கோலத்து ஆடிய கொற்றவையின் தோற்றத்தைக் கூறும் இளங்கோவடிகள் திருமாலின் காத்தற் பண்பைக் கொற்றவையின் மேல் ஏற்றிப் பாடுகின்றார். அதற் கேற்பத் திருமாலின் காத்தற் தொழிலுக்குரிய சின்னங்களாகச் சங்கமும், சக்கரமும் தாமரைக் கைகளிலே காட்டப்படுகின்றன.[120] சோழன் பூவை நிலைத் துறையில் திருமாலாகப் போற்றப்படும் போது திகிரிப் பொருபடையானாகக் காட்டப்படுகின்றான்.[121] காமனது தந்தையாகத் திருமால் குறிக்கப்படுமிடத்துச் சக்கரப் படையுடனும் கரிய நிறத்துடனும் காட்டப்படுகின்றான்.[122]

இக்குறிப்புக்களால் பகைவரை அழித்து அன்பர்களைக் காப்பவன் திருமால் என்பதும், அவனது படைகளாகச் சங்கமும், சக்கரமும் காட்டப்படுவதையும், திருமாலின் பண்புகள் மன்னர் களுக்குக் கூறப்படும் போதும் சக்கரப் படையின் சிறப்பு விளங்கப் போற்றப்படுவதையும், படைகளின் சிறப்பைக் கூறும்போது கிருட்டிணாவதார வீரச் செயல்கள் குறிப்பாக அமைவதையும் காண்கிறோம்.

சங்கு சக்கரப் படைகளைக் கொற்றவைக்கு ஏற்றிப் பாடுவதும், மன்னர்களுக்கு ஆயுதப் பெருமைகளை ஏற்றுக் கூறுவதும் சங்க இலக்கியங்களில் கூறப்படாதவை. எனினும் ஆயுதங்களின் பெருமை பேசுமிடங்களில் சங்க இலக்கியங்களிலும் கிருட்டிணாவதாரக் குறிப்பே அமைவதைக் காணலாம்.

**மகன் - காமன் :** ''நீணிலமளந்தோன் மகன்'' என்று திருமாலின் மகனாகக் காமன் குறிக்கப்படுகின்றான். உழை காரணமாக வாணனால் சிறை வைக்கப்பட்ட தன் மகன் அநிருத்தனைச் சிறை மீட்பதற்காகக் காமன் ''சோ'' நகரத்தாடிய தாகப் பதினோரு ஆடலுள் ஒன்றான ''பேடு'' குறிக்கப் படுகின்றது.[123] இச்செய்தி சிலம்பிலும் ''ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக் காமனாடிய பேடியாடலும்'' என்று அறியக் கிடக்கின்றது. திருமாலின் மகன் என்பதற்கேற்ப அழகும், கரிய நிறமும் தந்தையைப் போன்றே மாயமும் உடையவன் என்பது படவும் ''ஆழியுடையான் மகன் மாயன்'' என்று காமன் குறிக்கப் படுகின்றான்.[124]

---

120. சிலம்பு - வேட்டுவ வரி - பாடல் 9 - 1 - 2
121. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - பாடல் 30
122. முத்தொள்ளாயிரம் - 106 - 1 - 4
123. மணி - மலர்வனம்புக்க காதை - 123-125
124. முத்தொள்ளாயிரம் - 106-1-4

சங்க இலக்கியங்களில் காட்டப்பட்டது போலவே திருமாலின் மகனாகக் காமன் காட்டப்படுகின்றான். எனினும் பேடிக் கூத்தாடியவன் என்ற செய்தி சங்க இலக்கியங்களில் கூறப்பட வில்லை. தந்தையைப் போன்றே அழகும், நிறமும், மாயமும் உடையவன் என்றும் இங்குக் காட்டப்படுகின்றான்.

**நான்முகன் தந்தை திருமால்:** அரிய மறைநூற் பொருளை அருளிச் செய்தவன் நான்முகன் என்று கூறுமிடத்தில் சக்கரப் படையை வலக்கையிற் கொண்ட, நிலைபெற்ற உயிர்களுக்கு முதல் வனாகிய திருமாலின் மகன் என்று குறிப்பிடப்படுகின்றான்.[125] திருமாலின் இராமாவதாரம் பற்றிய செய்தியில் இராமன் திருமாலா கக்காட்டப்பட்டு வேத முதல்வனாகிய நான்முகனையீன்றவனாகவும் காட்டப்படுகின்றான்.[126] இச்சான்றுகளால் நான்முகனின் தந்தை திருமால் என்பதும், நான்முகன் படைத்த உயிர்களைக் காக்கும் மன்னுயிர் முதல்வன் என்பதும், வெற்றி பொருந்திய சக்கரப் படையை ஏந்திய பரம்பொருள் என்பதும் தெளிவாகின்றது. சங்க இலக்கியங்களில் திருமாலின் உந்தித் தாமரையில் பிரமனது தோற்றம் தெளிவாக விளக்கப்படுகின்றது. இவ்விலக்கியங்களில் அத்தகைய தோற்றக்காட்சி காட்டப்படாவிடினும் நான்முகனின் தந்தையாகவே திருமால் சுட்டப்படுகின்றான்.

**தொடி தாங்கிய தோள்:** வரிசையாகத் தோள் வலயத்தைத் தாங்கிய நீண்ட தோளையுடையவன் என்றும் ''பல்லா நிரைப் புறங்காத்த நெடியோன்'' என்றும்[127] திருமாலின் தோளாற்றல் தோன்றக் காத்தல் தொழிலின் மாண்பு போற்றப்படுகின்றது.[128]

**திருமாலின் ஆற்றல்:** திருமால் பாணாசுரனை அவனது நெருப்பினாலான மதிற் கோட்டையுடன் அழித்தவன் என்பதுபட, ''சோவின் அருமை அழித்த மகன்'' என்று தீமையை அழிக்கும் ஆற்றலும், வெற்றியும் தோன்றப் போற்றப்படுகின்றான்.[129]

**திருமால் கோயில்கள்:** திருமால், பலராமன் கோயில்களைக் குறிப்பிடுகின்றார் இளங்கோவடிகள். சிவன், முருகன் கோவில் களுக்கு நிகராகத் திருமால், பலதேவன் கோயில்கள் சிறந்திருந்தமை, அவற்றில் மறைவழிப்படி வேள்விச் சடங்குகள் நிகழ்ந்தமை இவற்றை இக்குறிப்பால் அறிய முடிகின்றது.[130]

125. மணி. ஆபுத்திரன் திறம் அறிவித்த காதை - 51-59
126. சிலம்பு - ஊர்காண் காதை - 46-49
127. பழமொழி - பாடல் - 79
128. பழமொழி - பாடல் - 2
129. நான்மணிக்கடிகை - பாடல் - 2
130. சிலம்பு - இந்திர விழவூரெடுத்த காதை - 169 - 174

**திருவேங்கடமலை:** தமிழகத்தின் எல்லை கூறவந்த இளங்கோ வடிகள் திருவேங்கடமலை வடக்கில் எல்லையாக அமைந்த தன்மையைக் கூறுகின்றார். நிலம் கடந்த நெடுமுடி அண்ணலை நோக்கி உலகந் தவஞ்செய்து வீடுபெற்ற மலையாதலாலும், எல்லா ராலும் அறியப்படுதலாலும் வேங்கடத்தைக் கூறுகின்றார். வேங்கட மலை எல்லையாக அமைந்தமைக்கேற்ப அங்கு கோயில் கொண்டு உறையும் திருமாலை உலகளந்த நெடியோனாகப் பேருருவத் தோற்றப் பொலிவுடன் காட்டுகின்றார்.[131]

**திருமால் கோட்டம்:** வேற்றூர் செல்பவர் கோயில் முதலியன எதிர்ப்படும்போது அவற்றை வலஞ்செய்து போதல் மரபு. அவ்வாறு செல்லும் கோவலன், கண்ணகி முதலியோர் திருமால் கோட்டத்தை வழிபட்டதாக இளங்கோவடிகள் கூறுகின்றார். இங்கு கிடந்த கோலக் காட்சியும், பாற்கடலில் துயில் கொண்டவனது நிறத்தை அதற்கேற்ப நீலமணியோடு உவமித்துக் கூறும் காட்சியும் சிறப்பிற் குரியதாகின்றன.[132]

**திருமால் குன்றம்:** மாங்காட்டு மறையோனை வைணவ சமயத் தவனாகக் காட்டும் அடிகள், அவன் வாயிலாகத் திருமால் குன்றத் தையும், அங்குள்ள வியத்தகு செய்திகளையும் விரித்தோதுகின்றார். வழித்திறம் கூறுபவன் இறையன்பு மேலீட்டால் கேட்போர் திறம் நோக்காது விரித்தோதுகின்ற தன்மை இறையன்புடையார்க்கியல்பு என்பது தோன்ற அடிகளாரும் அவனை மிகையாகப் பேசவிடு கின்றார். திருமால் குன்றம் குறித்து இம்மறையோன் கூறுவன மருட்கையணிக்கு எடுத்துக் காட்டாகுந் தன்மையில் அமை கின்றன.[133]

**வையை நெடுமால்:** குரவைக் கூத்தின் முடிவிலே மாதரி வையை நெடுமாலை வணங்கச் சென்றதாகக் குறிப்பு அமைகின்றது. வையைப் பேரியாற்றின் கரையின் மேல் திருக்கோவில் கொண் டருளிய நெடிய திருமால் என்று திருமால் குறிக்கப்படுகின்றான். பூ, கை, சாந்து, கண்ணி முதலியன கொண்டு அத்திருமாலை மக்கள் வழிபட்டு வந்த செய்தியை இதனால் அறிய முடிகின்றது.[134]

**மாயோன் பாணி:** மாதவியின் ஆடற்குறிப்பில், காத்தற் கடவுளாகிய மாயோன் முதற்கண் வாழ்த்தப்பட்ட செய்தி இடம் பெறுகின்றது. திருமாலாகிய பெருங் கடவுளைப் பாடும் இசைப்

131. சிலம்பு - வேனிற் காதை - 1 - 2
132. சிலம்பு - நாடுகாண் காதை - 8 - 10
133. சிலம்பு - காடுகாண் காதை - 89 - 90
134. சிலம்பு - துன்பமாலை - 4 - 5

பாடல்களாகத் ''தேவபாணி'' என்னும் ''மாயோன் பாணி'' குறிக்கப்படுகின்றது.[135]

**விஷ்ணு புராணம் :** நாராயணனே தங்கள் இறைவன் என்று கூறும் வைணவவாதியை விஷ்ணு புராணத்தை அன்போடு ஓதிப் பயின்றவனாகக் காட்டுகின்றார் சாத்தனார். திருமால் பற்றிய பல புராணக் கூறுகள் அவர் காலத்தில் மக்களிடையே பரவியிருந்தமை இதனால் பெறப்படுகின்றது.[136]

**திருமால் வணக்கம் - சேவடி வணங்கின் பெறுபவை :** திருமால் குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் முதல்வனைக் கைகூப்பித் தொழுது, அவனது திருவடிகளை நெஞ்சத்தே இடையறாது நினைந்து, வணக்கத்தோடு மூன்று முறை அம்மலையை வலம்வர, விரும்பிய பொருளை உறுதியாகப் பெறலாம் என்று அறிவுறுத்தும் மறையவன் கூற்றிலே மனம், மொழி, மெய் மூன்றானும் செய்யும் வணக்கம் புலப்படக் காணலாம். மங்கலமான தெய்வத் தன்மையுடன் விளங்கும் பெருமானை முன்வைத்துச் செய்யும் பூசையினையே ''திருவாராதனம்'' என்பர். இறைவன் நமக்களித்த பொறி புலன்களைக்கொண்டு அவனோடு தொடர்பு கொள்ளுதலே - ஆராதனம் எனப்படும். ''கண்கள் அவன் பேரழகில் ஈடுபடுகின்றன. காதுகள் அவன் புகழைக் கேட்க, வாய் அவன் புகழைக் கூற, கைகள் அவனுக்குத் திருத்தொண்டு செய்ய மனமும் அவனிடம் ஒடுங்குகிறது என்பதே பொதுவான விளக்கம். நாவுக்கரசர் கூறும் ''நினைக்க நெஞ்சும், வாழ்த்த வாயும், தாழ்த்த சென்னியும் தந்த இறைவனை'' என்பது இங்கு ஒப்புநோக்கற்குரியது.[137]

**மந்திரம் ஓதின் கிடைக்கும் பயன் :** அரிய வேத வழிப்பட்ட சமய நெறி பற்றி ஐந்தெழுத்தானும், எட்டெழுத்தானும், வருகின்ற முறைமையுடைய இரண்டு மந்திரங்களையும் நெஞ்சத்தே நினைந்து பொய்கையில் நீராடக் கூறும் மறையவன் வாக்கில், சைவ சமயத்துக்குரிய திருவைந்தெழுத்தும், வைணவ சமயத்துக்குரிய திருவெட்டெழுத்து மந்திரமும் கூறப்படுகின்றன எனலாம். இவ்விரண்டும் வைதிக சமயங்களேயாதலால் வேற்றுமை பாராட்டாமற் கூறுகின்ற தன்மை கொண்டு அக்காலத்தில் சமயப் பகை இல்லை என்பதற்கு இதனையும் ஒரு சான்றாக்கலாம்.[138]

---

135. சிலம்பு - கடலாடு காதை - 35
136. மணி. சமயக்கணக்கர் தம் திறம்கேட்ட காதை - 98 - 99
137. சிலம்பு - காடுகாண் காதை 105, 107, 123
138. சிலம்பு - காடுகாண் காதை 128, 132

**பிறவிப் பயன்:** திருவேங்கட மலை மீது நின்ற திருக்கோலங் காட்டும் திருமாலின் கடவுட் பண்புகளை மாங்காட்டு மறையவன் மூலம் காட்டுகின்றார் இளங்கோவடிகள். செங்கண் நெடியோனின் பொற்றாமரை போன்ற அழகிய திருவடிகளை நெஞ்சத்தே நினைந்தால் அப்போதே அவனது ''கலுழப்புள்'' எழுதிய நெடிய கொடித்துண்டு பொருந்தி நிற்கும் நிலை காணலாம். பின் அவனது பொற்றாமரை மலர்களை ஒருசேரக் கண்டாற்போன்ற திருவடிகள் நம்மை வலிந்தெடுத்துப் போய் நம் துன்பம் நீக்கிப் பேரின்பம் வழங்கும் என்கின்றார். இங்கு அவனது திருவடிகளை நினைந் தோதியவாறே மலைமீது ஏறினால் கொடிபுணர் நிலை தோன்றுவ தாகவும், அதனைக் கண்டதும் அவன் துணை மலர்த்தாளினை வணங்காது செல்ல இயலாதென்பதனையும், அத்துணைக் கடவுட் பண்புடையது அக்காட்சி என்றும் கூறுகின்றார். இங்கு அவன் தாளிணைகளே நம்மை வலிந்தெடுத்துப் போய் துன்பம் கெடுக்கும் என்னுமிடத்துத் திருமாலின் பேருருவும், அவன் திருவருள் இயல் பாகிய பேரருள் தன்மையும் ஒருசேரப் புலப்படுத்துகின்றன. அத்தகைய பேறே பிறவிப் பயன் என்றும், அதனைச் செய்யாது செல்லாதே என்று வழித்திறம் கூறும் மறையவன் வாயிலாக அக் காட்சி பிறவிப் பயனாகவே பெருமை தோன்றக் காட்டப்படு கின்றது.[139] ''பிறவிப் பெருங்கடல் நீந்துவார் நீந்தார் இறைவனடி சேராதார்'' என்னும் குறட் கருத்து இங்கு நினைவுகூர்தற்குரியது.

திருமால் கடவுளருள் முழுமுதலாகிய பெருங்கடவுள், அறிய வொண்ணாத மாயங்கள் பலவும் செய்யவல்லவன், பொற்றாமரை பூத்த திருவுந்தித் தடத்தையுடைய விண்ணவன், அவனைக் கண்ணி மைக்காமல் காண்பதே கண்பெற்றதால் உண்டாகும் பெரும்பயன் என்று திருவுருவச் சிறப்புத் தோன்றப் போற்றப்படுகின்றான்.[140]

**திருமாலின் திருவடி நிழல்:** திருமாலின் திருவடியைச் சேர்வதற்குரிய அறவினை புரிவதே மாந்தர் கடமை என்றும், அதற்குரிய வினை புரியார் நரகத்துன்பம் அடைவர் என்ற செய்தி வலியுறுத்தப்படுகின்றது. அவனது திருவடி நிழல் எங்கும் பரந்து இன்பம் தரும் பெருமை மிக்கது என்பது தோன்ற விரிநிழலாகப் போற்றப்படுமிடத்துத் திருமால் பரம்பொருளாகவே காட்டப்படு கின்றான்.[141] ''சக்கரத்தானை மறப்பின்னா'' என்று மறத்தற்கரிய வனாகவும் சுட்டப்படுகின்றான்.[142]

---

139. சிலம்பு - காடுகாண் காதை 133 - 139
140. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - 36
141. இன்னிலை - அறப்பால் - 3
142. இன்னாநாற்பது - பாடல் - 3-3

இக்குறிப்புக்களால் திருமால் அவனுக்குரிய பண்புகளோடும், ஆயுதங்களோடும், கொடியோடும், அரவுப் பாயலோடும், முழுமுதன்மை தோன்றக் காட்டப்படுவதை அறிகின்றோம். முல்லை நிலத் தெய்வமாகவும், ஆய்க்குலத் தெய்வமாகவும், பரம் பொருளாகவும் போற்றப்பட்ட குறிப்புக்களைக் காணமுடிகின்றது. சங்க காலத்தைப் போலவே திருமால் கோயிலில் வழிபடப்பட்ட செய்திகளையும், கோயில்களில் அமைந்த அவனது கோலங்களின் மாண்பையும் தெளிவாகக் காண முடிகின்றது. திருமால் வணக்கம் மக்களிடையே சிறப்புற்றிருந்தமையும், திருமாலுக்குரிய பூசனைகள் நடைபெற்று வந்தமையும் இவற்றால் அறிகின்றோம்.

**சங்க இலக்கியங்களுள்** பதிற்றுப்பத்தும், பரிபாடலும் திருமால் கோயிலில் வணங்கப்பட்ட செய்திகளைத் தருகின்றன. சிலம்பில் இத்தகு செய்திகள் மிகுதி. திருமால் கோயில் கொண்டுள்ள திருவனந்தபுரம், திருமாலிருஞ்சோலை, இருந்தையூர் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. அங்கு திருமால் உறையும் கோவில்களைப்பற்றிக் கூறும்பொழுது திருமாலின் கோலத்தைக் குறிப்பிட்டுக் கூறும் பழக்கத்தைக் காண்கிறோம். கோயில்களின் அமைப்பு, வடிவம் முதலியன விரிவாகக் காணப்பட வில்லை. கோயில் அமைந்த சூழலும் திருமாலின் திருவுருவத் தோற்றமும் மட்டுமே கூறப்படுகின்றன.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் சிலம்பில் கோயில்கள் பற்றிய செய்தி மிகுதியாக இடம் பெறுகின்றது. இருந்தையூர் பற்றிய செய்தி இடம் பெறவில்லை. திருவேங்கடமலை, திருமால் குன்றம் எனப்படும் அழகர்மலை பற்றிய செய்திகள் விரிவான முறையில் பேசப்படுகின்றன. திருமாலின் திருவுருவச் சிறப்பும், திருமால் கோலங்களின் சிறப்பும், கோயிற் சிறப்பும் சங்க இலக்கியங்களினும் மிகுதியான விளக்கத்தோடு வருணிக்கப்படுவதைக்காண முடிகின்றது. திருமாலுக்குரிய பூசனை, வழிபாடு பற்றிய அளவில் சங்க இலக்கியங்களில் ஒருபடி அதிகமாகவே அறிய முடிகின்றது. திருமால் கோயில்களில் மறைவழிப்படி வேள்விச் சடங்குகள் நிகழ்ந்தமை கூறப்படுகின்றது. மாதரி வழிபாட்டில் திருமாலுக்குரிய பூசனைப் பொருட்கள் காட்டப்படுகின்றன. மாங்காட்டு மறையவன் வாயிலாகத் திருமால் மிகுதியான விளக்கம் பெறுகின்றான். ''மாயோன் பாணி'', விஷ்ணு புராணம், எட்டெழுத்து மந்திரம் முதலிய செய்திகள் சங்க இலக்கியங்களில் கூறப்படாதவை.

சிவன், முருகன், கொற்றவை போன்ற பிற தெய்வ வணக்கங்கள் பேசப்பட்டாலும் பரிபாடல் பரம்பொருளாக, முழு முதல்வனாகத் திருமாலைக் காட்டுவது போல இளங்கோவடிகளும் சிலம்பில்

திருமாலைப் போற்றுகின்றார். திருமாலை மனம், மொழி, மெய் மூன்றாலும் வணங்கும் நிலை தெளிவுறுத்தப்படுகின்றது. எனவே பிற தெய்வங்களோடு திருமாலை ஒப்பிட்டும், உறழ்ந்தும், பேசுமிடங்களில் சங்க கால நிலையே நீடிக்கக் காணலாம். முல்லை நிலத்தெய்வம் என்று தொடங்கி முழுமுதலாக, மறத்தற்கரியவனாக வளர்ந்த நிலை அமையக் காண்கின்றோம்.

**திருமால் பற்றிய வருணனைகள் :** சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் திருமால் பற்றிய வருணனைகள் மிகுதியாகக் காணக் கிடைக்கின்றன. அவற்றுள்ளும் சிலம்பில் திருமாலின் சிறப்பு வெகுவாகப் புகழப் பெற்றுள்ளது. மணிவண்ணன், அசோதை பெற்றெடுத்த பூவைப் புதுமலர் வண்ணன், நீலமேனி நேடியோன், கையில் திகிரி, மார்பில் திருத்துழாய் மாலை, கருட ஊர்தி, அரவணைக் கிடந்தோன், உவணச் சேவலுயர்த்தோன், பின்னைகேள்வன், பலராமன், இளவல், திருமகள்கேள்வன், இராமன், மாயவன், மாயோன், திருமால், அரி, எட்டெழுத்து மந்திரம், கன்று குணிலாக் கனிஉதிர்த்தான், பாம்பு கயிறாகக் கடல் கடைந்தான், குருந்தொசித்தான், அறுவை ஒளித்தான், கதிர் திகிரியால் மறைத்தான், கஞ்சனை வஞ்சம் கடந்தான், சகடமுதைத் தான், மருதின் கிடத்தான், வால சரிதை நாடகம் போன்ற திருமாலின் செயல்களையும் இயல்புகளையும் அறிவுறுத்தும் வகையில் பல்வேறு தொடர்கள் அமைகின்றன.

இவற்றுள் பின்னைகேள்வன், அறுவை ஒளித்தான். வாலசரிதை நாடகம் போன்ற செய்திகளும், திருமால், அரி என்ற பெயர்க் குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் காணப்படாதவை. சங்க இலக்கியங்களைப் போலவே இவ்விலக்கியங்களிலும் வீடுபேற்றை நல்கும் பரம்பொருளாகவும், தேவர்கள் தலைவனாகவும், அமரர் கூட்டமெல்லாம் தொழும் தெய்வமாகவும், அன்பர்க்கெளியனாகவும், இயற்கையின் வடிவமாகவும், கண்களும், செவிகளும், நாவும் பெற்ற பயன் அவனைக் காண்பதற்கும் கேட்பதற்குமாகப் பிறவிப் பயனே அவனைப் போற்றுவதற்குத்தான் என்னும் கருத்துக்களும் அமையக் குறிப்பிடப்படுகின்றான்.

**திருமாலின் தோற்றம் :** நான்மணிக்கடிகை ஆசிரியர் தமது நூலுள் கடவுள் வாழ்த்தாகத் திருமாலின் புகழ் பாடுகின்றார். இங்கு அவனது முகம், கண்கள், நிறம், சக்கரப்படை இவற்றின் தோற்றத்தை அழகிய இயற்கை வருணனையாக அமைக்கின்றார். திங்கள் திருமாலின் ஒளிமுகத்தையும், சிவந்த செந்தாமரை மலர் திருக்கண்களையும் காயாமரத்தின் புதுப்பூ அவனது திருமேனியின்

நிறத்தையும் ஒக்கும் என்று இயற்கையில் இறைவனைக் கண்டு போற்றுகின்றார். இங்கு அழியாத வியக்கத்தக்க ஆற்றல் தோன்றவும் வருணிக்கப்படுகின்றான்.[143]

இத்தகைய கருத்துக்களால் இயற்கையே இறைவடிவம் என்று இயற்கைப் பொருள்களை இறைவனுக்கு அங்கங்களாகக் கூறும் சங்கப் புலவர்கள் மாண்பு இக்காலத்திலும் தொடர்ந்தமை காண் கிறோம்.

மாந்தர் கண்களால் காணமாட்டாத கடவுளை அவனது படைப்புப் பொருள்களின் வாயிலாகக் காண்டல் கூடும் என்பது இளங்கோவடிகள் கருத்து. இறைவனுடைய பண்புகளில் அருட் பண்பே தலைசிறந்ததாதலால், அப்பண்பு திங்கள் மண்டிலத்திலும், அவனுடைய தெறற்பண்பும், அறிவு விளக்கப் பண்பும் ஞாயிற்று மண்டிலத்திலும், அவனுடைய ஆக்கல், அளித்தல், காத்தல் என்னும் மூவகைத் தொழிற்பாடும் முகிலிடத்திலும் காணப்படுவதால் இவற்றில் இக்கடவுட்பண்புகளையே அடிகளார் கண்டு வழிபடு கின்றார் எனலாம்.

உயிரில்லாப் பொருளாகிய இவற்றினும் உயிர்களிடத்தே கடவுட் பண்பு, இறைமைத் தன்மை (அரசத் தன்மை) யாக வெளிப்படுவ தால் இவற்றிற்குவமையாகக் காவிரி நாடன் குடை முதலியவற்றை எடுத்தோதி வணங்குகின்றார். இது அவருடைய கடவுட் கொள்கையை ஒருவாறு அறிவுறுத்திக் காட்டுகின்றது. இவ்வாறு எப்பொருளிலும் கடவுளைக் காணுமியல்பு, சமயக் கணக்கர் மதி வழிச் செல்லாது உயரிய உணர்ச்சி வாயிலாய்க் கடவுளைக் கண்டு வழிபடுகின்ற உண்மை நெறியெனலாம். இவ்வுண்மைகள்,

''நின் வெம்மையும் விளக்கமும் ஞாயிற்றுள,
நின் தன்மையும் சாயலும் திங்கள்உள
நின் சுரத்தலும் வண்மையு மாரியுள
நின் புரத்தலும் நோன்மையும் ஞாலத்துள''

என்ற பரிபாடலடிகளாலும், ''தீயினுள் தெறல் நீ, பூவினுள் நாற்றம் நீ, கல்லினுள் மணியும் நீ, சொல்லினுள் வாய்மை நீ'' என்ற பரிபாடல் அடிகளாலும் உணர்த்தப்படுவதைக் காண்கிறோம்.

**திருமாலின் கோலங்கள் :** புகார்க் காண்டத்தைப் போலவே மதுரைக் காண்டத்தையும் கடவுள் எண்ணத்தோடுதான் தொடங்கு

143. நான்மணிக்கடிகை - பாடல் 1, கடவுள் வாழ்த்து

கின்றார் இளங்கோவடிகள். காட்டு நெறியிலே வழிப்போக்கன் ஒருவனைக் காட்டி அவனுடைய வியத்தகு சொற்களாலே காடுகாண் காதையைக் கடவுட்காண் காதையாகவே மாற்றி விடுகின்றார். அடுத்துவரும் வேட்டுவ வரியோ விழாக்காண் காதையாகவே காட்சி தருகின்றது. இறையன்பு மேலீட்டாலே தன்னுள்ளத்தை திருவமர் மார்பனுடைய கிடந்த வண்ணத்திற்கும் அச்செங்கண் நெடியோன் நின்ற வண்ணத்திற்கும் திருக்கோயிலாகச் செய்து கொண்டு அக்கடவுளையே புறத்தும் காண்பதற்கும் விரும்பும் கண்களோடே வந்துற்ற மறையவன் கோவலனுக்கும் நமக்கும் தனது நெஞ்சத்தையே திறந்து காட்டி விடுகின்றான். கடவுட் காட்சியாலே நிரம்பி யிருக்கின்ற அவனுடைய நெஞ்சத்திலே எழுந்தருளியிருக்கின்ற திருமாலின் இருவேறு வண்ணங்களை அவன் செஞ்சொற்கள் நம் உள்ளத்திலும் நிரப்பி விடுகின்றன. தனக்குள்ளேயே இருக்கின்ற கடவுளைக் காணவே திருவரங்கத்திற்கும், திருவேங்கட மலைக்கும் போக வந்துள்ளதாகக் கூறும் அவன் இறையன்பு மிக்கவர் தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றான்.

**திருவரங்கம்:** திருவரங்கத்தை பூம்பொழில் என்றும், அரங்க நாதனை அரங்கப் பெருஞ்செல்வம் என்றும், அன்பர் பெருவாழ்வு என்றும் கூறுவர். தென்னிந்தியக் கோயில்களில் ''கோயில்'' என்றும், ''பெரிய கோயில்'' என்றும் சிறப்பித்துப் பேசப்பெறுவது திருவரங்க நாதனின் கோயில். சைவ உலகில் இத்தகைய சிறப்பு சிதம்பரத்திற்கு உண்டு. திருவரங்கத்தைப் ''பூலோக வைகுந்தம்'' என்று வைணவர் கொண்டாடுகின்றனர்.

சங்க இலக்கியங்களில் திருவரங்கம் இத்தகு சிறப்புக்களோடு புகழப்பெற்ற நிலையைக் காண முடியாவிட்டாலும் சங்கம் மருவிய காலத்தில் சிறப்புமிகு தலமாகக் காட்டப்படுவதிலிருந்து இது அக்கால வளர்ச்சியின் வெளிப்பாடு எனலாம். இருண்ட காலமாகிய களப்பிரர் காலத்தில் எழுந்த சிலம்பில் மூவேந்தர்களையும் சிறப்பிக்கும் இளங்கோவடிகள் சமயக் காழ்ப்பின்றித் தம் காவியத்தில் இறைவழிபாட்டு உணர்வுகளை வெளிப்படுத்துகின்றார். தமிழகத்துக் கோயிற் சிறப்புக்களையும் தம் காவியத்தில் இடம் பெறச் செய்கின்றார். அத்தகு நிலையிலேயே திருவரங்கம் இளங்கோவடிகளாலும் ஒப்புயர்வற்ற பதியாகத் திருமாலின் புகழ் மணம் கமழப் போற்றப்படுகின்றது.

**கிடந்த வண்ணம்:** சிலப்பில் அரங்கநாதனின் கிடந்த திருக்கோலம் பாடப்பெற்றுள்ளது. உயர்ந்த பொன்மலையின் மீது நீல நிறமுடைய முகில் ஒன்று பக்கங்களிலே விரிந்து பரவாமல் படிந்து கிடந்தாற் போன்று படம் விரித்து எழுந்த தலைகள் ஓராயிரமும்

கிட்டுதற்கரிய ஆற்றலுமுடைய பாம்பணை மீது அமரரியுள்ளிட்ட பலரும் தன்னைக் கண்டு வணங்கிப் பராவியுய்வதற்காக விரிகின்ற அலைகளையுடைய காவிரிப் பேரியாற்றின் இடைக் குறையாகிய திருவரங்கத்திலே திருமகள் விரும்பி உறைகின்ற திருமார்பினையுடைய திருமால் கிடந்தருளிய திருக்கோலத்துடன் அறிதுயில் கொண்டு கிடக்கின்ற அழகனாகக் காட்டப்படுகின்றான்.[144] இவ்வாறு விளக்குவது சிலம்புக் காலத்தில் எழுந்த வளர்ச்சியின் அறிகுறி யென்றே கூறலாம்.

சங்க இலக்கியத்தில் திருவனந்தபுரத்துத் திருமால் விளக்கம் பெறுகின்றான். உறையூர் முதுகூத்தனார் என்னும் புலவர் பாடிய அகநானூறு 137-ஆம் பாடலில் தாம் வாழ்ந்த உறந்தையிலும், அதற்கருகிலுள்ள அரங்கத்திலும் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழாவைக் குறிப்பிடுகின்றார். இன்றும் பங்குனி மாதத்தில் நடைபெறும் விழாவில் அரங்க நகரப்பன் உறையூருக்கு எழுந்தருளுவது வழக்காக உள்ளது.

''வென்று எறிமுரசின் விறல்போர்ச் சோழர்
இன்கடும் கள்ளின் உறந்தை ஆங்கண்
வருபுனல் நெரிதரும் இருகரைப் பேரியாற்று
உருவவெண்மணல் முருகு நாறு கண்பொழில்
பங்குனி முயக்கம் கழிந்த வழி நாள்
வீஇலை அமன்ற மரம் பயில் இறும்பில்
தீஇல் அடுப்பின் அரங்கம் போல
பெரும்பாழ் கொண்டன்று நுதலே''

என்னும் பாடல்பகுதியில் ''தலைமகன் பிரியப்போகிறான்'' என நினைத்து வேறுபட்ட தலைமகளின் நிலையைக் கூறும்போது திருவரங்கத்தில் பங்குனி உத்திரத் திருநாளின்போது மக்கள் மிகுதியாகத் திரண்டு காவிரியின் இருகரைகளிலும் உள்ள சோலைகளில் தங்கியிருப்பர். அப்போது பொலிவுடையதாகத் தோன்றிய அச்சோலைகள் அவ்விழா முடிவில் அனைவரும் அரங்கத்தை விட்டுப் போனபின் பொலிவிழந்து தோன்றுவதுபோல, தலைமகன் பிரிவை யெண்ணிய தலைமகளின் நெற்றியும் பொலிவிழந்து தோன்றுகிறது என்கிறார். இப்பாடலில் இவ்விழா திருவரங்கத்தில் நடப்பது என்று கூறினாலேயன்றித் திருமாலுக்கு நடப்பது என்று கூறவில்லையே என்று கூறுவார்க்கு விடையளிப்பது போல் இக்குறைதீரச் சிலப்பதிகாரத்தில் ''திருவரங்கத்தில் பள்ளி கொண்டிருப்பவன் திருமாலே'' என்று மிகத் தெளிவாகக்

144. சிலம்பு - காடுகாண் காதை - 35 - 40

கூறுகின்றார் இளங்கோவடிகள். இவற்றிலிருந்து கோயிலில் திருமால் கிடந்த திருக்கோலமாகவும், திருமலையில் நின்ற திருக்கோல மாகவும் எழுந்தருளியிருக்கும் நிலைகள் அகநானூற்றிலும், சிலம் பிலும் பாடப்பட்டுள்ளன என்று அறியப்படுகின்றது.

**நின்ற வண்ணம் :** திருவேங்கடத்துத் திருமால் சங்கு சக்கரங்களை அணிந்திருந்தான் என்பதைத் தெளிவாகக் கூறுகின்றார் இளங்கோ. சக்கரத்தை ''ஆழி'' என்றும் சங்கைப் ''பால்வெண் சங்கம்'' என்றும் குறிப்பிடுகின்றார். இவற்றைத் தன் தாமரைக் கையில் ஏந்தியிருப்பதாகச் சொல்கிறார். நீலமேகம் ஒன்று இருபுறமும் ஞாயிறும், திங்களும் ஒருங்கே விளங்கக் காட்சி தருவது போல் திருமலையில் பெருமான் காட்சி வழங்குவதாகக் கூறுகிறார். ''செங்கண் நெடியோன் நின்ற வண்ணம்'' இது என்று இப்பகுதி முற்றுப் பெறுகின்றது.

இங்கு மேகம் நெடியோனுக்கும், மின்னுக்கொடி பொன்னா டைக்கும், இந்திரவில் ஆரத்திற்கும், ஞாயிறு ஆழிக்கும், திங்கள் சங்கிற்கும், இடைநிலைத்தானம் மலையினுச்சிக்கும் உவமையாக்கப் படுகின்றன. இயற்கையில் இறைவனைக் கண்ட பாரதம் பாடிய பெருந்தேவனாரின் இறையுணர்வை இவ்விடங்களில் இளங்கோவடி களிடம் நாம் காண்கிறோம்.[145] திருமலை வேங்கடவன் சங்கு, சக்கரங்களுடன், மார்பில் திருமகளுடன் காட்சியளிக்குமிடத்துக் கையிலுள்ள சங்கு, சக்கரங்கள் திருமாலின் சர்வ சக்திக்கு அறிகுறி யாகவும், மார்பில் உள்ள திருமகள் வாய்மையின் மார்பில்தான் உண்மை அழகும், அருளும், திகழும் என்ற மிகப்பெரிய உண்மைக்கு நினைவுக்குறியாகவும் அமைந்து இத்தகைய பேருண்மைகளை வெளிப்படுத்துகின்றன. கிடந்த வண்ணத்திற்குத்தக, திருவமர் மார்பனாகக் காட்டப்பட்டு, நின்ற வண்ணத்திற்குத்தகச் செங்கண் நெடியோனாகப் போற்றப்படுகின்றான்.

வைணவரும், சைவருமல்லாத இளங்கோவடிகள் திருவேங் கடவனின் நின்ற திருக்கோலத்தைக் குறிப்பிடுவதுடன் இத்திரு மலையை ''நெடியோன் குன்றம்'' என்று குறிப்பிடுகின்றார். அரங்கநாதனின் ''வடக்கு மாளிகை'' திருவேங்கடம் என்ற வைணவர் கொள்கையை இளங்கோவடிகள் பதிவு செய்திருப்பது போல் அவர் மணிவாக்கு சிலம்பில் அமைகின்றது. ''வீங்குநீர் அருவி வேங்கடம்'' என்று இளங்கோவடிகள் கூறுவதையே ''திரண் டருவி பாயும் திருவேங்கடம்'' என்று பேயாழ்வாரும் கூறியுள்ளார் எனலாம். சிலப்பதிகார காலம் முதலாழ்வார்கள் காலத்திற்கும்

145. நற்றிணை - கடவுள் வாழ்த்து

முறப்பட்டது. எனவே இளங்கோவடிகள் கண்ட திருமாலையே ஆழ்வார்களும் கண்டனர் எனலாம்.

கம்பரும் இம்மலையை ''மழை நின்றவானவன்...தாளிணை தாங்கிய அம்மலை'. என்று சுட்டிக் காட்டுகின்றார். ''புகழ் பொதிந்த மெய்யேபோல் பூத்து நின்ற ... வேங்கடம்'' என்கிறார். சங்க காலத்திலேயே திருமலை கோவிலும் திருவிழாவுமாகப் புகழ் பெற்றிருந்தது. புறப்பொருள் வெண்பாமாலை என்ற பழந்தமிழ் நூலும் திருவேங்கடத்தைத் திருமாலின் திருப்பதியாகவே குறிப்பிடு கிறது. பிற்காலச் சைவப் புலவர்களான சைவ எல்லப்ப நாவலர், சிவப்பிரகாசர் முதலானவர்களும் திருவேங்கடத்தைத் திருமால் வாழும் தமிழக எல்லையாக வருணித்திருக்கிறார்கள்.

சங்க இலக்கியங்களில் பத்துப் பாட்டில் ஒன்றான பெரும் பாணாற்றுப் படையில் மலையில் யானை படுத்திருப்பதுபோலவே திருவெஃகாவில் பாம்பணைப் பள்ளியில் திருமால் கிடந்த திருக்கோல அழகு பாடப்படுகிறது. திருமாலை ''அரும் திறல் கடவுள்'' என்பதும் நோக்கத்தக்கது. அவன் கோயில் கொண்டிருக்குமிடம் பெறுதற்கு அரிய பழமையான புகழுடைய ''துறக்க உலகம்'' போன்றது என்று கூறியிருப்பதிலிருந்தும் துறக்கத்தையளிப்பவன் திருமாலே என்று உணர்த்தப்படுகின்றது.

சங்க இலக்கியங்களிலேயே திருமாலைக் கோலத்துடன் சித்தரிக்கும் பண்பு தோன்றியிருப்பினும் மேற்குறித்த செய்திகளால் சங்க இலக்கியங்களிலும் திருமால் கோலங்களின் சிறப்பு சிலம்பில் மிகுதியாகப் புனைந்து போற்றப்படக் காணலாம். சங்கம் மருவிய காலத்தில் போற்றப்படுவதற்கும், திருவேங்கடம் திருமாலுறையும் கோயிலாக மிக விளக்கமான முறையில் புனையப்படுவதற்கும் சமுதாயச் சூழல் காரணமாக அமைந்து இவ்வாறு பாடத்தூண்டி யிருக்க வேண்டும் எனலாம்.

அவதாரங்களில் கிருட்டிணாவதாரப் புனைவு மிகுதியாகக் கூறப்படுகின்றது. ஆய்ச்சியர் குரவையில் கண்ணன் பரம்பொரு ளாகவே காட்டப்படுகின்றான். சிவன், முருகன் வணக்கம் சிறப்புற் றிருந்த போதும் இளங்கோவடிகள் திருமாலைத் தொழுவதே பிறவிப்பயனாகக் காட்டுமிடத்துத் திருவடிச் சிறப்போடு வீடு பேற்றை நல்கும் முழுமுதல்வனாகப் போற்றப்படுகின்றான்.

சங்க இலக்கியப் புனைவுகளில் பிறப்பறுத்து வீடுபேறு நல்கு பவன், உலகனைத்தையும் படைத்தளித்தழிக்கும் முதல்வன், தேவர்கள் தலைவன், வேத முதல்வன். மும்மூர்த்திகளும் அவன்,

பல்வேறு அவதாரங்கள் எடுத்தவன், பிரமனைத் தோற்றுவித்தவன், நீங்காத அறிவுடையோன், நற்குணங்களை உடையவன், எல்லாம் வல்லவன், அளவிட்டு அறியவொண்ணாதவன், உயிர்களோடு இரண்டறக் கலந்தவன், பல்வேறு தெய்வங்களும் திருமாலே என்ற கருத்துக்களால் பல்வேறு பண்புகளில் ஒவ்வொன்றிலும் விளக்கமாகப் புனையப்படுகின்றான்.

சங்க இலக்கியத்தில் திருமால் சிவனோடு இணைந்த தோற்றம் பற்றிய செய்தி (மோகினி வடிவம்) அகநானூற்றில் இடம் பெறுவது போல இங்கு எங்கும் இடம் பெறவில்லை. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமாலின் பண்புகள் விளக்கப்பட்டாலும், திருமால் கோயில் கொண்ட தலங்களின் சிறப்பும், கோலங்களின் அழகுமே மிகுதியாகப் புனைவுகளில் இடம் பெறுகின்றன. பரிபாடல் போன்ற இலக்கியங்களில் காட்டப்படும் புனைவுகளைச் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காண முடியாவிட்டாலும், அத்தகு விளக்கங்கள் குறிப்புகளாகவும், செய்திகளாகவும் அமைகின்றன.

**திருமால் அவதாரங்கள் :** அவதாரம் என்ற சொல் சங்க இலக்கியங்களைப் போலவே இவ்விலக்கியங்களிலும் காணப்படவில்லை. ஆயினும் சங்க இலக்கியங்களில் காணப்படுவதுபோல அவதாரக் கருத்துக்கள் இடம் பெறுகின்றன. வராக அவதாரம், மச்சாவதாரம், கல்கியவதாரம் தவிர்த்த பிற அவதாரக் குறிப்புக்கள் இவ்விலக்கியங்களில் இடம் பெறுகின்றன. வராக அவதாரக் குறிப்பு சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படவில்லை. பரசுராம அவதாரக் குறிப்பும் நரசிம்மாவதாரக் குறிப்பும் ஒவ்வொரு இடத்தில் இடம் பெறக் காணலாம். மற்ற அவதாரங்களைவிட கிருட்டிணாவதாரச் செய்திகள் மிகுதியாகவும் அதையடுத்து வாமன அவதாரச் செய்திகளும் இடம் பெறுகின்றன. இவ்விலக்கியங்களில், இராமாவதாரம் மட்டுமே அவதாரப் பெயரோடு விளக்கம் பெறுகின்றது. பிற அவதாரங்கள் செய்தி விளக்கங்கள் மூலமாக அமைகின்றன. இவ்வாறு அமைவதற்கு அன்றைய சமுதாய, சமயச் சூழல் காரணம் எனலாம்.

சங்க நாளில் வைணவம், சைவம் போன்ற வைதீக மதங்களை அரசர்களும், அடியார்களும் பெரிதும் ஆதரித்துப் போற்றி வந்தமையால், நாடு முழுவதும் அன்னோர் வழியையே பின்பற்றியொழுகியதென்பது நன்கறியப்படுகிறது. இக்காலத்தில் சமண, பௌத்த மதங்களும் அச்சமயத்தவர் முயற்சியால் தென்னாட்டில், சிறுகப் பரவியிருந்ததென்றாலும், வைதீக மதங்களின் செல்வாக்கை அவை அடையவில்லை. ஆனால் சங்க காலத்துக்குப் பின்னர், கி.பி. 6-ஆம் நூற்றாண்டு முதலாக வடநாடு

முழுவதிலும் உரக்க வீசி வந்த சமண பௌத்தங்களாகிய சண்ட மாருதம் தென்னாட்டிலும் சுழன்றடிக்கத் தொடங்கியது. தமிழரசரின் தலைநகர் புறஞ்சேரிகளிலும், மதுரை வஞ்சி முதலிய தலைநகரங்களிலும் சமண பௌத்தப் பள்ளிகளும் உறைவிடங்களும் நகரின் எயிற்புறவிருக்கையில் அமைந்திருந்த செய்தி சிலப்பதிகாரம் புறஞ்சேரியிறுத்த காதையாலும், மணிமேகலை — வஞ்சி மாநகர்ப்புக்க காதையாலும் அறியலாம். வைதிகத் தலங்களிலும் இச்சமயத்தவர் தங்கித் தம் கொள்கைகளைப் பரப்பி வந்ததோடு, சமண பௌத்த பள்ளிகளையும் உபதேசக் கூடங்களையும் ஏற்படுத்தி வந்தனர். தங்கள் சமயங்களைப் புகழ்ப்பெறச் செய்வதில் இன்னோர் கொண்டிருந்த ஆற்றலும், ஊக்கமும், வியக்கத்தக்கன. வடமொழியிலும் கலைகளிலும் பெரும் பயிற்சியும், வாக்கு வல்லமையும் பெற்றிருந்த இவர்கள் சென்ற நாடுகளிலெல்லாம் தத்தம் சங்கங்களை நிறுவியும், தேச மொழிகளை நன்கு கற்றும் அவற்றின் மூலம் தம் சமயக் கொள்கைகளைத் தக்கவாறு பரப்பியும் வந்தனர். இவர்களுள் சமணர்கள் தமிழ் மொழியில் செய்த இலக்கிய இலக்கண நூல்களும், சமய நூல்களும் பிறவும் பலவென்பதும், அவற்றிற் சில பிற சமயத்தாரும் பாராட்டும்படி இன்றுவரை நின்று நிலவுதலும் அனைவரும் அறிந்த உண்மை. சைனரும், பௌத்தரும் தருக்க சாத்திரத்தில் மிகுந்த பயிற்சியுடையராயிருந்தமையால், ஏனைய சமயிகளை வாதப்போருக்கிழுத்துத் தங்கள் ஆற்றலைக் காட்டி வந்தனர்.

இத்தகு நிலையில் வைணவ சமயத்தாரும் திருமாலின் பெருங் கடவுள் நிலையைப் பறைசாற்ற வேண்டிய நிலையில் இருந்ததால் திருமால் அவதாரங்கள் பற்றிய செய்திகள் அவர்களின் இலக்கியங் களில் அமைந்தன எனலாம்.

**கூர்மாவதாரம் — திருமால் — கடல் கடைந்தது :** வடவரையை மத்தாக்கி வாசுகியைக் கடைகயிறாகக் கொண்டு திருப்பாற்கடலைக் கடைந்து தேவர்களுக்கு அமிழ்தம் ஈந்தவன் திருமால் என்ற செய்தி ஆய்ச்சியர் குரவையில் கூறப்படுகின்றது.[146] திருப்பாற்கடலைக் கடைந்த செங்கண் நெடுமாலாகச் சேரனைப் பூவைநிலைத் துறையில் பாடும்போது கடல் கடைந்த செய்தி கூறப்படுகின்றது.[147] கண்ணனைத் திருமாலாகக் காட்டும் இளங்கோவடிகள் அவனது அருட்பண்பு தோன்ற அமரர்க்கு உதவும் பொருட்டு ஆமை வடிவங் கொண்டு கடல் கடைய உதவிய அவதாரக் குறிப்பினை அமைக் கின்றார். இவ்வவதாரச் செய்தி வெளிப்படையாக அமையாமல்

146. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 20 - 32
147. ஆய்ச்சியர் குரவை - பாடல் - 31

குறிப்பாகவே இங்கு அமையக் காண்கிறோம். அவதாரச் செய்திகள் மன்னர்கள் மேலும் ஏற்றிப் பாடப்படுவதைக் காண்கிறோம். திருமாலின் அம்சமாக மன்னர்கள் கருதப்படுவதன் காரணமாக இத்தகு செய்திகள் அமைந்தன எனலாம். இவ்வவதாரம் சங்க இலக்கியத்துள் பரிபாடலில் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. ஆனால் மன்னர்கள் மேல் ஏற்றி உரைக்கப்படவில்லை.

**வாமனாவதாரம் :** ''அடியினால் முக்காற்கடந்தான் முழுநிலம்''[148] என்று வாமனாவதாரப் பெருமை தோன்றத் திருமாலின் திருவடிகள் செய்த அருள் செயல்கள் விளக்கப் படுமிடத்துத் திருவடிப் பேராற்றல் தோன்ற உலகளந்த மாண்பு விரிவாகப் போற்றப்படுகின்றது.[149] காமன் தந்தையைப் போலவே தீமையை அழிப்பவன் என்பதுபடப் பேசப்படுமிடத்தில் ''நீணில மளந்தோன் மகன்'' என்று நெடுமாலின் பேராற்றல் வெளிப்படக் கூறப்படுகின்றது.[150]

**உலகளந்தது :** திருமால் வாமன வடிவம் கொண்டுபின் பேருருவ மாய்ப் பூமியைத் தன் திருவடியில் அடக்க, அந்நாளில் பூமியை நீருடன் அளித்தவன் வலிய பெரிய வில்லையுடைய 'மாவலி' என்று இச்செய்தி விளக்கமாக இடம் பெறுகின்றது. மாவண்கிள்ளி மாவலியின் வழிவந்தவன் என்று கூறவந்த சாத்தனார் திருமால் குறளுருவாகி நிமிர்ந்து உலகளந்த செய்தியை விளக்கமாகப் போற்று கின்றார்.[151] இங்கு மாவலியின் செருக்கை அடக்கிய திருமாலின் பெருமைதோன்ற இவ்வவதாரச் செய்தி பேசப்படுவதைக் காணலாம்.

இயற்கை வர்ணனையில் கண்ணனையும், பலதேவனையும் மூங்கிலுக்கும், வெண்கடம்பிற்கும் உவமை கூறவந்த சாத்தனார் மூங்கில் போன்ற நெடிய தோற்றத்தை உடையவனாகத் திருமாலைக் காட்டுமிடத்து உலகளந்த பேராற்றலும், பேருருவும் தோன்ற ''நெடியோன்'' என்றழைக்கின்றார்.[152]

**நின்றவண்ணம் :** மறையவன் கூற்றில் திருமாலின் கோலங்களை வரையும் இளங்கோவடிகள் திருவேங்கட மலையில்

---

148. நான்மணிக்கடிகை - பாடல் - 2
149. திரிகடுகம் - கடவுள் வாழ்த்து
150. மணி. மலர்வனம் புக்க காதை - 123 - 125
151. மணி. சிறைக்கோட்டம், அறக்கோட்டம் ஆக்கிய காதை 51 - 54
152. மணி. சிறைக்கோட்டம், அறக்கோட்டம் ஆக்கிய காதை 75 - 78

நின்ற கோலத் திருமாலின் புகழ் பாடுகின்றார். இங்கு ''செங்கண் நெடியோனாக''த் திருமால் காட்டப்படுகின்றான்.[153]

**திருவடிச் சிறப்பு:** திருவடிகளை வணங்கச் செல்வதாகக் கூறும் மறையவன் திருமாலையே முழுமுதல் இறைவனாகக் காட்டி, அவனது திருவடிகளைத் தொழுவதே பிறவிப்பயன் என்றும் கூறு கின்றபோது நெடிய இவ்வுலகைத் தனதொரு திருவடியினாலே அளந்த நெடுமுடி அண்ணல் என்று திருவடிச் சிறப்பிற்கேற்ப வாமன அவதாரச் சிறப்பினைப் போற்றுகின்றார்.[154]

அமரர் கூட்டமெல்லாம் தொழுதேத்தும் திருமாலின் செந் தாமரை மலர் போன்ற திருவடிகள் மூவுலகங்களையும் மயக்கம் தீரும்படி அஞ்சாமல் அளந்தன'' என்றும்[155] மாவலி கூறியபடி நிலத்தை அளக்குங்கால், இரண்டடிக்கும் முறையாக நிரம்பாத வண்ணம் மூன்றுலகங்களையும் முடிந்துபோம்படி பண்டு அளந் தருளிய திருமாலின் திருவடிச் சிறப்புப் போற்றப்படுமிடத்தும் வாமன அவதாரச் செய்தி இடம் பெறுகின்றது.[156] திருமால் பெருமலைக்கு உவமையாகக் காட்டப்படுமிடத்து அத்தகை மைக்கேற்ப ''நெடியோன்'' என்று வாமன அவதாரப் பெருமை தோன்ற அழைக்கப்படுகின்றான்.[157]

**அவதாரப் பெருமைகளை மன்னர்களுக்கு ஏற்றி உரைத்தல்:** சோழனைத் திருமாலாகக் கொண்டு பாடும்போது சோழன் பகைவரை வென்று கொண்ட நிலத்தைத் திருமால் மாவலிபால் இரந்தும், நீரேற்றும் பெற்றுக் கொண்டதாக இருவருக்கும் வினை வகையில் வேறுபாடு காட்டுமிடத்து உலகளந்த செய்தி பேசப்படுகின்றது.[158] சோழன் முயற்சிகள் பல செய்து ஆள்கின்ற உலகைத் திருமால் ஒரு துன்பமுமின்றித் தன் அடியினால் அளந்தான் என்றும், அவ்வாறு தாவியளந்த உலகம் முழுமையும் சோழன் ஆளுவதாகவும் கூறுமிடத்தில், வாமன அவதாரப் புகழ் பேசப் படுகின்றது.[159]

இவ்வாறு இவ்வவதாரக் குறிப்புக்களில் திருமால் பேருருவும், பேராற்றலும், பரம்பொருள் தன்மையும் தீமையை அழித்து

153. சிலம்பு - காடுகாண் காதை 41 - 52
154. சிலம்பு - காடுகாண் காதை 147 - 149
155. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை 34
156. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - 35
157. சிலம்பு - காட்சிக் காதை - 21-22
158. முத்தொள்ளாயிரம் பாடல் - 64-1-4
159. முத்தொள்ளாயிரம் பாடல் - 79-1-4

அறத்தைக் காக்கும் பண்பும் தோன்றப் போற்றப்படுவதைக் காண முடிகின்றது. இங்கு ஓரிடத்தில் மட்டுமே இயற்கைக் காட்சியில் இவ்வவதாரச் செய்தி இடம் பெறுகின்றது. சங்க இலக்கியத்தில் முல்லைப் பாட்டிலும், கலித்தொகையிலும் இயற்கை வர்ணனையில் இவ்வவதாரக் காட்சி தெளிவுறுத்தப்படுகிறது. இவ்வவதாரச் செய்தி சங்க இலக்கியங்களில் மன்னர் மீது ஏற்றிப் பாடப்படவில்லை என்பதும் அறியத்தக்கது.

**நரசிம்மாவதாரம்:** ஆய்ச்சியர் குரவையில் ஓரிடத்தில் மட்டுமே நரசிம்மாவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. இங்கும் முழு விளக்கமாக அமையாமல் செய்திக் குறிப்பாகவே கூறப்படுகின்றது. திருமாலின் திருவடிச் சிறப்பு பேசுகின்றவிடத்தில் உலகளந்த மாண்பும், பஞ்சவர்க்குத் தூது சென்ற திறமும் கூறப்படுகின்றது. இத்தகைய வியக்கத்தக்க செயல்களையெல்லாம் செய்த திருவடி களையுடைய திருமால் நரசிங்கமாய்த் தூணிலிருந்து புறப்பட்டுப் பகைவனாகிய இரணியனைக் கொன்றொழித்தவனாக, நரசிம்மா வதாரப் பெருமை தோன்ற ''மடங்கலாய்! மாறட்டாய்!'' என்று வியப்பும். அச்சவுணர்வும் பகையை அழித்து அன்பர்களுக்கு அருளும் திறமும் தோன்றப் போற்றுப்படுகின்றான்.[160] இங்கு மடங்கலாய்-சிங்க ஏறு போன்றோய், மாறட்டாய் - பகைவனை அழித்தோய் என்று நரசிங்கமாகக் கொண்டு உரையாசிரியர்கள் பொருள் கொள்வார்கள். இங்கு சிங்கம் என வருவதை நரசிங்கம் எனக் கொள்ளலாமா எனின் இக்கருத்து ஆய்ச்சியர் குரவையில் இடம் பெறுவதாலும், கண்ணனைத் திருமாலாகக் காட்டும் பகுதி என்பதாலும், அவ்வாறு கூறுவதே பொருத்தமாகவும் அமைகின்றது. சங்க இலக்கியத்தில் பரிபாடலில் மட்டுமே ஓரிடத்தில் இவ்வவதாரச் செய்தி விளக்கமாக புனைந்துரைக்கப்படுகிறது. இச்சங்கம் மருவிய கால இலக்கியங்களில் சிலம்பில் மட்டுமே இச்செய்தி குறிப்பாகக் கூறப்படுகின்றது.

**பரசுராம அவதாரம்:** மணிமேகலையில் மட்டுமே பரசுராம அவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. அரசர் குலத்தைப் பொன்றக் கெடுத்தவன் பரசுராமன் என்பதையும், அவன் திருமாலின் தோற்றம் என்பதையும் சாத்தனார் கூறுகின்றார். ''மழுவாள் நெடியோன்'' என்று ஆயுதப் பெருமை தோன்ற அரசர் குலத்தை அழித்த வெற்றிச் சிறப்பும், உலகளந்த திருமாலின் ஆற்றலும் ஒருசேர வெளிப்பட நெடியோனாகப் பரசுராமன் காட்டப்படுகின்றான்.[161] இங்கு திருமாலின் அவதாரமே பரசுராமன் என்ற கருத்துப்பெறப் பேசப்

160. ஆய்ச்சியர் குரவை - 34
161. மணி. சிறைசெய் காதை - 25-26

படுகின்றான். சங்க இலக்கியத்தில் அகநானூற்றில் ஓரிடத்தில் மட்டுமே உவமையாக அவ்வவதாரக் குறிப்பு அமைகின்றது.

**இராமாவதாரம்:** பாரதத்தில் கண்ணன் தருமத்தை உபதேச வாயிலாக கூறியருளினான். இராமாயணத்தில் இராமன் வாழ்ந்து காட்டினான் என்று கூறுவர். இராமன் பிறப்பு, அதருமத்தின் உருவமான இராவணனை அழித்தற்கு நிகழ்ந்த ஒன்று என்பர். இதனை,

''அறந்தலை நிறுத்தி வேதம் அருள் சுரந்து அறைந்தநீதித்
திறம்தெரிந்து உலகம்பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்[162]
இறந்துகநூறி தக்கோர் இடர்துடைத்து ஏக ஈண்டுப்
பிறந்தனன் தன் பொற்பாதம் ஏத்துவார் பிறப்பறுப்பான்''

எனக் குறிப்பிடுவர் கம்பர். அறத்தை நிலை நிறுத்தப் பிறந்த இராமன், ஒவ்வொரு நிலையிலும், சிறந்த அறவோனாக வாழ்ந்து காட்டியதைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். தாய் தந்தையரிடத்தில் சிறந்த அன்பு கொண்டு வாழ்ந்தவன், தான் காடு செல்லக் காரணமாகவிருந்த கைகேகியிடமும், அவன் அன்பு சிறந்து நின்றது. உடன் பிறந்தோரிடம் காட்டிய அன்பும் ஈடிணை யற்றதே. பரதனிடம் பேரன்பும் முனிவர்களிடமும், அந்தணர் களிடமும் பெருமதிப்பும் கொண்டு வாழ்ந்தான். சிறந்த அரசன் என்ற நிலையில் இராசாராமன் எனப் பாராட்டும் நிலையில் வாழ்ந்த அவன் பகைவர்களிடமும் ''காழ்ப்பு'' உணர்வு இன்றி வாழ்ந்தான். உலகில் பல நிலைகளில் வாழ்வோரையும், சகோதர நேயத்தால் பிணித்து வாழ்ந்தான். தந்தையின் நண்பன் சடாயு வையும், தந்தையைப் போலவே கருதி அப்பெருந்தகைக்கும் இறுதிச் சடங்கு செய்து முடித்தமை குறிப்பிடத்தக்கது. அவன் கொண்ட ''ஏகபத்தினி'' விரதத்தையும் சிறப்பாகக் கூறவேண்டும். எல்லா வற்றுக்கும் மேலாகத் தன்னைச் சரணடைந்தவர்களைப் பேணு தலையே சிறந்த தருமமாகக் கொண்டு வாழ்ந்து காட்டியவன் இராமன்.

இவ்வாறு வாழ்ந்து காட்டியமை திருமால் மக்களை உய்விப் பதற்காக மேற்கொண்ட அவதாரக் கோலமாகக் கண்டு அவன் பெருங்கருணைத் திறத்தை வியத்தலே வைணவர்களிடம் சிறப்பாக உள்ளது. மேலும் அவர்கள் இராம காதையின் கூறுகள் பலவற்றிலும் பெரிதும் ஈடுபட்டு நிற்பர். ''கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ ... நான்முகனார் பெற்ற நாட்டுளே''[163] என்பது நம்மாழ்வார் பாடல்.

162. சுந்தரகாண்டம் - பிணிவீட்டுப் படலம் - 176
163. நா. தி. பிர. - 3605

சங்க இலக்கியங்களினும் மிகுதியாக இராமாவதாரச் செய்திகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் அமையக் காண்கிறோம். இக் குறிப்புக்களில் இராமன் திருமாலின் அவதாரம் என்ற கருத்தையும் பெறுகின்றோம். இவ்வாறு மிகுதியாக அமைவதற்கு, வடநாட்டவர் கலப்பு மிகுதியும், சமண பௌத்த எதிர்ப்புக்குரிய கருவியாக இராமாவதாரத்தை வைதிக நெறியாளர் பயன்படுத்தியதும் காரணமாக வேண்டும் என்றும் கூறலாம். மேற்கூறிய இராமனின் நற்பண்புகள் மக்கள் மனத்தை ஈர்த்திருந்தமையும் ஒரு காரணம் எனலாம்.

**அறத்தின் நாயகன் :** ''பெரியோரைச் சார்ந்தொழுகுபவர் பயன் பெறுவர்'' என்பதைக்கூற வீடணன் இராமன் சார்பைப் பெற்று அரசியலடைந்தமையை உயர்ச்சி தோன்ற எடுத்துக் காட்டுகின்றார் பழமொழி ஆசிரியர். இங்கு அறக்கருத்தை விளக்க இராமாவதாரச் செய்தி குறிப்பாக விளக்கப்படுகிறது.[164] இராமனுக்கும், இராவணனுக்கும் நடந்த போர் பற்றிய செய்தி மணிமேகலையில் இடம் பெறுகின்றது. இராமனோடு போரிடுவதற்கு முன்பு துணை செய்து வந்த அறம் இராமனது பகை பெற்றவுடன் துணையின்றிக் கழிந்ததை ''மீட்சியால் இராவணன்'' என்று இங்கு மீட்சியளவிற்குச் சான்று கூறுமிடத்து அறத்தின் நாயகனாகத் திருமாலின் இராமாவதாரம் குறிப்பிடப்படுகின்றது.[165] திருமால் மயக்கத்தால் நிலமிசை இராமனாகத் தோன்றி வெல்லுதற்கரிய கடலை அடைந்தபொழுது குரங்குகள் கொணர்ந்து வீசிய பெரும் மலைகளெல்லாம் கடலின் வயிற்றினுள்ளே புகுந்தாற்போல என்று யானைப் பசிக்கு உவமமாகக் காயசண்டிகையின் கூற்றில் இராமாயணச் செய்தி இடம் பெறுகின்றது. திருமாலே இராமன் என்ற கருத்தோடும் ''நெடியோன்'' என்று வாமனாவதாரப் பெருமையோடும் அவ்வுலகளந்த மாண்பினன் இராமாவதாரத்தில் சீதையைப் பிரிந்து வருந்திய துன்பமும் ஒருசேர விளங்க இக்கருத்து இடம் பெறுகின்றது.[166]

**காடு சென்றமை :** கோவலன் பிரிவால் வருந்தும் புகார் நகர மக்களின் வருத்தத்திற்கு உவமை கூறுமிடத்தில் இராமாவதாரம் பற்றிய செய்தியை அமைக்கின்றார் இளங்கோவடிகள். இங்கு தசரதன் ஏவலால் கானகம் சென்ற இராமனது நிலையும், அவன் பிரிவால் அயோத்தி நகர மக்கள் வருந்திய வருத்தமும் புலப்படக் கோவலன் நிலையை விளக்குகின்றார்.[167] தசரதன் ஏவலை

164. பழமொழி - பாடல் 257
165. மணி. சமயக் கணக்கர் தம் திறம்கேட்ட காதை - 53-54
166. மணி. உலக அறவிபுக்க காதை - 9 - 1 - 3
167. சிலம்பு - புறஞ்சேரியிறுத்த காதை -63 - 66

மேற்கொண்டு வாழ்க்கைத் துணைவியோடும் அரசு துறந்து காடு சென்று ஆங்கு இராவணன் சீதையைக் கவர்ந்து கொள்ள அவளைத் துறந்து பெருந்துன்பமெய்திய இராமனின் செய்தி கோவலனின் துன்பத்திற்கு உவமையாகப் பேசப்படுகின்றது. அத்தகைய இராமனே நான்முகனையீன்ற திருமால் என்று பரம்பொருளாகக் காட்டப்படுகின்றான். இங்கு காமம் சார்பாகக் காதலில் உழந்து இடும்பை எய்தியவர்க்குத் தேவருள் சிறந்தான் ஒருவனாகிச் சான்றாக அமையும் திருமாலின் இராமாவதாரச் செய்தியை அறிய முடிகின்றது.[168]

**செவி பெற்ற பயன் :** திருமாலாகி உலகளந்த திருவடிகளே பரல் உறுத்துக் கொப்புளம் கொண்டு குருதியால் சிவக்கும்படி தம்பியாகிய இலக்குவனோடும். ஈரேழாண்டுகள் காட்டில் திரிந்தன, இலங்கையின் காவலை அழித்து அன்பர்க்குத் தொண்டும் புரிந்தன, அத்தகைய இராமனின் புகழினைத் கேளாத செவி செவியாகாது என்றும் இளங்கோவடிகள் போற்றுமிடத்து, இறைவன் இராமனாக நிலவுலகத்தே தோன்றி கண்போந்ததும், இலங்கைக் கட்டழித்ததும் எல்லாம் தன் அன்பராயினார்க்குச் செய்த தொண்டுகளே என்பது தோன்ற சேவகனாகத் திருமாலைக் காட்டி இராமாவதாரப் பெருமை தோன்ற அவன் புகழ் கேளாச் செவி பயன்படாச் செவியே என்று செவியினால் பெறும் பயனையும் வலியுறுத்துகின்றார்.[169]

**மன்னர்களுக்கு ஏற்றி உரைத்தல் :** மற்றைய அவதாரங்களைப் போலவே இவ்வவதாரக் கருத்தும் மன்னர்கள்மேல் ஏற்றி உரைக்கப்படுகின்றது. செங்குட்டுவனைத் திருமாலாகக் கருதிப் பாடும் இளங்கோவடிகள் திருமால் செய்த போர்களாக மூன்று செய்திகளைக் கூறுகின்றார். அவை, மோகினியாகித் தேவாசுரப் போரை மூட்டி நிகழ்த்தியது, இராமனாகி இலங்கையில் அரக்கர்களோடு செய்த போர், கண்ணனாகி நிகழ்த்திய பாரதப் போர் என்பன. இங்கு இராமன் இராவணனுடன் நிகழ்த்திய போராகிய இராமாயணச் செய்தியைச் செங்குட்டுவனது வெற்றிப் புகழாகக் கூறுகின்றார்.[170] செங்குட்டுவனைத் திருமாலாகப் பாடுகின்றபோது இராம-இராவணப் போர் பதினெட்டு மாதங்கள் நடந்ததாக இராமாவதாரக் குறிப்புகள் இடம் பெறுகின்றது.[171]

168. சிலம்பு - ஊர்காண் காதை - 42 - 43, 46 - 49
169. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - 35
170. சிலம்பு - கால்கோட் காதை - 5 - 13
171. சிலம்பு - நீர்ப்படை காதை 5 - 13

இக்குறிப்புகளிலெல்லாம் இராமன் திருமாலின் அவதாரம் என்பதை அறிய முடிகின்றது. சங்க காலத்து மக்களிலும், சிலப்பதிகார கால மக்கள் இராமாயணச் செய்திகளை மிகுதியாக அறிந்திருந்தனர் என்பதும், அவற்றுள் இராமன் காடு சென்று துன்புற்றதும், இராவணனோடு நிகழ்த்திய போரும் மக்கள் நெஞ்சில் நீங்கா இடம் பெற்றிருந்தன என்பதனையும் அறிகின்றோம். மேலும் ஓர் அவதாரக் கருத்துக்கள் இடம் பெறுமிடங்களில் பிற அவதாரத்தின் செயல்கள் சேர்த்துப் பேசப்படுவதையும் காண்கின்றோம்.

சங்க இலக்கியத்தில், சங்கம் மருவிய இலக்கியங்களில் அமைவது போல மன்னர்மீது இவ்வவதாரக் கருத்துப் பாடப் பெறலில்லை. அகநானூற்றில் ஓரிடத்தும், புறநானூற்றுள் ஓரிடத்தும் இராமாவதாரச் செய்தி உவமையாக மட்டுமே அமைகின்றது.

**பரிபாடல் - குறள் - இராமாயணச் செய்தி :** இராமாயணத்தில் தாடகை வதம் நிகழ்ந்த பின்னர் இராமன் அகலிகையின் சாபம் தீர்த்தருளிய செய்தியை யாவரும் அறிவர். இந்திரன் வஞ்சக வடிவம் கொண்டு வந்து அகலிகையைப் புணர்ந்ததும் கவுதம முனிவர் வருதல் கண்டு பூனை வடிவம் கொண்டு, இந்திரன் மறைந்தோடியதும் கவுதம முனிவர் நிகழ்ந்ததுணர்ந்து அகலிகையைக் கல்லாகும் வண்ணம் சபித்ததும் ஆகிய செய்திகள் இராமாயணத்தில் வருவன. இவற்றைத் திருவள்ளுவரும் தம் நூலில்,

''ஐந்தவித்தான் ஆற்றல் அகல் விசும்புளார் கோமான்
இந்திரனே சாலும் கரி''—குறள் என்று குறிப்பிட்டருளினர்.

இவ்விராமாயணக் கதை பற்றிய குறிப்பு, பரிபாடலிலும் பயின்றுள்ளது[172] பரிபாடலில் முருகனைப் பற்றிய பாடல்கள், பல வருகின்றன. அவற்றுள் திருப்பரங்குன்றம் பற்றிய பாடற் பகுதி ஒன்று. ''அங்கேயுள்ள கோயிலில் அமைந்திருந்த சித்திரமண்டபத்தில் அகலிகை சாப விமோசனம் பற்றிய கதைச் சித்திரம் ஒன்றும் வரையப் பெற்றிருந்தது. கோயிலில் முருகனைத் தொழுவதற்கு வரும் அடியார்கள், அச்சித்திரத்தைக் கண்டு வியந்து மகிழ்கின்றனர் என அப்பாடல் குறிப்பிடுகின்றது.

இத்தகு செய்திகளால் இராமபிரானின் இனிய வரலாறும், இணையற்ற சிறந்த தெய்வீக இயல்புகளும் எவருள்ளத்தையும் கொள்ளை கொள்ளவல்லன என்பதும் இராமாயணச் செய்திகள் பாரத நாட்டுக் கோடிக்கணக்கான மககளின் உள்ளங்களில்

172. பரி - 19 - 50 - 53

ஊடுருவித் தோய்ந்து ஒன்றி நின்று பக்தி உணர்ச்சியினை வற்றாத பெருவெள்ளம் எனப் பெருக்கெடுத்து ஓடச் செய்தன என்பதும் அறியக் கிடக்கின்றது.

**பலராமன் :** பலராமன் கண்ணனோடு இணைத்துப் பேசப்படும் மரபைப் பலவிடத்தும் காண முடிகின்றது. இவ்வாறு, ஓர் அவதாரத்தை மற்றோர் அவதாரத்தோடு சேர்த்துரைக்கும் முறையைப் பரவலாகக் காண்கின்றோம். கிருட்டிணாவதாரச் செய்திகளில் பலராமன் கண்ணனுக்கு முன்னவனாகவே கூறப்படு கின்றான்.

**வெண்மை நிறத்தான் :** வெண்கடம்பு மலர்ந்த காட்சிக்கு நாஞ்சில் வலவன் நிறம் உவமிக்கப்படுகின்றது. இங்குப் பலராமன் நாஞ்சில் படையை உடையவன், பேராற்றல் படைத்தவன் என்ற கருத்தோடு அவன் நிறம் வெண்மை என்பதும் தோன்ற புனைந் துரைக்கப்படுகின்றான்.[173] மற்றொரு இயற்கைக் காட்சியில் சாத்தனார் மூங்கிலுக்குக் கண்ணனையும், வெண் கடம்பிற்குப் பலதேவனையும் உவமம் காட்டுகின்றார். இங்குப் பலதேவன் வெண்ணிறமுடையான் என்று கலித்தொகை, கார் நாற்பது முதலானவை கூறுவதுபோலச் சாத்தனாரும் நிறத்தையே வலி யுறுத்தக் காண்கிறோம்.[174]

**கண்ணனின் முன்னவன் :** ஆய்ச்சியர் குரவையில் பலராமன் கண்ணனின் தமையனாக, முன்னவனாகவே குறிக்கப்படுகின்றான். அங்கெல்லாம் திங்கள் மண்டிலத்தை ஒத்த நறுமணமுள்ள வெள்ளை நிறத்தவனாகவும், மல்லிகை மலர்போன்ற வெண்ணிறமுடைய வனாகவும் நிறம்தோன்றப் போற்றப்படுகின்றான்.[175]

**பலராமன் கோயில் :** திருமால், பலராமன் கோயில்களைக் குறிப்பிடும் இளங்கோ அடிகள், அவர்களின் கொடிச் சிறப்புத் தோன்ற உவணச் சேவலுயர்த்த வெள்ளை நாகர் தம் கோயில் என்று குறிப்பிடுகின்றார்.[176] பலதேவன் கோயில் பற்றிய செய்தி, வெளி சங்கு போன்ற நிறமுடைய பலதேவன் கோயில் என்பதுடன், நீலமணி போன்ற நெடுமால் கோயிலும் என்று நிறம் தோன்றச் சிறப்பிக்கப்படுகின்றது.[177] இக்குறிப்புகளால் திருமால் பலராமன்

173. கார்நாற்பது - பாடல் 19
174. மணி. சிறைக்கோட்டம், அறக்கோட்டம் ஆக்கிய காதை - 61 - 66
175. ஆய்ச்சியர் குரவை - 26 - 27
176. சிலம்பு - கனாத்திறம் உரைத்த காதை - 10
177. சிலம்பு - கனாத்திறம் உரைத்த காதை - 10

வணக்கம் சிறந்திருந்தமையும், மறைகள் கூறுகின்ற முறைப்படி இக்கோயில்களில் சடங்குகள் நிகழ்ந்தன என்பதையும் அறிய முடிகின்றது.[178] மேலும் கண்ணன் பலதேவனுடன் வணங்கிச் சிறப்பிக்கப் பெற்ற செய்தி சங்க நூல்களால் நன்கறியப்படும். இஃதன்றி பலதேவர்க்குத் தனிக்கோயில்களும் அக்காலத்திலிருந்தன. அவை "வெள்ளை நாகர் கோட்டம்", "வெள்ளை நகரம்" என்று பெயர் பெற்றிருந்தன என்பதனையும் இளங்கோவடிகள் கூற்றால் அறிய முடிகின்றது. இவ்வாறு தனிக் கோயிலில் பலதேவரை வணங்கி வந்த வழக்கு, கடைச்சங்கத்துக்குப் பிற்பட்ட காலத்தில் இருந்ததில்லையென்றே சொல்லலாம். கண்ணனும், பலதேவரும் சேர்ந்துள்ள நிலையை அக்காலத்துப் புலவர் வணக்கம் மூலமும், உவமை கூறும் முறையிலும் பலபடப் பாராட்டுவர். திருமாலிருஞ் சோலையில் அவ்விருவர் திருவுருவங்களும் சேரவிருந்தன என்று பரிபாடல் (15) கூறும். இத்தகைய கோயில்களும் பிற்காலத்தில் அருகிவிட்டன. பலராம கிருட்டிணன் அவர்களை சங்கர்ஷண வாசுதேவர் என்ற பெயர்களால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட வடநாட்டாரும் வணங்கி வந்தனரென்பது பழைய வடநூல்களாலும் சாஸனங்களாலும் அறியப்படுகின்றது.

சங்க இலக்கியங்களில் காட்டப்படுவதுபோல் இணையாகவே கிருட்டிணன் பலராமன் இருவரும் காட்டப்படுகின்றனர். எனினும் சங்க இலக்கியங்களில் அமையும் திருமாலே பலராமன், பலராமனே ஆதிசேடன், பலராமன் சினம் மிகுந்தவன், தன் வலிமையால் புகழ் பெற்றவன், பரிசு பெற்றவன் போன்ற செய்திகளையும், பூவை நிலைத் துறையில் கிருட்டிணன், பலராமன் இருவர் தன்மைகளையும் மன்னர்களுக்கு ஏற்றிப் பாடும் வழக்கையும் இச்சங்கம் மருவிய இலக்கியங்களில் காணமுடியவில்லை. சங்க இலக்கியங்களில் காணப் படுவதுபோல பலராமனைப் பற்றிய மிகுதியான செய்திகள் இடம் பெறவில்லை. ஆயினும், வெண்கடம்பு, ஆண் அன்னம், திங்கள் மண்டிலம், மல்லிகை மலர், வெண்சங்கு போன்ற பொருட்கள் அவன் நிறத்திற்கு உவமமாக அமைவதையும், நாஞ்சில் படையை உடையவன், மேழி வலனுயர்த்த கொடி உடையவ்ன், கண்ணனுக்குத் தமையன் கோயிலில் வைத்துத் தெய்வமாக வணங்கப்பட்டவன் போன்ற செய்திகளையும் இவ்விலக்கியங்களால் அறிகின்றோம்.

**கிருட்டிணாவதாரம்:** சங்க இலக்கியங்களில் போலவே சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கிடைத்துள்ள திருமால் பற்றிய குறிப்புகளில் கிருட்டிணன் பற்றிய செய்திகளையே மிகுதியாகக்

178. சிலம்பு. இந்திர விழவூரெடுத்த காதை - 169 - 174

காண முடிகின்றது. ''கிருட்டிணன்'' என்னும் பெயர் சங்க இலக்கியத்தில் இடம் பெறாதது போலவே இவ்விலக்கியங்களிலும் காணப்படவில்லை. ஆயினும் அவனது பண்புகளை விளக்கும் வகையில் மால், மாயோன், மாயவண்ணன், அஞ்சனவுருவன், கடல்வண்ணன் போன்ற பெயர்களால் அழைக்கப்படுகின்றான். குலத்தோடு அமைந்த பெயராகக் ''கோவலன்'' என்று முத்தொள் ளாயிரத்தில் ஓரிடத்தில் குறிக்கப்படுகின்றான். மஞ்சள் வண்ண ஆடையும், கரிய நிறமும், நீலநிறமும் உடையவனாகவும் குழலூதும் கண்ணனாகவும் திருவமர் மார்பனாகவும் காட்டப்படுகின்றான். பலராமனும் கண்ணனும் இணையாக, அண்ணன் தம்பியராகவே காட்டப்படுகின்றனர்.

சங்க இலக்கியங்களில் காணப்படாத நப்பின்னை பற்றிய செய்தி, கண்ணனோடு இணைத்துப் பலவிடங்களில் பேசப்படுகின்றது. கிருட்டிணாவதாரத்தில் நப்பின்னை கண்ணனின் துணைவியாக அமைகின்றாள். திருமாலுக்குரிய பல்வேறு பெயர்கள் மீது கண்ணனுக்குரிய செயல்களும், பண்புகளும் ஏற்றி உரைக்கப் படுகின்றது. திருமாலின் தங்கையாகக் கொற்றவை கூறுப்படு மிடத்துக் கண்ணனின் செயல்கள் கொற்றவையின்மேல் சார்த்திப் பேசப்படுகின்றன. திருமாலின் அவதாரமாகவே பலவிடங்களில் கண்ணன் காட்டப்படுகின்றான். கண்ணன் பற்றிய பல பாரதக் கதைக்குறிப்புகள் இவ்விலக்கியங்களில் இடம் பெறுகின்றன.

**கண்ணனின் வீரச் செயல்கள் :** திரிகடுக ஆசிரியர் வழிபடு கடவுளாகத் திருமாலின் பெருமையைக் கூறிப் போற்றுகின்றார். எவ்வுலகத்தாரும் உய்யும்படி உலகளந்ததும், தமக்கும், தம்மவர்க்கும் இடர் செய்யத் துணிந்த தீயவர்களை அழித்ததுமாகிய அவன் திருவடிகளைத் துதிக்க இடையூறுகள் நீங்கும் என்கின்றார். இங்கு பூமியை அளந்ததும், குருந்த மரத்தைச் சாய்த்ததும், வஞ்சகமான வண்டியை உதைத்ததுமாகிய மூன்றும் திருமால், திருவடிகளின் செயல் என்னும் போது, திருவடிப் பேராற்றலும், பேருருவும், பேரறிவும் தோன்றக் கடவுட் குணங்களோடு உய்தி தரும் பரம் பொருளாகவே கண்ணன் காட்டப்படுகின்றான்.[179]

வஞ்சத்தால் புனத்தில் வந்து நின்ற குருந்த மரத்தை முறித்த மாயவன் புகழை, முல்லைப் பண்ணாலே பாடிப் பரவும் செய்தி இடம் பெறுகின்றது.[180] கன்றினையே குறுந்தடியாகக் கொண்டு

179. திரிகடுகம் - பாடல் 1
180. ஆய்ச்சியர் குரவை - பாடல் 17, 21

விளாங்கனியினை உதிர்த்த மாயவன் புகழ் போற்றப்படுகின்றது.[181] கஞ்சனுடைய வஞ்சத்தை யெல்லாம் கடந்து அவனை அழித்தவனாகக் கண்ணன் போற்றப்படுகின்றான்.[182]

**உலகத்தைத் தன் வயிற்றிலே கொண்டமை:** யசோதைக்குக் கண்ணன் எல்லா உலகங்களையும் தன் வயிற்றகத்திற் காட்டினான் என்ற செய்தி நான்மணிக்கடிகையில் இடம் பெறுகின்றது. இது சங்க இலக்கியங்களில் இடம் பெறாத ஒரு செய்தி. திருமாலின் கிருட்டிணாவதாரக் குழந்தைச் செயல்கள் மக்கள் உள்ளங்களைப் பெரிதும் கவர்ந்திருந்த போக்கும், உலகங்களை அளந்ததுடன் அவற்றை உண்டவனும் அவனே என்றுணர்த்தவுமே இக்கதை புதிதாகப் புகுந்தது எனலாம். இந்திரன் மழை பெய்வித்த போது ஆநிரைகளின் குளிர் நடுக்கத்தைத் தாங்கும் பொருட்டுக் கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தவன் என்னும் போது தீரமுடையவனாகவும், தீமையை அழித்து உயிர்களைக் காப்பவன் என்ற பண்புடையவனாகவும் அமைகின்றான்.[183]

**கண்ணன் செய்த குறும்புகள்:** கடல் வயிற்றைக் கலக்குவதற்குக் காரணமான பெரிய கைகள், யசோதையின் தயிர் கடையும் சிறிய கயிற்றினால் கட்டுண்டிருந்தன என்று அவன் புகழ் பேசப் படுகின்றது.[184] அமரர் கூட்டமெல்லாம் தொழும் பரம்பொருளாகக் காட்சி தரும் திருமால் கிருட்டிணாவதாரத்திலே பசி இன்றியே உலகை உண்ட நிகழ்ச்சியும், ஆய்ச்சியர் மனையில் உறியில் வைத்த வெண்ணெய்யை உண்ட வாயினன் என்னும் நிகழ்ச்சியும் கண்ணன் செய்த குறும்புகளாகப் போற்றப்படுகின்றன.[185] நிறம் பற்றிய புனைவுகளில் கிருட்டிணாவதாரச் செய்திகள் இடம் பெறுகின்றன. இயற்கைக் காட்சியில் உவமை கூறும் போது கண்ணனும், பலதேவனும் சேர்த்தே பேசப்படுகின்றனர். பலராமனின் தம்பி யாகவே பலவிடங்களிலும் காட்டப்படும் கண்ணன் அவனது காதலி யாகிய நப்பின்னையோடும் சேர்த்துப் பேசப்படுகின்றான். மூவரும் ஆடிய குரவைக் கூத்து பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.[186]

**துணைவியாக நப்பின்னை:** கண்ணனுக்குத் துணைவியாகவும், அவன் துயர் தீர்த்த குலவிளக்காகவும், நப்பின்னை சுட்டப்

181. ஆய்ச்சியர் குரவை - பாடல் 19
182. ஆய்ச்சியர் குரவை - பாடல் 37
183. நான்மணிக்கடிகை - பாடல் 2
184. ஆய்ச்சியர் குரவை - 32
185. ஆய்ச்சியர் குரவை - 33
186. சிறைக்கோட்டம் அறக்கோட்டம் ஆக்கிய காதை - 61-66, 75-78

படுகின்றாள். ஆயர்குல தெய்வங்களாக இருவரும் போற்றப் படுகின்றனர்.[187]

**கண்ணன் ஆடிய ஆடல்கள்:** கண்ணன் ஆடியதாகப் பத்து வகை ஆடல்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் கஞ்சனால் ஏவப்பட்ட வஞ்ச யானையின் கொம்பை ஒடித்தற்கு நின்றாடிய கூத்து, ''அல்லியக் கூத்து'' என்றும், வாணன் என்னும் அசுரனை வெல்லுதற் பொருட்டுக் கண்ணன் மல்லனாகி ஆடியது ''மற்கூத்து'' என்றும், அநிருத்தனைச் சிறை மீட்க மண்ணாலும், உலோகத்தாலும் இயற்றிய குடங்களைக் கொண்டு ஆடிய வினோதக்கூத்து ஆறனுள் ஒன்று குடக்கூத்து என்றும் மாதவியின் ஆடல்கள் வாயிலாகக் கூறப்படுகின்றன.[188]

**கொற்றவையின் செயலாகக் காட்டப்படுதல்:** இளங்கோ அடிகள், திருமாலின் பண்புகளைக் கொற்றவையின் மேலேற்றிக் கூறும்போது, மருத மரத்தைச் சாய்த்ததும், சகடத்தை உதைத்ததுமாகிய கண்ணனின் பேராற்றல் புலப்படும் செயல்கள் தோன்றப் பேசுகின்றார்.[189]

**மூவேந்தரைத் திருமாலாகப் புகழ்ந்து போற்றல்:** கண்ணனே பாண்டியனும், சோழனும், சேரனுமாக உள்வரிக்கோலம் பூண்டு வந்து தமிழகத்தைச் செங்கோன்மை செலுத்தி மன்னுயிரை வாழ்வித்தான் என்பதுபடப் போற்றப்படுகின்றான். அவ்வாறு பூவை நிலைத்துறையில் ஆநிரை மேய்த்து, குருந்த மரம் முறித்த கண்ணனாகப் பாண்டியனும், ஆழிப்படையையுடைய கண்ணனாகச் சோழனும் திருப்பாற்கடலைக் கடைந்த நெடுமாலாகச் சேரனும் குறிக்கப்படுகின்றனர்.[190] பாண்டியனைத் திருமாலாகிய காத்தற் கடவுளாகவே காட்டுமிடத்துக் ''கேசிவதம் செய்தமை'' குடக் கூத்தாடியமை, ஆனேறு தழுவி நப்பின்னையை மணந்தமை ஆகிய கிருட்டிணாவதாரச் செய்திகள் தோன்றப் போற்றப்படுகின்றான். அச்செயல்களின் போதெல்லாம் திருமகள் அவன் மார்பில் மறுவாக இருந்த செய்தியும் கூறப்படுகின்றது.[191]

**பாரதக் கருத்துக்கள்-திருமால் கண்ணனாகக் கீதை உரைத்தது:** பாரதப் போரில் கண்ணன் அருச்சுனனுக்குக் கூறிய கதையாகிய

---

187. சிலம்பு - கொலைக்களக் காதை - 46-49
188. சிலம்பு - கடலாடு காதை - 46-49
189. சிலம்பு - வேட்டுவவரி - 22-3-4
190. சிலம்பு - ஆய்ச்சியர் குரவை - 29, 30, 31
191. முத்தொள்ளாயிரம் - பாண்டியன் புகழ் - பாடல் 4-1-4

அறவுரையைக் கேட்டுப் பேயும் உயர் நிலையடைந்து ஆன்றோர் அவையைச் சேர்ந்த செய்தி இடம் பெறுகின்றது. அக்கீதையுரை ''அமரிற் சொற்றவுரை'' என்று போற்றப்படுகின்றது.[192] பேய் ஒன்று பகவத் கீதை கேட்டு, வைகுந்தம் அடைந்த பாகவதக் கதைக் குறிப்பிற்கேற்ப இச்செய்தி அமையக் காண்கிறோம்.

**தேர்ப்பாகனாகக் கண்ணன் :** செங்குட்டுவனைத் திருமாலாகப் பாடும்போது கண்ணபெருமான் விசயனுக்குத் தேர்ப்பாகனாயிருந்து நிகழ்த்திய பாரதப் போரின் சிறப்புக் கூறப்படுகின்றது.[193]

**தூது சென்றமை:** உலகளந்த திருமாலின் திருவடிகள் பின்பொரு காலத்தே பாண்டவர்க்காகத் தூது சென்ற குறிப்பு இடம் பெறுகின்றது. தன்னிடம் அன்பு பூண்டொழுகிய பாண்டவர்க்கு எளியனாகி, அவர்பொருட்டுக் கௌரவரிடத்துத் தூதுவனாக நிலம் வேண்டி நடந்தருளியவனாகக் கண்ணன் போற்றப்படுமிடத்து அன்பர்க்கு எளியவன் என்ற அருட்பண்புடன் காட்டப்படு கின்றான்.[194] ஞாயிற்று மண்டிலத்தைத் தனது ஆழியால் மறைத்த பாரதக் கதைக்குறிப்பில் கண்ணனின் புகழ் பேசப்படுகின்றது.[195] திருமாலின் திருவடியில் தேர்வீரனாகிய விசயன் ஏற்றிய பூக்களைக் கண்ணுதற் பெருமான் கழலடியிற் கண்டான் என்ற பாரதச் செய்தி பாண்டியனுடைய புகழ் பாடுமிடத்து உவமையாகப் பெருமிதச் சுவை தோன்றக் கூறப்படுகின்றது. இங்கு செங்கண் நெடியோனாக வாமனாவதாரப் புகழ் விளங்கக் கண்ணன் குறிக்கப்படக் காண் கிறோம்.[196]

சங்க இலக்கியங்களிலும், கிருட்டிணாவதாரச் செய்திகளே பிற அவதாரக் குறிப்புகளினும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. நிறம், ஆடை, குலம், திருவமர் மார்பு, சங்கு சக்கரமுடைமை, கருடக் கொடியுடைமை போன்ற பண்புகளுடனும், கேசிவதம் புரிந்தவன், மற்போர் புரிந்தவன், பாரதக் கதையாகிய கதிரவனை வானத்தில் நிலை நிறுத்தியவன் போன்ற செயல்களுடனும் சங்க இலக்கியங்களில் குறிக்கப்படுகின்றான். கிருட்டிணாவதாரத்துச் செயல்கள், பூவை நிலைத்துறையில் மன்னர்கள் மேலும் பாடப்பட்டுள்ளன. திருமாலைப் பாடிப் பிறர் குரவையாடும் செய்திகள் இடம்

---

192. இன்னிலை - அறத்துப்பால் - 1
193. சிலம்பு - கால்கோட் காதை - 237-241
194. ஆய்ச்சியர் குரவை - பாடல் 34, 37
195. ஆய்ச்சியர் குரவை - பாடல் 26
196. முத்தொள்ளாயிரம் - பாண்டியன் புகழ் பாடல் 3-1-4

பெறுகின்றன. திருமாலின் அவதாரமே கண்ணன் என்றும் சங்க இலக்கியங்களில் காட்டப்படுகின்றது.

சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் நிறம், ஆடை, குலம், திருவமர் மார்பன், சங்கு சக்கரம் உடைமை, குழலூதியமை, குருந்தொசித்தமை, வஞ்சகமாக வந்த வண்டியை உதைத்தமை, கன்றினைக் குறுந்தடியாகக் கொண்டு விளவினை உதிர்த்தமை, கஞ்சன் வஞ்சம் கடந்தமை, கோவர்த்தனகிரியைக் குடையாக எடுத்தமை போன்ற பண்புகள் அமையப் பேசப்படுகின்றான். பூவை நிலைத்துறையில் மன்னர்கள் மேலும் இவ்வவதாரக் கருத்துக்கள் பாடப்படுகின்றன. கண்ணன் தன் முன்னவனுடனும், நப்பின்னையுடனும் ஆடிய குரவைக் கூத்து பற்றிய செய்தி இடம் பெறுகின்றது. இவ்விடங்களிலெல்லாம், கண்ணன் திருமாலின் அவதாரம் என்றே வலியுறுத்தப்படுகின்றான். சங்க இலக்கியத்தில் காணப்படும் ''மதியினைக் கவர்ந்த பாம்பினை அகற்றியவன்'' என்ற செய்தி இங்குக் காணப்படவில்லை. பாரதக் கதைச் செய்திகளில் கண்ணன் கீதை உரைத்தது, தேர்ப்பாகனாயிருந்தது, பாண்டவர் பொருட்டுத் தூது சென்றது போன்ற செய்திகளும், உலகங்களைத் தன் வயிற்றிலே கொண்டவன், கொற்றவையின் செயல்கள் கண்ணனின் செயல்களாகவே பாடப்படுதல், கண்ணன் ஆடிய பத்துவகை ஆடல் பற்றிய செய்திகள் முதலியவைகளும் சங்க இலக்கியங்களில் கூறப் படாத செய்திகள் எனலாம். இவை கூறப்பட்டதற்குக் கண்ணனின் செயல்கள் மக்கள் மனத்தைக் கவர்ந்திருந்தமை ஒரு காரணம் எனலாம். மேலும் கிருட்டிணாவதாரத்தில் பிற அவதாரக் கருத்துக் களும் பாடப்படுகின்றன. நப்பின்னையோடு இணைந்த செய்தி களில், தமிழர்களின் சிறந்த அகவாழ்வினை விளக்கும் காதல் வாழ் விற்கு எடுத்துக்காட்டாகவும் திகழ்ந்த குறிப்புக்களைத் தெளிவாக அறிகின்றோம்.

இங்ஙனம் அமையும் சங்கம் மருவிய கால இலக்கியக் குறிப்புக் களால் சங்க இலக்கியங்களைப் போன்று கிருட்டிணாவதாரச் செய்திகளே மிகுதியாக இங்கு இடம் பெறுவதையும், பாரதக் கதைச் செய்திகள் மக்களிடையே பரவியிருந்ததையும், கண்ணன் ஆயர்குலத் தெய்வமாகவும், பரம்பொருளாகிய திருமாலாகவும் போற்றப்பட்டதையும் காண்கின்றோம்.

**வழிபாட்டின் வளர்ச்சி :** பழமையும் பெருமையும் வாய்ந்த இப் பரதக் கண்டத்தில் ஆதியாக நிலைபெற்றுள்ள வழிபாடுகளிலே, திருமால் வழிபாடும் ஒன்றென்பதற்கு வேத வேதாந்தங்களும், இதிகாச புராணங்களுமே தக்க சான்றாக உள்ளன. தென்னாட்டின்

சமய வரலாற்றைத் தொடர்ந்து ஆராய்ந்தால் திருமாலை முதற் பெருந்தெய்வமாகக் கொண்டு வழிபட்டுவரும் கொள்கை அந்நாட்டு மக்கள் தோன்றிய காலத்திலேயே உடன் தோன்றியது என்ற முடிவுக்கு வரத் தடையில்லை எனலாம். முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நான்காகப் பகுத்துக்கொண்டு இஞ்ஞாலத்துக்கு, தமிழர் 'நானிலம்' என்ற பெயரை இட்டு வழங்கியபோதே திருமால் வணக்கமும் இங்கு உண்டாகிவிட்டது, தொல்காப்பியனார் அந் நான்கு நிலங்களையும், அவற்றிற்குரிய தெய்வங்களுடன் பாகுபடுத்து வதிலிருந்தே அத்தெய்வ வழிபாடுகள் தொல்காப்பியர்க்கு மிகவும் முற்பட்ட காலத்திலேயே தமிழ் மக்களால் கைக்கொள்ளப்பட்டவை என்பதும் நன்கு விளங்கும். இத்தெய்வங்களுள்ளே இந்திரன், வருணன் இருவருக்கும் அவ்வவர் நிலவுரிமை பற்றியமைந்த தனிக் கோயில்களோ, வழிபட்டு வந்த கொள்கைகளோ இருந்தன வென்று தெரியவில்லை. ஆனால் திருமால், முருகக்கடவுள், கொற்றவை ஆகிய மூவருக்கும் அமைந்த கோயில்களும், கொள்கை களும் பழங்கால முதல் இன்றுவரை உள்ளன. எனவே வைணவம், கௌமாரம், சாக்தம் போன்ற கொள்கைகள் தமிழகத்தில் விளங்கிய ஆதிச்சமயங்கள் என்று கொள்ளத் தடையில்லை எனலாம்.

இத்தெய்வங்களின் கோயில்கள் தொல்காப்பியர் காலத்துக்கு முன்பே பெருகி விளங்கியதையும், இவற்றின் அறப்புறங்களை அரசர் நேரிற்சென்று பாதுகாத்து வந்ததையும்[197] தொல்காப்பியத்தால் அறியலாம். இங்ஙனம், கோயில் கொண்ட கடவுளரில் திருமால் முல்லை நிலத் தெய்வமாதலால் அப்பெருமான் மேவிய கோயில்கள் காடும், காட்டுச் சார்புமான இடங்களில்தான் முதலில் அமைந்திருந் தனவாக வேண்டும். இப்பொழுதுள்ள பழைய திருமால் திருப்பதிகள் பெரும்பாலும் அவ்வாறு அமைந்திருந்தவையே என்று கருதலாம். முல்லைக்குரிய தமிழ் மக்கள் ஆயர் என்று தொல்காப்பியர் கூறுவர்.[198] முல்லை நிலத்தார் வணங்கி வந்த இக்கண்ணபிரான் வழிபாடு, தொல்காப்பியர் காலத்தே ஏனைய நிலக்கடவுளர் வழி பாடுகளிலும் சிறப்புடையதாயிருந்ததென்றே சொல்லலாம். அகத் திணையொழுக்கம் தொடங்குவதற்கிடமான குறிஞ்சியை ஏனைய புலவர் போலத் தாமும் முதலில் வைத்துக் கூறாது திருமால் வாழும் முல்லையை முதலாகக் கொண்டு தொல்காப்பியர் எண்ணுதல் ஒரு சிறப்புப் பற்றியதென்றே கருதத்தகும். இவ்வாறே தொல்காப்பியர் மன்னர்க்குத் திருமாலை உவமை கூறும் பூவைநிலை என்னும் புறத் துறையைக் கூறுமிடத்திலும் திருமாலின் இறைமைக் குணம் புலப்

197. தொல். அகத்திணையியல் - 30
198. தொல். அகத்திணையியல் - இளம்பூரணர் - 23

படுமாறு சிறப்பித்துக் கூறுவதையும் காணலாம்.[199] இப்பெருந் தலைமை பற்றியே ''மால்'' என்ற சொல், பிறர்க்கு உரியதாக நாராயண நாமம் போலவே தனித்த தமிழ்த் திருப்பெயராக மாயோனுக்குத் தொன்று தொட்டு வழங்கி வருவதையும் காணலாம்.

**கோயில்கள் :** இவ்வாறு தமிழகம் தோன்றிய காலத்தில் உடன் தோன்றித் தலைமை பெற்று நின்ற திருமால் கோயில்களும் கொள்கைகளும் அக்கடவுளரது பேரடியார்களால் பெருகியிருக்க வேண்டும் என்று கூறலாம். திருமால் தலங்களில் திருவரங்கம், திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவெஃகா போன்றவை மிகப் பழமை வாய்ந்தன. திருமாலை முற்பட வைத்துக் கூறும் பரிபாடலிலும், சிலப்பதிகாரம் முதலியவற்றிலும் இத்தலங்களில் கோயில் கொண்டருளும் திருவுருவ மூர்த்திகளின் திருக்கோலங்கள் மிக அழகாகச் சிறப்பிக்கப்பட்டுள்ளன.

''நீலமேகம் நெடும் பொற்குன்றத்து...திருவமர் மார்பன் கிடந்த வண்ணமும்'' என்று திருவரங்கத்துத் திருமாலையும் ''வீங்கு நீர் அருவி வேங்கடமென்னும் ... செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்'' என்று திருவேங்கடத்துத் திருமாலையும் இளங்கோவடிகளும்[200], ''புவ்வத்தாமரை புரையுங் கண்ணன் ... பெரும் பெயரிருவரைப் பரவுதுந்தொழுதே''

என இளம்பெருவழுதியாரும்[201] ''நீர் குலைக்காந்தளஞ்சிலம்பிற் களிறு படிந்தாங்குப் பாம்பணைப் பள்ளியமர்ந்தோனாங்கண்'' எனக் கடியலூர் உருத்திரங்கண்ணனாரும்[202] கூறுவதைக் காணலாம். தொடக்க காலத்தில் முல்லை நிலத்துக்குரியவராயிருந்த திருமால் கோயில்கள் பிற்காலத்தே குறிஞ்சி, மருதம் முதலிய நிலங்களினும் பரவின. இவற்றினும், கண்ணபிரான் வழிபாடே மிகுதியாக வழக்குப் பெற்றிருந்ததெனலாம்.

**வழிபாடு** பற்றிய அளவில் சங்க காலத்தைவிட சிலம்பு, மேகலை காலத்தில் ஒரு வளர்ச்சி நிலையைக் கண்டு கூறமுடிகின்றது. சங்க இலக்கியங்களில் திருக்கோவில்கள் இருந்தனவென்று கூறுவதைத் தவிர, இத்திருக்கோவில்கள் பற்றிய விளக்கங்களைக் கண்டு கூற முடியவில்லை. கோவில்களிலிருந்த சிற்பங்களைப் பற்றிய அளவிலும், நமக்குப் போதுமான விளக்கங்கள் கிடைக்க வில்லை. ஆயினும் சிவனுக்கும், திருமாலுக்கும் ஏற்றிக் கூறும் இயல்புகள் அத்தெய்வங்களின் வரலாற்றை ஓரளவு தெரிந்து கொள்ள உதவுகின்றன.

---

199. தொல். அகத்திணையியல் - 60
200. சிலம்பு - 11, 35 - 37
201. பரி - 15
202. பெரும்பாண் - 371 - 374

சிலப்பதிகாரம், மணிமேகலை இவற்றில் சிவன், திருமால் இயல்புகள் நன்கு விளக்கப்பட்டுள்ளன. சிலம்பில் திருக்கோவில்கள் பலவற்றைக் காணலாம். திருமால் குன்றம், வேங்கடம், ஆடக மாடம், மணிவண்ணன் கோட்டம் முதலியன கூறப்படுகின்றன. இக் காப்பியங்களில், வேத வேள்வி, திருக்கோயில் வழிபாடுகள் குறிக்கப் பட்டுள்ளன. திருக்கோயில்கள், வழிபட்ட திருக்கோலங்கள், வழி பட்ட முறைகள் இவற்றிலும் சங்க காலத்தைவிட வளர்ச்சிபெற்ற ஒரு நிலையை இக்காப்பியங்களில் காண முடிகின்றது.

சமணரும் பௌத்தரும் இறைவனை வழிபடாமல் போனாலும் தங்கள் சமய உண்மைகளை விளக்குவதற்கு அந்நாளிலிருந்த சமய நிலைகளைப் பலவிடங்களிலும் கூறியே செல்கின்றனர். சிவன் திருமால் கொற்றவை முருகன் கோயில்கள், பத்தினிக் கோட்டங்கள், பலபல தீர்த்தங்கள், ஐந்தெழுத்து, எட்டெழுத்து பாய்கலைப் பாவை, மந்திரங்கள், இவற்றின் பெருக்கத்தினை உணர முடி கின்றது. இவற்றோடு சமண பௌத்த நிலையங்களையும், இயக்கி கோயிலையும் காணலாம். சமயச் சிந்தனைகள், சங்க இலக்கியங் களில் இருந்ததைவிட வளர்ந்திருந்த நிலை இந்நூல்களில் தெளிவாகக் காணப்படுகின்றன எனலாம். மேலும் பக்தி நெறியும் வளர்ந்து வந்துள்ளமையை ஆய்ச்சியர் குரவையில் வரும் பாடல் களும் பிறவும் தெளிவாகவே உணர்த்துகின்றன. புராண இதிகாசச் செய்திகளும் சங்க இலக்கியங்களினும் பலவாக இக்காப்பியங்களில் அமையக் காணலாம்.

சிந்து வெளி நாகரிக காலம், வேத காலம், புராண இதிகாச காலம் ஆகிய காலங்களில் பல மாற்றங்களைப் பெற்று வந்த இந்து சமயம் அதே நிலைகளில் சங்க இலக்கியங்களிலும் காணப்படுகிறது எனக் கூற இயலவில்லை. இங்குக் கூறப்படுவன பெரும்பாலும் ஒத்து இயங்கினாலும், இக்கால் வழியே வந்ததாக விளக்க முடியாத இரண்டொரு கூறுகள் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. வைணவ நெறியில் பிற இலக்கியங்களில் கண்டு விளக்க முடியாத செய்திகள் சிலவற்றை நம் தமிழ் இலக்கியங்களில் கண்டு கூறியுள்ளார் அறிஞர் மு. இராகவையங்கார்.[203] ''நப்பின்னை திரு மணம்'', ''கண்ணன் குறுந்தொசித்தது'', ''குடக்கூத்து'' முதலிய ஆடல்கள் முதலிய தமிழ் நூல் செய்திகளுக்கு கண்ணனைப் பற்றிக் கூறும் பாரதம், பாகவதம் முதலிய இதிகாச புராணங்களில் ஆதாரம் காண்டல் அரிதெனலாம். வேதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் என்ற கால்வழியே வளர்ந்து வந்த திருமால் சிந்தனைகளிலிருந்து வேறுபட்ட சில செய்திகளைத் தமிழ் நூல்கள் கூறுவதால் இவற்றைத்

203. ஆராய்ச்சித் தொகுதி - மு. இராகவையங்கார்

தமிழர்களிடையில் மட்டுமே வழங்கியனவாகக் கொள்ளலாம். எனவே திருமால் வழிபாடு இந்தியாவின் பல்வேறு இடங்களில் அவ் விடங்களுக்கேற்ற தனித்தன்மைகளோடு வளர்ந்து வந்த ஒன்று என்பதும், புராண இதிகாசங்கள் கால்வழியே வளர்ந்த உண்மைகளே நாடு முழுவதும் பரவியிருந்தன என்று கூற முடியாது என்பதும் விளக்கமுறுகின்றன.

கண்ணனையும். பலராமனையும் பண்டைத் தமிழர்கள் வழி பட்டு வந்தனர். கண்ணனின் தேவியான நப்பின்னையை வழிபட்ட துண்டு. இவ்வழிபாட்டுக்குப் பரிபாடல், சிலம்பு முதலிய நூல்கள் சான்று தருகின்றன. நப்பின்னை குறித்து ஆழ்வார்களும், ஆண்டாளும் பாடியுள்ளனர்.

சிலப்பதிகாரம் பல கோயில்களை அறிமுகப்படுத்தியதுபோல் மணிமேகலை அறிமுகப்படுத்தாவிட்டாலும் சிலம்பில் காணப்படும் வளர்ச்சி அந்நூலிலும் காணப்படாமலில்லை. திருமாலின் பல அவதாரங்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை இராமன், கண்ணன், பரசுராமன், வாமணன் முதலியன இராமாயண பாரதக் கதைகள் சிலவும் இங்குக் காணப்படுகின்றன.

கொற்றவையையும் மதுராபதியையும் கூறும் பொழுதுகூட, சிவன், திருமால் இயல்புகளை இணைத்துக் கூறுவதை ''மாதொரு பாகன்'' வடிவில் பெண்ணுக்கு முதன்மை கொடுத்துக் கூறப்பட்ட தாகக் கொள்ளலாம். சிலம்பில் செங்குட்டுவன் சிவனது திருவடி மலரை முடிக்கணிந்திருந்ததால், பின்னர் கொணர்ந்த திருமால் சேடத்தைத் தோளில் அணிந்தான் என்று கூறும்போது சமயப் பொதுமையில் அக்காலச் சூழ்நிலை உணர்த்தப்படுகின்றது.

**கோயில் வழிபாடு :** தென்னிந்தியத் திருக்கோயில்கள் இந்து சமயத்திற்குப் புத்துயிரளித்துள்ளன என்பதையும், திருக்கோயிலை மையமாகக் கொண்டே தென்னிந்திய நாகரிகமும், பண்பாடும் உயிரும், ஒளியும், உரமும் பெற்றுப் பரவி வந்திருக்கின்றன என்ப தையும் அறிய முடிகின்றது. இத்தகைய கோயில்களில் திருவேங்கடம், திருமாலிருஞ்சோலை, திருவரங்கம் ஆகிய மூன்றும் பெரும் பக்தியின் வளர்ப்புப் பண்ணைகளாக இருந்தன என்பதும் அறியக் கிடக்கின்றது.

மேற்குறித்த கருந்துக்களையெல்லாம் நோக்கும்போது சிலம்பு, மேகலை போன்ற காப்பியங்களிலும், நீதி இலக்கியங்களிலும், அவற்றிற்கு முற்படத் தோன்றிய சங்க இலக்கியங்களிலும் கூறப்படும் திருமால் இயல்புகள் பெரிதும் ஒத்திருக்கின்றன. எனினும், சங்க இலக்கியங்களைவிட காப்பியங்களில் பல செய்திகள் கூறப்படு கின்றன. இவ்விலக்கியங்களால் உணர்த்தப்படும் திருமால் இயல்புகள் ஒருகால்வழியே வந்தனவென்று கொள்ளலாம்.

# சைவ இலக்கியங்களில் திருமால் வழிபாடு

பக்தி இலக்கியம் உருப்பெறுவதற்கு அடிப்படையாக அமைந்த சூழலைக் காணும்போது, இறையுணர்வுச் சிந்தனைகளில் அறவுணர்வும், தத்துவ ஆராய்ச்சியும் முக்கிய இடம் பெற்றிருப்பினும் வழிபாட்டு முறைகளே பக்தி இலக்கியம் உருப்பெற்று வளர்ந்ததற்குக் காரணம் எனல் வேண்டும். பக்தி நெறி தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஒரு முக்கியமான திருப்பத்தை ஏற்படுத்தி உள்ளது. சமண சமயத்தின் ஊழின் வலிமை என்ற இரும்புப் பிடியிலிருந்தும், பௌத்த சமயத்தின் அளவு கடந்த தியாக வாழ்வின் வற்புறுத்தலிலிருந்தும் மக்களுக்கு ஒரு விடுதலையும், ''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்'' என்ற நம்பிக்கையையும் அளித்த பக்தி நெறி தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கும் மிகப்பெரிய தொண்டு செய்துள்ளதெனலாம்.

எளிய, நேரான தனிச் செய்யுட்களாகவே வளர்ந்து வந்த தமிழ் இலக்கியம் உணர்ச்சி வெள்ளம் கரை புரண்டோடும் பண்ணோடியந்த இலக்கியங்களையும், கற்பனை நயங்களும், கவிதைச் சுவையும் மிகுந்த காப்பியங்களையும் பெற்று வளரப் பக்தி நெறியே உதவிற்றெனலாம்.

சமண முனிவர் கையாண்ட கடுநோன்புகளும், மந்திர தந்திரங்களின் வன்மையும் தமிழர்க்கு அன்னோரிடமிருந்த மதிப்பை மிகுதிப்படுத்தின. இவர்களை அரசரும், பிறரும் கௌரவித்து வந்தது மட்டுமின்றி அவருட் சிலர் அம்மதங்களைத் தழுவி இவர்கள் நோக்கம் முடிவு பெறுதற்கும் பெருந்துணையுமாயினர். இவ்வாறு இவர்க்கு ஆதரவாய் நின்ற தென்னாட்டரசருள்ளே பல்லவர்களைச் சிறந்தவராகச் சொல்லலாம்.

சமண சமயத்தின் செல்வாக்கு ஏனையவற்றினும் 6, 7 ஆம் நூற்றாண்டுகளில் செழித்திருந்ததற்கு இவ்வரசர்களே காரணமாயினர். இங்ஙனம் பேரரசர்களது ஆதரவும் அச்சமயம் பரப்பியவர்களின் பேருழைப்பும் சமண சமயத்தை உச்ச நிலைக்குக் கொண்டு வந்தன. வேள்வி முதலிய சடங்குகளில் விசேடப் பற்றுக் கொண்டொழுகிய ''வைதீக சமயங்கள்'' இதன் முன்னே மேலோங்க இடமின்றித் தளர்வடையத் தொடங்கின என்று கூறலாம்.

களப்பிரர் காலம் தமிழகத்தில் இருண்ட காலமாகவே கருதப்படுகின்றது. அயலவர் ஆட்சியும், வேற்றுச் சமயங்களாகிய

சமணமும், பௌத்தமும் அவற்றினது கண்டிப்பான கோட்பாடுகளும், துறவற வாழ்க்கைக்கு முதலிடம் அளிக்கும் போக்கும் தமிழ் மக்கள் உள்ளத்தில் ஒரு வெறுப்புணர்ச்சியைத் தோற்றுவித்தன. இவ்வாறு புறச் சமய எழுச்சியால் நாட்டவர்க்கு வைதீக சமயங்களில் பற்றுக் குறையவும் அவற்றின் பழைய அறங்கள் தளர்வடையவும் நேர்ந்ததே அச்சமயங்களில் பெரியோர்களுடைய அவதாரங்கள் நிகழ்வதற்குக் காரணமாயிற்று. இச்சூழ்நிலையில் சைவ, வைணவ அடியார்களில் சிறந்தோராகிய நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றிப் பழைய அறங்களை மலை மேலிட்ட விளக்காக்கிப் பக்தி இயக்கத்தை வளர்த்தனர்.

நாயன்மார்களும், ஆழ்வார்களும் ஊர் ஊராகச் சென்று ஆங்காங்குள்ள இறைவனை இனிய தமிழ்ப்பாக்களால் பாடி மக்கள் உள்ளங்களைக் கவர்ந்தனர். சைவமும், வைணமும் நாட்டில் செல்வாக்குப் பெற்றன. வைணவ அடியார்களும், சைவப் பெரியார்களும் தொண்டர் கூட்டத்தில் சாதி வேற்றுமை பாராது சமத்துவம் வழங்கினர். அதனால் வைதீக நெறிகளாகிய சைவமும், வைணமும் மக்களால் பெரிதும் விரும்பி ஏற்றுக்கொள்ளப்பட்டன. மேலும் மாணிக்கவாசகர் மற்றும் ஆழ்வார்கள் பலரும் தமிழில் இறைவனைப் பாடிப் பக்தி நெறியைப் பரப்பினர். பக்திப் பாடல்களைப் படிப்பதிலும், பரந்தாமனின் சுவை நிறைந்த கதைகளையும், சிவபெருமானின் திருவிளையாடல்களையும் கேட்பதிலும் மக்கள் பேரார்வமுடையவராயினர்.

சங்க காலத்தையும், நீதிநூல் காலத்தையும் அடுத்துத் தெளிவாகக் காணப்படுவது பக்தி இலக்கியக் காலம் ஆகும். வழிபாடு பற்றிய அளவில் சங்க காலத்தைவிடச் சிலம்பு, மேகலை காலத்தில் ஒரு வளர்ச்சியினைக் கண்டு கூறமுடியும். இவ்வளர்ச்சி பக்திப் பாடல்களின் அடிப்படைச் சூழ்நிலையை நன்கு காட்டும். வழிபாட்டு நிலையில் வளர்ச்சியடைந்து வந்த வைதீக நெறி சைவம், வைணவம் என்னும் இரு துறைகளாக வளர்ந்து சிறந்தது.

தமிழில் பக்தி இலக்கியங்களிலும், அவற்றிற்கு முற்படத் தோன்றியனவாகக் கருதப்படும் சிலம்பு, மேகலை போன்ற காப்பியங்களிலும் அவற்றிற்கும் முற்படத் தோன்றிய சங்க இலக்கியங்களிலும் கூறப்படும் சிவன், திருமால் இயல்புகள் பெரிதும் ஒத்திருக்கின்றன. சங்க இலக்கியங்களை விடவும் காப்பியங்களில் பல செய்திகள் உள்ளன. அவற்றினும் மிகப்பலவாகப் பக்திப் பாடல்களில் உள்ளன. அவ்வாறு பலவாக வளர்ந்து வந்தாலும் இவ்விலக்கியங்களால் உணர்த்தப்படும் சிவன், திருமால் இயல்புகள் இந்தியா

முழுவதும் பரவியிருந்த சிந்தனைகளே என்பதும் விளங்கும். சுருங்கக் கூறினால் இந்திய நாட்டின் இறை வழிபாட்டு வளர்ச்சியின் எதிரொலியாகவே சிவன், திருமால் இயல்புகள் தமிழ் இலக்கியத்தில் உள்ளன என்பதில் ஐயமில்லையெனலாம்.

சிவன், திருமால் இயல்புகள் பலவும் புராண இதிகாச கால் வழியே வருவன என்றே கூறலாம். இவ்வியல்புகள் பக்தி இலக்கியங் களில் நாம் காணும் சிவன், திருமால் இயல்புகளுக்கு வேறானவை யல்ல எனத் தெளியலாம். சிவன், திருமால் இயல்புகளை அறிய இத்தெய்வங்களின் திருப்பெயர்கள், திருக்கோலங்கள், அருட் செயல்கள் என்ற நிலைகளில் கண்டு விளக்கலாம்.

இவ்விதிகாசங்களில் சிலவிடங்களில் சிவன் தாழ்த்தப்படலாம். இன்னும் சிலவிடங்களில் திருமால் தாழ்த்தப்படலாம். இந்நிகழ்ச் சிகள் வரலாற்றின் எதிரொலிகள் எனலாம். சிவ வழிபாடும், திருமால் வழிபாடும் வளர்ந்து வந்த வரலாற்றையே இது காட்டும். சிவனுக்கு மேலான தெய்வமில்லை, திருமாலுக்கு மேலான தெய்வ மில்லை எனக் கூறும் பகுதிகளுமுண்டு. மேலும் வரலாற்றில் மிகச் சிறப்பான ஒரு பகுதி இரு தெய்வங்களையும் ஒன்றாக்கிக் கூறுவது. பக்தி இலக்கியங்களிலும் இக்கருத்துக்களின் எதிரொலிகளைக் காணவே செய்கிறோம். தாழ்த்துதல், உயர்த்துதல், ஒன்றாகக் கொள்ளுதல் என்னும் இடங்களில் கூறப்படும் சிவன், திருமால் இயல்புகள் பக்தி இலக்கியங்களில் காணப்படுவனவற்றிற்கு வேறானவையல்ல என்றே கருதலாம். பக்தி இலக்கியங்கள் பாடுவன இவ்விதிகாச புராணக் கால்வழியே வந்தன எனலாம்.

சிந்துவெளி நாகரிக காலம், வேத காலம், புராண இதிகாச காலம் ஆகிய இம்மூன்று கால நிலைகளிலும் வளர்ச்சியடைந்து வந்த சிவன், திருமால் வழிபாடுகளை ஒட்டியனவாகவே சங்க இலக்கியங்களில் காணப்படும் சிவன், திருமால் வழிபாடுகள் உள்ளன. இம்மூன்று நிலைகளிலும், பாரத காலத்திலும் வளர்ச்சி பெற்று வந்துள்ள மூர்த்திகள், அருட்செயல்கள். திருப்பெயர்கள் இவற்றைச் சங்க இலக்கியங்களிலும் அவற்றிற்குப் பின் தோன்றிய இலக்கியங்களிலும் காணப்படும் மூர்த்திகள் திருப்பெயர்கள், அருட்செயல்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இவ்விரண்டும் ஒரே சிந்தனைத் தொடராக வந்தவை எனலாம்.

இந்துக்கள் வழிபட்டு வரும் தெய்வங்கள் சிவன், திருமால். இவர்கள் புராண இதிகாசங்களுக்கு முற்படத் தோன்றிய வேதகாலங் களிலும் வழிபடப்பட்டுள்ளனர். வேதகாலங்களில் வேதத்தோடு

ஒன்றி நின்றே சிவன், திருமாலின் பரத்துவத்தை நிலை நிறுத்தியதோடு வேள்விக்கு வேறான பூசனைகளையும் உறுதிசெய்து கொண்டனர். இந்திரன், வருணன் போன்ற தேவர்கள் படிப்படியே முதன்மை குன்றிச் சிவன், திருமால் முதன்மை பெறுகின்றார்கள். வேள்விகளே முதன்மையானவை என்ற நிலை மாறி வழிபாடுகளைப் பற்றிய கருத்து மேலோங்குகிறது.

வேத காலத்தில் பல்வேறு வேள்விகளைப் பெற்றுவந்த தேவர்கள், புராண இதிகாச காலங்களில் பெரிதும் முதன்மை குன்றி விடுகின்றனர். சிவன், திருமால் இவர்களின் பரத்துவமே பலவகையாலும், உறுதி செய்யப்படுகின்றது. வேத காலத்திலேயே சிவன், திருமாலின் பரத்துவம் படிப்படியாக நிலை நிறுத்தப்படுவதை அறிஞர்கள் எடுத்துக்காட்டுவர். புராண, இதிகாச காலத்தே அது மேலும் வலுப்பெற்றது எனல் வேண்டும்.

பாரதத்தில் சிவ வழிபாட்டினரும், திருமால் வழிபாட்டினரும், தங்கள் தங்கள் இட்ட தெய்வத்தின் முழு முதன்மையினை மேலும் உறுதிப்படுத்த முயல்கின்றனர். இவ்வகையில் சைவ வளர்ச்சியினையும், வைணவ வளர்ச்சியினையும் விளக்கி நிற்பது பாரதம் எனலாம். கண்ணன் வரலாற்றைக் கூறுவதென்ற வகையில் இந்நூல் வைணவ நூலாகத் தோன்றினும் சிவபரத்துவத்தை விளக்கி நிற்பதால் சைவர்களும் இந்நூலைப் பாராட்டுவர். சிவ பரத்துவத்தை உணர்த்தும் பகுதியும் பாரதத்தில் இருப்பதால் பாரதம் வழியாகக் கண்ணனைப் பாராட்டும் வைணவக் கதைகளே யன்றிச் சிவனைப் பாராட்டும் சைவக் கதைகளும் மக்கள் உள்ளத்தில் பதிந்து சிவன், திருமால் பக்திக்கு அடிகோலின எனலாம்.[1]

பக்தி இலக்கியம் பிற இலக்கியங்களிலிருந்து சிறிது வேறுபட்ட அடிப்படையினை உடையது. இது மக்களைப் பாடாது இறைவனைப் பாடுவது, இறையனுபவத்தைப் பாடுவது. அடியார்கள் தெய்வ அனுபவத்தை இறை வட்டத்தில் நின்று பாடினார்கள் எனலாம். திருமாலடியார்கள், சிவனடியார்கள் எனக் கூறும்போது பெரும்பாலும் திருக்கோவில் வழிபாட்டில் திளைத்து நின்றவர்களையே நாம் கருதுகின்றோம். உடலும், உயிரும் அடிமையாக இறையுணர்வு முனைந்து நிற்கின்றது. பொதுவாக இக்கவிஞர்களை மெய்யுணர்வுக் கவிஞர்கள் என்றே கூறலாம்.

பக்தி என்பதற்குக் கலந்து நிற்றல் என்ற பொருளில் இறைவனோடு கலந்து நிற்றலையே தமிழ்ப் பாடல்கள் வெளிப்படுத்து

1. பக்தி இலக்கியம் - டாக்டர் ப. அருணாசலம் - பக்கம் - 42

கின்றன எனல் வேண்டும். இறைவனைத் தொழுதுய்வதற்கு ஞானம் வேண்டும். ஞானத்தைக் கொடுத்தே பக்தி நெறியை இறைவன் அறிவிக்கிறான் எனலாம்.

இறைவனால் கவரப்பட்டு அவனை அடைந்தவர்க்கு அவன் அருள் செய்கிறான். அருளும்போது ஞானம் காட்டியே நன்னெறி காட்டுகின்றான் என்பர்.[2] ஞானத்தைக் கொடுத்துப் பக்தி நெறியில் போகச் செய்கிறான் இறைவன் என்றலே பொருந்தும். ஆழ்வார்களும் ஞானத்தால் பக்தி உண்டாவதை விளக்குவர்.

சிவநெறியினையும், திருமால் நெறியினையும் நாம் பக்தி நெறி என்றே கூறுகின்றோம். சைவ சமயக் குரவர்களும் வைணவ அடியார்களும் பாடியன பக்திப் பாடல்கள் என்போம். பக்திப் பாடல்கள் பக்தி உணர்வின் வெளிப்பாடாகப் பிறந்தவை. பக்தி என்பது ஞானத்தின் விளைவாக இறைவனிடம் உணர்ச்சி ஒன்றி நிற்றல் ஆகும். வைணவர்கள் கூறும் பக்தியும், சைவர்கள் கூறும் பக்தியும் வேறு வேறன்று. இவ்விரண்டு நெறிகளும் சில அடிப்படையான தெய்வத் தொண்டுகளில் தொடங்கி இறைவனிடத்தில் முற்றாகத் தன்னை ஒப்படைப்பதில் முடிகின்றன எனலாம்.

சங்க இலக்கியங்களில், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் வழிபாடு எவ்வாறு இருந்தது என்று கண்டது போலவே பக்தி இலக்கியங்களுள் - சைவ இலக்கியங்களில் திருமால் வழிபாடு எவ்வாறு அமைந்துள்ளது என்பதைக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும். பக்தி இலக்கியங்கள் சைவம், வைணவம் என்ற இருபெரும் பிரிவில் விளங்குவதால் சைவ வழிபாட்டினர் நோக்கில் திருமால் வழிபாடு பற்றிய செய்திகள் எங்ஙனம் அமைந்துள்ளன என்பதைக் காணும் வகையில் இக்கட்டுரை அமைகின்றது.

காரைக்கால் அம்மையார் பாடல்கள், திருமூலரின் திருமந்திரம், மூவர் தேவாரம், திருவாசகம், திருக்கோவையர் ஆகிய நூல்கள் முதன்மை ஆதாரங்களை வழங்கும் நூல்களாகக் கொள்ளப் படுகின்றன. திருமந்திரம், காரைக்கால் அம்மையார் பாடல்கள் சங்கம் மருவிய காலத்தை ஒட்டிய காலத்துத் தோன்றியவைகளாக இருப்பினும் அவை சைவ இலக்கியங்களாதலின் அவற்றில் இடம் பெறும் திருமால் பற்றிய செய்திகள் இக்கட்டுரையில் இடம் பெறுகின்றன.

---

2. பக்தி இலக்கியம் - டாக்டர் ப. அருணாசலம் - பக்கம் - 137

திருமாலைக் குறிக்கும் பல்வேறு பெயர்களும், அவை இடம் பெறும் சூழல்களும், திருமாலின் தேவியாகிய திருமகள் பற்றிய செய்திகளும், நப்பின்னை பற்றிய செய்திகளும், திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறும் நிலைகளும் திருமால் பற்றிய பல புராணச் செய்திகளும், திருமாலின் அவதாரங்கள் பற்றிய செய்திகளும் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

**திருமால் - திருமகள்** : சங்க இலக்கியங்கள், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப்பட்டது போன்றே சைவ இலக்கியங்களிலும் ''திரு'' என்ற சொல்லாட்சியும், திருமகள் பற்றிய குறிப்புகளும் பலவிடங்களில் காணப்படுகின்றன. தொடக்க காலத்தைப் போலவும் அழகு, செல்வச் செழிப்பு, இறையருள் போன்ற பொருள் களில் மட்டுமின்றி வீட்டின்பமாகவும், ''திரு'' என்ற சொல் இவ் விலக்கியங்களில் குறிக்கப்படுகின்றது. ''திருவே'' என்று பிச்சை இடுவோரை அழைக்கும் வழக்கையும் காண்கிறோம். இவ்வுலகச் செல்வங்களுக்குத் தலைவியான திருமகள் அச்செல்வத்தால் மறு உலகையும் அடைவிக்க முடியும் என்ற கருத்தோடும், அற உணர் வோரும் இக்கருத்துக்கள் வழங்கப் பெற்றிருக்க வேண்டும்.

திருமாலின் மார்பில் மறுவாகிப் பின் உருவாகித் தனித் தெய்வமான குறிப்புகளும், நால்வகைத் தேவியருள் ஒருத்தியாகவும் திருமகள் குறிக்கப்படுகின்றாள். இவ்விரு வேறு கால இலக்கியங் களில் காணப்படும் திருமகள் பற்றிய செய்திகள் பெரும்பான்மையும் ஒத்தே காணப்படுகின்றன எனினும் சைவ இலக்கியங்கள் சிவனுக்குப் பெருமை சேர்ப்பன ஆதலின் சிவனது புகழ் பாடுமிடங்களில் திருமகள் பற்றிய குறிப்புகள் அமைகின்றன. திருமகள் சிவனால் அருளப் பட்டவள், ''சிவனை வழிபடும் திருமகள்'' போன்ற செய்திகள் இச்சைவ இலக்கியங்களில் காணப்படும் புதிய செய்திகள் எனலாம்.

வைணவம் என்னும் போதே திருமகளோடு கூடிய திருமாலை நினைப்பது நன்கு விளங்குகிறது. திருமகள் செல்வத்திற்குத் தலைவியாக விளங்குபவள். அவள் துறக்கவுலகைப் பெற உதவுபவளுமாக இருக்கின்றாள். எனினும்,

''தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும்
சிதகுரைக்குமேல்
என்னடியார் அது செய்யார், செய்தாரேல் நன்று
செய்தார் என்பர் போலும்''[3]

என்னும் பெரியாழ்வார் திருமொழி திருமகளினும் மேம்பட்ட அருள் திறத்தைத் திருமாலிடம் கண்டு கூறுவதைப் பார்க்கிறோம்.

3. நா. தி. பிர. பெரியாழ்வார் - 412

வைணவர்கள் திருமாலுக்கும் திருமகளுக்கும் உள்ள உறவை இரத்தினம் ஒளியை விட்டிராது அதுபோலத் திருமாலும் திருமகளை விட்டிரான் என விளக்குவர்.

இச்சைவ இலக்கியங்களில் பல இடங்களில் திருமகளின் கணவனாகத் திருமால் காட்டப்படுகின்றான். மாலும், அயனும் சிவனது அடிமுடி காணாதவர் என்னுமிடத்து ''மலர்மகள் மகிழ் கணவன்''[4], ''அணிமலர் மகிழ் தலைமகன்''[5], ''பூமகள் காதலன்''[6], ''பூமகள் தன் கோன்''[7], ''திருவினாயகனாய மால்''[8], ''திருமகள் காதலன்'', ''திருவின் நாயகன்''[9] என்று சம்பந்தர் தேவாரத்திலும் ''திருமகளின் நாயகனாகிய திருமால்''[10], ''பூமகள் கேள்வன்''[11] என்றும், திருமால் தன் கண்மலரைச் சாத்த மகிழ்ந்தளித்தவன் சிவன் என்னுமிடத்தில் ''திருமகள் கோனெடுமால்''[12] என்றும், திருமாலுக்குப் பல பொழுதுகளில் பல திருவருள்களைச் செய்த தலைவன் சிவன் என்னுமிடத்துத் ''திருவின் நாயகனாய மால்''[13] என்றும் குறிக்கப்படுகின்றான். சலந்தராசுரனை அழித்த சக்கரா யுதத்தை மாலுக்கு அளித்தவன் சிவன் என்னுமிடத்தில் ''நிலந்தரு மாமகள் கோன் நெடுமால்''[14] என்று குறிக்கப்படுகின்றான்.

இலக்குமிக்குக் கணவனான திருமாலாகவும் வருபவன் சிவன் என்று குறிக்கப்படுகின்றான். ''நாரணன் காண், நான்முகன் காண்'' என்பது திருத்தாண்டகம்.[15] அயன்மாலாகியும், அனைத்திற்கும் கருப்பொருளாகவும் தோன்றியவன் சிவன் என்னுமிடத்துத் ''திருமகள் கணவனாகிய திருமாலாகியும்'' என்று குறிக்கப்படு கின்றான்.[16]

4. சம். தே. - திருவீழிமிழலை - 9 - 1 - 2
5. சம். தே. - திருமறைக்காடு - 9 - 1 - 3
6. சம். தே. - திருப்பூவனம் - 9 - 1 - 2
7. சம். தே. - 49 - சீகாழி - 9 - 3 - 4
8. சம். தே. - 69 - திருப்பாண்டிக் கொடுமுடி - 9 - 1 - 2
9. சம். தே. - 48 - திருமழபாடி - 9 - 1 - 3
10. திரு. நாவு. - 47 - திருவேகம்பம் - 475 - 1 - 2
11. திரு. நாவு. - 48 - திருவேகம்பம் - 478 - 1 - 3
12. சுந். தே. - 84 - 1 - 4
13. சுந். தே. - 586 - 1 - 2
14. சுந். தே. - 98 - நன்னிலத்துப் பெருங்கோயில்
15. சம். தே. - 3 - 117 - சீகாழி - 1 - 1 - 2
16. திரு. நாவு. 5 - 76 - திருக்கானூர் - 760 - 1 - 4

தேவாரப் பதிகங்களில் சிவனுக்கு முதலிடம் கூறப்படுகின்றது. திருமாலும் அயனும் அறியவொண்ணா அழலுருவானவன் சிவன் என்ற கருத்துக் கூறப்படுமிடங்களில் திருமகளின் கணவனாகப் பலவிடங்களிலும் திருமால் காட்டப்படுகின்றான். சிவனுக்கு உமை கூறப்படுவதுபோல மாலுக்குத் திருமகளும் இவ்வாறு பல இடங்களில் சுட்டப்படுவதை உணரலாம்.

திருமால் மார்பில் திருமகள் வீற்றிருக்கும் செய்திக் குறிப்புப் பல இடங்களில் பேசப்படுகின்றது. அயனும் மாலும் அறியாவண்ணம் அழலுருவானவன் சிவன் என்னும்போது ''திருவுருவமர்ந்தான்'' என்று திருமால் திருமகளைத் தன் மார்பில் வைத்தவனாகக் காட்டப் படுகின்றான்.[17] ''திருவார் தரு நாரணன்''[18] என்றும் ''திருமகள் மருவிய மார்பினனையுடையான்'' என்றும்[19] திருமகள் தங்கிய மார்பினனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான். மலர் மகள் பிரியாது நீங்காத காதலுடன் செல்வம் தோன்ற நீடுகின்ற தலம் சிவனது ''திருமுல்லைவாயில்'' என்று தலப்பெருமை கூறுமிடத்துத் திருமகள் சௌத்துவமணி நீங்காத திருமால் மார்பின்கண் வீற்றிருக்கும் திருமகளாகக் காட்டப்படுகின்றாள்.[20] திருவனார் பணிந்தேத்தும் ஒருவனாகச் சிவனைக் கூறுமிடத்துத் திருமகள் கணவனாகத் திருமால் கூறப்படுகின்றான்.[21] திருச்சிவபுரம் திருமால் வெள்ளைப் பன்றியாய்ச் சிவனை வழிபட்ட தலம் என்று கூறப்படு கின்றது. இங்குத் திருமால் உலகைக் காக்க யோக நித்திரை செய்வது போலத் திருமால் உருவின் இயல்போடு சிவனது காத்தல் இயல்பு கூறப்படுகின்றது. இப்பதியை நினைப்பவர் திருமகளோடு திகழ்வர் என்ற கருத்தில் யோக நித்திரை செய்யும் திருமாலின் மார்பில் வீற்றிருப்பவளாகத் திருமகள் குறிக்கப்பட்டு இருவரும் சேர்த்துப் பேசப்படுகின்றனர்.[22] இங்ஙனம் சிவனைத் திருமாலாகக் காட்டும் வழக்கு சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கூறப்படாத ஒன்று. சைவ இலக்கியங்களில் இவ்வழக்கு காணப்படு கின்றது. சிவனே எல்லாம் என்னும் கருத்து வலிமைக்காக இக்கருத்துக்கள் அமைந்தன எனலாம்.

---

17. சம். தே. - 1 திருப்பருப்பதம் - 9 - 2 - 4
18. சம். தே. - 2 - 23 - திருவானைக்கா - 9 - 1 - 2
19. சம். தே. - 2 - 68 - திருக்கடம்பூர் - 9 - 1 - 2
20. சம். தே. - 2 - 83 - தென் திருமுல்லைவாயில் - 3 - 3 - 4
21. சுந். தே. - 7 - 65 - திருநின்றியூர் - 669 - 4
22. சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 2 - 2 - 4

தாமரை மலரில் வசிப்பவளாகத் திருமகள் காட்டப்படுகின்றாள். தலப்பெருமை, பொய்கைச் சிறப்பு கூறப்படும்போது, ''பொன்னியல் தாமரை'' என்று திருமகள் வசிக்கும் தாமரை கூறப்படுகின்றது.[23] ''மலர்மகள்''[24] ''பூமகள்''[25] ''அணிமலர் மகள்''[26] ''அலர்மகள்''[27] என்று திருமகள் குறிக்கப்படுகின்றாள். அயனும், மாலும் ஏத்த ஆரழலானவன் சிவன் என்னும் போது விரிந்த தாமரை மலரில் தங்கும் திருமகள் என்றும், அவளை விரும்பிய திருமால் என்று திருமாலின் அன்புக்குப் பாத்திரமானவளாகவும் காட்டப்படுகின்றாள்.[28] ''பொன்னம் மல்கு தாமரைப்போது'' என்று இலக்குமி வசிக்கும் மலராகத் தாமரை காட்டப்படுகின்றது.[29]

தாமரை மலரின்கண் இருக்கும் திருமகள் வாழும் செல்வத்தையுடைய திருநின்றியூர் இறைவனே என்று சிவன் குறிக்கப்படுமிடத்துத் தாமரை மலரில் வீற்றிருப்பவள் என்பதும், செல்வத்திற்குக் காரணமானவளும் திருமகள் என்பதும் பெறப்படுகின்றது.[30] ''பங்கய மாது''[31] என்று சிவனது திருவடி போலுந் தாமரைப் பூவிலிருக்குந் திருமகள் என்று கமலத்தவளாகத் திருமகள் காட்டப்படுகின்றாள்.[32] ''கண்ணிற்கு நிறைவான தாமரைப் பூவில் வாழும் தேவி'' என்று தலைவிக்கு உவமமாக அமையுமிடத்துக் குறிக்கப்படுகின்றாள்.[33]

கலைமகளும், திருமகளும் வாழ்த்தி வணங்கி மலர்தூவி வழிபடும் ஒளி வடிவினன் சிவன் என்னுமிடத்து அழகிய தாமரை மலரில் விரும்பி வைகும் தேவியாகவும் அழகிய நெற்றியை உடையவளாகவும் குறிக்கப்படுகின்றாள்.[34] திருவளருந் தாமரைப் பூவினையுடைய தில்லை மாநகரம் என்று கூறப்படுமிடத்தில் ''திரு'' என்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகவும், திருமகள் தங்கும் தாமரை என்னும் பொருளிலும் அமைகின்றது. எல்லோ

23. சம். தே. - 1 - கீழைத் திருக்காட்டுப்பள்ளி - 11 - 1 - 2
24. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 11 - 3 - 4
25. சம். தே. - 1 - திருப்பூவனம் - 9 - 1 - 2
26. சம். தே. - 1 - திருமறைக்காடு - 9 - 1 - 3
27. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 1 - 1 - 4
28. சம். தே. - 2 - 113 - சீகாழி - 9 - 1 - 3
29. சம். தே. - 3 - 53 - திருவானைக்கா - 8 - 1
30. சுந். தே. - 65 திருநின்றியூர் - 669 - 4
31. சுந். தே. - 84 திருக்கானப்போர் - 857 - 1 - 2
32. திரு. கோ. - பாடல் - 33 - 1 - 2
33. திரு. கோ. - பாடல் - 41 - 1 - 2
34. திரு. வா. - திருவார்த்தை - 1 - 2

ராலும் விரும்பப்படும் பேரழகு கொண்டவள் திருமகள் என்பது உலகில் எல்லோராலும் கருதப்படும் ஒரு செய்தியாகும். அவளும் தாமரையின் சிறப்பு நோக்கியே அதில் இருந்தாள் என்றும், எனவே தாமரைக்கொத்ததும், மிக்கதும் இல்லை என்றும் கூறப்படுகின்றது.[35]

இவ்விடங்களில் எல்லாம் தாமரையில் வதியும் கமலத் தேவி யாகவும், அத்தாமரை மலர் பல அடைமொழிகளோடு சிறப்பித்துக் கூறப்படுவதையும் காணலாம்.

வளத்திற்குக் காரணமானவளாகத் திருமகள் காட்டப்படு கின்றாள். ''மாமருவும் மணிக்கோயில்'' என்று திருமகள் பொருந்திய சிவன் கோயிலின் சிறப்புக் கூறப்படுகின்றது.[36] ''திருமாந்தில்லை'' என்று சிவனது தில்லை சிறப்பிக்கப்படும் போது வளத்திற்குக் காரணமானவளாகத் திருமகள் காட்டப்படுகின்றாள்.[37] சிவன் வாழும் திருவீழிமிழலையை நினைபவர் சீதேவி சிறக்க இப்பூமியில் வாழ்வர் என்று கூறப்படுகின்றது.[38] திருமகள் ''பரவும் ஊராகிய வெங்குருகு'', ''திருமகள் திகழும் திருப்பிரமபுரம்'' என்று ஊர்களின் வளத்திற்குக் காரணமாகத் திருமகள் குறிக்கப்படுகின்றாள்.[39]

செல்வ மிகுதியால் பழிபாவங்கள் ஈட்டுதலன்றிப் புகழ் புண்ணி யங்களை ஈட்டுந்தன்மையுடைய புகார் என்ற குறிப்பு செல்வ மிகுதிக்குக் காரணம் திருமகள் என்ற கருத்துத் தோன்ற விளக்கப் படுகின்றது.[40] ''திருவொடு தேசினர்'' என்று சிவன் சொல்லப்படும் போது, ''திரு'' என்ற சொல் ''ஐசுவரியம்'' என்னும் பொருளில் வழங்குகின்றது.[41] ''அம்பொன்னையாவடு தண் துறையுள் மேய அரன்'' என்று சிவனைக் குறிக்குமிடத்தும் ''பொன்'' என்பது திருமகளைக் குறித்து, அவளால் தரப்படும் செல்வத்தை உணர்த்து கின்றது.[42] ''திருவே என் செல்வமே'' என்று சிவன் குறிக்கப்படு மிடத்துத் ''திரு'' என்பது திருமகளது வரவிற்குக் காரணமாகிய நல்லூழ், புண்ணியம் என்றும், உலகின்பங்கள் எல்லாவற்றையும்

---

35. திரு. கோ. - இயற்கைப் புணர்ச்சி - காட்சி 1 - 1
36. சம். தே.-1-திருமருகலும், திருச்செங்காட்டங்குடியும் - 4 - 2
37. சம். தே. - 1 - கோயில் - 6 - 1 - 2
38. சம் தே. - 1 - திருவீழிமிழலை - 1 - 1 - 4
39. சம். தே - 2 – 74 - திருப்பிரமபுரம் - 1 - 1 - 2, 2.- 2 - 3
40. சம். தே. - 3 - 50 - திருத்தண்டலை நீனெறி - 2 - 3 - 4
41. சம். தே. - 3 - 99 - திருமுதுகுன்றம் - 4 - 4
42. திரு. நாவு. - 6 . 46 . திருஆவடுதுறை - 658 - 3 - 4

தருகின்ற செல்வமாகவும் கூறப்படுகின்றது.[43] உலகின்பத்தையும், வீட்டின்பத்தையும் சேர்ப்பிக்கின்றவன் சிவன் என்னுமிடத்துத் ''திரு'' என்பது வீட்டின்பமாகக் குறிக்கப்படுகின்றது.[44] திருமகள் நீங்காது பற்றி உறையும் வயல்களும், பண்ணைகளும் சூழ்ந்த ''திருக்கச்சூர்ப் பெருமான்'' என்றும், ''திருநின்றியூர் இறைவனே'' என்றும் சிவன் குறிக்கப்படுமிடங்களில் தாமரை மலரில் வீற்றிருப் பவள், வளத்திற்குக் காரணமாக விளங்குபவள் என்ற கருத்து விளக்கம் பெறுமாறு கூறப்படுகின்றது.[45] திருச்சுழியலில் வாழும் சிவனது திருவடிகளை வணங்குவோர், தாம், தாம் வாழ்கின்ற நாட்டிற்கு அரசராய் விளங்குவர், அவ்வரசிற்குரியவளாகிய திருமகள் அவர்களை விட்டு நீங்காள் என்னுமிடத்து அரசாட்சிச் செல்வத்திற்கும், செங்கோல் ஆட்சிக்கும் துணை நிற்பவள் என்ற கருத்து இடம் பெறுகின்றது.[46]

பொருளால்தான் அறம் செய்ய முடியும். ஈவதற்கென்று இருப்பது பொருள். கொடுக்காமல் இருப்பது இழிவு என்பது தமிழர் பண்பாடு. வள்ளுவரும் பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்கின்றார். தானம் செய்ய வேண்டும் என்று சைன நூல்களும் கூறுகின்றன. தானம் செய்ய திருமகள் வரவேண்டும். ''திருவே பலி இடு'' என்று கூறுமிடத்தில் பிச்சை ஏற்போர் அதனை இடுவாரைத் ''திருமகளே'' என்றழைக்கும் வழக்கைக் காண்கிறோம்.

சம்பந்தர் இயற்றிய பதிகத்தைப் பரிவொடு பயில்வார் திருமகள், கலைமகள், வெற்றிமகள், புகழ்மகள் பொருந்தப் பூமியில் நீடுவாழ்வார் என்று கூறப்படுகின்றது. இங்கு நால்வகைத் தேவியருள் ஒருத்தியாகத் திருமகள் காட்டப்படுகின்றாள்.[47]

இறைவனுக்குப் பல்லாண்டு பாடுவது மிக அருமையானது. திருமகள் சிவனுக்குப் பல்லாண்டிசைத்த செய்தி திருவாசகத்தில் இடம் பெறுகின்றது. சக்தியும், திருமகளும், நிலமகளும், கலைமகளும் சிவனுக்குப் பல்லூழிவாழப் பல்லாண்டுபாடுவதாக அமையுமிடத்துச் ''சோமி'' என்ற பெயருடன் நால்வகைத் தேவியருள் ஒருவளாகத் திருமகள் குறிக்கப்படுகின்றாள்.[48] வைணவத்தில் திருமாலுக்குப்

---

43. திரு. நாவு. - 6 - 47 - திருஆவடுதுறை - 469 - 1
44. சுந். தே. - 7 - 59 - திருவாரூர் - 603 - 1
45. சுந். தே. - 7 - திருக்கச்சூர் ஆலக்கோயில் - 418 - 3 - 4
46. சுந். தே. - 7 - 82 - திருச்சுழியல் - 834 - 3 - 4
47. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 11 - 3 - 4
48. திரு. வா. - திருப்பொற்சுண்ணம் - 1 - 2

பல்லாண்டு பாடியவர் பெரியாழ்வார் என்பது இங்கு நினைவு கூரத்தக்கது.

பல்வேறு ஒப்பனை செய்து கொண்ட பெண்களைத் திருமகளாகக் காட்டுவது வழக்கமாக உள்ளது. அழகிய ஆபரணங்களால் அலங்கரிக்கப்பட்டுள்ள இலக்குமியை ஒத்த இருடிபத்தினிகள் என்று உவமை காட்டப்படும்போது அழகும், அலங்கரிப்பும், கற்புமுடையவள் என்னும் கருத்துக்கள் தோன்றப் போற்றப்படுகின்றாள்[49] ''திருவின் நேரனார்கள் என்று திருமகளை நேரொத்த மடந்தையர் என்று ஒப்பிடப்படுகின்றது.[50] ''பங்கய மாதனையார்'' என்று திருமகளைப் போலும் மகளிர் என்று மகளிரது இசையும் அவர்களது பக்தியும் குறிக்கப்படுகின்றது.[51] ''தாமரையில் வதியும் தேவியோ'' என்று தலைவனுக்கு ஐயம் நிகழுமிடத்தில் தலைவிக்கு உவமமாகத் திருமகள் சுட்டப்படுகின்றாள்.[52] திருமகள் தனியே மட்டுமல்லாது, திருமாலுடன் உவமமாக அமைகின்ற தன்மை காணப்பெறுகின்றது.

இங்கு திருமாலின் படுக்கை பாம்பணை என்பதும், நெடுமாலின் மார்பில் அன்றித் தாமரை மலரிலும் வீற்றிருப்பவள் திருமகள் என்பதும் பெறப்படத் தலைவன், தலைவியருக்கு உவமமாக அமைவதையும் காணலாம்.[53]

பிறையைச் சடையில் அணிந்தவன் சிவன் என்ற கருத்து இடம் பெறுமிடத்தில் திருப்பாற்கடலில் எழுந்த விடம், பிறை, கௌத்துவம் முதலிய பொருட்களோடு திருமகளும் ஒருத்தியாகக் குறிக்கப்படுகின்றாள்.[54] ''செய்யவளை மாலுக்கீந்த சிவன்'' என்னுமிடத்தில் பாற்கடலில் தோன்றிய விடத்தைச் சிவபெருமான் உண்ட பின்னர், தேவர் அமுதம் வரக் கடைந்தபொழுது திருமகள் தோன்றினமை நோக்கி, சிவனால் திருமாலுக்கு ஈயப்பட்டவளாகக் குறிக்கப்படுகின்றாள். இங்கு, பாற்கடலில் தோன்றியவள் என்ற குறிப்பும் பெறப்படுகின்றது.[55]

திருவாரூர் தல வரலாற்றில் செய்யாள் வழிபட நின்றவனாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[56] இச்செய்தி முந்தைய கால இலக்

49. சம். தே. - 1 - திருக்கழுமலம் - 9 - 1 - 3
50. சம். தே. - 2 - 101 - திருவாரூர் - 8 - 3 - 4
51, சுந். தே. - 7 - 84 - திருக்கானப்போர் - 857 - 1 - 2
52. திரு. கோ. - பாங்கற்கூட்டம் - 33 - 1 - 2
53. திரு. கோ. - இயற்கைப் புணர்ச்சி - காட்சி - 1 - 1
54. சம். தே. 1 - திருப்பாம்புரம் - 6 - 3 - 4
55. திரு. நாவு. - 6 - 87 - திருச்சிவபுரம் - 866 - 4
56. திரு. நாவு. - 6 - 78 - திருவாலங்காடு - 780 - 3 - 4

கியங்களில் காணப்படாதது. சிவனது பெருமை கூற இத்தகு செய்திகள் இடம் பெறலாயின எனலாம்.

நிலையில்லாதவள் திருமகள் என்ற பண்பு தோன்ற சம்பந்தர் ஓரிடத்துக் கூறுகின்றார். தன்னடி வணங்குவார்க்குத் திருமகள் அருள் கிட்டச் செய்வான் சிவன் என்ற கருத்து இடம் பெறுகின்றது. இங்கு நிலையில்லாமல் தவழ்ந்து கொண்டேயிருக்கும் திருமகளின் பண்பு தோன்ற ''மைதவழ் திருமகள்'' என்று குறிக்கப் படுகின்றாள்.[57] கலித் தொகையிலும் சகடக்கால் போல வரும் செல்வம் என்று செல்வத்தின் நிலையில்லாத் தன்மை கூறப்படு கின்றது. ''திருவெனும் நிலையிலாப் பொருளை நச்சுபவோ'' என்ற பாலைக்கலி அடி இங்கு நினைவு கூரத்தக்கது.

சிவ பூசையில் அதற்குரிய செல்வங்களை அருளும் வண்ணம் அம்பிகையின் அம்சமாகத் திருமகள் சுட்டப்படுகின்றாள்.[58]

சைவ இலக்கியங்களில் சங்கம், சங்கம் மருவிய கால இலக் கியங்களைப் போன்றே திருமாலின் மனைவியாகவும், அவனது மார்பில் உறைபவளாகவும் அழகுடையவளாகவும், செய்யாளாகவும், திருமகள் காட்டப்படுகின்றாள். வளத்திற்குக் காரணமானவள், தாமரை மலரில் விரும்பி உறைகின்றவள் என்று மிகுதியும் கூறப்படு கின்றாள். பாற்கடலில் தோன்றியவள் என்னும் செய்தி சங்க இலக் கியங்களில் காட்டப்படுவதுபோல இங்கு விரிவாக இல்லை. சங்கம் மருவிய இலக்கியங்களில் கூறப்படுவதுபோலச் செய்திக் குறிப்பாகவே இரு இடங்களில் மட்டுமே அமைகின்றது.

செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் திருமகளைத் தொடர்பு படுத்திப் பேசும் சங்கம் மருவிய கால மரபினை இச்சைவ இலக்கியங் களிலும் காணமுடிகின்றது. பாவைக் கூத்து பற்றிய செய்திகள் இங்கு இடம் பெறவில்லை. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகப் போற்றப்படும் திருமகள் இச்சைவ இலக்கியங்களில் நால்வகைத் தேவியருள் ஒருவளாகவும் சுட்டப்படு கின்றாள். சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கூறப் படுவது போன்றே இங்கும் உவமமாக அமையும் கருத்துகள் இடம் பெறுகின்றன. திருமகள் சிவனை வழிபட்டதாக அமையும் செய்திக் குறிப்பு, அம்பிகையின் ஓர் அம்சமாகத் திருமகள் சுட்டப்படும் செய்திகள் சிவனுக்குப் பெருமை சேர்க்கும் விதத்தில் அமைகின்றன.

---

57. சம். தே. - 1 - திருவல்லம் - 4 - 1 - 4
58. திரு. நாவு. - 4 - 43 திருக்கச்சிமேற்றளி - 431 - 1

இவை திருமகள் வழிபாட்டில் காணப்பெறும் புதிய செய்தியாக அமைகின்றது.

**திருமால் - நப்பின்னை :** சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமாலின் கிருட்டிணாவதாரக் குறிப்பு இடம் பெறும் இடங்களில் பெரும்பான்மையும் அவனுடன் சேர்த்துப் பேசப்பட்ட நப்பின்னை, சைவ இலக்கியங்களில் இரண்டு இடங்களில் மட்டுமே பேசப் படுகின்றாள்.

அயனும் மாலும் நாடியுங்காணா நம்பி சிவன் என்னுமிடத்துப் ''பின்னை நம்பும் புயத்தான் நெடுமால்'' என்று வாமனாவதாரக் குறிப்புடன் நப்பின்னையால் விரும்பப்பட்ட தோள்களையுடைய வனாகத் திருமால் கூறப்படுகின்றான்.[59]

சிவனது திருவடிகளைப் பரவுகின்ற மாயோன் என்னுமிடத்து ''ஏர்பின்னை தோள் முன் மணந்தவன்'' என்று திருமால் நப்பின்னையின் கணவனாகக் குறிக்கப்படுகின்றான்.[60]

இக்குறிப்புகளை நோக்கும்போது சங்கம் மருவிய கால இலக் கியங்களில் திருமால் இரு மனைவியுடையவனாகக் காட்டப்பட்ட வழக்கு இச்சைவ இலக்கியங்களிலும் தொடரக் காணலாம். ஆயினும் நப்பின்னை பற்றிய செய்தி அவ்விலக்கியங்களில் உள்ளது போல மிகுதியாக இடம் பெறவில்லை. இக்குறிப்புகளும் சிவனுக்கு ஏற்றம் தரும் இடங்களிலேயே அமையக் காண்கிறோம்.

திருமாலுடன் தொடர்புடைய திருமகள் பற்றிய செய்திகளே இங்கு மிகுதியாக அமைகின்றன. திருமாலின் தங்கையாகச் சங்கம் மருவிய இலக்கியங்களில் கூறப்பெற்ற கொற்றவை பற்றிய செய்திகள் இச்சைவ இலக்கியங்களில் திருமாலுடன் தொடர்புபடுத்தி எங்கும் கூறப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**கொற்றவை :** பாலை நிலப்பகுதியின் தனித் தெய்வமாகக் கற்பிக்கப்பட்டவள் கொற்றவை. காலப்போக்கில் சிவன் துணைவி யாகக் கொற்றவை உருப்பெறுவதைச் சிலப்பதிகாரம் போன்ற சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப் பெறுகிறோம். பக்திக் கால இலக்கியங்களில் சிவன், விஷ்ணு பெருமை பேசுவதையே இலட்சியமாகக் கொண்ட நெறி வளர்ந்து விட்டதால் சைவ சமயச் சார்பான பக்திப் பாடல்களில் சிவனைத் தன்னிகரற்ற தெய்வமாகப்

---

59. சுந். தே. - 7 - 63 - நம்பி என்ற திருப்பதிகம் - 651 - 1 - 2
60. திரு. கோ. - வரைபொருட் பிரிதல் - 273 - 1 - 2

பாட வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. அதன் விளைவாகக் கொற்றவையைத் தனித் தெய்வமாக்கிப் பாடும் பழைய நெறி போற்றப்படாமல் ஒழிந்து போயிற்று. தனித் தெய்வமாக இருந்த கொற்றவை சிவனுடன் கூடிய சார்புத் தெய்வமாக மாறிவிட்ட பக்திக் காலச் சூழலில், பாசுரங்களில் தனித் தன்மையோடு பாடப் பெற முடியாத நிலை ஏற்பட்டுள்ளது. எனவே கொற்றவை இடம் பெறவில்லை. மேலும் சமூக இயல் நோக்கில் பார்க்கும் பொழுது, ஆண் ஆதிக்க சமுதாயம் வலுப்பெற்ற காலத்தில் பக்திப் பாடல்கள் பாடப்பெற்றுள்ளன. பெண்மைக்குரிய தனித் தன்மை குறைந்த காலம். எனவே அதன் பாதிப்பைப் பெண் தெய்வம் குறித்த பக்திப் பாடல்களிலும் காண்கிறோம்.

**திருமால் - பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறல் :** சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கூறப்படுவதுபோலத் திருமால் இச்சைவ இலக்கியங்களிலும் பல்வேறு தொடர்களால் விளக்கம் பெறுகின்றான். காத்தற் கடவுள், ஆற்றலுடையவன், ஓணப் பிரான், பீதக ஆடையன், துழாய் மாலையன். கருட ஊர்தியான், சக்கரப் படையான், சங்கக் கையன், குரவைக் கூத்தாடியவன், ஆலிலைத் துயின்றவன், பாற்கடல் துயில்வோன், அரவணைப் பள்ளி கொண்டோன் முதலான தொடர்களால் குறிக்கப் பெறுகின்றான்.[61] காமன், பிரமன், ஆகியோரின் தந்தையாகவும் திருமால் குறிக்கப் படுவதை இச்சைவ இலக்கியங்களால் அறிகின்றோம்.[62] அப்பாசுரங் களில் திருமாலின் கோலமும் சித்தரிக்கப் பெற்றுள்ளது.[63]

இவையெல்லாம் முந்தைய இருபெரும் கால கட்டங்களிலும் இடம் பெறும் செய்திகளேயாயினும் இக்காலத்தெழுந்த சைவப் பாசுரங்களிலும் தொடர்ந்து வருகின்றன. திருமால் பற்றிய இத் தகவல்கள் சிவனது பெருமை பேசும் இடங்களில் வந்துள்ளன. சிவனிடம் திருமால் அருள் பெற்றதாக அமையும் இடங்களிலும், அழலுருவானவன் சிவன் என்னுமிடத்தும், மூவருமானவன் சிவன் என்னுமிடத்தும், சிவனது பாகமாகத் திருமால் குறிக்கப்படு மிடத்தும், திரிபுரம் அழிக்கத் திருமால் துணையாக அமைந்த செய்தி

61. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 6 - 3 - 4
சுந். தே. - 7 - 82 - திருச்சுழியல் - 839 - 1 - 2
சம். தே. - 2 - 110 - திருமாந்துறை - 2 - 3 - 4
சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 9 - 1 - 2
சம். தே. - 2 - 30 - திருப்புறம்பயம் - 9 - 1 - 4

62. சுந். தே. - 7 - 6 - திருவெண்காடு - 53 - 2 - 4
சம். தே. - 1 - திருவெண்காடு - 53 - 2 - 4

63. சுந். தே. - 7 - 16 - திருக்களபநல்லூர் - 160 - 1 - 2

இடம் பெறுமிடத்தும், தலங்கள் கோயில்களின் புகழ் பேசப்படுமிடத்தும் திருமால் பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளதைக் காணலாம். சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் அமையும் திருமால் பற்றிய செய்திகள், சிவனோடு தொடர்பு படுத்தப் படாமையும், திருமாலின் புகழ் பாடுமிடத்தே அமைவதையும் காண முடிகின்றது.

முறை செய்து காப்பாற்றும் மன்னவனை மக்களுக்கு இறைவனாகக் கூறுகின்றார் வள்ளுவர். காக்கும் மன்னர்க்கு எல்லாம் தலைவன் காத்தல் தெய்வமாகிய திருமால் என்ற கருத்தில் ''பூண் அரையர்க்கு ஆதியாய அடல் மன்னன்'' என்று திருமால் போற்றப்படுகின்றான்.[64] திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேன் என்பதும் இந்த இயைபு பற்றியே எனலாம். ஊழிதோறும் உலகம் தொழ நின்ற பாற்கடல் பள்ளியில் அறிதுயில் புரியும் திருமால் என்றும்[65], முத்தொழில் புரியும் இறைவனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்துத் திருமால் பிரமன் படைத்தனவற்றைக் காக்கும் கடவுளாகவும் குறிக்கப்படுகின்றான்.[66] பண்டைய இலக்கியங்களில் காக்கும் கடவுளாகத் திருமாலைப் பாடுவர். பெரும்பாலான இலக்கியங்களில் திருமாலைக் கடவுள் வாழ்த்தாக அமைப்பர். பிற்கால இலக்கியங்களில் இவ்வழக்கு வந்தது எனலாம். சான்றாக மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழைக் கூறலாம். பெரும்பாலான சைவப் புலவர்கள் திருமாலையே கடவுள் வாழ்த்தாகப் பாடியுள்ளனர். சிலர் மட்டும் பிற தெய்வங்களைப் பாடியுள்ளனர்.

சிவன் வரத்தைக் கொடுத்துத் தவிப்பவன். சிவனுக்கு வந்த ஆபத்துக்களில் சிவனைக்காத்தவன் மிக ஆற்றலுடையவன் திருமால் என்ற கருத்து பொதுவாக மக்களிடத்தில் பேசப்படுவது, அயனும், மாலும் தேடிக் காணா எரியுருவானவன் சிவன் என்னும்போது ''ஆற்றலுடைய அரி'' என்றும்[67] ''அரு வரை பொறுத்த ஆற்றலினான்''[68] என்றும் ''மடல் அரி''[69] என்றும் வலிமையும், ஆற்றலும் பொருந்தியவனாகக் காட்டப்படுகின்றான். இத்தகைய ஆற்றல் இருந்தும் இறைவனைக் காண இயலாமை பற்றிய இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறினும் ஆற்றல் படைத்தவன் என்பது பெறப்படுகின்றது.

---

64. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 6 - 3 - 4
65. திரு. நாவு. - 4 - திருச்செம்பொன்பள்ளி - 286 - 2 - 3
66. திரு. வா. - திருவண்டப்பகுதி - 13 - 16
67. சம். தே. - 1 - சீகாழி - 9 - 1 - 2
68. சம். தே. - 3 , 118 - திருக்கழுமலம் - 9 - 1 - 2
69. சுந். தே. - 7 - 82 - திருச்சுழியல் - 839 - 1 - 2

சிவபெருமானைக் காண்டற்குரிய முறைமை அறியாது தேடுதல் ளைப்பைத் தரும் என்ற கருத்தில் வாழ்த்தியும், வணங்கியும் ாண்கின்றிலர் அயனும், மாலும் என்று கூறுமிடத்து ணைப்பிரான்'' என்று திருமால் சுட்டப்படுகின்றான். ஓரிடத்தில் ட்டுமே இக்குறிப்பு அமைகின்றது.[70] ''மாயோன் அடையும் நாள்'' ன்று சூடாமணி நிகண்டும், ''அவிட்ட முதனானவன்'' என்று வஞான மாமுனிவர் பாடலும் இதைத் தெளிவுறுத்தும்.

பொதுவாகத் திருமால் உயர்ந்த ஆடை அணிந்தவன் என்று பல லக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இளங்கோவடிகளும் ''பொலம் பூ டையிற் பொலிந்து தோன்றும்'' என்று கூறுகின்றார். அழகும், லங்கரிப்பும் உடையவனாகத் திருமால் காட்டப்படுகின்றான். ாதுவாக சிவனுக்கு பிக்குணிப் கோலமே காட்டப்படுகின்றது. சவ இலக்கியங்களில் ஓரிடத்தில் மட்டுமே இப்பீதாம்பர ஆடை றிக்கப்படுகின்றது. மூவராயும் இருக்கும் முதல்வன் சிவன் என்னும் ாது திருமால் ''கலையான்'' - என்று பீதக ஆடையன் என்ற ண்பு தோன்றக் குறிக்கப்படுகின்றான்.[71]

சிவனுக்குக் கொன்றை மாலை கூறப்படுவது போலத் திருமால் ளசி மாலை அணிந்தவன் என்பதைச் சம்பந்தரது தேவார அடிகள் ளக்கக் காணலாம். திருமாலும், பிரமனும் காணுதற்குரிய ட்டராகச் சிவன் குறிக்கப்படுமிடத்து, ''கட்டுதல் பொருந்திய ளசி மாலையன்''[72] என்றும் ''பூந்துழாய் புனைந்த மால்''[73] ன்றும் குறிக்கப்படுகின்றான். திருமாலின் மகன் பிரமன் என்ற றிப்பில் ''துழாய் அணிந்த மார்பன்''[74] என்றும், திருமால் ார்பின்கண் வீற்றிருக்கும் திருமகள் என்ற குறிப்பில் ''கௌத்துவ ணி மாலை நீங்காத மார்பினன்''[75] என்றும் குறிக்கப்படுகின்றான்.

திருமாலுக்கு வாகனம் கருடன். ஆயுதங்கள் சங்கு, சக்கரம், தை என்பன. வில், வாள் போன்ற படைகளும் உண்டு. மார்பில் வத்சமும், கையில் சமந்தக மணியும், கழுத்தில் கௌத்துவ ரமும் திருமாலின் அடையாளங்கள் என்பர். சங்கு, சக்கரம், கதை, ல், வாள் என்பனவற்றைச் சேர்த்து ''ஐம்படைத்தாலி'' எனக் ழந்தைகளுக்கு அணிவிப்பர்.

70. திரு. நாவு. - 4 - 105 - திருப்புகலூர் . 1012 - 1 . 2
71. சம்· தே. - 2 - 22 - திருக்குடவாயில் - 3 - 1 - 2
72. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 11 - 1
73. சம். தே. - 1 - திருமுதுகுன்றம் - 9 - 1 - 3
74. சம். தே. - 2 - 110 - திருமாந்துறை - 2 - 3 - 4
75. சம். தே. - 2 - 83 - தென்திருமுல்லைவாயில் - 3 - 4

பன்றியாய்த் திருமாலும், அன்னப் பறவையாய் அயனும் உயர்ந்தும், பணிந்தும் உணர இயலாதவன் சிவபெருமான் என்னும் போது ''கருடப்புள் ஊர்தியான்''[76, 77] ''வெல்பறவைக் கொடி மால்''[78] ''கருடனை ஏறும் அரி''[79] ''கருடத் தனிப்பாகன்''[80] ''புள்ளான்''[81] ''கருடக் கொடியோன்''[82] என்றும் கருடக் கொடி யோனாகவும், ஊர்தியோனாகவும் காட்டப்படுகின்றான்.

மூவருமானவன் சிவன் என்னுமிடத்தும், ''புள் ஊர்தியான்''[83] என்றும், திருமால் உள்ளத்தில் வீற்றிருந்து அவனது மனக்கவலையை மாற்றியருளுபவன் சிவன் என்னுமிடத்துப் ''புள்ளூர்வான்''[84] என்றும் சிவனருளால் சக்கரம் பெற்றவன் என்ற கருத்து இடம் பெறு மிடத்துப் ''புள்பாகன்''[85, 86] என்றும் கருட ஊர்தியானாகக் காட்டப்படுகின்றான்.

அடிமுடி காணாதவிடத்து ''அடல் மலி படையரி''[87] ''ஆழியான்''[88] ''ஆழி கொள் செல்வன்''[89], ''நேமியான்''[90] ''ஆரெரியாழியான்''[91] ''எண்பெரிய பண்படைகொண் மால்''[92] ''ஆழியங் கையிற்கொண்ட மால்''[93] என்றும் சக்கரப் படையானாகத் திருமால் காட்டப்படுகின்றான். சிவனை வழிபடும் கருத்து இடம்

---

76. சம். தே. - 2 . 30 - திருப்புறம்பயம் - 9 - 1 - 4
77. சுந். தே. - 7 - 44 - திருவாமாத்தூர் - 9 - 1 . 2
78. சம். தே. - 3 - 100 - திருத்தோணிபுரம் - 9 - 1 - 4
79. சம். தே. - 3 . 109 - திருக்கயிலாயமும், திருவானைக் காவும், திருமயேந்திரமும் - திருவாரூர் - 4 - 1 - 2
80. திரு. நாவு. . 4 - 108 - திருமாற்பேறு - 1027 - 1
81. திரு. நாவு. - 6 - 35 - திருவெண்காடு - 358 - 1
82. திரு. வா. - ஆசைப்பத்து (ஆத்தும இலக்கணம்) 1 - 1 - 2
83. திரு. நாவு. - 6 - 3 - திருஅதிகை வீரட்டானம் 22 - 2 - 3
84. திரு. நாவு. - 6 - 15 - திருக்கருகாவூர் - 157 - 1
85. திரு. நாவு. 6 - 52 - திருவீழிமிழலை - 522 - 1
86. திரு. நாவு. 6 - 73 - திருவலஞ்சுழியும், திருக்கொட்டையூர்க் கோடீச்சரம் - 726 - 1
87. சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 9 - 1 - 2
88. சம். தே. - 1 - திருநறையூர்ச் சித்தீச்சரம் - 9 - 1 - 4
89. சம். தே. - 1 - திருத்தருமபுரம் - 9 - 3 - 4
90. சம். தே. - 2 - 115 - திருப்புகலூர் - 9 - 1 - 2
91. சம். தே. - 3 - 59 - திருக்குடமூக்கு - 9 - 1 - 3
92. சம். தே. - 3 - 67 - திருப்பிரமபுரம் - 9 - 1 - 2
93. சம். தே. - 3 - 110 - திருப்பிரமபுரம் - 10 - 3 - 4

பெறுமிடத்தில் சக்கராயுதத்தை வலக்கையால் ஏந்தியவனாகவும்,[94] அன்னமும், பன்றியுமாய்ச் செருக்குற்ற தன்மை கூறுமிடத்துப் பிறப் புடையவன் என்பது தோன்ற ஆழிப்படையானாகவும்,[95] திருமால், பிரமற்கு ஒடுங்கும் தானமாக உள்ளவன் சிவன் என்னுமிடத்து ''ஆழியான்'' என்றும் குறிக்கப்படுகின்றான்.[96]

இராவணன் முதலிய அரக்கரை அழித்த இராமாவதாரக் குறிப்பு இடம்பெறும் இடத்தில் போர் வெற்றியைத் தரும் சக்கரப் படையோனாகவும், அழகு தோன்றவும் ''போராழியம்மான்''[97,98] என்று கூறப்படுகின்றான். அயனும், மாலும் உணர முடியாதவன் சிவன் என்னுமிடத்து ''பாஞ்ச சன்யம்'' என்னும் சங்கு கலந்த கையுடையவன் என்றும்[99] ''சங்கேந்து கையான்''[100] ''சங்கக் கையன்''[101] ''வளைக்கரத்தான்''[102] ''வளைக்கையான்''[103] என்றும் சங்கக் கையானாகக் காட்டப்படுகின்றான்.

மங்கலக்குடி இறைவனை மாகாளி, சூரியனோடும், பிறவின்ன வரோடும், அயனோடும் மலர் தூவித் துதித்தவன் திருமால் என்னு மிடத்துச் சங்கும், சக்கரமும் ஆகியவற்றைத் தரித்தவன் என்று சங்கு சக்கரதாரியாகக் காட்டப்படுகின்றான்.[104]

சிவனை வழிபட்டுப் பாவம் நீங்கப் பெற்றமைக்குச் சான்றாகத் திருமாலும், பிரமனும் கூறப்படுமிடத்துக் குரவைக் கூத்தாடிய கண்ணபிரானாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[105]

பிரமனும், மாலும் சிவனருள் பெற்ற செய்தி இடம் பெறு மிடத்துக் கொப்பூழிடையில் பூத்த தாமரையொடு ஆலிலையில்

---

94. திரு. நாவு. - 4 - 3 - திருவையாறு - 22 - 3
95. திரு. நாவு. - 4 - திருத்துருத்தி - 420 - 3 - 4
96. திரு. நாவு. - 5 - 3 - திருநெல்வாயில் அரத்துறை 30 - 3 - 4
97. திரு. நாவு. - 4 - 61 - திருராமேச்சரம் - 591
98. திரு. நாவு. - 4 - 61 - திருராமேச்சரம் - 596
99. சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 2 - 3 - 4
100. சுந். தே. - 7 - 30 - திருக்கருப்பறியலூர் - 307 - 1 - 2
101. சம். தே. - 1 - திருவையாறு - 9 - 1 - 2
102. திரு. கோ. - வேந்தற்குற்றுழிப் பிரிவு - 331 - 2 - 3
103. திரு. வா. - செத்திலாப் பத்து - பாடல் - 10 - 2 - 3
104. திரு. நாவு- - 5 - 73 - திருமங்கலக்குடி - 732 - 1 - 4
105. திரு. நாவு. 5 - 97 - சித்தத்தொகைத் திருக்குறுந் தொகை - 981 - 1 - 4

துயின்றவனாகவும்,[106] திருமாலுக்குப் பரமாய மூர்த்தியாகச் சிவன் குறிக்கப்படுமிடத்துக் கிருட்டிணாவதாரச் சிறப்பும், வாமனா வதாரச் சிறப்பும் ஒருசேரத் தோன்ற ஏழுலகும் உண்டு குறளனாய் ஓர் ஆலிலைமேல் பாலனாய்ப் பள்ளி கொண்டவன் என்று குறிக்கப் படுகின்றான்.[107]

திருமால் கோலங்களுள் நின்ற கோலமும், கிடந்த கோலமும் மட்டுமே சிலம்பில் குறிக்கப்பட்டுள்ளது. திரிபுரம் அழிக்கத் திருமால் கணையாகிய செய்தி அமையுமிடத்துத் திருமால் ''நிற்பான்'' என்று குறிக்கப்படுகின்றான்.[108] மாயோன் கோலங்கள் பலவற்றுள் அர்ச்சனைக்குரியது, ''நின்ற கோலமே'' என அவனை வழிபடுவோர் கொள்ளுதலின் ''நிற்பான்'' என்று சுந்தரர் குறிப்பிடுகின்றார். ஏனைய கோலங்களை வழிபடுங்கால் அவ்வந்நிலை கருதியே வழி படுவார்கள்.

**கோயில் :** திருக்கச்சூர் ஆலக்கோயில் : திருமால் அமுதம் வேண்டி ஆமையாயிருந்து பூசித்த காரணத்தாலும், ஆலமரம் இத்தலத்துக்குரிய விருட்சமாக இருந்ததாலும் இப்பெயர் பெற்றது. இருக்குமிடம் :— செங்கற்பட்டுக்கு வடக்கேயுள்ள சிங்கப்பெருமாள் கோவில் இரயில் நிலையத்துக்கு வடமேற்கே ஒன்றரை மைல் தொலைவில் உள்ளது.

திருமால் கோயில் — இவ்வூரில் திருமால் கோயில் ஒன்று இத்தொண்டீச்சரத்துக்கு மேற்கில் உள்ளது என்பதும் அத்திருமாலின் திருப்பெயர் ''திருமேற்றளி மகாவிஷ்ணுக்கள்'' என்பதும் முதல் பராந்தக சோழனின் 32-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டால் புலப் படுகின்றது.[109]

சிவபிரானது தவத்தை அழித்தற்கு வந்த மன்மதனை, அவனுடைய தந்தையாகிய திருமால் ஒன்றும் செய்ய மாட்டாது பார்த்துக் கொண்டிருக்க நெற்றிக் கண்ணால் எரித்துப் பின் உயிர்ப்பித்த வெற்றியுடையோன் சிவன் என்று ஆக்கவும், அழிக்கவும், வல்லவனாகக் காட்டப்படுகின்றான். இங்கு காமனது தந்தை என்ற திருமாலும் அவன் அஞ்சக் காமனை எரித்தவன் சிவன் என்ற குறிப்பும் அமைகின்றது.[110] இதே கருத்தமைய ''மாக்குன்

106. சம். தே. - 2 - 30 - திருப்புறம்பயம்
107. திரு. நாவு. - 4 - 14 - பொது 136 - 3 - 4
108. சுந். தே. - 7 - 16 - திருக்களபநல்லூர் - 160 - 1 - 2
109. சுந். தே. - 7 - 978 - 1 - 4
110. சுந். தே. - 7 - 6 - திருவெண்காடு - 53 - 2 - 4

றெடுத்தோன் தன் மைந்தனாகி'' என்று மன்மதன் திருமாலி மகனாகக் குறிக்கப்படுகின்றான். இங்கு கிருட்டிணாவதார சிறப்புத் தோன்றத் திருமால் கூறப்படுகின்றான்.[111]

திருமாலின் உந்தியினின்றும் தோன்றிய தாமரை மலரில் வா பவன் பிரமன் என்ற குறிப்பு பல இடங்களில் கூறப்படுகின்றது.[1 பிரமனுக்கு நான்கு முகங்களாதலின் ஏனைய தேவர்களைப் போல திரும்பித் தேடவேண்டிய அவசியம் இல்லை என்று நகைச்சுவை தோன்றக் கூறி, அதிலும் துணையாகத் தன் தந்தையை சேர்த்துக் கொண்டு தேடினான் என அச்சுவை மிகுதிப்படக் கூற படுகின்றது.[113] தந்தையும் மகனும் என்ற முறையையும் பாராமே முனிந்த இருவர்க்கும் எரியானான் சிவன் என்னுமிடத்து தந்தையு மகனுமான உறவு தோன்றக் கூறப்படுகின்றனர்.[114]

திருவிக்கிரமனாகிய திருமால் உலகமெல்லாம் படைத் பிரமனைப் பயந்தவன் என்று குறிக்கப்படுகின்றான்.[115] பிரமனையு காமனையும் சுட விழித்தவன் என்று சிவன் கூறப்படும் போ ''துளவமால் மகன்'' என்று பிரமன் குறிக்கப்படுகின்றான்.[1 கருவுரு உந்தியினான்''[117] என்று நான்முகனைத் தோற்றுவித் திருமாலாகக் கண்ணன் காட்டப்படுகின்றான். சிவனை அறி இயலாதவர் என்னுமிடத்துப் ''பூமகனும்'' அவனைப் பயந் ''புயலார் நிறத்தானும்''[118] என்று நிறம் தோன்ற தந்தை, மக உறவு காட்டப்படுகின்றது.

மூவருமான மூர்த்தி என்று சிவன் குறிக்கப்படுமிடத்துத் திருமா ''மறையவனைப் பயந்தோன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[1 அயனும், மாலும் அறியாது தொழுது இறைஞ்ச நின்றவன் சிவ என்னுமிடத்துப் ''பிரமனைப் பயந்த அரி''[120] என்று காட்ட படுகின்றான்.

---

111. திரு. நாவு. - 6 - 35 - திருவெண்காடு - 359 - 1 - 2
112. சம். தே. - 1 - திருவியலூர் - 9 - 1 - 2
113. சம். தே. - 1 - திருப்புன்கூர் - 9 - 1 - 2
114. சம். தே. - 1 - திருவாலங்காடு - 10 - 1 - 2
115. சம். தே. - 2 - 33 - திருநள்ளாறு - 9 - 1 - 2
116. சம். தே. - 2 - 110 - திருமாந்துறை - 2 - 3 - 4
117. சம். தே. - 3 - 50 - திருத்தண்டலை நீனெறி - 9 - 1-
118. சம். தே. - 3 - 107 - திருநாரையூர் - 9 - 1 - 2
119. திரு. நாவு. - 6 - 65 - திருக்கச்சியேகம்பம் - 652 - 1 -
120. திரு. வா. - திருச்சதகம் - 7 - 1 - 2

இகழ்ச்சிக் குறிப்பாகக் கூறும் இடங்களிலும் தந்தை, மகன் உறவு தோன்றக் காட்டப்படுகின்றனர். தக்கன் வேள்வியில் அரி வேள்வியுணவில் தனக்குரிய பாகத்தைக் கொண்டகாலை வீரபத்திரரால் நெஞ்சில் அடியுண்டு மூர்ச்சித்து உயிர் மாத்திரம் போகாதிருக்கப் பெற்றான் என்ற குறிப்பிலும்,[121] சிவனை வழிபட்டதாகக் குறிப்பு இடம் பெறுமிடத்திலும், திருமால் நான்முகன் தந்தையாகக் குறிக்கப்படுகின்றான்.[122]

மேலும் அடிமுடி தேடிய குறிப்பு இடம்பெறும் இடங்களி லெல்லாம் ''இருவர்''[123] என்றே பெரும்பாலும் தந்தை, மகன் உறவு தோன்றக் குறிக்கப்படுகின்றனர். இவ்வாறு தந்தை, மகன் உறவு தோன்றக் கூறும் இடங்களில் பெரும்பான்மையும் இருவரும் தங்கள் நிறம் தோன்றவும் குறிக்கப்படுகின்றனர்.[124, 125]

தேவாரப் பாடல்களில் திருமால் பற்றிய செய்திகள் இடம் பெறும் இடங்களில் எல்லாம் பெரும்பாலும் பிரமனுடன் சேர்த்தே திருமால் பேசப்படுகின்றான். தாமரைத் தவிசினனாகப் பிரமனும், அரவணைப் பள்ளியானாகத் திருமாலும் காட்டப்படுகின்றனர். திருமால் அரவணைப் பள்ளிகொண்டோன் என்ற குறிப்பு பலவிடங் களில் கூறப்படுகின்றது. அடிமுடி காணாமை பற்றிக் கூறம்போது ''நாகத்தில் ஆற்றலணை மேலவன்''[126] ''அரவணையான்''[127] பணியுடைமால்''[128] ''கிடந்தான்''[129] ''நாகத்தணையான்''[130] ''அரவணைப் பள்ளியான்''[131] ''பாயோங்கு பாம்பணையான்''[132] ''பாம்பணை மேலுறங்குபவன்''[133] ''அரவணைத் துயின்றவன்''[134]

---

121. திரு. வா. - திருவுந்தியார் - பாடல் - 6
122. திரு. நாவு. 6 - 34 - திருவாரூர் - 343 - 1 - 4
123. சம். தே. - 1 - 20 - திருவாரூர் - 9 - 1 - 2
124. சம். தே. - 3 - 7 - திருப்புகலி - 9 - 1 - 2
125. சம். தே. - 3 - 58 - திருச்சாத்தமங்கை - 9 - 3 - 4
126. சம். தே. - 1 - திருக்கோலக்கா - 1 - 3
127. சம். தே. - 1 - திருமருகலும்,
திருச்செங்காட்டங்குடியும் - 1 - 2
128. சம். தே. - 1 - திருநள்ளாறும், திருவாலவாயும் - 9 - 1 - 3
129. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 9 - 1 - 3
130. சம். தே. - 1 - திருநல்லம் - 9 - 1 - 4
131. சம். தே. - 1 - திருச்சிராப்பள்ளி - 9 - 1 - 3
132. சம். தே. - 2 - 55 - திருத்தலைச்சங்காடு - 9 - 1 - 2
133. சம். தே. - 2 - 60 - திருப்பாசூர் - 9 - 1 - 2
134. சம். தே. - 2 - 106 - திருவலஞ்சுழி - 9 - 1 - 2

''பொறிவாய் நாகணையான்''[135], ''பொறிவரிய நாகமுயர் பொங்கணையணைந்த புகழோன்''[136] ''பணம்கொள் பாற்கடல் பாம்பணையான்''[137] ''படமுக்கப் பாம்பணையிற் பள்ளியான்''[138] பாம்பணைப் பள்ளிகொண்ட பரமன்'' என்று மேலான திருமாலா கவும்[139] ''பாம்பணையில் பொருந்திய செல்வன்''[140] என்றும் கூறப்படுகின்றான்.

சிவனை வழிபடுமிடத்துப் பாம்பணை மேலிருந்து ஆனந்தத் தாண்டவத்தைத் தியானித்து மனம் நெகிழ்ந்தான் திருமால் என்ற குறிப்பு இடம் பெறுகின்றது.[141] மலரோனும், மாலும் பரவ நின்றவன் சிவன் என்னும் போது ''பைங்கொள் பாம்பணைப்பள்ளி கொள்ளண்ணல்''[142] ''படங்கொள் நாகத்தணையான்''[143] ''வரியராவதன் மிசைத்துயின்றவன்''[144] ''அரவணைப் பயில்மால்''[145] ''பேழ்வாய் அரவின் அணையான்''[146] என்றும் கூறப்படுகின்றான்.

திருமால் தன் உள்ளத்தில் வீதிவிடங்கப் பெருமானை உடை யவன் என்ற கருத்து இடம் பெறுகின்றது. இக்கருத்துத் திருவாரூர்ப் புராணத்தாலும், தியாகேசத் திருமேனியாலும் அறியப்படும். இங்கு ''பையஞ் சுடர்விடுநாகப் பள்ளிகொள்வான் உள்ளத்தான்'' என்ற உண்மையை உணர்த்தும் ஓவியமாக இக்கருத்து இடம் பெறு கின்றது.[147] ''மணிநாகப்பள்ளியான்''[148] ''பாம்பணைக் கடவுள்''[149] என்றே திருமால் குறிக்கப்படுகின்றான்.

---

135. சம். தே. - 3 - 55 - திருவான்மியூர் - 9 - 1 - 2
136. சம். தே. - 3 - 82 - திருஅவளிவணல்லூர் 9 - 1 - 4
137. திரு. நாவு. - 5 - 18 - திருக்கடம்பூர் - 193 - 1 - 4
138. திரு. நாவு. 6 - 93 - பலவகைத் திருத்தாண்டகம் 916 - 1 - 4
139. திரு. நாவு. - 5 - 68 - திருநள்ளாறு - 688 - 1 - 4
140. சம். தே. - 3 - 19 - திருஅம்பர்ப் பெருந்திருக்கோயில் 9 - 1 - 3
141. சம். தே. - 1 - கீழைத் திருக்காட்டுப் பள்ளி - பாடல் - 1 - 3 - 4
142. சம். தே. - 2 - 103 - திருஅம்பர் மாகாளம் - 9 - 1 - 2
143. சம். தே. - 2 - 118 - திருந்தியதைப்பதி - 9 - 1 - 2
144. சம். தே. - 3 - 93 - திருஅம்பர் மாகாளம் - 9 - 1 - 2
145. திரு. நாவு. - 5 - 64 - திருக்கோழம்பம் - 649 - 1 - 2
146. சுந். தே. - 7 - 52 - திருவாலங்காடு - 537 - 1 - 2
147. திரு. நாவு. - 4 - 4 - திருவாரூர் - 41 - 1 - 4
148. திரு. நாவு. - 4 - 12 - திருப்பழமை - 122 - 1 - 2
149. சம். தே. - 3 - 90 - திருத்திருத்தியும், திருவேள்விக்குடியும் - 9 - 1 - 2

அயனும், மாலும் காரணக் கடவுளர்களாகக் குறிக்கப்படு மிடத்துத் திருமால் ''அரவணையான்,[150] என்றும், சிவனருளால் ஆழி பெற்றவன் என்னுமிடத்துப் ''பாம்பணையான்''[151] என்றும், சிவனது பாகமாகத் திருமால் குறிக்கப்படுமிடத்து ''படமாடு பாம்பணையான்'' என்றும் குறிக்கப்படுகின்றான்.[152]

''காலே மிகவுண்டு காலேயிலாத கணமணத்தின் மேலே துயில் கொள்ளும் மாயோன்'' என்ற கந்தரலங்காரம் கூறும் செய்தியும், ''வாயுவான் பஞ்சடைத்துத் திருமால் துயிலும் மலரணையே'' என்ற செவ்வந்திப் புராணம் கூறும் செய்தியும் இங்கு ஒப்புநோக்கற்குரியன.

பாற்கடல் துயில்வோன் திருமால் என்ற செய்தியும் பல இடங் களில் பேசப்படுகின்றது. பாற்கடல் நஞ்சுண்டவனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்து ''மறிகடல் துயில்வோன்'' என்று திருமால் கூறப்படுகின்றான்.[153] அயனும், மாலும் காணாத கனலுருவானவன் சிவன் என்னுமிடத்துப் பாற்கடலில் யோக நித்திரை துயிலும் கரியவனாகத் திருமால் கூறப்படுகின்றான்.[154] இக்கருத்தில் முந்நீராகிய கடலில் துயிலும் ''நாரணன்'' என்று குறிக்கப்படு கின்றான்.[155]

பன்றியாய்க் கீழ்த்தோண்டிச் சென்றும் உணர்வதற்கு அரியவன் சிவன் என்னும்போது தேசங்கள் தொழ நின்று பாற்கடலில் அறிதுயிலோனாகக் காட்டப்படுகின்றான்.[156] அயனொடு மாலுங் காணாத சிவன் என்னுமிடத்து ''மஞ்சளாவிய கடற் கிடந்தவன்''[157] என்றும், ''நீர்மேலான்''[158] ''திரையான்''[159] என்றும் காட்டப் படுகின்றான். சிவனை வழிபடுமிடத்து ''விரிந்த பாற்கடலில் துயின்றவன்''[160] என்றும், மூவராய முதல்வன் சிவன் என்னு

150. திரு. நாவு. - 6 - 6 - திருஅதிகை வீரட்டானம் - 54 - 1
151. திரு. நாவு. - 6 - 86 - திருவாலம் பொழில் - 852 - 3 - 4
152. சுந். தே. - 7 - 17 - திருநாவலூர் - 1 - 2
153. சம். தே. - 1 - கீழைத் திருக்காட்டுப்பள்ளி - 8 - 2 - 3
154. சம். தே. - 1 - திருவிடைமருதூர் - 9 - 1 - 4
155. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 34 - 35
156. சம். தே. - 2 - 48 - திருவெண்காடு - 9 - 1 - 2
157. சம். தே. - 2 - 105 - கீழ்வேளூர் - 9 - 1 - 2
158. திரு. நாவு. - 6 - 99 - மறுமாற்றுத் திருத்தாண்டகம் - 974 - 3 - 4
159. திரு. நாவு. - 6 - 21 - திருஆக்கூர் - 220 - 1
160. சம். தே. - 2 - 94 - திருவாழ்கொள்புத்தூர் - 9 - 1 - 2

மிடத்துத் திருமால் பாற்கடல் துயில்வோனாகக் காட்டப்படு கின்றான்.[161] சிவனருளால் சக்கரம் பெற்றவன் என்னுமிடத்துக் ''கண் துஞ்சும் கருநெடுமால்'' என்று அரிதுயில் கொள்ளும் மாயோனாகக் குறிக்கப்படுகின்றான்.[162]

இக்குறிப்புகளையெல்லாம் நோக்கும்போது திருமால் பற்றிய இச்செய்திகள் முந்தைய இரு கால கட்டங்களிலும் இடம் பெற்றவையே. ஆயினும், அச்செய்திகள் அமையும் சூழல் பெரிதும் வேறுபடக் காண்கின்றோம். சிவனது அடிமுடி காணாதது, சிவனது பாகமாகத் திருமால், மூவருமானவன் சிவன், திருமால் சிவனை உள்ளத்தில் கொண்டமை, வழிபட்டமை, சிவனருளால் சக்கரம் பெற்றமை, தக்கன் வேள்வியில் வீரபத்திரரால் அடியுண்டமை, அயனும், மாலும் காரணக் கடவுளராதல், திரிபுரம் எரிக்கத் திருமால் கணையானமை போன்ற திருமால் பற்றிய செய்திகள் யாவும் சைவ இலக்கியங்களில் காணப்படும் புதிய செய்திகள், முந்தைய கால இலக்கியங்களில் காணப்படாதவை எனலாம்.

இப்புதிய செய்திகள் புகுந்தமைக்கான காரணங்களை ஆராயும் போது, பக்தி பாசுரங்களைப் பாடிய மூவர் முதலிகளும், பிறரும் சிவனைத் தலைவனாகக் கொண்டு பாடியவர்கள். சிவனுக்குத் தலைமை தந்து புகழ வேண்டிய நிலையில் சிவன் பெருமை கூறும் வடபுலத்து நூற்செய்திகளை ஏற்கனவே தமிழில் இருந்த செய்தி களோடு கலந்து பாடியிருக்கலாம்.

வடபுலத்திலிருந்து வந்த இதிகாச, புராண, காவியங்களின் செய்திகளை எடுத்துப் பாடுவதன் மூலம் தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் உரியவனாக்கும் நிலை ஏற்பட வாய்ப்புள்ளது. வடபுலத்திலிருந்து வந்தேறிய பௌத்த, சமணங்களை வீழ்த்தி வெற்றி பெறுவதற்கு வடபுலத்துப் புராணச் செய்திகளையும் தமிழ்ப் பாசுரங்களில் அமைத்து வெளியிட வேண்டிய நிலை ஏற்பட் டிருக்கலாம். அவ்வாறு வடக்கையும், தெற்கையும் இணைக்கும் பொழுது வடநூற்களிலுள்ள திருமால் பற்றிய புதிய தகவல்களும் தமிழுக்கு வந்திருக்கலாம்.

**திருமால் - அவதாரங்கள் :** வைணவமும், சைவமும் இரண்டும் அருள்நெறிகள் என்பர். இவ்வருள், இரண்டு நிலைகளில் வெளிப் படுகின்றன. இறைவன் நம் பொருட்டு இறங்கி வருதல் ஒன்று;

---

161. திரு. நா. - 4 - 4 - திருவாரூர் - பாடல் - 37 - 1 - 4
162. திரு. நாவு. - 6 - 52 - திருவீழிமிழலை - 525 - 1

மற்றொன்று கீழ் நிலையிலிருக்கும் நம்மைத் (உயிர்களை) தன் நிலைக்கு உயர்த்துதல். இவ்விரு நிலைகளிலும் இறைவன் பேரருளைப் பலவாக நினைவு கொள்வர்.

இறைவன் வேதம் முதலான சாத்திரங்களைக் கொடுத்தல் முதலான பல வழிகளாலும் மக்களைத் திருத்த முயன்றும் அவர்கள் திருந்தாமை கண்டு கழிபேரிரக்கம் கொண்டவனாய் மக்களைக் கரை சேர்க்கக் கருதி, தாமே சென்று திருத்தக் கடவோமென்று இமையோர் தலைவனான அவன் மனிதனாகத் தோன்றி இராமன், கிருட்டிணன் முதலிய அவதாரங்களைச் செய்து நீதியை நிலை நாட்டுவான் என்பது இதிகாசங்களால் அறியப்படும் செய்தியாகும்.

அவதாரம் என்ற சொல்லுக்கு ''இறங்கி வருதல்'' என்பதுதான் பொருள். ''அவதாரம்'' என்பது ஒரு நிலையில் தீயோர்களை அழித்து நல்லோர்களைக் காத்தற்காக இறைவன் மேற்கொண்டதாகக் ''கீதை'' போன்ற நூல்கள் கூறினும் உயிர்களுக்கு அருளவே மேற்கொண்டதாகக் கூறுவது வைணவக் கோட்பாடாகும். இறங்கி வந்து அருளுவதை வைணவம் கூறுவது போன்று சைவமும் கூறும். இறைவன் உயிர்களிடம் கொண்ட கருணையினால் ''அருட் கோலம் கொண்டு எழுந்தருளுகின்றான்'' என்பர். வைணவர்கள் கொள்ளும் அவதாரக் கருத்துக்கும், சைவர்கள் கூறும் கருணைக் கோலத்துக்கும் சிறிது வேறுபாடுண்டு. இறைவன் அருட்கோலம் ''தாய் வயிற்றில் பிறப்பதன்று'' என்பது சைவர்கள் உறுதி. நம்மை உய்விப்பதற்கு நம் போன்று பிறவியெடுத்தும் வருகிறான் என்பது வைணவ சித்தாந்தம்.[163]

அவதாரம் என்ற சொல் சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப்படாமைபோல இச்சைவ இலக்கியங்களிலும் காணப் படவில்லை. ஆயினும் அவ்விரு கால இலக்கியங்களில் அவதாரம் என்ற சொல் இடம் பெறாவிடினும் அவதாரக் கருத்துக்கள் இடம் பெறுவதைப் போல இங்கும் இடம் பெறுகின்றன. பத்து அவதாரங்கள் எடுத்தவன் திருமால் என்ற குறிப்பு இரு இடங்களில் இடம் பெறுகின்றது. மாலும் அயனும் அறிய முடியாதவன் சிவன் என்னும்போது ''ஆகம்பத்து அரவணையான்'' என்று பத்து உடம்பு கொண்ட தசாவதாரம் எடுத்தவன், பாம்பணைமேல் அறிதுயில் புரிபவன், மண் அகழ்ந்தும் சிவனைக் காணாதவன் என்றும் கருத்தமையப் பேசப்படுகின்றான்.[164] சிவனுக்கு விடையானவன்

---

163. பக்தி இலக்கியம் - டாக்டர் ப. அருணாசலம், பக்கம் - 151

164. திரு. நாவு. - 4 - 89 - திருநெய்த்தானம் - 858 - 1 - 3

திருமால் என்ற குறிப்பு அமையுமிடத்தில் "ஒன்றற்குப் பத்தாகப் பிறவி கூர்ந்த மாலாகிய விடை;;[165] என்று குறிப்பமையக் கூறப் படுகின்றான்.

பலராம அவதாரம், கூர்மாவதாரம், மச்சாவதாரம், கல்கியவ தாரம் தவிர்த்த பிற அவதாரக் குறிப்புகள் இச்சைவ இலக்கியங் களில் இடம் பெறுகின்றன. பலராம அவதாரம் சங்க காலத்திலும், சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் மிகுதியும் இடம் பெற் றுள்ளது. இச்சைவ இலக்கியங்களில் பலராமன் பற்றிய குறிப்பு இடம் பெறவில்லை. கூர்மாவதாரம் சங்கம், சங்கம் மருவிய கால இலக் கியங்களில் இடம் பெற்றுள்ளது. சைவ இலக்கியங்களில் காணப் படவில்லை. வராக அவதாரக் குறிப்புகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறவில்லை. இச்சைவ இலக்கியங்களில் இடம் பெறுகின்றது. பரசுராம அவதாரக் குறிப்பு ஓரிடத்திலும், நரசிம்மாவதாரக் குறிப்புகள் ஐந்து இடத்திலும் அமைகின்றன. வராக அவதாரக் குறிப்புகள், அவற்றினும் மிகுதியாக இராமவதாரக் குறிப்புகள், அதனையடுத்து வாமனாவதாரக் குறிப்புகளும், அவற்றினும் மிகுதியாகக் கிருட்டிணாவதாரக் குறிப்பு களும் இச்சைவ இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன,

இவற்றுள்ளும் இராமாவதாரம், வாமனாவதாரம் இரண்டும் அவதாரப் பெயர்களோடு விளக்கம் பெறுகின்றன. பிற அவதாரங்கள் செய்திக் குறிப்புகளாக அமைகின்றன. ஓர் அவதாரக் குறிப்பு இடம்பெறும் இடத்தில் மற்றொரு அவதாரக் குறிப்பு சேர்த்துக் கூறப்படும் தன்மை ஒரு சில இடங்களில் காணப்படு கின்றது. சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப் படுவதுபோலத் திருமாலின் அவதாரக் கருத்துகளை மன்னர்கள் மேல் ஏற்றிக்கூறும் வழக்கை இச்சைவ இலக்கியங்களில் காண முடிய வில்லை. முந்தைய கால இலக்கியங்களில் போல இயற்கைக் காட்சி களில் உண்மையாகவோ, வேறு இடங்களில் ஒப்புமையாகவோ இவ்வவதாரக் குறிப்புகள் அமையவில்லை. ஆயினும் சிவனுக்கு ஏற்றம் தந்து சிவனது புகழ் பாடும் இவ்விலக்கியங்களில் திருமாலின் இயல்புகள் பல, சிவனுக்கு ஏற்றி உரைக்கப்படுவதைக் காண முடி கின்றது. சிவனது பெருமை கூறவே திருமால் பற்றிய செய்திகள் அமைந்தாலும் அவற்றுள்ளும் திருமாலின் அருட் பண்புகள் வெளிப் படப் பேசப்படுவதைக் காண முடிகின்றது.

**வராக அவதாரம் :** ஆதி வராகமான அரி வழிபட அருள் செய்த சிவனது சிவபுரத்தின் சிறப்புக் கூறப்படுமிடத்தில் வராக

165. திரு. நாவு. - 4 - 89 - திருநெய்த்தானம் - 858 - 1 - 3

அவதாரம் முழுமையாக வருணிக்கப்படுகின்றது. கறுத்த மேனியோடு நகங்களையுடையவனாக, மதம் மிக்க நீளமான முகத்தில் பிறை மதியைப் போன்ற கோரப் பல் உடையவனாக உருவெடுத்த திருமாலின் வடிவம் சித்தரிக்கப்படுகின்றது. அவனது சக்தி பூமியாதலின் அவனது வராகத் தந்தத்தில் இதமாக இருந்தாள் என்று நிலமகள் குறிக்கப்படுகின்றாள்.[166] இங்கு ஓரிடத்தில் மட்டுமே நிலமகளுடன் சேர்த்துத் திருமால் பேசப் படுகின்றான்.

நாவுக்கரசரும் இக்கருத்தைக் கூறுகின்றார். ''பிறை எயிற்று வெள்ளைப் பன்றிப் பிரியாது வழிபட்டேத்தும் சிவன்'' என்ற குறிப்பு இடம் பெறுகின்றது. வராகமான திருமால் இவ்வடிவத்துடன் நிலத்தை ஊழி வெள்ளத்திலிருந்து எடுத்து நிறுத்தியபின் இத்தலத்தில் சிவனை வழிபட்டனன் என்பது புராணம்.[167]

திருமால் வராக அவதாரம் கொண்டு பூமியைப் பிரளய வெள்ளத்தில் ஆழாதபடி கொம்பில் ஏற்று நிறுத்திய பின்னர்ச் செருக்குற்று உலகைத் துன்புறுத்தியமையால் சிவபிரான் அதனை அழித்து அதன் கொம்பினை மார்பிற்கு அணிகலனாக அணிந்தனர் என்பது புராண வரலாறு. இது தோன்ற ''முது கேழல் முளை மருப்புங் கொண்டார்'' என்று சிவன் குறிக்கப்படுகின்றான்.[168]

இங்ஙனம் சிவனுக்கு ஏற்றம் தருவது போலத் திருமால் சிவனை வழிபட்டதாகவும், திருமாலின் செருக்கைச் சிவன் அழித்ததாகவும், அமையுமிடங்களில் இவ்வவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது.

**நரசிம்மாவதாரம் :** காக்கும் மன்னர்க்கெல்லாம் தலைவன் காத்தற் கடவுளாகிய திருமால் என்ற குறிப்பு அமைகின்றது. இரணியனைக் கொன்ற பழிபோகப் பூக்களைக் கொண்டு பூசித் தமையால் ''பூந்தாராய்'' எனவும் அழைக்கப்பெற்றது எனத் தலப்பெயர்க் காரணம் கூறப்படுமிடத்தில் நரசிம்மாவதாரக் குறிப்பு இடம்பெறுகின்றது.[169] அயனும் மாலும் அறியாத அழலுருவானவன் சிவன் என்னும் போது ''இரணியன் ஆகங் கீண்டவன்'' என்று நரசிம்மாவதாரப் புகழ் தோன்றப் பேசப்படுகின்றான்.[170] இதே

166. சம். தே. 1 - திருச்சிவபுரம் - 7 - 1 - 4
167. திரு. நாவு. - 6 - 87 - திருச்சிவபுரம் – 865 - 3 · 4
168. திரு. நாவு. - 6 - 96 - தனித்திருத்தாண்டகம் - 940 - 1
169. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 6 - 3 - 4
170. திரு. நாவு. - 4 - 20 - திருவாரூர் - 207 - 1 - 2

கருத்தில் இருவரும் அறியா ஆரழலானவன் சிவன் என்னுமிடத்து ''உயர்ந்த நகத்தால் அன்றிப் பிற கருவிகளால் அழியாதவனாகிய இரணியனை அழகிய கற்றூணில் தோன்றிச் சிரித்தழித்த, பொன்னிறமாய்த் தோன்றிய நரசிங்கமாகிய திருமால்'' என்று நரசிம்மாவதாரக் குறிப்பு விளக்கமாக அமைகின்றது.[171]

திருமால் அம்பாக நின்று, திரிபுரம் அழியத் துணை புரிந்த செயல் குறிக்கப்படுமிடத்தில் நரசிம்மாவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. எல்லாரையும் வெற்றி கொள்ளும் திருமால் என்றும், நரசிங்கமாய்த் தோன்றிய தன்மையைக் கொண்டும் ''கோளரி'' என்று குறிக்கப்படுகின்றான்.[172]

திருமால் நரசிங்கமாய்த் தோன்றி இரணியனை அழித்து அவன் குருதியைப் பருகினமையால் செருக்குற்று உலகத்தை அழிக்கத் தொடங்க, தேவர்கள் முறையீட்டிற்காகச் சிவன் சரபமாய்த் தோன்றி அதனை அழித்து, அதன் தோலைப் போர்த்திக் கொண்டான் என்பது புராண வரலாறு. இதனைச் ''சரபோப நிடதமும்'' கூறும். இக்கருத்தமைய ''சிங்கத்துரி மூடுதிர், தேவர் கணந்தொழ நிற்றீர்'' என்று சிவன் குறிக்கப்படுகின்றான்.[173]

இங்ஙனம் இவ்வவதாரக் குறிப்பு மூவர் தேவாரங்களில் மட்டுமே அமைகின்றது. சங்க இலக்கியங்களில் பரிபாடலில் ஓரிடத்தும், சங்கம் மருவிய காலத்தில் சிலம்பில் ஆய்ச்சியர் குரவையில் ஓரிடத்தும் இவ்வவதாரச் செய்தி கூறப்படுகின்றது. சைவ இலக்கியங்களில் சிவனுக்கு ஏற்றம் தரும் செய்திகளில் இவ்வவதாரக் குறிப்பு அமைந்தாலும், எல்லோரையும் வெற்றி கொள்ளும் திருமாலாகவும், தீமையை அழித்து நன்மையைக் காக்கும் இறைவனாகவும் திருமால் சுட்டப்படக் காணலாம். இவ்வாறு அமையுமிடங்களில் ஓரிரு இடங்களில் செய்திக் குறிப்பாகவும், ஓரிரு இடங்களில் விளக்கமாகவும் இவ்வவதாரக் கருத்து அமைகின்றது.

**பரசுராமன்:** சங்க இலக்கியத்தில் ஓரிடத்தும், சங்கம் மருவிய கால இலக்கியத்தில் மணிமேகலையில் ஓரிடத்து மட்டுமே பேசப்படுவதைப் போல இவ்வவதாரக் குறிப்புச் சுந்தரர் தேவாரத்தில் மட்டும் ஓரிடத்தில் பேசப்படுகின்றது.

---

171. திரு. நாவு. - 6 - 84 - திருச்செங்காட்டங்குடி - 833 - 1 - 3
172. திரு. நாவு. - 6 - 60 - திருக்கற்குடி - 609 - 1 - 2
173. சுந். தே. - 7 - 2 - திருப்பரங்குன்றம் - 17 - 1 - 2

இங்கு அழகிய திருநின்றியூரில் உள்ள இறைவனாகிய சிவனிடத்து அன்பு செய்தவனாகப் பரசுராமன் குறிக்கப்படுகின்றான். முந்நூறு வேதியரொடு முந்நூற்றறுபது வேலிப் பரப்புள்ள நிலத்தைத் ''திருநின்றியூர்'' என்று பெயரிட்டு, பொன்னாலாகிய கலசங்களைக் கொண்டு நீர் வார்த்து அளிக்கத் தன் திருவடியை அளித்தவன் சிவன் என்ற குறிப்பு அமைகின்றது.[174] இஃது இத்தலத்தின் தோற்றம் பற்றிய புராண வரலாறு. இது பரசுராமனுக்கு செய்த சிவனது திருவருளைக் காட்டுவதாக அமைகின்றது.

இவ்வவதாரக் குறிப்பும் சிவனது பெருமை தோன்றக் கூறப்பட்டாலும், பரசுராமனாகிய, திருமாலின் ஆற்றல் தோன்றவும் கூறப்படுவதைக் காணலாம்.

**இராமாவதாரம்:** சங்க இலக்கியங்கள், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப்படுவதைப் பார்க்கிலும் இவ்வவதாரம் பற்றிச் சிறிது மிகுதியான செய்திகள் இச்சைவ இலக்கியங்களில் அமைகின்றன. இவ்வவதாரக் குறிப்புகளில் எல்லாம் இராவண வதம் பற்றிய செய்தியே மிகுதியும் இடம் பெறுகின்றது. சம்பந்தர், நாவுக்கரசர் தேவாரங்களிலேயே இக்குறிப்புகள் இடம் பெறுகின்றன.

இக்குறிப்புகளில் இராமன் திருமாலின் அவதாரம் என்ற கருத்து பல இடங்களில் வலியுறுத்தப்படுகின்றது. சிவனுக்கு ஏற்றம் தரும் கருத்துக்களில் பெரும்பாலும் இராமாவதாரக் குறிப்புகள் அமைந்தாலும் அவ்வவதாரத்திற்குரிய பண்புகள் பலவும் விளங்க இராமன் பேசப்படுகின்றான்.

திருமாலின் அவதாரங்களுள் ஒருவன் இராமபிரான் என்றும், அவன் இராவணனை அழித்தபின் இலங்கையினின்று திரும்பும் போது இராமேச்சுரத்தில் சிவனை மலர்கள் கொண்டு வழிபட்டான் என்றும், இராவணனை அழித்த இராமனது பாதகம் தீர்த்த பிஞ்ஞகனாகச் சிவனும் குறிக்கப்படுகின்றான். இது இராமேச்சுரத் தலவரலாறாகக் கூறப்படுகின்றது. இத்தகு குறிப்புகளே எல்லா இடங்களிலும் பேசப்படுகின்றன.[175]

இராவணன் ''அழித்த சிலையண்ணல்'' என்று இராமாவதாரத்திற்குரிய ''வில்'' சிறப்போடு இராமன் குறிக்கப்படுகின்றான்.

---

174. சுந். தே. - 7 - 65 - திருநின்றியூர் - 667 - 1 - 4
175. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 2 - 1 - 4

''ஈனமிலாப் புகழண்ணல்'' செய்த இராமேச்சுரம் என்றும்,[176] வில்லியாகிய இராமன் மகிழ்ந்தேத்திய இராமேச்சுரம்[177] ''கடலை அணையால் அடைத்து அன்று வழி செய்த இராமன்''[178] ''அவுணர்களை அழித்த இராமபிரான்''[179] ''அரக்கரைக் கொன்று வீழ்த்திய சிலையினான்[180] என்றும் இராவணனை அழித்த செய்தி இடம் பெறும் இடங்களில் இராமன் வில்லாற்றல் தோன்றப் போற்றப்படுகின்றான். அரசியாகிய சீதையின் கணவன் என்பது தோன்றவும், பல வரங்களாலும், ஆற்றலாலும் நிறைந்த அரக்கர் கூட்டத்தையும், இராவணனையும் அழித்தவன் என்பதும் பெறப்படக் கூறப்படுகின்றான். இவ்விடங்களிலெல்லாம் இராவணனும் அவனது பெருவலி தோன்றப் பல்வேறு தொடர்களால் விளக்கமுறுவதையும் காணலாம். இராமன், திருமாலின் அவதாரமாகப் பல இடங்களில் காட்டப்படுகின்றான். அயனும், மாலும் நாடி நின்றேத்தும் கோயில் இராமேச்சுரம் என்று கூறப்படுகின்றது. இங்கு இராமன் ''மால்'' என்றே குறிக்கப்படுகின்றான்.[181] பாற்கடலில் துயிலும் திருமாலிடம் அமரர் துயரை முறையிட இராமனாகப் பிறந்தமை குறித்து இராமனை ''நீரிடைத் துயின்றவன்'' என்று திருமாலின் அவதாரமாகக் காட்டுகின்றார் சம்பந்தர். இங்கு சாம்பவான், சுக்ரீவன், அனுமான் தொழ நின்ற இராமனாகத் திருமால் சுட்டப்படுகின்றான்.[182]

''மாலொடும் பொருதிறன் வாளரக்கன்''[183] என்றும், பிரமனும், மாலும் அறியாதவாறு நெருப்பு வடிவானவன் சிவன் என்னும் போதும், இராமன் திருமாலாகச் சுட்டப்படுகின்றான்.[184] சீதையை மீட்டுவரச் செய்த வினைமுடிந்து மலைகளைக் கடலில் அடைத்து, நீரகற்றி நிலமாக்கி அத்திடலில் திருக்கோயில் செய்த திருமால் என்று திருமாலின் அவதாரமாக இராமபிரான் குறிக்கப் படுகின்றான்.[185]

---

176. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 3 - 1 - 4
177. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 4 - 1 - 4
178. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 6 - 1 - 4
179. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 589
180. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 595
181, சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் 8 - 1 - 4
182. சம். தே. - 2 - 33 - திருவுசாத்தானம் - 1 - 1 - 2
183. சம். தே. - 2 - 35 - தென்குடித்திட்டை - 8 - 1 - 2
184. சம். தே. - 3 - 79 - திருக்கோகவரணம் 9 - 1 - 2
185. திரு. நாவு, - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 590

அரக்கர்களைக் கொன்று போர் வெற்றிதரும் சக்கரப் படையை யுடைய அழகிய மாலாக இராமன் குறிக்கப்படுகின்றான்.[186] மூவுலகிற்கும் அதிபதியாகிய இராவணனை அழித்த தீரச் செய லுடைய இராமபிரான் மாலின் அவதாரமாகக் காட்டப்படு கின்றான்.[187] ''அரக்கர் தம்மை வீட்டித் தேர்வலம் சென்ற மால்'' என்றும்,[188] தக்க படையால் தாக்கி அரக்கர் உயிரை உண்ட மால் செய் கோயில் என்றும்,[189] குன்றினார் தம்மைச் சக்கரத்தால் எறிந்து தேடி மால் செய்த கோயில்,[190] வாளரக்கனை அழித்த ''செங்கண்மால்'' செய்த கோயில்,[191] ''அரக்கர் கோனை அழித்து மீண்டு மால் செய்த கோயில்''[192] என்றும் குறிப்புகள் அமைகின்றன. ''செங்கண்மால் சிலை பிடித்துச் சேனையொடுஞ் சேதுபந்தனஞ் செய்து சென்று புக்கும், பொங்கு போர் பல செய்து புகலால் வென்ற போரரக்கன்'' என்று கூறுமிடத்து அடைக்கலமாக வந்தடைந்த சுக்ரீவன், வீடணன் என்பவர்களைக் காத்த குறிப்போடு வென்ற வனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[193]

திருவாமாத்தூர் தல வரலாறு கூறப்படுகின்றது. இங்கு ''இராமனும் வழிபாடு செய் ஈசன்'' என அவதாரப் பெயரோடு திருமால் குறிக்கப்படுகின்றான்.[194]

''தசரதன் மகன் அசைவு தவிர்த்தான் சிவன்'' என்னும்போது தசரதன் மகனாக இராமன் குறிக்கப்படுகின்றான்.[195]

இராமபிரான் சீதையை இழந்த பின்னர் அடைந்த துன்பத் தையும் சீதையை மீட்ட பின்னர் இராவணனைக் கொன்ற பழியினால் எய்திய துன்பத்தையும், சிவபிரானைப் பூசித்து நீங்கப் பெற்றனன் என்பது வரலாறு. அவற்றை அறிவிக்கும் மேற்குறித்த தலக்குறிப்புகள் அதற்குச் சான்றாக நிற்கின்றன.

---

186. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 591
187. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 592
188. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 593
189. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 594
190. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 596
191. திரு. நாவு. - 4 -61 - திரு. இராமேச்சுரம் - 597
192. திரு. நாவு. - 4 - 61 - திரு. இராமேச்சுரம் - 598
193. திரு. நாவு. - 6 - 58 - திருவலம்புரம் - 590 - 1 - 3
194. திரு. நாவு. - 5 - 44 - திருஆமாத்தூர் - 440 - 3
195. திரு. நாவு. - 6 - 73 - திருவலஞ்சுழியும், திருக்கோட்டையூர் கோடீச்சரமும் - 731 - 1 - 2

சிலையினான், சிலையண்ணல், வில்லி, சக்கரப் படையோன், குற்றமிலாப் புகழோன் என்று கூறும் சம்பந்தர், நாவரசர் வாக்குகளால் பேராற்றலும், பெருவலியும் தோன்ற இராவணனை அழித்த இராமபிரானின் சிறப்பு பேசப்படுகின்றது.

இராமேச்சுரத் தலத்தின் பெருமை கூறுமுகத்தான் இக்குறிப்புகள் அமைகின்றன. மாலால் காண முடியா உருத்தன், மாலுக்கு ஆழி ஈந்தவன், மால் வதம்செய்த இராவணனை ஒரு விரலால் அடர்த்து வென்றி கொண்டவன், திருமாலால் மலர்கள் தூவி வழிபடப் பெற்றவன் என்று சிவனது புகழ் பேசப்படுமிடங்களில் இராமாவதாரக் கருத்து இடம் பெறக் காணலாம். இத்தகைய இராமன் இராமேச்சுரத்தில் செய்த கோயிலை வணங்கினார் வினை நீங்கப்பெறுவர் என்ற குறிப்பும் மிகுதியும் இடம் பெறுகின்றது. ''தேடி மரல் செய்த கோயில் திரு இராமேச்சுரத்தை நாடி வாழ் நெஞ்சமே நீ நன்னெறி யாகுமன்றே'' என்பது திருநேரிசை. அத்தகைய இராமேச்சுரத்தை தான் தொழுவதாக நாவுக்கரசரும், சம்பந்தரும் பலவிடத்துக் கூறுகின்றனர். இக்குறிப்புகளிலெல்லாம் இராமன் திருமாலின் அவதாரம் என்பதனையும், சங்கம், சங்கம் மருவிய காலம் போல இராமாயணச் செய்திகளை மிகுதியும் அறிந்திருந்தனர் என்பதையும், அவற்றுள்ளும் இராவண வதமே மிகுதியும் பேசப்படுவதையும் காண்கிறோம். இவ்வவதாரக் கருத்து இடம் பெறுமிடத்தில் வேறு அவதாரக் கருத்துக்கள் சேர்த்து பேசப்படவில்லை என்பதும், சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறுவது போல இக்கருத்துகள் பிற செய்திகளுக்கு உவமமாக அமையாமையும் நோக்கத்தக்கது.

இராமாயணக் கருத்துகள் சிலவும் இவ்விலக்கியங்களில் கூறப்படுகின்றன. இராமபிரானுக்காக இராவணனைப் பொருதவன் சடாயு என்றும், அவன் வழிபட்ட தலப்பெருமை கூறப்படுமிடத்து இராமாவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது.[196] இராவணன் தான் பெற்ற வரத்தினால் நவக்கிரகங்களைச் சிறையிட்டு, இந்திரசித்து பிறந்த பின்னர் விடுதலை செய்தான் என்ற இராமாயணக் குறிப்பு சம்பந்தர் தேவாரத்தில் இடம் பெறுகின்றது.[197] தன் வரத்தின் ஆற்றலால் சூரியன் தன் நகருக்கு மேலே நேரே செல்லக்கூடாது என ஆணை செய்த குறிப்பும் இடம் பெறுகின்றது.[198] இவை முந்தைய

---

196. சம். தே. - 2 - 13 திருப்புள்ளிருக்கு வேளூர் - 10 - 3 - 4
197. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 7 - 1 - 4
198. சம். தே. - 3 - 10 - திரு. இராமேச்சுரம் - 11 - 1 - 2

சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப்படாதவை. இச்சைவ இலக்கியங்களில் காணப்படுகின்றன.

**வாமனாவதாரம் :** அயனும், மாலும் அறியவொண்ணாத தலைவன் சிவன் என்று கூறுமிடங்களில் வாமனாவதாரக் குறிப்பு பலமுறை இடம் பெறுகின்றது. ''மண்ணும் விண்ணும் தாய வடியளந்தான்''[199] ''நெடியோன்''[200] ''வையம் அளந்தான்''[201] ''முந்தி இவ்வையத்தைத் தாவி அளந்த மால்''[202] ''உலகத்தை உரித்தாக்க அளந்த திருமால்''[203] ''வையந்தாயவன்''[204] ''மண்ணினை முன் சென்றிரந்த மால்''[205] ''தரணியளந்தான்''[206] ''குறளாய் நிமிர்ந்தவன்''[207] ''மாணாயுலகங் கொண்ட மால்''[208] ''குறிய மாணுருவாகிக் குவலயமளந்தவன்''[209] ''முன்னந் தாவி யடி மூன்றளந்தவன்''[210], ''மாவலி பால் காணிக் கிரந்தவன்''[211] ''மாணியாய் மண்ணளந்தவன்''[212] ''மாலாகி உலகளந்த படியான்''[213] ''மாணா வுருவாகியோர் மண்ணளந்தான்''[214] எனப் பல்வேறு தொடர்களால் வாமனாவதாரச் செய்தி கூறப்படுகின்றது. இவ்விடங்களில் சிலவிடத்து இகழ்ச்சிக் குறிப்பாக வாமனாவதாரச் செய்தி அமைந்தாலும், பிரமனை உந்தித் தாமரையில் தோற்றுவித்த திருமாலாகத் தந்தை -- மகன் உறவு தோன்றவும், திருமாலின் அவதாரமே வாமனன் என்ற கருத்துத் தோன்றவும் உலகை அளந்த பேராற்றல் தோன்றவும் கூறப்படுகின்றான்.

திருமால் நெடியவனாயினும் அவன் நின்ற இடமும் காலமும் நீங்க ஏனைய இடத்தும் எக்காலத்தும் நிறைந்தான் அல்லன், சிவன்

---

199. சம். தே. - 1 - திருத்தூங்கானை மடம் - 9 - 3 - 4
200. சம். தே. - 1 - திருப்பழனம் - 9 - 1 - 4
201. சம். தே. - 1 - திருநல்லூர் - 9 - 1 - 2
202. சம். தே. - 1 - திருப்பரங்குன்றம் - 9 - 1 - 4
203. சம். தே. - 1 - திருக்கள்ளில் - 9 - 1 - 3
204. சம். தே. - 2 - 41 - திருச்சாய்க்காடு - 9 - 1 - 2
205. சம். தே. - 2 - 45 - திருக்கைச்சினம் - 9 - 1 - 2
206. சம். தே. - 2 - 54 - திருப்புகலி - 9 - 1 - 2
207. சம். தே. - 2 - 58 திருக்குடவாயில் - 8 - 1 - 2
208. சம். தே. - 2 - 59 - சீகாழி - 9 - 1 - 2
209. சம். தே. - 2 - 95 - திருவரசிலி - 9 - 1 - 4
210. சம். தே. - 2 - 121 - திருப்பாதிரிப்புலியூர் - 9 - 3 - 4
211. திரு. நாவு. - 4 - 108 - திருமாற்பேறு - 1026 - 1 - 2
212. திரு. நாவு. - 5 - 16 - திருப்பேரெயில் - 161 - 3 - 4
213. திரு. நாவு. - 6 - 48 - திருவலிவலம் - 488 - 1 - 2
214. சுந். தே. - 7 - 3 - திருநெல்வாயில் அரத்துறை - 30 - 1

என்றும், எங்கும் பேரொளியாய் நிறைந்தான் என்று சிவன் பெருமையினை விளக்குமிடத்து வாமனாவதாரச் செய்தி இடம் பெறுகின்றது.[215] அயனும் மாலும் காணாச் சிவன் என்னும்போது, தரணியளந்தான் என்று திருமால் குறிக்கப்படுகின்றான். இங்கு ஓங்கியவன் சிவன், இழிந்தவன் அரி என்ற குறிப்போடு பேசப் படுகின்றான்.[216]

நான்கு முகத்தானும் வேதங்களை வல்லவன் தன் கலையறி வினாலும் உலகம் அளந்தவன் தன் உடல் வலியினாலும் காணாவாறு அழல் வடிவாய் நீண்டவன் சிவன் என்னும்போது இப்பூமியை நீரினால் தத்தம் பண்ணி மாவலியிடம் யாசித்துப் பெற்றவன் என்று இகழ்ச்சி தோன்றக் கூறப்படுகின்றான்.[217] அயனும் மாலும் தேடியுங் காண்பரியன் சிவன் என்னுமிடத்து ''சிறப்பில்லாத குறள் உருவாகி உலகளந்த திருமால்'' என்று கூறப்படுகின்றான்.[218]

அடிமுடி தேட ஏனமாகிச் சென்ற வரலாறு கூறப்படுமிடத்தில் வாமனாவதாரம் விளக்கம் பெறுகின்றது. அயன் முதலான தேவர்களெல்லாம் வழிபட, இரண்டடியினால் மூவுலகையும் அளந்து, நான்கு திசையினுமுள்ள முனிவர்கள் வணங்கும், ஒளிவீசும் திரு முடியினையுடைய பெருமை மிக்க திருமால் என்றும், அத்தகையோன் சிவனது திருவடிகளைப் பன்றி வடிவெடுத்துக் காணாது தன் தோல்வியுணர்ந்து சிவனை வழிபட்டான் என்று தேவருட் சிறந்த திருமால் செருக்கு அறாமையால் இறைவன் திருவடிகளைக் காணாப்பெருமை கூறினார்.[219] இங்கு வாமன அவதாரமும், வராக அவதாரமும் தோன்றத் திருமால் கூறப் படுகின்றான்.

திருமால் அசுரர் வானோருடன் அமுது கடைந்த குறிப்பு இடம் பெறுமிடத்து மாவலியிடம் மூவடி மண்ணளந்த வரலாறு குறிக்கப் படுகின்றது.[220]

மூவருமானவன் சிவன் என்று சிவபிரானை மாயோனாகவும், பிரமனாகவும் கூறுமிடத்து, ''மேனி வையம் அளந்தவன்'' என்று

---

215. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 1 - 4
216. சம். தே. - 2 - 54 - திருப்புகலி - 9 - 1 - 2
217. சம். தே. - 3 - 66 - திருவேட்டங்குடி - 9 - 1 - 2
218. சுந். தே. - 7 - 3 - திருநெல்வாயில் அரத்துறை - 30 - 1
219. திரு. வா. - சகத்தின் உற்பத்தி - 1 - 10
220. திரு. நாவு. - 4 - 71 - திருநாகைக்காரோணம் - 691 - 1 - 2

திருமால் வாமனாவதாரக் கருத்துத் தோன்றக் குறிக்கப் படுகின்றான்.[221]

மால் வழிபட்ட சிவன் எழுந்தருளியுள்ள தலப்பெருமை கூறப் படும்போது ''மாவலியை வென்ற குறளனாகிய திருமால்'' என்று குறுகிய பிரமசாரி வடிவத்தை எடுத்த வாமனாவதாரச் சிறப்புத் தோன்ற அழைக்கப்படுகின்றான்.[222]

சிவனருள் பெற்றதாக அமையுமிடங்களிலும் இவ்வவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. அழலுருவான சிவனைக் காண இயலாது நாணிய அயனுக்கும் மாலுக்கும் அவர்கள் நாணத்தைப் போக்கி அருள் செய்தான் சிவன் என்னுமிடத்துத் திருவிக்கிரமாவ தாரத்தில் வானையளந்த திருமால் என்ற குறிப்போடு ''சேணியலும் நெடுமால்''[223] என்று குறிக்கப்படுகின்றான்.

மாவலியிடத்தில் மூவடி மண்ணிரந்து மூவுலகும் அளந்த வரலாறு தோன்ற ''மண்ணினைத் தாவ நீண்ட மால்'' என்றும் அவனுக்கு அருள் செய்தது சிவன் என்றும் குறிப்பு அமைகின்றது.[224] திசைமுகனும், திருமாலும் அறியாத எரியுருவத்தன் சிவன் என்னும் போது ''பொற்பமர் வாமனன்''[225] என்றும், ''தரணியளந்த வாமனன்''[226] என்றும் அழகு பொருந்திய வாமனனாக அவதாரப் பெயரோடு விளக்கம் பெறுகின்றான்.

மேற்குறித்த குறிப்புகளால் வாமன அவதாரம் மிகவும் விளக்கமாக அமையாவிட்டாலும் மாவலியிடம் நீரேற்றுத் தன் ஈரடியால் மூவுலகும் அளந்த செய்தி தோன்றத் திருவிக்கிரமனாகிய வரலாற்றுக் குறிப்பு அமைகின்றது. சிவனது பெருமை கூறப்படு மிடங்களில் இவ்வவதாரக் குறிப்பு அமைந்தாலும் திருமாலின் பேருருவும், திருவடிப் பேராற்றலும் தீமையை அழிக்கும் பண்பும் தோன்றக் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் அமையக் கூறுகின்ற போக்கையும் அவதாரப் பெயரோடு இரண்டு இடங்களில் விளக்கம் பெறுவதையும் காண முடிகின்றது.

---

221. திரு. நாவு. - 6 - திருஎறும்பியூர் - 898 - 2 - 3
222. சம். தே. - 1 - திருக்கண்ணார்கோயில் - 51 - 4
223. சம். தே. - 3 - 64 - திருப்பெருவேளூர் - 9 - 1 - 4
224. திரு. நாவு. - 4 - 30 - திருக்கழிப்பாலை - 295 - 3
225. சம். தே. - 3 - 21 - திருக்கருக்குடி - 9 - 1 - 3
226. சம். தே. - 3 - 60 - திருவக்கரை 9 - 3 - 4

சங்க இலக்கியத்தில் முல்லைப் பாட்டிலும், கலித்தொகையிலும் இயற்கை வர்ணனையில் இவ்வவதாரக் காட்சி தெளிவுறுத்தப் படுகின்றது. மேலும் மன்னர்கள்மீது இவ்வவதாரச் செய்தி ஏற்றிப் பாடப்படவில்லை. சங்கம் மருவிய கால இலக்கியத்தில் ஓரிடத்தில் மட்டுமே இயற்கைக் காட்சியில் இவ்வவதாரச் செய்தி இடம் பெறு கின்றது. மன்னர்கள் மேலும் இரண்டு இடங்களில் இவ்வவதாரச் செய்தி ஏற்றிப் பாடப்பட்டுள்ளது. இவ்விரு கால இலக்கியங்களில் அவதாரப் பெயரோடு சுட்டப் பெறவில்லை.

இச்சைவ இலக்கியங்களில் இயற்கை வர்ணனையில் இச்செய்தி இடம் பெறவில்லை. மன்னர்கள் மேலும் ஏற்றி உரைக்கப் படவில்லை என்பது அறியத்தக்கது. முந்தைய இருகால கட்ட இலக் கியங்களைக் காட்டிலும் அதிக அளவில் இவ்வவதாரக் குறிப்புகள் இங்கு அமைகின்றன.

**கிருட்டிணாவதாரம்:** சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங் களில் கிடைத்துள்ள திருமால் பற்றிய குறிப்புக்களைப்போல இச் சைவ இலக்கியங்களிலும் கிருட்டிணன் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. கிருட்டிணன் என்னும் பெயர் சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறாதது போலவே இவ்விலக்கியங்களிலும் காணப்படவில்லை. ஆயினும் அவனது பண்புகளை விளக்கும் வகையில் கண்ணன், மால், மாயோன், குடமாடி, நாரணன், குழலூதும் கண்ணன் போன்ற பெயர்களால் அவன் அழைக்கப்படுகின்றான். குலத்தோடு அமைந்த பெயராகக் ''கோவலன்'' என்று இரண்டு இடங்களில் அழைக்கப்படுகின்றான். கண்ணனின் காதலியாகிய நப்பின்னை பற்றிய செய்தி இரண்டு இடங்களில் மட்டுமே சொல்லப்படுகின்றது. திருமாலின் அவதார மாகக் கண்ணன் காட்டப்படுகின்றான். சிவனது புகழ் பேசுமிடங் களிலேயே இக்கிருட்டிணாவதாரக் குறிப்புகள் அமைந்தாலும் கண்ணனின் தீரத்தையும் அருட்பண்பையும், தீமையை அழித்து நன்மை செய்யும் ஆற்றலையும் விளக்குவனவாக அவை அமை கின்றன.

கண்ணனின் தீரச் செயல்கள் பற்றிய செய்திகள் பல இடங்களில் அமைகின்றன. ஏழுலகங்களையும் தன் வயிற்றில் அடக்கியவன் என்ற கருத்து பல இடங்களில் கூறப்படுகின்றது. இருவரும் காணா ஒளியுருவானவன் சிவன் என்னுமிடத்தில் ''பண்டேழுல குண்டான்''[227] ''ஞாலமது உண்டான்''[228] ''ஞாலத்தை நுகர்ந்

227. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 9 - 1 - 2
228. சம். தே. - 1 - திருநின்றியூர் -9 - 1 - 2

தவன்''[229] ''இடந்து மண்ணையுண்ட மால்''[230], ''ஞால முண்ட மால்''[231], ''வையமுழுதுவிட மால்''[232], ''மண்ணினை யுண்டவன்''[233], ''மண்ணுண்ட மாலவன்''[234], ''மண்ணையுண்ட மால்''[235], என்று உலகங்களையுண்ட திருமாலாகக் காட்டப்படு கின்றான். சிவனது பாகமாகத் திருமால் குறிப்பிடப்படும்போது உலகத்தைத் தன் வாயிடமாகவுடைய கிருட்டிணாவதாரச் செய்தி யோடு கூறப்படுகின்றான்.[236] அயனும், ஆகாயம், பூமியாகிய ஏழுலகங்களையும் உணவாக உடைய திருமாலும் அறிவரியான் சிவன் என்ற கருத்துகள் கூறப்படுகின்றன.[237, 238]

மாலும், அயனும் அடிமுடியறியப்பெறாத ஒருவனாகச் சிவன் கூறப்படும்போது இந்திரனால் ஏவப்பட்ட மழையைக் கோவர்த்தன கிரியைக் குடையாகத் தூக்கித் தடுத்தவனாகிய திருமால் என்று அவனது கிருட்டிணாவதாரச் சிறப்புத் தோன்றப் பலவிடங்களில் காட்டப்படுகின்றான்.[239 – 242] ''அருவரையேந்திய மால்''[243] பிறரால் எடுத்துக் குடையாகக் கவித்துப் பிடித்தற்கரிய கோவர்த்தன கிரியை ஆக்களைக் காக்கத் தாங்கிய கண்ணனாகிய திருமால் என்று பெருவலியும், அருள் பண்பும் தோன்றக் குறிக்கப்படுகின்றான்.[244]

கடல் வண்ணன், கண்ணனாகி வந்த திருமால், மால், நாரணன் போன்ற பெயர்களால் கிருட்டிணாவதாரக் குறிப்புடன் பேசப் படுகின்றன.

---

229. சம். தே. - 1 - திருமயிலாடுதுறை - 9 - 1 - 3
230. சம். தே. - 1 - திருச்சோபுரம் - 9 - 3 - 4
231. சம். தே. - 1 - திருமுதுகுன்றம் - 9 - 1 - 2
232. சம். தே. - 2 - 83 - திருக்கொச்சைவயம் - 9 - 1 - 2
233. சம். தே. - 2 - விசயமங்கை
234. திரு. நாவு, - 5 - 22 - கோயில் – 238 - 1 - 2
235. திரு. நாவு. - 5 - 15 - திருவிடைமருதூர் - 150 - 1 - 3
236. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் 1 - 2
237. சம். தே. - 3 - 84 - திருப்புறவம் - 9 - 1 - 4
238. திரு. வா. - திருப்பாண்டிப் பதிகம் - 5 - 1 - 3 (சிவானந்த விளைவு)
239. சம். தே. - 1 - திருவிலம்பையங் கோட்டூர் - 9 - 1 - 2
240. சம். தே. - 1 - திருக்கழுமலம் - 9 - 1 - 3
241. சம். தே. - 2 - 39 - திருச்சேத்திரக்கோவை - 9 - 3 - 4
242. சம். தே. - 3 - திருக்கடவூர் வீரட்டம் - 9 - 1 - 2
243. சம். தே. - 3 - 105 - திருக்கலிக்காமூர் - 9 - 1 - 4
244. திரு. நாவு. - 54 - திருப்புகலூர் - 527 - 1 - 2

சிவன் மன்மதனை எரித்த குறிப்பு இடம் பெறும் இரண்டு இடங் களில் திருமாலின் அன்பிற்குரிய மகனாகிய மன்மதனும், கோவர்த்தனம் எடுத்தவனாகத் திருமாலும் குறிக்கப்படுகின்றனர். இங்குக் ''கறிவளர் குன்றமெடுத்தவன்''[245], ''மாக்குன்றெடுத் தோன்''[246] என்று திருமால் காட்டப்படுகின்றான்.

திசைமுகனுந் திசை மேலளந்த கருவரை யேந்திய மாலுங் கைதொழ நின்றவன் சிவன் என்னுமிடத்து உலகளந்த வாமனா வதாரக் குறிப்பும், கருவரையேந்திய கிருட்டிணாவதாரக் குறிப்பும் ஒருசேரத் தோன்றுமாறு குறிக்கப்படுகின்றான்.[247]

அயனும் மாலும் அறியாத தீப்பிழம்பானவன் சிவன் என்னு மிடத்தில் ''விளாமரமாய் நின்ற கபித்தன் அழியக் கொன்ற கண்ணபிரான்''[248] என்றும் மருத மரங்களிடயே கட்டிய உரலோடு புகுந்த கண்ணன்''[249], ''மருது கீறி ஊடு போன மால்''[250] என்று விளவெறிந்தவனாக, மருதூடு நடந்தவனாக ஆற்றல் தோன்றக் காட்டப்படுகின்றான்.

சிவனது பாகமாகத் திருமால் குறிக்கப்படுமிடத்தில் ''கன்று குணிலாக எறிந்து விளவின் கனியைக் கொண்ட நாரணன்'' என்று சொல்லப்படுகின்றான்.[251] சிவனது அடிமுடி காண்கிலார் அயனும் மாலும் என்னுமிடத்துக் ''கன்று கையேந்தி விளவின் கண்பட நூறிய திருமால்''[252] என்றும், கன்றால் விளவெறிந்தவன் காண்பரியான் சிவன்''[253] என்றும் கூறப்படுகின்றது.

மாயோன் கண்ணனாய்ப் பிறந்து ஆயர்பாடியில் வளருங்கால் தன் தாய் தன்னைப் பிணித்திருந்த உரலுடனே தவழ்ந்து துருவாச முனிவரது சாபத்தால் நளன், கூபரன் என்னும் இருவர் தம் பிறப்பு வேறுபட்டு ஆங்கு வந்து தோன்றி வளர்ந்திருந்த இரு மருத மரங் களின் இடையே சென்று அவற்றை முறிக்கஅவர் அச்சாபம் நீங்கினர்

245. சம். தே. - 1 - திருவேட்களம் - 6 - 1 - 3
246. திரு. நாவு. - 6 - 35 - திருவெண்காடு - 359 - 1 - 2
247. சம். தே. - 1 - திருவேட்களம் - 9 - 1 - 2
248. சம். தே. - 1 - திருவண்ணாமலை - 9 - 1 - 3
249. சம். தே. - 1 - இடைமருதூர் - 9 - 1 - 4
250. சுந். தே. - 7 - 7 - திருவெதிர்கொள்பாடி - 71 - 2 - 3
251. சம். தே. - 1 - திருப்பிரமபுரம்
252. சம். தே. - 3 - 37 - திருப்பிரமபுரம் - 8 - 1 - 3
253. திரு.வா. - திருத்தோணோக்கம் (பிரபஞ்சசுத்தி) 2 - 2 - 3

என்பது புராணம். இக்கருத்து மேற்குறித்த தொடர்களால் குறிப்பாக அமையக் காணலாம்.

மோகினி வடிவங் கொண்ட வரலாறு கூறப்படுமிடத்துக் ''குருந்தொசி பெருந்தகை''[254] என்றும், அயனும் மாலும் காணா அடிமுடியோன் சிவன் என்னும் போது ''குருந்தொசித்த மால்''[255] என்றும் குருந்தொசித்தவனாகக் கிருட்டிணாவதாரச் செய்தியுடன் கூறப்படுகின்றான். பிரமனும், மாலுங் கூடி எல்லை காண்பரியான் சிவன் என்னுமிடத்துக் ''கொல்லை வாய்க் குருந்தொசித்துக் குழலும் ஊதும் கோவலன்''[256] என்று குலப்பெயரோடு குறிக்கப் படுகின்றான்.

கேசிவதம் செய்தவனாகவும் பலவிடங்களில் சுட்டபடுகின்றான். சிவபிரானை மாலும், அயனும் காணாது அலமந்தார் என்னுமிடத்து ''மாவாய் விளந்தான்''[257, 258] என்றும், அயனும், மாலும் அறியாத படி விளங்கி நின்று மன்றில் நடனமாடும் சிவன் என்னுமிடத்துத் ''துரங்கன் வாய் பிளந்தான்''[259] என்றும், மூவரான மூர்த்தியாகச் சிவன் குறிக்கப்படும்போது, ''மாவாய்ப் பிளந்துகந்த மால்''[260] என்றும் கேசி வதம் செய்த கிருட்டிணாவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. திருமால் கண்ணனாய் இருந்த காலத்துக் கேசி என்னும் அசுரனை அழித்த வரலாறு பாகவதத்துட் கூறப்படுகின்றது. இவ்வரலாறு தோன்ற மேற்குறித்த செய்திகள் அமையக் காணலாம்.

அயனும் மாலும் தேடச் சோதியாய் நின்றவன் சிவன் என்னு மிடத்துக் கஞ்சனால் ஏவப்பட்ட ''குவலாயாபீடம்'' என்னும் பட்டத்து யானையின் கொம்பை ஒடித்த வரலாறு கூறப்படு கின்றது.[261] மால் காண்பரியான் சிவன் என்னுமிடத்துக் ''கான யானையின் கொம்பினைப் பீழ்த்த கள்ளப்பிள்ளை''[262] என்று கள்ளத் தன்மையுடையவனாகக் காட்டப்படுகின்றான். திருமால்

---

254. சம். தே. - 2 - 30 - திருப்புறம்பயம் - 3 - 2 - 3
255. திரு. நாவு. - 4 - 39 - திருவையாறு - 392 - 1 - 2
256. திரு. நாவு - 6 - 3 - திருஅதிகை வீரட்டானம் . 31 - 3 - 4
257. சுந். தே. - 7 - 13 திருநின்றியூர் - 10 - 1 - 2
258. சுந். தே. 7 - 13 - திருநின்றியூர் - 132 - 1 - 2
259. சுந். தே. 7 - 13 - திருப்பனையூர் - 888 - 2 - 3
260. திரு. நாவு - 6 - 82 - திருச்சாய்க்காடு - 817 - 1 - 2
261. சம். தே. - 1 - திருநெடுங்களம் - 9 - 1 - 3
262. சுந். தே. 7 - 57 - திருவாழ்கொள்புத்தூர் - 588 - 3

கண்ணனாய் இருந்த போது தன்னைக் கொல்லும் பொருட்டுக் கஞ்சன் என்னும் மாமன் நிறுத்தி வைத்த ''குவலாயாபீடம்'' என்னும் யானையை அதன் கொம்பைப் பிளந்து அழித்த வரலாறு பாகவதத்தில் கூறப்படுகிறது.

இந்திரன், திருமால், பிரமன் என்னும் பொருள்களாய் உள்ளவன் சிவன் என்னுமிடத்துப் ''புள்வாயைக் கீண்டு உலகம் விழுங்கி உமிழ்ந்தான்''[263] என்று திருமால் குறிக்கப்படுகின்றான். திருமால் நீருக்குத் தலைவனாததலாலும், மண் நீரில் தோன்றி நீரில் ஒடுங்கும் என்பராதலாலும் திருமாலை உலகத்தை உண்டு உமிழ்பவன் என்றல் வழக்கு. திருமால் கண்ணனாய் இருந்த பொழுது கொக்குருவாய் வந்த அசுரனை, அதன் வாயைக் கிழித்துக் கொன்ற வரலாறு பாகவதத்துட் காணப்படுகின்றது.

''வக்கராசுரனைக் கொன்ற மாயன்'' என்று சிவனருளால் சக்கரப்படை பெற்ற திருமால் குறிக்கப்படுகின்றான்.[264] (வக்கரன்-விருத்தசர்மனுக்கு கைதேவன் தங்கையாகிய சுருத தேவியிடம் சாபம் பெற்ற ஜய விஜயர்களுடைய மறு பிறப்பு. இவன் வலிமை யடக்கப்பட்டுக் கண்ணனால் கொல்லப்பட்டான் என்பது புராணம்).

திருமாலை வழிபடுவோர் சிவனது அன்பை அறியார் என்று சிவனுக்கு ஏற்றம் தருமிடத்தில் ''பேய்ப் பெண்ணினது முலைப் பாலினை உண்டு அவர் உயிர் போகச் செய்த திருமால்'' என்ற குறிப்போடு மாயம் பொருந்திய மனத்தையுடையவனாகவும் குறிக்கப்படுகின்றான்.[265]

சிவபிரான் திருமாலை இடப்பாகத்திற் கொண்டவன் என்ற கருத்தமையக் கூறுமிடத்தில் ''குடம் ஆடி'' என்று குறிக்கப்படு கின்றான். இது திருமால் ஆடிய ஒருவகைக் கூத்து ஆதலின் ''குடம் ஆடி'' என்றது திருமாலின் பெயராயிற்று.[266]

சிவபிரானைத் திருமால் தன் கண்ணிடந்து பூசித்து ஆழிப் படையைப் பெற்ற வரலாறு கூறப்படுமிடத்தில் ''ஏறு உடன் ஏழ் அடர்த்தான்'' என்று புகழப்படுகின்றான்.[267] ''பொய்விடை

263. சுந். தே. - 7 - 40 - திருக்கானாட்டுமுள்ளூர் - 104 - 1 - 2
264. திரு. நாவு - 5 - 68 - திருநள்ளாறு - 685 - 3 - 4
265. திரு. நாவு - 5 - 100 - ஆதிபுராணத்திருக் குறுந்தொகை - 1014 - 1 - 2
266. திரு. நாவு - 6 - 81 கோடிகா - 811 - 3 - 4
267. திரு. நாவு. - 4 - 49- திருக்குறுக்கை வீரட்டம் - 480 - 1 - 4

யேழடர்த்தோன்'' என்பது பாரதம்.[268] நப்பின்னை முதலிய மகளிர் மணங் குறித்துக் கண்ணன் எழுவிடை அடர்த்த வரலாறு பாகவதத்திற் கூறப்படுகின்றது.

இத்தகு குறிப்புகளால் ஏழுலகும் உண்டவன், குன்றமெடுத்தவன் விளவெறிந்தவன், மருதூடு நடந்தவன், குருந்தொசித்தவன், கேசிவதம் செய்தவன், யானையின் கொம்பொடித்தவன், புள்வாய் கீண்டவன், வக்கராசுரன் உயிர் போக்கியவன், பேய் முலைப் பாலுண்டவன், குடமாடி, ஏறு அடர்த்தான் போன்ற கிருட்டிணாவதாரச் செய்திகளே அமையக் காண்கிறோம்.

இவற்றுள் புள்வாய் கீண்டது, வக்கராசுரனை அழித்தது, பேய் முலைப் பாலுண்டது ஆகிய இம்மூன்று செய்திகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறவில்லை. இச்சைவ இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. சங்க இலக்கியத்தில் இடம் பெறாத ஏழுலகும் உண்ட செய்தி சங்கம் மருவிய கால இலக்கியங்களில் ஓரிடத்தில் மட்டும் இடம் பெறுகின்றது. இச்சைவ இலக்கியங்களில் ஏழுலகும் உண்டதும், கோவர்த்தனகிரியைக் குடையாகத் தூக்கியதும் ஆகிய இவ்விரண்டு செயல்களுமே மிகுதியும் பேசப்படுகின்றன.

முந்தைய இருகால கட்ட இலக்கியங்களிலும் பலராமனும், கண்ணனும் இணையாக அண்ணன் தம்பியராகக் காட்டப்பட்ட வழக்குகள் இவ்விலக்கியங்களில் காணப்படவில்லை. பலராமன் பற்றிய குறிப்பே இடம் பெறவில்லை. சிலம்புக் காலத்தில் முக்கியத்துவம் பெற்ற நப்பின்னை பற்றிய செய்தி இரு இடங்களில் மட்டுமே சொல்லப்படுகின்றது. இங்கு நப்பின்னையின் கணவனாகவே திருமால் சுட்டப்படுகின்றான். திருமகளுடன் சேர்த்துக் கண்ணன் எங்கும் பேசப்படவில்லை. திருமாலின் தங்கையாகக் கொற்றவை கூறப்படும்போது கண்ணனின் செயல்கள் ஏற்றி உரைக்கப்படுவது போலச் சிவனுக்கு ஒருசில இடங்களில் ஏற்றி உரைக்கப்படுகின்றது.

முந்தைய இருகால இலக்கியங்களிலும் காணப்பட்டது போலக் கண்ணன் பற்றிய பாரத கதைக் குறிப்புகள் இச்சைவ இலக்கியங்களில் இடம் பெறவில்லை. சைவர்களுக்குக் கண்ணன் பெருமை பேசுவது பிடிக்காமல் இருக்கலாம். வீர சைவர்கள் பிற மதத்தாரைப் புகழ்ந்து பேச விரும்பாத நிலையைக் காணும் போது கண்ணன் பற்றிய பாரதக் கதைக் குறிப்புகளும் இச்சைவ இலக்கியங்களில்

---

268. பாரதம் - போர்ச் சுருக்கம் - 146

இடம் பெறாமல் போயிருக்கலாம். பிற அவதாரக் கருத்துக்களுடன் ஏற்றி உரைக்கப்படவில்லை. இயற்கைக் காட்சியில் உவமமாக அமைகின்ற போக்கு இடம் பெறவில்லை. பூவை நிலைத் துறையில் மன்னர்களுக்கு உவமமாகின்ற வழக்கையும் காணமுடியவில்லை. மால், நாரணன் போன்ற பெயர்களால் திருமாலின் அவதாரமே கண்ணன் என்பது பெறக் காட்டப்படுகின்றான்.

அவதாரங்களைப் பற்றிய குறிப்புகளை நோக்கும்போது முந்தைய இருகால கட்ட இலக்கியங்களைப் போலவே இச்சைவ இலக்கியங்களிலும் கிருட்டிணாவதாரக் குறிப்புகளே மிகுதியும் அமைகின்றன. மற்றைய அவதாரங்கள் ஒரே போக்குடையவனாக அமைவதும், அறம் வெல்லும் பாவம் தோற்கும் போன்ற நீதிகளை அறிவுறுத்துவதாக அமைகின்றன. சான்றாக. இராமன், இராவண வதம் மட்டுமே நிகழ்த்துகிறான். நரசிம்மன், இரணிய வதை மட்டுமே. இப்படி நோக்கும்போது கண்ணன் கம்சன் மற்றும் பல பேரை அழித்தவனாக, பாரதக் கதை முடித்தவனாகக் காட்டப்படு கின்றான். பூபாரம் குறைக்கப் பிறந்தவனாகக் கிருட்டிணாவதாரம் அமைகின்றது. நியாயத்தையும் அறத்தையும் நிலைநாட்டுவதும், உபாயங்களில் வல்லவனாகவும் அரசியல் தந்திரம் நிறைந்தவ னாகவும் கண்ணன் அமைகின்றான்.

கண்ணன் கதைகள் ஏறக்குறைய திருக்குறள் போல ஓர் எடுத்துக் காட்டாக விளங்கின, மக்கள் மனத்தில் இடம் பெற்றது எனலாம். பாரதியார் கூறுவதைப் போலத் தீராத விளையாட்டுப் பிள்ளை யாகவும், அதே நேரத்தில் தீமை வந்தபோது அதை ஏற்றுக் கொள்ளாமல் உடனடியாக வன்மை செய்பவனாகவும் காட்டப்படு கின்றான். இதிகாசங்களில் பெரிதும் பாராட்டப்படும் பாரதம் கண்ணன் பற்றியது. கண்ணன் இல்லாமல் பாரதம் இல்லை, பாரதம் இல்லாமல் கண்ணன் இல்லை என்ற நிலையைக் காணலாம். சைவ சமயத்தாரையும், வைணவ சமயத்தாரையும், மக்கள் மனத்தையும் கவர்ந்தவன். கீதை சொன்னவன். எனவே கிருட்டிணாவதாரம் மக்கள் மனத்தில் வேரூன்றி விட்டது எனலாம்.

## திருமால் - பெயர்கள்

### சைவ இலக்கியங்களில் காணப்படும் பெயர்கள்

மால், நெடியான், நெடுமால், கரியவன், கருநிறவண்ணன், கரியமால், கருமால், காரார் வண்ணன், நீலது வண்ணன், காரடைந்த வண்ணன், முகில் வண்ணன், கருமையுடை நெடுமால், மெய்ம்மால், மங்குல் வண்ணன், கார் வண்ணன், குளிர் கொண்ட

நிறத்தவன், வண்ண முகிலன்ன எழில் அண்ணல், புயலார் நிறத்தான், கொண்டல் வண்ணன், காரிலங்கு திருவுருவத்தன், மழையான், கடல்வண்ணன், பெருங்கடல் வண்ணன், ஓதவண்ணன், மணி வண்ணன், மாமணி வண்ணன், தாமரைக் கண்ணன், எழில்மால், செங்கண்மால், போதன கண்ணன், பங்கயக்கண் நெடுமால், அரி, கோளரி, மாயன், மிகுமாயன், கண்ணன், விறற்கண்ணன், அப்பியன்ற கண்ணன், கார் முகில் நிறுத்துக் கண்ணன், அற்புதன், மாதவன், மதுசூதனன், கேசவன், கோவலன், ஏவலன், விண்டு, நாரணன், நாராயணன் போன்ற பெயர்களால் இச்சைவ இலக்கியங்களில் நிறத்தோடும், படைகளோடும், அவதாரப் பெருமைகளோடும் திருமால் அவனது பண்புகள் தோன்ற அழைக்கப்படுகின்றான். அவை பற்றிய செய்திகள் தொடர்ந்து வரும் பத்திகளில் விளக்கம் பெறுகின்றன. இப்பெயர்களுள்ளும் நிறம் பற்றிய பெயர்களே மிகுதியும் அமையக் காணலாம். இப் பெயர்கள் விளக்கும் நிறம் பற்றிய கருத்துகள் முந்தைய இருகால கட்ட இலக்கியங்களில் இடம் பெற்றாலும் இத்தகு மிகுதியான பல்வேறு பெயர்கள் அவ்விலக்கியங்களில் இடம்பெறவில்லை. ''கோளரி'', ''கண்ணன்'' ''அற்புதன்'', ''மாதவன்'', ''மதுசூதனன்'', ''கேசவன்'' போன்ற பெயர்கள் முந்தைய இருகால இலக்கியங்களில் இடம் பெறாதவை. இப்பெயர்கள் சுட்டப் பெறாவிட்டாலும் ஆங்கு இப்பெயர்கள் உணர்த்தும் பண்புகள் இடம் பெறுவதைக் காண முடிகின்றது, இவ்வளவு மிகுதி யான திருமாலின் பல்வேறு பெயர்களையும் நோக்கும்போது பெயர்கள் பற்றிய அளவில் இது ஒரு வளர்ச்சியடைந்த நிலையே எனலாம்.

**மால் :** பிரமனும், திருமாலும் அறிய இயலாத சோதி வடிவானவன் சிவன் என்னுமிடத்துப் பெரும்பான்மையும் ''மால்'' என்ற பெயரோடே வழங்கப்படுகின்றான்.[269-278] இதே கருத்தில்

---

269. சம். தே. - 1 - 1 திருப்புள்ளமங்கை - 9 - 1 - 4
270. சம். தே. - 1 - திருக்குரங்கணின்முட்டம் - 9 - 1 - 3
271. சம். தே. - 2 - 6 - திருவையாறு - 10 - 1
272. சம். தே. - 2 - 11 - சீகாழி - 8 - 3 - 4
273. சம். தே. - 2 - 15 - திருக்காறாயில் - 9 - 2 - 3
274. சம். தே. - 3 - 15 திருவெண்காடு - 9 - 1 - 2
275. சம். தே. - 3 - 20 - திருப்பூவனம் - 9 - 1 - 2
276. திரு. நாவு. - 5 - 25 - திருப்பாலூர் - 254 - 1 - 2
277. திரு. நாவு. - 5 - 26 - திருவன்னியூர் - 263 - 1 - 2
278. திரு. நாவு. - 6 - 20 - திருநள்ளாறு - 201 - 3

''நெடுமால்''[279, 280] என்று சுட்டப்படுகின்றான். மூவராய முதல்வன் என்று சிவன் போற்றப்படும் போது செங்கண்மால்[281-283], நெடியமால்[284], ஏனமால்[285], மண்ணுண்டமால்[286], தோற்றலார் மால்[287] என்று பிறத்தலையுடையவனாகவும், வண்ணமால்[288] என்ற அழகுடையவனாகவும் திருமால் காட்டப்படுகின்றான். தலைவன் சிவன் என்னுமிடத்துத் திருமால் ''மால்[289] என்றும், ''நீண்டமால்''[290] என்றும் குறிக்கப்படுகின்றான்.

**திருமால் :** மாலும் அயனும் தேடிக் காணாப் பெருமான் சிவன் என்னுமிடத்தும், திருமாலோர் பாகத்தானாகச் சிவன் குறிக்கப் படுமிடத்தும், தலைவனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்தும், பிற தெய்வங்களுடன் திருமால் குறிக்கப்படுமிடத்தும், ''திருமா லானானை'' என்று மூவருமானவனாகச் சிவன் குறிக்கப்படு மிடத்தும் ''திருமால் குறிக்கப்படுகின்றான்.[291-303]

---

279. சம். தே - 1 - திருவெருக்கத்தம்புலியூர் - 9 - 1
280. திரு. நாவு. 4 - 84 - பொது - 807 - 1 - 4
281. சம். தே. - 2 - 99 - திருக்கோடிகா - 9 - 2 - 3
282. சம். தே. - 2 - 108 - திருவிற்குடி வீரட்டம் - 9 - 1 - 2
283. திரு. நாவு. - 5 - 51 - திருப்பாலைத்துறை - 518 - 3
284. திரு. நாவு. - 4 - 50 - திருக்குறுக்கை வீரட்டம் - 486 - 1 - 2
285. சம். தே. - 3 - 109 - திருக்கயிலாயம் - 11
286. திரு. நாவு. - 4 - 22 - கோயில் - 238 - 1 - 2
287. சம். தே. - 1 திருவச்சிறுபாக்கம் - 9 - 3 - 4
288. திரு. நாவு. - 4 - 72 - திருவின்னம்பர் - 697 - 3
289. திரு. நாவு. - 5 - 22 - திருக்குடமூக்கு - 223 - 3 - 4
290. திரு. நாவு. - 5 - 37 - திருக்கடவூர் வீரட்டம் - 376 - 1 - 4
291. சம். தே. - 1 - திருவண்ணாமலை - 9 - 1
292. சம். தே. - 1 - திருக்கண்ணார்கோயில் - 9 - 1 - 4
293. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 1 - 2
294. சம். தே. - 2 - 2 - திருவலஞ்சுழி - 10 - 3
295. சம். தே. - 2 - 76 - திருவகத்தியான்பள்ளி 9 - 3 - 4
296. சம். தே. - 2 - 86 - திருநாரையூர் - 9 - 3 - 4
297. திரு. நாவு. - 4 - 9 - பொது - 93 - 1 - 2
298. திரு. நாவு. - 5 - 66 - திருவலஞ்சுழி - 670 - 1 - 2
299. திரு. நாவு. - 6 - 25 - திருவாரூர் - 26 - 1 - 4
300. திரு. நாவு. 6 - 76 - திருப்புத்தூர் - 754 - 3
301. சுந். தே. - 7 - 53 - திருக்கடவூர் மயானம் - 540 - 3 - 4
302. சுந். தே. - 7 - 73 - திருவாரூர் - 748 - 3 - 4
303. திரு. நாவு. - 6 - 90 - திருக்கஞ்சனூர் - 887 - 3

திருமால் சிவனை வணங்குமிடத்தும், அடிமுடி காணாவிடத்தும் ''மாலவன்''[304—306] என்றும், அளப்பொணா இறைவன் சிவன் என்னுமிடத்து ''விரிகடல் மால்''[307] என்றும், சிவனுக்கு விடையாக அமையும் கருத்தில் ''மால்விடை''[308], மஞ்சு போல் மால் விடை''[309] என்றும் குறிப்பிடுகின்றான். இங்கு பெரிய விடையாக இருப்பினும், கடலின்கண் இருக்கின்ற மாலாக இருப்பினும் அத்திருமாலால் காணமுடியாதவன் சிவன் என்று பெருமை தோன்றக் கூறப்படுகின்றான்.

திருமால் வீடு பேற்றிற்காக ஏங்கிய செய்தி இடம் பெறுமிடத்தும்[310], அயனுக்கும், மாலுக்கும் தேடி வைத்த நிதி போன்றவன் சிவன் என்னுமிடத்தும்,[311] சிவனிடம் ஆழிப்படைப் பெறுமிடத்தும்,[312] சிவனைச் சோதிப்பான் வேண்டிப் பன்றியாய்ச் சென்று அடிகாணாது வருந்தினான் என்னுமிடத்தும், சிவனை வழிபடும் கருத்து இடம் பெறுமிடத்திலும், ''மால்''[313] என்றே குறிக்கப்படுகின்றான். சிலவிடத்து ''மாலவன்''[314] என்றும் குறிக்கப்படுகின்றான்.

சக்ராயுதம் பெற்றவிடத்து ''நெடுவால்''[315] என்றும், சிவனைக் காணாதவன் என்னுமிடத்துத் ''கொல்மால்''[316] என்று பழமையானவன் என்ற கருத்துப் பெறவும் திருமால் குறிக்கப்படுகின்றான். திருமால் சிவனோடு இசைந்திருந்தால் இருக்கும் தோற்றத்தைக் காட்டும் காரைக்காலம்மையார் பெருமிதச் சுவையோடு நீலமணிக்

304. சம். தே. - 1 - சீகாழி - 9 - 3 - 4
305. திரு. நாவு. - 5 - 5 - திருவண்ணாமலை - 51 - 1
306. திரு. நாவு. - 6 - 23 - திருமறைக்காடு - 241 - 1
307. திரு. நாவு. - 5 - 75 - திருக்குரக்குக்கா- 755 - 1 - 2
308. திரு. வா. - திருப்பொற்சுண்ணம் - 17 - 2
309. காரைக்காலம்மையார் - 11 - ஆம் திருமுறை அற்புதத்திருவந்தாதி - 84 - 3
310. திரு. வா. - திருக்கோத்தும்பி - 20 - 1 - 2
311. திரு. வா. - திருத்தெள்ளேணம் - 19 - 2 - 3
312. திரு. கோ. - இரவுக்குறி 180 - 1 - 3
313. காரைக்காலம்மையார்-அற்புதத்திருவந்தாதி - 19 -1 - 2
314. காரைக்காலம்மையார் - திருஇரட்டைமணிமாலை - 8 - 1 - 4
315. திரு. நாவு. - 6 - 90 - திருக்கஞ்சனூர் - 896 - 1 - 2
316. திரு. . கோ - வரைபொருட்பிரிதல் - 296 - 2 - 3

குன்றெனத் தோற்றமுடையான் என்று உவமை காட்டுகின்றார்.[317] சிவனை ஆணவத்தால் அறியாது பணிந்து அறிந்து அருள் பெற்றதாக வரும் குறிப்பில் மால் என்றும்[318], சிவனை வழிபடு மிடத்து ''மால்''[319], ''நாகவணைக் கிடந்த மால்''[320], வெள்ளத்து மாலவன்''[321] என்றும் நீரில் துயில்கின்ற திருமாலாகக் காட்டப் படுகின்றான்.

அனைவர்க்கும் புகலிடமானவன் சிவன் என்னுமிடத்துத் திருமால் காப்போனாகிய கருத்தமைய, ''மாலவன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[322] மால் என்பதற்கு மயக்கம் என்று பொருள் கூறலாம். மும்மலப்பிணிப்புடையார் என்று கூறுமிடத்து ''மால்''[323] என்று சார்புக் கடவுளருள் ஒருவனாக, நீருக்குத் தலைவனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்து ''மால்'' என்று கூறப்படுகின்றான்.[324] அக்கினி, பிரமன், திருமால், தேவகுரு, சூரியன், இந்திரன் ஆகியோரிடம் கண்ணனின் ஒளி போலக் கலந்து நிற்பவன் சிவன் என்னுமிடத்து ''மால்'' என்று குறிப்பிடுகின்றார் திருமூலர்.[325] சிவத்தின் ஒன்பான் வடிவத்தில் ஒருவனாகத் திருமால் குறிக்கப் படுமிடத்து ''மால்'' என்று சுட்டுகின்றார் திருமூலர்.[326] பிறவியில் படுபவனாகத் திருமால் ''மால்'' என்ற பெயரோடு கூறப்படு கின்றான்[327] சிவபெருமானை மூவருமாகக் காட்டுமிடத்து ''மாலவன்''[328] ''திருமால்''[329] ''மால்''[330] என்று திருமூலர் காட்டுகின்றார். ஐம்பெரும் பூதங்களையும், அவற்றை இயக்கு பவர்களையும் கூறும் போது நீருக்குத் தலைவனாக, இயக்கும் அதிபனாகத் திருமாலைக் குறிக்குமிடத்து ''மால்'' எனப்படு

317. காரைக்காலம்மையார் அற்புதத்திருமந்தாதி - 83 - 1 - 4
318. திரு. நாவு. - 5 - 44 - திருஆமாத்தூர் - 436 - 1 - 4
319. திரு. நாவு. - 5 - 48 - திருவேகம்பம் - 479 - 1 - 3
320. திரு. நாவு. - 6 -86 - திருவாலம்பொழில் -858 - 1
321. சுந். தே. - 7 - 40 - திருக்கானாட்டு முள்ளூர் - 409 - 1 - 2
322. திரு. மந். - ஆதித்தநிலை - 1939 - 1 - 4
323. திரு. மந். - அவத்தைபேதம் - 2191 - 4
324. திரு. மந். - அவத்தை பேதம் - 2191 - 4
325. திரு. மந். - அண்டலிங்கம் - 1716 - 1
326. திரு. மந். - 1776 - 1
327. திரு. மந். - 1807 - 3 - 4 (திருவருள் வைப்பு)
328. திரு. மந். - ஆதித்தநிலை - அண்டாதித்தல் - 1976 - 1 - 2
329. திரு. மந். - ஞானாதித்தன் - 2000 - 2 - 4
330. திரு. மந். - 26 - சிவாதித்தல் - 2003 - 1 - 4

கின்றான்.[331] ''திருத்தக்க மால்'' என்று காத்தல் தொழில் செய்யும் திருமாலாகக் குறிக்கப்படுகின்றான்.[332] அயனொடு மால் அறியான் சிவன் என்னுமிடத்து ''மால்'' என்று குறிப்பிடுகின்றார் ஆசிரியர்.[333] தேவர்களுள் ஒருவனாகக் குறிக்கப்பட்டு அவரோடு சிவனை வழிபட்டதாகக் குறிக்குமிடத்து ''மால்'' என்று குறிப்பிடு கின்றார்.[334]

சிவனே எல்லாவற்றையும் தாங்கி அருளுபவன் என்றும், திருமால், பிரமன் முதலியவர்களிடம் நிலைபெற்று நிற்பவனும் சிவனே என்னுமிடத்துத் திருமாலை ''மால்'' என்று குறிப்பிடு கின்றார்.[335] தேவர்களுடன் கலந்து உள்நின்று உணர்த்துவோன் சிவன் என்று கூறுமிடத்துத் தீ, அயன், பிரசாபதி, ஞாயிறு, இந்திரன் முதலான தேவர்களுள் ஒருவனாகத் திருமாலைக் காட்டும் திருமூலர் ''மால்'' என்று திருமாலைக் குறிக்கின்றார்.[336] சிவத்தின் ஒன்பது அவதாரங்கள் என்றும், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் மூவர் முதலான ஒன்பதின்மரும் உலகுயர் நிகழ்ச்சியின் பொருட்டு வேண்டப்படுவர் என்று கூறுமிடத்தும் ''மால்'' என்கின்றார்.[337]

அடிமுடி தேடிய அயனுக்கும் ''மாலுக்கும்'' அருள் செய்தவன் சிவன் என்று கூறப்படுகின்றது.[338] மூவராய முதல்வன் சிவன் என்னுமிடத்துத் திருமால் ''செங்கண்மால்'' என்று கூறப்படு கின்றான்.[339] மாலாகிய இடபமூரும் பெருமான் சிவன் என்னு மிடத்துத் ''திருமால்'' என்று குறிக்கப்படுகின்றான்.[340] மாலும், நான்முகனும் வணங்கப் பாற்கடல் நஞ்சுண்டவன் சிவன் என்னு மிடத்துத் திருமால் ''மால்'' என்று குறிக்கப்படுகின்றான்.[341] சிவனது பாகமானவன் என்று ''பாகம் பூண்ட மால்'' என்றும்[342]

331. திரு. மந். - 2305 - 1 - 2
332. திரு. மந். - 2315 - 3 - 4
333. திரு. மந். - ஆகாசப்பேறு - 2807
334. திரு. மந். - சொரூப உதயம் - 2837
335. திரு. மந். - 3038 - 1 - 4
336. திரு. மந். - அண்டலிங்கம் - 1687 - 1 - 4
337. திரு. மந். - திருவருள் வைப்பு - 1776 - 1 - 4
338. சம். தே. - திருப்பாம்புரம் - 9 - 1 - 2
339. சம். தே. - திருமுதுகுன்றம் - 1 - 3 - 4
340. சம். தே. - திருமுதுகுன்றம் - 1 - 3 - 4
341. திரு. நாவு. - 4 - 40 - திருவையாறு - 395 - 3 - 4
342. திரு. நாவு. - 5 - 68 - திருநள்ளாறு - 682 - 3 - 4

சிவன் ஆழி ஈந்தவிடத்து ''மால்''[343], ''திருமால்'' என்றும்[344 - 345] கூறப்படுகின்றான். திருமாலின் கொப்பூழில் அயன் தோன்றிய தன்மை விளங்கவும் மற்றையோருடன் சிவனைப் பாடிப் பரவினான் என்று திருமால் குறிக்கப்படுமிடத்தும் ''மால்'' என்று குறிக்கின்றார் திருமூலர்.[346]

இக்குறிப்புக்களையெல்லாம் நோக்கும்போது மற்றைய பெயரினும் ''மால்'' என்ற பெயரே மிகுதியான இடங்களில் காணப் படுகின்றது. அடிமுடி காணாவிடம், பாகமானவிடம், மூவருமான விடம், சிவனை வழிபடுமிடம் போன்ற இடங்களில் எல்லாம் இவ்வாறு கூறப்படுகின்றான். அயனோடு சேர்த்தே பேசப்படு கின்றான். சிவனுக்கே முதலிடம் தரப்படுகின்றது.

**நெடியான் :** திருமால் ஈரடியால் மூவுலகம் அளந்த செய்தி எல்லோராலும் பேசப்படுகின்ற ஒன்று. இதனைச் சைவ இலக்கி யங்கள் பலவற்றிலும் காணலாம். பேருருவங்கொண்ட, உலகை அளந்த திருமாலாலும் காண முடியாதவன் சிவன் என்னும் கருத்தும் வலியுறுத்தப்படுகின்றது.

அயனும் மாலும் அறிய முடியாத சிவன் என்னுமிடங்களில் திரிவிக்கிரமனாகிய மாயோனின் பண்பு தோன்ற ''நெடியவன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[347 - 355] அடிமுடி தேடியவரின் பெருமை தோன்றத் திருமால் என்னாது நெடியோன் என்றும், பிரமன் என்னாது நான்முகன் என்றும் கூறியது நெடியவனாயிருந்தும், நான்கு முகங்களிலிருந்தும் காணமாட்டாமை உணர்த்த இவ்வாறு கூறினர் போலும்.

---

343. திரு. நாவு. - 6 - 56 - திருக்கயிலாயம் - 566 - 1
344. திரு. நாவு. 6 - 75 - திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் - 750 - 3 - 4
345. திரு. கோ. - இரவுக்குறி - 180 - 1 - 8
346. திரு. மந். - 7 - சிவலிங்கம் - 1745 - 1 - 4
347. சம். தே. - 1 - திருக்கொடுங்குன்றம் - 3 - 4
348. சம். தே. - திரு அதிகை வீரட்டானம் - 9 - 1
349. சம். தே. - திருப்புறவம் - 1 - 2
350. சம். தே. - 2 - 13 - திருக்கோழம்பம் - 9 - 1 - 2
351. சம். தே. - 3 - 73 திருப்பட்டீச்சரம் - 9 - 1 - 2
352. திரு. நாவு. - 4 - 57 - திரு ஆவடுதுறை - 556 - 1 - 2
353. திரு. நாவு. - 6 - 4 - திருஅதிகைவீரட்டானம் - 43 - 1
354. சுந். தே. - 7 - 32 - திருக்கோடிக் குழகா - 328 - 1 - 2
355. திரு. கோ. - காட்சி - 18 - 22 - இயற்கைப் புணர்ச்சி

பெரும்பாலான இலக்கியங்களில் காத்தற் கடவுளாகவே திருமால் பேசப்படுகின்றான். பற்றினை அகற்றுபவன் சிவன் என்னுமிடத்துப் பற்று பெருகுவதற்குரிய காத்தல் தொழில் புரிபவன் என்ற குறிப்போடு வாமனாவதாரப் பெயரோடு ''நெடியான்''[356] என்றும் சிவனை வணங்கிய குறிப்பு இடம் பெறுமிடத்து ''நெடியான்''[357] என்றும் கூறப்படுகின்றான்.

''நெடுமால்'', ''நீண்ட மால்''' ''நெடிய மால்'' போன்ற பெயர்களால் பன்றியாகச் சென்றும் சிவனடி காணாதவன் என்ற குறிப்பமையுமிடங்களில் கூறப்படுகின்றான்.[358—364] திரிபுரம் அழிக்கக் காரணமாக இருந்தது ''திருமால் செய்த மாயம்'' என்ற கருத்தமையுமிடத்தில் ''நெடுமால்'' என்றழைக்கப்படுகின்றான்.[365]

சிவனிடத்துத் தோன்றிச் சிவனோடு ஒத்துநின்று முத்தொழில் களுள் ஒன்றைச் செய்பவன் என்னுமிடத்துக் காத்தல் தொழில் தோன்ற ''நெடுமால்'' என்று குறிக்கப்படுகின்றான்.[366] சிவனருளால் சக்கரம் பெற்றவன் என்னுமிடங்களிலும்[367-368] சிவனால் படைக்கப் படுவோனாகத் திருமால் குறிக்கப்படுமிடத்தும் ''நெடுமால்'' என்று சுட்டப்படுகின்றான்.[369] பிரமன், திருமால், உருத்திரன் இவர்கட்கு மேலான மகேசன் என்று சிவனைக் கூறுமிடத்தும்[370], திருமாலையும் பிரமனையும் படைத்து அவர்களுடன் விளங்கியிருப்பவன் சிவன் என்ற தத்துவ உண்மையைக் கூறுமிடத்தும் திருமாலை ''நெடுமால்'' என்று சுட்டுகின்றார் திருமூலர்.[371]

---

356. திரு. மந். - 9 - ஆம்தந்திரம் - 3013
357. சுந். தே. - 7 - 25 - திருமுதுகுன்றம் - 254 - 1 - 2
358. சம். தே. - 1 - திருநெய்த்தானம் - 9 - 1 - 2
359. சம். தே. - 1 - திருவென்புலாந்துறை - 9 - 1 - 2
360. சம். தே. - 2 - 7 - திருவாஞ்சியம் -9 - 3 - 4
361. சம். தே. - 2 - 79 - திருவாரூர் - 10 - 1 - 2
362. சுந். தே. - 7 - 33 - நம்கடிகளாகியவடிகள் - 337 - 1 - 2
363. திரு. வா. - அடைக்கலப்பத்து - (பக்குவநிண்ணயம் 3 - 3)
364. திரு. வா. - புணர்ச்சிப்பத்து - 3 - 1
365. திரு. நாவு. - 5 - 72 - திருநீலக்குடி - 724 - 2 - 4
366. திரு. நாவு. - 6 - 49 - திருக்கோகரணம் - 490 - 4
367. திரு. நாவு. - 6 - 53 - திருவீழிமிழலை - 532 - 1 - 2
368. திரு. நாவு. - 6 - 74 - திருநாரையூர் - 733 - 1
369. திரு. மந். - அணைந்தோர்தன்மை 2924 - 1 - 4
370. திரு. மந். - சதாசிவலிங்கம் - 1731 - 1
371. திரு. மந். - அணைந்தோர்தன்மை - 2964

**கரியவன் :** இருவரும் காணா எரியுருவானவன் சிவன் என்னுமிடத்துக் ''கரியவன்''[372-374] ''கரியோன்''[375] ''கருநிறவண்ணன்''[376], ''கரிய நிறத்தான்''[377] என்று அழைக்கப்படுகின்றான் திருமால், சிவனைத் திருமால் எட்டு மலர்கள் கொண்டு வழிபட்ட செய்தி அமையுமிடத்துக் ''கரியவன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[378]

அயனாலும், மாலாலும் அறியவொண்ணாக் காலகாலன் சிவன் என்னுமிடத்துக் கரிய நிறம் தோன்றக் ''கரிய மால்''[379-383] என்றும், ''கருமால்''[384] என்றும், கண்ணிடந்து வழிபட்டுச் சிவனிடம் சக்கரம் வேண்டிப் பெற்றவிடத்துக் ''கருமால்''[385] ''கரியான்''[386] என்றும் தாமரைக் கண்ணனாகக் கரிய நிறம் தோன்றக் ''கருமால்'' என்றும் சுட்டப்படுகின்றான்.[387]

**மேகம் போன்ற நிறத்தவன் :** அயனும் மாலும் முறையே பறந்தும் தோண்டியும் காணக் கிடையாத எரிவுருவானவன் சிவன் என்னுமிடத்துக் ''காரார் வண்ணன்''[388], நீலது வண்ணன்[389] ''காரடைந்த வண்ணன்''[390], மங்குல் வண்ணன்[391]. கருமையுடை

---

372. சம். தே. - 1 - திருவாழ்கொள்புத்தூர் - 9 - 1 - 2
373. சம். தே. - 1 - திருவல்லம் - 9 - 3 - 4
374. சம். தே. - 2 - 88 - தென்திருமுல்லைவாயில் - 9 - 2
375. சம். தே. - 3 - 122 - திருஓமாம்புலியூர் - 9 - 1 - 2
376. சம். தே. - 3 - 122 - திருப்புனவாயில் - 9 - 1 - 2
377. சுந். தே. - 7 - 23 - திருக்கழிப்பாலை - 231 - 3
378. சுந். தே. - 7 - 22 - திருப்பழமண்ணிப் படிக்கரை - 226 - 2 - 4
379. சம். தே. - 1 - திருக்குடந்தைக் காரோணம் - 9 - 1 - 2
380. சம். தே. - 2 - 1 திருப்பூந்தாராய் - 9 - 4
381. சம். தே. - 2 - 119 - திருநாகேச்சுரம் - 9 - 12
382. திரு, நாவு. 5 - 8 - திருஅன்னியூர் - 82 - 3 - 4
383. சுந். தே. - 7 - 8 - திருவாரூர் - 30 - 3 - 4
384. திரு. வா. - புணர்ச்சிப்பது - (அத்துவித இலக்கணம் - 1 - 2 - 3)
385. திரு. நாவு. - 5 - 59 -திருமாற்பேறு - 59 - 592 - 1 - 4
386. திரு. நாவு - 6 - 57 - திருக்கயிலாயம் - 577 - 4
387. திரு. கோ. இரவுக்குறி - 153 - 1 - 2
388. சம். தே. 1 - திருச்செம்பொன்பள்ளி - 9 - 1 - 2
389. சம். தே. 1 திருப்பாச்சிவாச்சிராமம் - 9 - 1 - 2
390. சம். தே. - 1 - திருச்சேய்நலூர் - 9 - 1 - 3
391. சம். தே. - 2 - 53 - திருப்புறவார்பனங்காட்டூர் - 9 - 3 - 4

நெடுமால்[392] "மெய்ம்மால்"[393], மங்குல் வண்ணன்[394], கரிவண்ணன்[395], குளிர் கொண்ட நிறத்தவன்[396], வண்ண முகிலன்ன எழில்[397], புயலார் நிறத்தான்[398] கொண்டல்வண்ணன்[399] காரிலங்கு திருவுருவத்தவன்[400], மழையான்[401], முகில்வண்ணன்[402] என்று மேகத்தை ஒத்த கருநிறத்தையுடையவனாக, அழகு படைத்தவனாகத் திருமால் காட்டப்படுகின்றான். பிரமனோடு சேர்த்தே இங்கெல்லாம் பேசப்படுகின்றான். பிரமனும் தன் நிறம் தோன்றப் பலவிடங்களில் காட்டப்படுகின்றான்.

அடியார்கள் சிவனுக்கு வழி வழி அடிமை ஆனவர்கள் என்னும் கருத்துத் திருமூலரால் கூறப்படுமிடத்துத் திருமால் "மேகவண்ணன்" என்று குறிக்கப்படுகின்றான். இங்கு அடிமை ஓலையைச் சுந்தரர் பொருட்டு முதல்வன் எழுதினான் என்றும், திருமால் சாட்சிக் கையெழுத்து இட்டான் என்றும் ஒரு கருத்துத் திருமூலரால் கூறப் படுகின்றது. சுந்தரர் வரலாற்றில் கூறப்படும் இக்கருத்தைத் திருமூலர் தவிர வேறு எவரும் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை.[403]

**கடல்வண்ணன்:** அடிமுடி காணாதவிடத்துக் கடல்வண்ணன்[404-406] கருவரைஅனையமேனிக் கடல்வண்ணன்[407] பெருங்கடல்

---

392. சம். தே. - 2 - 67 - திருப்பெரும் புலியூர் - 10 - 3 - 4
393. சம். தே. - 2 - 74 - திருப்பிரமபுரம் - 10 - 4
394. சம். தே. - 3 - திருப்பூந்தாராய் - 9 - 2 - 4
395. சம். தே. - 3 - 22 - பஞ்சாக்கரத்திருப்பதிகம் - 9 - 1 - 2
396. சம். தே. - 3 - 61 - திருவண்டுறை - 9 - 1 - 2
397. சம். தே. - 3 - 74 - திருத்தேவூர் - 9 - 1 - 2
398. சம். தே. - 3 - 107 - திருநாரையூர் - 9 - 1 - 2
399. திரு. நாவு. - 5 - 7 - திருஆரூர் - 72 - 1 - 2
400. திரு. நாவு. - 5 - 75 - திருக்குடந்தைக் கீழ்க்கோட்டம் - 749 - 1 - 2
401. சுந். தே. - 7 - 86 - திருவன்பார்த்தான் பனங்காட்டூர் - 880 - 1 - 2
402. திரு. கோ. - வேந்தற்குற்றுழிப் பிரிவு - 319 - 2 - 4
403. திரு. மந். - அடியார் பெருமை - 1876 - 1 - 4
404. சம். தே. - 1 - திருவண்ணாமலை - 9 - 1 - 3
405. சம். தே. - 2 - 39 - திருச்சேத்திரக் கோவை - 9 - 3 - 4
406. சம். தே. - 3 - 109 - திருக்கயிலாயம் - 8 - 1
407. திரு. நாவு. 4 - 55 - திருவலம்புரம் - 536 - 1 - 2 - 3

வண்ணன்[408-410], பொருகடல் வண்ணன், [411-412], பொருகடல் தன்னொத்த நிறத்தான்[413], ஓதவண்ணன்[414] போன்ற பெயர்களால் திருமால் அழைக்கப்படுகின்றான். சிவனருள் பெற வேண்டுமிடத்து ''ஓதவண்ணன்'' [415] என்றும் ''பல்வண்ணன்''[416] என்றும் கூறப்படுகின்றான், இவ்விடங்களில் எல்லாம் பிரமனோடு சேர்த்தே பேசப்படுகின்றான். கரிய நிறம் தோன்றக் கடல் வண்ணனாகப் பல்வேறு பெயர்களால் இங்ஙனம் அழைக்கப்படுமிடத்துச் சிலவிடங்களில் கிருட்டிணாவதாரக் குறிப்புடனும், சிலவிடத்து வாமனாவதாரக் குறிப்புடனும் பேசப்படுகின்றான்.

**மணிவண்ணன் :** திருமாலும், பிரமனும் மாறுபட இன்னதென அறியமுடியாத வடிவுடைய பிரான் சிவன் என்னும்போது ''மணிவண்ணன்'' என்று கிருட்டிணாவதாரச் செய்தியுடனும் [417-418] மணிவண்ணன்[419], கடல் மணிவண்ணன்[420] என்றும் கூறப்படுகின்றான்.

பன்றியாய்க் கீழ்ச்சென்றவன் திருமால் என்ற குறிப்பில் ''மாமணி வண்ணனாகக்'' குறிக்கப்படுகின்றான்.[421-422] சிவனை வழிபட்டுச் சுடராழி கொண்ட திருமால் என்று குறிக்குமிடத்து மணிவண்ணனாகக் காட்டப்படுகின்றான்.[423] அயனும் மாலும் பணிந்திறைஞ்ச நின்றவன் சிவன் என்னுமிடத்து வாமனாவதாரக் குறிப்புடன் ''மண்ணளந்த மணி வண்ணர்'' என்றும் சுட்டப்படுகின்றான்.[424]

408. சம். தே. - 1 - திருவிடைச்சுரம் - 10 - 1 - 2
409. சம். தே. - 3 - 123 - திருக்கோணகலை 9 1 - 2
410. சம். தே. - 1 - திருப்பேணு பெருந்துறை - 9 - 1 - 2
411. சம். தே. - 2 - 107 - திருக்கேதீச்சரம் - 9 - 1 - 2
412. சம். தே. - 2 - திருப்புகலி - 9 - 3 - 5
413. திரு. நாவு. - 5 - 46 - திருப்புகலூர் - 465 - 1 - 3
414. சம். தே. 1 - திருப்பறியலூர் வீரட்டம் - 9 - 1 - 2
415. திரு. நாவு. - 5 - 97 - சித்தத்தொகைத் திருங்குறுந்தொகை - 967 - 1 - 4
416. திரு. நாவு. - 5 - 97 - சித்தத்தொகைத் திருக்குறுந்தொகை - 968 - 3 - 4
417. சம். தே. - 1 - இடைமருது - 9 - 1 - 4
418. சம். தே. - 26 - திருநெல்வாயில் - 9 - 1 - 3
419. சம். தே. - 3 - 27 - திருச்சக்கரப்பள்ளி
420. திரு. நாவு. - 4 - 85 - திருச்சோற்றுத்துறை - 820 - 1 - 2
421. சம். தே. - 2 - 75 - சீகாழி - 9 - 1 - 2
422. சம். தே. - 2 - 78 - திருவிளநகர் - 10 - 1 - 3
423. திரு. நாவு. - 5 - 59 - திருமாற்பேறு - 594 - 4
424. திரு. நாவு. - 6 - 58 - திருவலம்புரம்- 581 - 1 - 4

**தாமரைக் கண்ணன்:** அயனும் மாலும் வணங்கிக் காணாத சேவடிகளை உடையவன், தீப்பிழம்பானவன் என்று சிவன் குறிக்கப் படுமிடத்துத் தாமரைக் கண்ணன்[425] எழில்மால்[426], செங்கண் மால்[427], போதன கண்ணன்[428], புள்ளின்மேலைப் புண்டரிகக் கண்ணன்[429], தடங்கண்ணான்[430], ''செங்கண் நெடுமால்''[431] என்று திருமால் காட்டப்படுகின்றான்.

சக்கராயுதம் பெற்ற வரலாறு கூறப்படுமிடத்தில் ''செங்கண் மலர் பங்கயமாச் சிறந்தான்'' என்று தாமரைக்கண்ணனாகக் குறிக்கப்படுகின்றான்.[432] திருமால் செய்த மிக்க பூசைகள் நன்ஞானத்தோடு திகழ்ந்தமையால்தான் கண்மலர்க்குக் கண்ணைப் பறித்திட்டு வந்து சக்கரங்கொடுக்கப் பெற்றார் என்பர். மலர் குறையின் கண் இடல் பொருந்துமோ என்பார்க்கு விடையாக மலர்க்கண் மலர்க்கு ஒக்கும் என்று தேர்ந்து ஒரு கண்ணை இடந்தும் அப்பினார் என்றார். திருமாலின் உறுப்புட் சிற்சில மலர் போன்றவை, முகமும், கண்களும், கைகளும், கால்களும், தாமரை போன்றவை எனப் பொதுவாகக் கூறுவர். இங்கு கண்கள் தாமரை நிகர்த்தவை என்னும் கருத்தமைய நாவுக்கரசர் கூறுகிறார்.[433] திருமாலிடத்தும் நான்முகனிடத்தும் பிற விண்ணவரிடத்தும் இல்லாத ஒப்பற்ற பேரின்பம் தருபவன் சிவன் என்னுமிடத்துச் ''செங்கணவன்'' என்று சிவந்த கண்களுடையவனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[434]

தலைவன், தலைவியருக்கு உவமமாக அமையும் இடத்தில், பாம்பணைப் பள்ளியோனாகத் திருமகளுடன் சேர்த்துப் பேசப்படு கின்றான். இங்கு ''பங்கயக் கண் நெடுமால்'' என்று தாமரைக் கண்ணனாகக் காட்டப்படுகின்றான்.[435]

---

425. சம். தே. - 1 - திருமாற்பேறு - 1 - 4
426. சம். தே. - 1 - திருமாற்பேறு - 1 - 4
427. சம். தே. - 3 - 29 - மேலைத் திருகாட்டுப் பள்ளி - 9-1-2
428. சம், தே. - 3 - 49 - பொது - 9 - 1 - 2
429. திரு. நாவு. - 6 - 31 - திருவாரூர் - 315 - 3 - 4
430. சுந். தே. - 7 - 78 - திருக்கேதாரம் - 793 - 3 - 4
431. திரு. வா. - திருவண்ணாமலையில் அருளிய திருஅம்மானை ஆனந்தக்களிப்பு - அடி - 1 - 1
432. சுந். தே. - 7 - 16 - திருக்கலய நல்லூர் - 157 - 1 - 2
433. திரு. நாவு. - திருச்சாய்க்காடு - 637 - 1 - 4 - 62
434. திரு. வா. - திருவெம்பாவை - 17 - 1 - 2
435. திரு. கோ. - பகற்குறி - 120 - 1 - 3

**அரி :** செருக்குற்று அடிமுடி தேடிய செய்தியில் ''அரியாகக்'' குறிக்கப்படுகின்றான்.[436] இதே கருத்தில் ''சக்கராயுதமுடைய அரி''[437] மண்ணதுவுண்ட அரி[438] அரிமால்[439] ''தேவரி''[440] அம்மானை அரி''[441] ''ஒள்ளரி''[442] ''ஆளரி[443] ''ஆழி அமரும் அரி''[444] என்று பலவாறு கூறப்படுகின்றான். இங்கெல்லாம் அயனோடு சேர்த்தே பேசப்படுகின்றான். அயனாக இருந்தாலும் அயனைப்படைத்த தந்தை மாலாக இருந்தாலும் சிவனைக் காணமுடியாத தன்மை கூறப்படுகிறது. பெரும்பாலும் திருமாலைக் கூறுமிடத்து நான்முகனோடு சேர்த்தே சைவ இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. திருமால், அரி, அயன் ஆகியோருக்குச் சிவனைத் தலைவன் என்று கூறும் கருத்து வலியுறுத்தப்படுவதைக் காணலாம். ''அகரமுமாகி, அரியெனவாகி, அயனெனவாகி அவர்மேலாய்'' என்பது திருப்புகழ். மும்மூர்த்திகளில் உயர்ந்தவன் சிவன் என்பதை வலியுறுத்தவே இத்தகு கருத்துகள் அமைகின்றன எனலாம்.

''அரி'' என்ற பெயரோடு சிலவிடத்துக் கிருட்டிணாவதாரக் குறிப்புடனும், அழகு படைத்தவனாகவும், கடலில் அமர்ந்த திருமாலாகவும் நரசிங்கமாகிய குறிப்புடனும் பேசப்படுவதைக் காணலாம்.

திருமால் சக்கரம் பெற்ற வரலாறு கூறப்படுமிடத்தில் ''அரி''[445] என்றும் ''ஆழி அளிப்பர் அரிதனக்கு''[446] என்றும் கூறப்படுகின்றான். திருமால் வெள்ளைப் பன்றியாய்ச் சிவனை வழிபட்ட தலத்தின் பெருமை கூறுமிடத்துப் பாற்கடலில் யோக நித்திரை செய்யும் அரியாகவும்[447], ''ஆதி வராகமான அரி''[448] என்றும், மாலும் நான்முகனும் சிவனுக்குக் குடவிளக்கேந்துவர் என்னுமிடத்து

---

436. சம். தே. - 1 - திருமுதுகுன்றம் - 9 - 1 - 2
437. சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 9 - 1 - 2
438. சம். தே. - 3 - 109 - திருக்கயிலாயமும், திருவானைக்காவும்
439. திரு. நாவு. - 4 - 98 - திருவையாறு - 955 - 4
440. திரு. நாவு. - 5 - 73 - திருமங்கலக்குடி - 731 - 3 - 4
441. திரு. நாவு. - 6 - 42 - திருநெய்த்தானம் - 419 - 3 - 4
442. சுந். தே. - 7 - 84 - திருக்கானப்பேர் - 859 - 3
443. திரு. கோ. - உடன்போக்கு - பாடல் - 225 - அடி 1 - 2
444. திரு. மந். - சிவபூசை - 1846 - 3 - 4
445. சம். தே. - 1 திருவீழிமிழலை - 2 - 1 - 2
446. சுந். தே. - 7 - 53 - திருக்கடவூர் மயானம் - 548 - 2
447. சம். தே. - 1 - திருச்சிவபுரம் - 6 - 3 . 4
448. சம். நே. - 1 - திருச்சிவபுரம் - 7 - 1 - 4

''அறுகெடுப்பான் அயனும் அரியும்'' என்று செய்திகள் அமைகின்றன.[449]

''மற்றை ஒருபால் அரியுருவந் திகழ்ந்த செல்வர்'' என்று சிவனது பாகமாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[450] இத்தகைய சிவனது நிலையைச் ''சங்கர நாராயணர்'' என்பர். இந்நிலை படைப்புக் காலத்தில் திருமாலை இடப்பாகத்தில் தோற்றுவித்து, அவர் வாயிலாகப் பிரமனைத் தோற்றுவித்து, அவன் வாயிலாக உலகங்களைத் தோற்றுவித்தலைக் குறிப்பதாகும் என்பர் சைவர்.

சதாசிவன் முதலாக மகேசன் ஈறாக உள்ள உருவ மூர்த்திகள் பதின்மரில் ஒருவனாகத் திருமால் குறிக்கப்படுமிடத்து ''அரி'' என்று குறிக்கப்படுகின்றான். இச்செய்தி ஒரு புதிய கருத்து எனலாம்.[451] இதுகாறும் பெரும்பான்மையான இலக்கியங்களில் சிவனை அடுத்து அரியும், அயனும் அடுத்தவர்களாக கருதப்பட்டனர். அதற்குப் பின் வந்த சைவர்கள் இருவராகக்கூடக் கொள்ளாமல் பதின்மரில் ஒருவராகக் கூறிவிட்டனர்.

**மாயன்:** மாயன் என்பதற்கு உபாயம் சொல்பவன், அரசியல் சூழ்ச்சி உள்ளவன் என்று பொருள் கூறலாம். மாலும், பிரமனும் அடிமுடிக் காணாமல் மயல் எய்தச் செய்தவன் சிவன் என்றவிடத்து ''மாயன்''[452] என்றும், ''மாயம் மிக்கவன்'' என்ற பொருளில் ''மிகுமாயன்''[453] என்றும் ஏனமாய்ச் சென்றவன் என்ற கருத்தில் ''மாயன்[454] என்றும், ''மண்ணினை உண்டு உமிழ்ந்த மாயன்''[455] என்றும் கூறப்படுகின்றான். நீர் என்னும் பூதத்திற்குத் தலைவன் மாயோன் என்பது பற்றியும், நிலம் என்னும் பூதம் நீரில் ஒடுங்கி, நீரில் தோன்றுவது என்பது பற்றியும் மாயோன் மண்ணினை உண்டு உமிழ்ந்தவன் என்றும் கூறப்படுகின்றான்.

மாயனும், மலரானுங் கைதொழ நின்றவன் சிவன்[456] என்றும், சிவனை நாடுகின்றவன் திருமால் என்னுமிடத்துக் ''கரிய நிறமுடைய

---

449. திரு. வா. - திருப்பொற்சுண்ணம் - 5 - 1
450. திரு. நாவு. - 6 - 58 - திருவலம்புரம் - 583 - 1
451. திரு. மந். - சிவபூசை - 1846 - 3 - 4
452. சம். தே. - 1 - திருஇடும்பாவனம் - 9 - 3 - 4
453. சம். தே. - 2 - 87 - திருநறையூர்ச் சித்தீச்சரம் - 9 - 1 - 2
454. சம். தே. - 2 - 102 - திருச்சிவபுரம் - 9 - 1 . 3
455. சுந். தே. . 7 - 83 - திருவாரூர் - 850
456. சம். தே. - 2 - 112 - திருவாடானை - 10 - 1 - 2

மாயன்''[457] என்றும், சிவனருள் பெற்றுச் சக்கரப்படை பெற்றவனாகக் குறிக்கப்படுமிடத்து ''வக்கராசுரன் உயிர் கொன்ற மாயன்''[458] என்று கிருட்டிணாவதாரச் சிறப்புத் தோன்றவும் கூறப்படுகின்றான்.

திருமால், பிரமன், உருத்திரன் என்று மூவருள் ஒருவனாகச் சிவன் கூறப்படும்போது கரிய நிறத்தவனாக ''மாயன்''[459-460] என்றும், சிவனது பாகமாகக் கூறப்படுமிடத்து ''மண்ணினை உண்ட மாயன்''[461] என்றும் குறிக்கப்படுகின்றான். தேவர், அசுரருடன் கூடிப் பாற்கடலைக் கடைந்தவன் என்ற குறிப்பில் ''மண்தனை யிரந்து கொண்ட மாயன்'' என்று வாமனனாகிச் சென்று சிறிது இரப்பான் போற்காட்டி மூவுலகும் பெற்றமையால் மாயன் என்ற பொருள் தோன்றக் குறிக்கப்படுகின்றான்.[462]

திருமாலின் அன்பை அறியாதவர் சிவனது அன்பை அறியார் என்னுமிடத்துப் பேய்ப் பெண்ணின் பாலை உண்டு அவள் உயிர் போக்கிய மாயம் பொருந்திய திருமால் என்று கிருட்டிணாவதாரக் குறிப்புடன் கூறப்படுகின்றான்.[463] இந்தத் திருமாலின் மாயத் தன்மைகளைப் பாகவதம், பாரதம் போன்றவற்றில் மிகுதியாகக் காணலாம்.

**கண்ணன் :** கண்ணன் என்று திருமாலைக் கூறும்போது கண் அழகுடையவன், குளிர்ச்சியான மழைக்கண்ணன் என்று பொருள் கூறலாம். குளிர்ச்சி மட்டுமல்ல கூர்மையும் உண்டு. சிவனது கண்களில் வெம்மை அதிகம். திருமாலின் கண்களில் தண்மை அதிகம்.

அயனும், மாலும் காணாத சிவன் என்னுமிடத்துக் கரிய நிறமுடையவன், கண்ணனாக அவதரித்தவன் என்னும் பொருள் தோன்றக் ''கண்ணன்'' என்று பலவிடத்தும் குறிக்கப்

---

457. திரு. நாவு. - 4 - 33 - திருமறைக்காடு - 325 . 1 - 4
458. திரு. நாவு. - 5 - 68 - திருநள்ளாறு - 685 - 3 - 4
459. திரு. நாவு. - 4 - 43 - திருக்கச்சி மேற்றளி - 429 - 1
460. திரு. மந். - 2365 - 1 - 2
461. திரு. நாவு. - 4 - 43 - திருக்கச்சி மேற்றளி - 430 - 1
462. திரு. நாவு. -4-41- திருநாகைக் காரோணம் -691-1-2
463. திரு. நாவு. - 5 - 100 - ஆதிபுராணத் திருக்குறுந்தொகை - 1014 - 1 - 4

படுகின்றான்.464-469 கடலில் தூங்குகின்ற கண்ணையுடைய திருமால் என்ற பொருளில் ''அப்பியன்ற கண்ணன்''470 என்றும், ''கார்முகில் நிறத்துக் கண்ணன்''471 என்று நிறம் தோன்றவும், ''விறற் கண்ண னென்று''472 வலிமை உடையவனாகவும் காட்டப்படுகின்றான். பெரும்பாலும் இவ்விடங்களில் திருமாலே கண்ணன் என்று குறிக்கப் படுகின்றான்.

மூவருமானவன் சிவன் என்னுமிடத்துச் ''சிந்துரக் கண்ணன்'' என்று குறிக்கப்படுகின்றான்''473 சிவனருளால் சக்கரப்படை பெற்றவன் என்னுமிடத்து உலகில் செய்யப்படும் சக்கரம் போல்வ தல்லாத ''பண்ணற்கரிய தொடு படை ஆழி'' பெற்றவன் என்ற பொருளில் ''கண்ணன்'' குறிக்கப்படுகின்றான்.

**அற்புதன்:** மாலும், அயனும் அறியானாக நின்றவன் சிவன் என்னுமிடத்து, ஐந்து இராத்திரியில் ஞானங்களை வெளிப்படுத் தினவன், கண்ணிடந்து பூசித்த அரிய செயலையுடையவன் என்ற இருபொருள் தோன்றவும் ''அற்புதன்'' என்று திருமால் குறிக்கப் படுகின்றான்.474

சைவ இலக்கியங்கள் ''கண்ணப்பர் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்'' என்று அறுபத்து மூன்று நாயன்மார்களில் கண்ணப்பர் சிவனிடத்து மிக்க அன்புடையவர் என்பதைத் தெரிவிக்கின்றன. அதுபோல மால் அன்புடையவன் என்பதைக் காணலாம்.

**மாதவன்:** அயனுக்கும், மாலுக்கும் அவர்கள் விரும்பிய அதிகாரத்தைக் கொடுப்பவன் என்னுமிடத்து ''மாதவன்'' என்று திருமால் குறிக்கப்படுகின்றான்.475

---

464. சம். தே. - 1 - திருவாப்பனூர் - 9 - 1 - 2
465. சம். தே. - 1 - திருச்சிரபுரம் - 9 - 1 - 4
466. சம். தே. - 1 - திருவையாறு - 9 - 3 - 4
467. சம். தே. - 2 - 5 - திருவனேகதங்காவதம் - 9 - 1 - 3
468. சம். தே. - 2 - 52 - திருக்கோட்டாறு - 9 - 1
469. சம். தே. - 3 - 46 - திருக்காவூர் - 9 - 2 - 3
470. சம். தே. - 3 - 116 - திருவீழிமிழலை - 7 - 1 - 2
471. திரு. வா. - அருட்பத்து - 4 - 1 - 2
472. சம். தே. - 3 - 116 - திருவீழிமிழலை - 5 - 4
473. சம். தே. - 7 - 18 - மூப்பதும் இல்லை - 186 - 3 - 4
474. சம். தே. - 3 - 98 - திருவீழிமிழலை - 9 . 2 - 4
475. திரு. நாவு. - 6 - 73 - திருவலஞ்சுழியும்,
திருக்கொட்டையூர்க் கோடீச்சரமும் - 729 - 3.

**மதுசூதனன் :** மாலும், நான்முகனும் வணங்க அரியான் சிவன் என்னும்போது ''மது'' என்னும் அசுரனைக் கொன்றவனாகிய திருமால் என்னும் கருத்துத் தோன்ற ''மதுசூதனன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[476]

**கேசவன் :** அழகிய கூந்தலை உடையவன், கேசியென்னும் அசுரனைக் கொன்றவன், ஆயிரம் பூக்கொண்டு சிவனை வழிபட்ட நாளில் சக்கரம் பெற்றவன், ''கேழல்'' ஆகிக் கிளறியும் சிவனைக் காணாதவன் என்றும் கருத்துகள் அமையப் பேசுமிடத்துக் ''கேசவன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[477]

**''கோவலன்'', ''ஏவலன்'' :** மாலும், அயனும் நோக் கொண்ணாத குழகனாகவும், சேதுவில் செங்கண்மாலால் பூசித் தவனாகவும் சிவன் காட்டப்படுமிடத்துக் ''கோவலனாகவும்'', அம்பு எய்வதில் வல்ல இராமபிரான் என்ற கருத்தில் ''ஏவலன்'' என்றும் திருமால் சுட்டப்படுகின்றான்.[478] அயனும், மாலும் கூடி எல்லை காண்பரியான் சிவன் என்னும் போது ''கொல்லை வாய்க் குருந்தொசித்துக் குழலும் ஊதும் கோவலன்'' என்று யமுனை யாற்றில் நீராடிய மகளிர்க்குச் செய்த உதவியும் குழலூதும் பண்பும் தோன்றக் ''கோவலன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[479] அயனும், மாலும் வானவர் கோனுங் குற்றேவல் செய்ய நின்றவன் சிவன் என்னுமிடத்துக் ''கோவலன்'' என்று காட்டப்படுகின்றான்.[480]

**விண்டு :** விண்டு என்பதற்கு எங்கும் பரந்தவன், வியாபித்தவன் என்று பொருள் கூறலாம். சிவனை வழிபட்டதாகத் திருமால் பற்றிய குறிப்பு இடம் பெறும் போது ''விண்டு'' என்றழைக்கப் படுகின்றான்.[481] சிவன் காரணக் கடவுள் என்றும் அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் ஆகிய ஐவரும் சார்புக் கடவுளர் என்றும் கூறுமிடத்து ''விண்டு'' என்று திருமாலைக் குறிப்பிடு கின்றார் திருமூலர்.[482] நாதாந்தமாகிய சிவனிடம் சென்றவரிடம்

---

476. சம். தே. - 3 - 109 - திருக்கயிலாயமும் திருவானைக்காவும் - 5 - 1 - 2
477. திரு. நாவு. - 4 - 107 - திருக்கடவூர் வீரட்டம் - 1024 - 1 - 3
478. சம். தே. - 3 - 101 - திரு. இராமேச்சுரம் - 9 - 1 - 2
479. திரு. நாவு. - 6 - 3 - திருவதிகை வீரட்டானம் - 31 - 3 - 4
480. சுந். தே. - 7 - 17 - திருநாவலூர் - 167 - 1
481. சம். தே. - 2 - 8 - திருச்சிக்கல் - 5 - 4 - 4
482. திரு. மந். - ஆனந்தம் - 2333 - 1 - 4

பிறவி இல்லை என்ற கருத்து இடம் பெறுமிடத்துப் பிறவிக்குக் காரணமான பிரமனாதி ஐவர் (பிரமன், திருமால், உருத்திரன், மகேசுவரன், சதாசிவன்) என்ற குறிப்பில் ஐவருள் ஒருவனாகத் திருமால் குறிக்கப்படுமிடத்து ''விண்டு'' என்று குறிக்கப்படு கின்றான்.[483]

**நாரணன் :** அயனும், மாலும் அறிய வொண்ணாத் தாணுவாகச் சிவன் குறிக்கப்படுமிடங்களில் ''நாரணன்'' என்ற பெயரோடு குறிக்கப்படுகின்றான்.[484 - 491] ''நாராயணன்''[492] என்னும் இதே கருத்தமையும் இடங்களில் காத்தல் தொழிலும், அழகும் மிக்கவன் என்ற பொருளோடு ''நலமிகு நாரணன்''[493] என்றும், செருக்கால் மிக்கவன் என்ற பொருளில் ''ஓங்கிய நாரணன்''[494] என்றும், சிவனது அடிமுடி தேடியவிடத்துப் பிரமன் போலப் பொய் கூறாமையின் ''நன்றி நாரணன்'' என்ற கருத்தமை யவும் கூறப்படுகின்றான்.[495]

முத்தொழில் புரிபவனும் சிவனே என்ற கருத்தமையும் இடத்தில் காத்தல் தொழில் புரிபவனாகத் திருமால் ''நாரணன்'' என்ற பெயரோடு சுட்டப்படுகின்றான்.[496] சிவனை ஏத்தும் திருமால் என்ற கருத்தமையும் இடத்திலும்,[497-498] சிவனது இடப்பாகத்தானாகத் திருமாலைக் காட்டும்போதும், ''நாரணன்'' என்று குறிக்கப்படு

483. திரு. மந். - 2374 - 1 - 4
484. சம். தே. - 1 - திருக்கோளிலி - 9 - 1 - 2
485. சம். தே. - 2 - 47 - திருமயிலாப்பூர்
486. சம். தே. - 3 - 85 - திருவீழிமிழலை - 9 - 3 - 4
487. திரு. நாவு. - 4 - 25 - திருவதிகை வீரட்டானம் - 257 - 3 - 4
488. திரு. நாவு. - 5 - பதிகம் - 1 - சோயில் - 10 - 1 - 2
489. திரு. நாவு. - 6 - 90 - திருக்கஞ்சனூர் - 893 - 1
490. சம். தே. - 7 - 45 - திருவாமாத்தூர் - 461 - 2 - 3
491. திரு. வா. - திருக்கோத்தும்பி (சிவனோடைக்கியம்)-1-1-4
492. திரு. வா. திருப்பொன்னூசல் (அருட்சுத்தி) - 1 - 3
493. சம். தே. - 2 - 21 - திருக்கழிப்பாலை - 9 - 1 - 2
494. சம். தே. - 3 - 12 - திருக்கோட்டாறு - 9 - 1 - 2
495. திரு. நாவு. 5 - 36 - திருச்செம்பொன்பள்ளி - 365 - 1 - 4
496. திரு. நாவு. - 6 - 8 - திருக்காளத்தி - 78 - 1
497. திரு. நாவு. - 5 - 68 - திருநள்ளாறு - 68 - 1 - 3
498. சுந். தே. - 7 - 48 - திருப்பாண்டிக் கொடுமுடி - 496 - 3 - 4

கின்றான்.[499] கண்ணைத் தந்து சக்கரம் பெற்ற வரலாறு குறிக்கப் படுமிடத்துக் காத்தல் தொழில் செய்பவன், கண் இடந்து அப்புகின்ற தவ வலியையுடையவன் என்பதும் பெறப்பட்டு ''நலமுடைய நாரணன்'' என்று குறிக்கப்படுகின்றான்.[500-501]

இத்தகு பெயர்களையெல்லாம் காணும் போது பெயர்கள் அளவில் ஒரு வளர்ச்சி நிலையினைக் காண முடிகின்றது. இப் பெயர்கள் யாவும் சிவனது பெருமையும், புகழும் பேசுமிடங்களில் அமைந்தாலும் திருமாலின் பண்புகள் விளங்கவும் அக்குறிப்புகள் அமைவதைக் காணலாம். இப்பெயர்கள் திருமாலின் பரத்துவத்தைக் கூறுவது என்று கூறினாலும் ''விஷ்ணு'' என்ற பெயர் பரவலாகக் கூறப் படுவதில்லை. விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் பரந்துள்ளவன், நன்மை செய்பவன், அடியவர்களை மாயையிலிருந்து விடுவிப்பவன், எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்பவன் எனறெல்லாம் பொருள் கூறினும் இச்சொல்லை விடவும் ''பகவான்'' என்ற சொல்லையே பலவிடங்களிலும் பயன்படுத்துகின்றனர்.

தமிழர்களிடையே பெரிதும் வழங்கும் சொல் ''திருமால்'' என்பது. ''மால்'' என்பதற்கு அடியவர்களிடம் அன்பு கொண்டவன், பற்றுடை அடியவர்க்கெளியவன் எனக் கூறலாம். பிறிதொரு பெயர் ''வாசுதேவன்'' என்பது. வசுதேவன் - தேவகி - மகன் வாசுதேவனா கின்றான். திருமாலை உணர்த்தப் பல பெயர்களைக் கூறினாலும் அவன் திருப்பெயராகவும், நாம மந்திரமாகவும் கொண்டு பாராட்டப் படுவது நாராயணன் என்பதே.

பெயர்கள் அளவில் பன்னிரண்டு பெயர்களை விதந்தெடுத்துப் பேசுவதும் உண்டு. அவை கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமனன், கிரீதரன், இருடீகேசன், பத்மநாபன், தாமோதரன் முதலானவை என்று திருவாய்மொழி கூறும்.[502] தாமோதரன் என்பதற்கு, தாம உதரன் என்று பிரித்து வயிற்றளவுக்கு நீண்ட மாலையையுடையவன் என்று பொருள் கொள்ளலாம். பன்னிரு பெயர்கள் பற்றிய தோத்திரம் ஒன்றினைத் தேசிகரும் பாடியுள்ளார்.[503]

---

499. திரு. நாவு. - 6 - 53 - திருவீழிமிழலை - 531 - 2
500. திரு. வா. – திருச்சாழல் - 18 - 1 - 4
501. திரு. கோ. - இரவுக்குறி இடத்துய்த்து நீங்கல் - பாடல் - 163 - 1 - 2
502. நா. தி. பிர. - திருவாய்மொழி - 2 - 7 - 1 - 12
503. வைணவ சமயம் - டாக்டர் ப. அருணாசலம் - பக்கம் - 1

பாரதத்தால் அறியப்படும் திருமால் இயல்புகளால் அவனது பெயர்களாகச் சுட்டப்படுபவை நரசிம்மன், கிருட்டிணன், வாமனன், நாராயணன், மாதவன், வாசுதேவன், தாமோதரன், இராமன், திரிவிக்ரமன், பலராமன், கேசவன், விஷ்ணு, பக்தவச்சலன், கோவிந்தன் முதலான பெயர்களாகும்.

சிவன், திருமால் இயல்புகளில் இத்தெய்வங்களை ஆயிரம் பெயருடையவர்களாகக் கூறுவதும் ஒன்று. ''சகஸ்ரநாமம்'' என்ற சொல் பொதுவாக ''ஆயிரம் நாமம்'' என்ற பொருளைத் தரினும் இறைவன் எண்ணற்ற பெயருடையவன் என்பதை விளக்குவதே யெனலாம். சிவனடியார்களும், வைணவ அடியார்களும் இறைவனுக்கு ஆயிரம் நாமம் பெயர் சொல்லுவர். இப்பெயர்களால் உணர்த்தப்படும் சிவன், திருமால் இயல்புகளும் பாரதம் வழியாக வந்தவை என்று கூறலாம். பக்தி இலக்கிய காலங்களில் வழங்கும் பெயர்கள் பலவும் இதிகாசங்களில் உள்ளன எனலாம்.

**பல்வேறு செய்திகள்-சிவனது பாகமாகத் திருமால் :** திருமாலுக்கு சிவனோடு இத்தகையதோர் பிணைப்பு புராணங்களின் வழி ஏற்பட்டதாகவே கொள்ள வேண்டும். சிவ-சக்தி என்னும்போது திருமாலின் அம்சம்தான் சக்தி என்பர். உமையின் அண்ணன் திருமால் என்பதால் ஏற்பட்ட கருத்தெனலாம். இதனைப் பின்னே வந்த கலம்பக ஆசிரியர்களாகிய இரட்டையரும் குறிப்பிடுவதைக் காணலாம். அரிக்கும் தேவிக்கும் வேறுபாடில்லாத ஓர் நிலை உள்ளது. ''அரியலால் தேவியில்லை ஐயன் 'ஐயாறனார்க்கே''[504] என்ற பாடல் இங்கு கருதத்தக்கது. இதனை மேலும் விளக்கமாக ''சீரேறு திருமாலோர் பாகத்தான் காண்''[505], ''நாரணனை இடப்பாகத் தடைத்தார் போலும்''[506] எனக் கூறுவதோடு ''காவியங்கண்ணளாகிக் கடல் வண்ணனாகி நின்ற தேவியைப் பாகம் வைத்தார்''[507] என்றும் பாடுவது இக்கருத்தை உணர்த்துகின்றது.

இதே கருத்தினை ஏனைய சமய குரவர்களும் பாடுவர். ஞான சம்பந்தர், ''உடன் பயின்கின்றனன் மாதவனே''[508], ''மாலுமோர்பாகர்''[509] என்று பாடுவர். ''திருமாமகள் கோன் திருமால் ஓர் கூறன்''[510] என்பர்.

---

504. தேவாரம் 4556
505. தேவாரம் - 6489
506. தேவாரம் - 6774
507. தேவாரம் - 4476
508. தேவாரம் - 4016
509. தேவாரம் - 4084
510, தேவாரம் - 7542

மேலும் இவர்கள் காலத்தில் உமையொரு பாகனாகவும், சங்கர நாராயணனாகவும் வழிபட்டு வந்த மூர்த்திகளையே ''மங்கை பாகமும் மாலோர் பாகமும் தாமுடையார்''[511] எனச் சுந்தரர் பாடுகிறார் போலும். சம்பந்தரும் ''பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்'', ''பங்கயத் தயனுமோர் பாகர்''[512] எனப் பாடுவதும் கருதத்தக்கது. எனவே சைவ சமயக் குரவர் பாடல்களில் திருமால் மூர்த்தங்கள் பழிக்கப்படுவனவே என்று கூறிவிட முடியாது. சிவனோடு ஒத்த நிலையிலன்றிச் சிவனுக்கு அடங்கிய நிலையில் பாராட்டப்படுதலும் உண்டு எனலாம்.

பிரமனும் ஒரேவிடத்துப் பாராட்டப்படுதலும் உண்டு. ''அயனர், திருமால் ஆனானை''[513] என்ற அப்பர் பாடலும், ''மாலுமோர் பங்கயத் தயனுமோர் பாகர்''[514] என்ற சம்பந்தர் பாடலும் பிரமனுக்கு மதிப்பளித்துப் பாடப்பட்டனவாகக் கொள்ளலாம். இவ்வாறு பாடும்போது சிவனுக்கு அடங்கிய நிலையிலேயே அம்மூர்த்தம் பாடப்படுகிறது என்பதை நினைவிற் கொள்ளலாம். இவ்வாறு திருமால் சிவனது பாகமாகக் கூறப்படுமிடங்களில் அமையும் சூழல்கள் சிவனுக்கு ஏற்றம் தருவது போலவே அமையக் காணலாம்.

''மாலோர் பாகமாய்த் தானிருந்து இன்பம் பெருக்கிக் காக்கின்றான்'' சிவன் என்று கூறப்படுகின்றது.[515] ''மாலது வேந்தன்''[516] ''இடப்பால் உலகேந்திய திருமால்''[517] ''மாலுங் கொப்பளித்த பாகர்''[518] ''மால் ஒருபாகம்''[519] ''மறிகடல் வண்ணன் பாகர்''[520] ''பாகம் மாலுடையர்''[521] ''திருமாலோர் பாகன்''[522] ''மண்ணினையுண்ட மாயன் தன்னையோர் பாகங்கொண்டார்''[523]

---

511. தேவாரம் - 8110
512. தேவாரம் - 4684
513. தேவாரம் - 7131
514. தேவாரம் - 4684
515. சம். தே. - 1 - திருச்செம்பொன்பள்ளி - 4 - 1 - 2
516. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 7 - 2
517. திரு. நாவு. - 4 - 2 - திருவதிகை வீரட்டானம் - 14 - 3
518. திரு. நாவு. - 4 - 24 - திருவதிகை வீரட்டானம் - 245 - 3
519. திரு. நாவு. - 4 - 37 - திருநெய்த்தானம்
520. திரு. நாவு. - 4 - 606
521. திரு. நாவு. - 4 - 646
522. திரு. நாவு. - 4 - 750
523. திரு. நாவு. - 4 - 43 - திருக்கச்சி மேற்றளி - 430 - 1

''தேசமாடுந்திருமாலோர் பங்கன் தன்னை''[524] ''பாகம் மாலை மகிழ்ந்தனர்''[525], ''கொழுஞ்சுடர் நீல வண்ணத்தாராகி''[526], ''செங்கண் திருமாலை இடமாக உடையான்''[527] ''மாலை மகிழ்ந் தொருபால் வைத்தார்''[528], ''பரவை மேனி மாலையோர் கூறுடைய மைந்தன்''[529], ''சீரேறு திருமாலோர் பாகத்தான்''[530], ''மாலை யிடப்பாகத்தே மருவக்கொண்டார்''[531], ''ஒருபால் உலகளந்த மாய வனாம்''[532], ''செங்கண் திருமாலைப் பங்குடையான்''[533], ''மாலுருவோ''[534] என்று சிவன் பற்றிய குறிப்புகள் அமைகின்றன. இவ்விடங்களில் கிருட்டிணாவதாரக் குறிப்பு, வாமனாவதாரக் குறிப்பு, நிறம் பற்றிய குறிப்புத் தோன்றவும், சிவந்த கண்களை உடையவனாகவும் திருமால் பேசப்படுவதைக் காணலாம்.

படைப்புக் காலத்துச் சில கற்பங்களில் பிரமனை வலப்பக்கத் திலும், திருமாலை இடப்பக்கத்திலும் சிவபிரான் தோற்றுவிப்பான் என்ற கருத்து இடம் பெறுமிடத்தில் ''திருமால் பாகம் வேண்டி னான்'' என்று கூறப்படுகின்றான்.[535] திருமாலையும், பிரமனையும் வலமும், இன்னும் சில இடங்களில் இடமும் கொண்ட கருத்து அமைகின்றது.[536-537] உமையுடைய ஒரு பாகத்தையும், திருமாலை உடைய ஒரு பாகத்தையும் உடையவன் சிவன் என்று குறிக்கப் படுகின்றான்.[538] மங்கை ஓர் பாகம் உடைமையும், மால் ஓர் பாகம் உடைமையும் வேறு வேறு நிலைகளாதலின் அவற்றை ஏற்ற பெற்றி யினை உடையவன் சிவன் என்றும், மங்கையும், மாலும் இருத்தல் இடப்பாகம் ஒன்றிலே என்பதும் உணரப்படுகின்றது.

---

524. திரு. நாவு. - 4 - 78 - பொது - 760 - 1
525. திரு. நாவு. - 5 - 27 - திருவையாறு - 266 - 1
526. திரு. நாவு. - 5 - 28 - திருவையாறு - 276 - 2 - 3
527. திரு. நாவு. - 5 - 67 - திருவாஞ்சியம் - 676 - 3 - 4
528. திரு. நாவு. - 5 - 16 - திருஇடைமருதூர் - 159 - 2
529. திரு. நாவு. - 6 - 23 - திருமறைக்காடு - 238 - 3 - 4
530. திரு. நாவு. - 6 - 24 - திருவாரூர் - 246 - 4
531. திரு. நாவு. - 6 - 96 - தனித்திருத்தாண்டகம் - 941 - 3 - 4
532. காரைக்காலம்மையார் - அற்புதத் திருவந்தாதி - 41 - 1 - 4
533. காரைக்காலம்மையார் - அற்புதத்திருவந்தாதி - 52 - 2 - 3
534. காரைக்காலம்மையார் - அற்புதத்திருவந்தாதி - 59 - 2 - 3
535. திரு. நாவு. - 6 - 48 - திருவலிவலம் - 486 - 3
536. திரு. நாவு. - 6 - 77 - திருவாய்மூர் - 768 - 3
537. சுந். தே. - 7 - 85 - திருக்கடலையாற்றூர் - 863 - 1 - 2
538. சுந். தே. - 7 - 87 - திருப்பனையூர் - 686 - 2 - 3

சிவனடியார்கள் திருமாலைத் தேவியாகவும், சிவனை மால் ஒரு கூறனாகவும் கொண்டு வழிபடுவது போன்று திருமாலடியார்களும் ஒரே மூர்த்தத்தில் இரண்டு கோலங்களையும் கண்டு வழிபட்டதுண் டெனலாம்.

''அரன் நாரணன். நாமன் ஆன்விடைபுள் ஊர்தி
உரை, நூல் - மறை, உறையும் கோவில் - வரை நீர்
கருமம், அழிப்பு, அளிப்பு, கையது வேல் நேமி
உருவம் எரிகார், மேனி ஒன்று''

என்னும் பாடல் சங்கர நாராயணனைக் குறிக்கிறதா என்ற எண்ணம் பிறக்கிறது.[539] எனவே ஆழ்வார் பாடல்களிலும் சிவமூர்த்தம் பழிக்கப்படுமொன்றே என்று கூறிவிட முடியாது. ஆயினும் முன்னர் கூறியது போல் சைவமும், வைணவமும் இகலி நின்று புராணங்கள் வழித் தங்கள் மூர்த்தியின்பரத்துவத்தை நிறுவ முயலும் போது வேகம் மிகுந்து பழித்த இடங்களும் நாலாயிரத்தில் இல்லாமல் இல்லை. திருமழிசை ஆழ்வாரின் பாட்டில் (863) இவ்வேகத்தைக் காணலாம். இவ்வேகமும் ஒரு வகையில் திருமாலின் பரத்துவத்தை நிறுவ முயலும் வேகம் என்றே கூறலாம்.

**திருமால் - திரிபுரம் அழிக்க அம்பாகியது (அருட்செயல்) :** முப்புராதிகள் தீங்கு செய்ய, தேவர்கள் வேண்டுகோளின் வண்ணம் அவர்களைத் தேர் முதலிய சாதனங்களாகக் கொண்டு எரித்த முதல் வனாகச் சிவன் கூறப்படும்போது திருமாலும், அங்கியும், காற்று மாகிய முத்தேவர்களும் அம்பாக இருந்து உதவிய குறிப்பு இடம் பெறுகின்றது.[540] இதே கருத்து இச்சைவ இலக்கியங்களில் பலவிடங் களில் கூறப்படுகின்றது.[541-542] ''வளைய வெஞ்சரம் வாங்கி எய்தான்''[543], மால்கணை வில்லிடைச் சேர்த்துத் தொகுத்து''[544], ''முயன்ற வாளி''[545], ''திண் சிலைக்கோர் சரங்கூட்ட வல்லாய்''[546] என்று திரிபுரம் எரித்த சிவன் பெருமை கூறப்படும் இடங்களில் கணையின் கடுமை தோன்றவும், திருமால் திரிபுரம் அழிக்கக் கணையாக இருந்து உதவிய பண்பும், அருட்செயலும் ஒருசேரக்

---

539. பக்தி இலக்கியம் - டாக்டர் ப. அருணாசலம் - பக்கம் - 163
540. சம். தே. - 1 - திருமுதுகுன்றம் - 2 - 4
541. சம். தே. - 1 - திருவன்பிலாந்துறை - 1 - 1 - 2
542. சம். தே. - 1 - திருநெடுங்களம் - 7 - 1 - 2
543. சம். தே. - 2 - 9 - திருமழப்பாடி - 1 - 3 - 4
544. திரு. நாவு. - 4 - 68 - திருவாலங்காடு - 2
545. திரு. நாவு. - 6 - 1 - கோயில் - 7 - 1 - 2
546. திரு. நாவு. - 6 - 38 - திருவையாறு - 388 - 4

கூறப்படுகின்றது. காத்தற் கடவுளாகிய திருமால் தீமையை அழிக்க உதவிபுரிந்த பேரருட் பணியை இவ்விடங்களில் விளங்க அறிய முடிகின்றது.

**திருமால் சிவனிடம் சக்கரம் பெற்றமை :** சிவபிரான் சலந்தரன் சிரங்கொய்த சக்கரத்தைத் திருமாலுக்கு அருளியது குறிக்கப்படுகின்றது. திருமால் ஆயிரம் தாமரை மலர்கள் கொண்டு அருச்சித்தமையும் கண்ணைத் தந்து வழிபட்டுச் சக்கரம் பெற்ற வரலாறும் பலவிடங்களில் விளக்கமாகக் கூறப்படுகின்றது.[547] திருவீழிமிழலையின் தல வரலாறாகவும் இச்செய்தி கூறப்படுகின்றது.[548 - 549] அயனும் மாலும் காணா மிக்கவன் சிவன் என்னும் போது சக்கராயுதத்தை வேண்டிப் பெற்றவனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[550-551] சலந்தராசுரன் பற்றிய வரலாறு பக்தி இலக்கியங்களில்தான் நாம் காண்கின்றோம். சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப்படவில்லை.

**விண்ணிழி விமானம் :** திருவீழிமிழலை ஆலயத்திற்கு விண்ணிழி விமானம் என்று பெயர். அது திருமாலால் விண்ணுலகிலிருந்து கொணர்ந்து நிறுவப்பட்டது என்றும் அத்திருமால் தம் ஆன்மார்த்த மூர்த்தியை விண்ணிலிருந்து கொணர்ந்து மண்ணில் திருவீழிமிழலையுள் வைத்து எல்லா உயிர்களும் கண்டு போற்றி உய்யச் செய்தார் என்றும் கருத்துகள் இடம் பெறுகின்றன. சக்கரத்தைத் தனக்கு அருளும்படி அரி வழிபட்டு இழிச்சிய விமானத்திறைவன் என்று சிவன் குறிக்கப்படுகின்றான்.[552-553] ''விண் இழி தண் வீழிமிழலை'' என்று இத்தலமும் சிறப்பிக்கப்படுகின்றது.[554]

திருமால் செய்த மிக்க பூசைகள் நன் ஞானத்தோடு திகழ்ந்தமையால்தான் கண் மலர்க்குக் கண்ணைப் பறித்திட்டு இட்ட அவ்வலிமைக்குச் சக்கரங்கொடுக்கப் பெற்றார்[555] என்றும், மெய்யைக் கொடுத்தேனும் விரதத்தை மெய்ப்படுத்தும் மெய்யர் கொள்கைக்குப்

---

547. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 2 - 1 - 2
548. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 6 - 1 - 2
549. சம். தே. - 1 - திருவீழிமிழலை - 8 - 3 - 4
550. சம். தே. - 2 - 48 - திருவெண்காடு - 7 - 1
551. சம். தே. - 3 - 109 - திருக்கயிலாயம் - 6 - 5 - 2
552. சம். தே. - 3 - 119 - திருவீழிமிழலை - 7 - 1 - 2
553. திரு. நாவு. - 4 - 64 - திருவீழிமிழலை - 626 - 1 - 4
554. திரு. நாவு. - 6 - 52 - திருவீழிமிழலை - 520 - 4
555. திரு. நாவு. - 4 - 62 - திருச்சாய்க்காடு - 637 - 1 - 4

பொய்யாத சான்றானான், இறைவன் காட்சி அருளப் பெற்றான், திருமாற் பேறு என ஊரை நிகழ்த்திச் ''சுதரிசனம்'' என்னும் ஆழியை அருள்வித்தான் சிவன் என்றும் கூறப்படுகின்றது. திருமால் வழிபட்ட தலமாகிய திருமாற்பேறு தொழ வினைகள் போம் என்ற கருத்தும் கூறப்படுகின்றது.[556]

கடலை விட்டுப் பூமிக்கு வந்து சிவனைத் தன் நெஞ்சிடத்திற் கொண்ட திருமால் என்றும், கடலில் தூங்கும் திருமால் என்றும், ஏறு உடன் ஏழ் அடர்த்தான் என்று கிருட்டிணாவதாரக் குறிப்புடனும், கருநிறமும் நீலமணி போலும் நிறமுடையவன், குற்றமற்ற பண்புடையவன் என்றும், நெடுமால் என்று வாமன அவதாரக் குறிப்புடனும், கண்ணையே மலர்க்கு ஈடாகத் தரவல்ல வலிமை நிறைந்தவன் என்ற பண்பும் பெறப்படத் திருமால் இச்சக்ராயுதம் பெற்ற குறிப்புகளில் இடம் பெறுகின்றான்.

வானவரும் அவர்கள் தலைவர்களும் தொழும் தேவன் சிவன் என்னுமிடத்திலும்[557], அயனும் மாலுங் காணா இறைவன் சிவன் என்னுமிடத்தும் தேவர் தலைவனாகத் திருமால் குறிக்கப் படுகின்றான்.[558]

அமரர்க்கு அமரர் பெருமான் என்றும், மேலான செல்வத்தை யுடையவன் என்றும் சிவன் போற்றப்படுமிடங்களில் காரணக் கடவுளராக அயனும், மாலும் குறிக்கப்படுகின்றனர்.[559-560]

அயனும், மாலும் காணாச் சிவன் என்னுமிடத்து உலகிற்கு தலைவனாகக் காத்தல் தொழில் உடையவன் என்ற பொருள்படத் ''தேச வேந்தன்'' என்று திருமால் குறிக்கப்படுகின்றான்.[561]

சூரியன், அக்கினி, இந்திரன், பிரமன், சந்திரன், ஆதித்தன், உருத்திரன், விநாயகர், முருகன், மாகாளி போன்ற கடவுளருடன் சிவனைத் தொழும் குறிப்புகளில் இக்கடவுளருள் ஒருவனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[562-564].

---

556. திரு. நாவு. - திருமாற்பேறு - 592 - 1 - 4
557. சம். தே. - 3 - 17 திருவிசயமங்கை - 3 - 3 - 4
558. திரு. நாவு. - 5 - 32 - திருப்பூந்துருத்தி - 323 - 1 - 2
559. சுந். தே. - 7 - 11 - திருப்பூவனம் - 104 - 1 - 2
560. சுந். தே. - 7 - 3 - திருநெல்வாயில் அரத்துறை - 29 - 4
561. சுந். தே. - 7 - 77 - திருவையாறு - 790 - 2
562. திரு. நாவு. - 4 - 36 - திருப்பழனம் - 36 - 1 - 4
563. திரு. நாவு. - 4 - 99 - திருக்கச்சியேகம்பம் 962 - 1 - 2
564. திரு. நாவு. - 5 - 65 - திருப்பூவனூர் - 661 - 1 - 3

**இருவர் - அயன் - மால் :** ''பரக்கினார்''[565], ''சோதித்தார்''[566] ''கலங்க இருவர்கழலாய் நீண்டவன்''[567], ''அயனும், மாலும் பாரிடந்தும், மேலுயர்ந்தும் காணா வண்ணம் பரந்தான்''[568], ''ஏனமோடன்மை எங்கும் நாடியுங் காண் பரியான்''[569] என்றெல்லாம் சிவனடி காண முயன்ற செய்தியில் திருமாலும், அயனும் சேர்த்துப் பேசப்படுவதைக் காண முடிகின்றது. ''இருவர்''[570] என்றே இருவரும் சேர்த்துப் பலவிடங்களில் குறிக்கப் படுகின்றனர்.

இக்கருத்து இடம் பெறுமிடங்களில் திருமால், வெற்றியை உடைய தவத்தைச் செய்த திருமால், உழுது மாநிலத்து ஏனமாகி, இருந்தவன், கிடந்தவன், ''நீலவரைபோல நிகழ் கேழலுரு'', பன்றியானவன், பெரிய உடம்பையுடைய திருமாலாகிய பன்றி, ''பொற்கேழல்'', என்ற திருமால் ஆதலின் திருவையுடைய கேழலாகவும், ஏன வேடத்தினான், பண்டையமால், மாலவன், ''அம்மால்'', திணி நிலம் பிளந்தும் என்று அழகிய திருமால் என்ற கருத்துப் பெறவும், உலகை உண்டு களித்தவன் என்றெல்லாம் பண்புகள் தோன்றக் குறிக்கப்படுகின்றான். பன்றியாக உருவெடுத்தது விளக்கமாகச் சிலவிடங்களில் கூறப்படவும் காணமுடிகின்றது.

**திருமூலர் கருத்து :** இருண்மலம் பன்றியாகவும், மருண்மலம் அன்னமாகவும் உருவகிக்கப்படும். இருண்மலம் ஆணவமலமாகவும், மருண்மலம் மாயாமலம் என்றும் கூறப்படுகின்றது. இக்குறிப்பு முறையே மாலும், அயனும் கொண்ட வடிவால் புலனாகும் என்று திருமூலர் குறிக்கின்றார்.[571]

**திருமால் - சிவனை உள்ளத்தில் கொண்டமை :** திருமால் தன் உள்ளத்தில் வீதிவிடங்கப் பெருமானை உடையவன் என்ற கருத்து திருவாரூர்ப் புராணத்தாலும், தியாகேசத் திருமேனியாலும் அறியப்படும். ''பைஞ்சுடர் விடு நாகப்பள்ளி கொள்வான் உள்ளத்தான்'' என்ற ''உண்மையை உணர்த்தும் ஓவியம்

---

565. சம். தே. - 1 - திருவேற்காடு - 9 - 1 - 2
566. திரு. நாவு. - 6 - 57 - திருக்கயிலாயம் - 579 - 2
567. திரு. நாவு. - 6 - 77 - திருவாய்மூர் - 773 - 1 - 2
568. திரு. நாவு. - 6 - 91 - திருஎறும்பியூர் - 901 - 2 - 4
569, சுந். தே. - 7 - 68 - திருநள்ளாறு - 692 - 1 - 2
570. திரு. மந். - மறைபொருட்கூத்து - 2877 - 1 - 4
571. திரு. மந். - மறைபொருட் கூத்து - 2877 - 1 - 4

அது''572-573 ''திருமாலகத்தான்'' என்று திருமாலின் உள்ளத்தில் குடிகொண்டவனாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[574] மாயோனது உள்ளத்தில் வீற்றிருந்து அவனது மனக்கவலையை மாற்றியருளுகின்றவனாய்ச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[575]

''மாடத்தோடு மனத்துடன் வைத்தவர்'' என்று சிவனை மனம் கொண்ட திருமாலாகக் குறிக்கப்படுகின்றான் திருமால், இங்குத் திருமால் அகத்தும், புறத்தும் இறைவனைக் கொண்டவனாகக் குறிக்கப்படுகின்றான்.[576] திருமாலும், பிரமனும் செய்யும் பூசனையில் விருப்பம் உடையவனும், அவர்கள் நெஞ்சுக்குள் நிறைவாகி நின்ற ஈசன் என்றும் சிவன் குறிக்கப்படுகின்றான்.[577]

**திருமால் சிவனை வழிபடல்:** நெடுமால் வணங்கும் நிமிர் சடையனாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[578] ''திருமாற்பேறு'' என்னும் தலம் மாலும், மதியும் வணங்கிய தலமாதலின் சிதறும் என்னும் போது திருமால் வழிபட்ட தன்மை புலனாகின்றது.[579] திருமாலின் தருக்கொழித்த தலங்கள் மூன்றும் சேர்த்துக் கூறப்படுகின்றன. சிவன் திருவாரூரில் வில் நாணைச் செல்லாக அரித்து நிமிர்த்தித் திருமால் சிரத்தையிடறினார், திருவண்ணாமலையில் தீ மலையாய் நின்று செருக்கடக்கினார், நாகையிலும் தியாகர் திருவுருவில் இருந்து திருமாலின் தியான வஸ்துவானார் என்ற குறிப்புகள் இடம் பெறுகின்றன.[580] அயனும் மாலும் ''பெருமானே''[581] என்றும், ''நாகனே''[582] என்றும், ''தலைவனே, கடவுளே3'[583] என்றும் சிவனை ஏத்தி வழிபட்ட குறிப்புகள் இடம் பெறுகின்றன. சிவனை உயர்த்திப் பாடும் போக்கால் விளைந்தவை இக்கருத்துகள் எனலாம்.

---

572. திரு. நாவு. - 4 - 4 - திருவாரூர் - 41 - 1 - 4
573. திரு. நாவு. - 6 - 15 - திருக்கருகாவூர் - 157 - 1
574. திரு. நாவு. - 4 - 29 - திருச்செம்பொன்பள்ளி - 286 - 2 - 3
575. திரு. நாவு. - 6 - 15 - திருக்கருகாவூர் - 157 - 1
576. திரு. நாவு. 5 - 12 - திருவீழிமிழலை - 117 - 1 - 4
577. திரு. நாவு. 5 - 98 - உள்ளத்திருக்குறுந்தொகை - 994 - 1 - 3
578. சம். தே. - 1 - 7 - 1 - திருஆவூர்ப்பசுபதீச்சரம்
579. சம். தே. - 1 - திருமாற்பேறு - 9 - 1 - 2
580. சம். தே. - 1 - திருநாகைக் காரோணம் - 1 - 4
581. ஈம். தே. - 1 திருநாகைக் காரோணம் - 9 - 1 - 2
582. சம். தே. - 2 - 57 - திருநல்லூர் 9 - 1 - 2
583. சம். தே. - 3 - 71 - திருவைகாவூர் - 9 - 1 - 2

**வழிபாடு :** திருமால் அருச்சனை செய்த மலர்களால் திகழும் திருவடிகளையுடையவனாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[584] ''மாலினார் வழிபடும் மாமழபாடி'' என்னுமிடத்து அயனும், மாலும், பல பக்தர்களும் அடிமைத் திறத்தினால் மலர்கள் தூவித் தோத்திரம் சொன்னதாகக் குறிப்பு இடம் பெறுகின்றது.[585] திருமாலும், திருமால் ஆட்சிக்குட்பட்ட புவனங்களில் பூசிக்கப் பெற்று வழிபாடுகளை விரும்பியேற்றவனாகச் சிவன் குறிக்கப் படுகின்றான்.[586] எல்லாத் தேவரும், நான்முகனும், இந்திரனும், மாலும் தேடி நின்று அலர் இட்டு, மறை பாடி தூ நீராட்டித் தோத்திரங்கள் பல சொல்லி, ஆடிப் போற்ற நின்றவன் சிவன் என்ற குறிப்புகள் அமைகின்றன.[587-588] திருமாலும், பிரமனும் துதிக்க வீழி மரத்தின் அடியை இடமாகக் கொண்டவன் சிவன் என்றும், இருவரும் நாள்தோறும் குவிந்து கிடக்கும் வண்ணம் நடனமாடுகின்ற இறைவனாகவும் சிவன் குறிக்கப்படுகின்றான்.[589-590]

இக்கருத்துக்களில் பெரும்பான்மையும் அயனுடன் சேர்ந்தே பேசப்படுகின்றான். பாம்பணையானாகப் பாற்கடலானாகவும் திருமால் காட்டப்படுகின்றான்.

**இகழ்ச்சிக் குறிப்புகளாக அமையும் திருமால் பற்றிய செய்திகள் :** நஞ்சினை உண்ட தேவனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்துத் திருமால் காக்கப்பட்டது சிவனால் என்று இகழ்ச்சிக் குறிப்பாக அமைகின்றது.[591] தக்கன் வேள்வி பற்றிய செய்தியில் சிவனுக்கு அடங்கியோனாகத் திருமால் காட்டப்படுகின்றான்.[592] சிவனது கட்டளையை அறிந்து நடப்போராய்ப் பிரமனும், திருமாலும் குறிக்கப் படுகின்றனர்.[593] அயனும், மாலும் சிவனை மலரிட்டு வழிபடாது, சரியைத் தொண்டுகள் செய்யாது, அன்பால் வழிபடாது, ஆணவத்தால் காணலுற்றனர் என்ற குறிப்புகள் பல இடங்களில்

---

584. சம். தே. - 2 - 8 - திருச்சிக்கல் - 5 - 3 - 4
585. சம். தே. - 2 - 33 - திருவூசாத்தானம் - 7 - 1 - 2
586. திரு. நாவு. - 4 - 7 - திருக்கச்சியேகம்பம் - 67 - 1 - 2
587. திரு. நாவு. - 6 - 35 திருவெண்காடு - 357
588. திரு. நாவு. - 6 - 99 - மறுமாற்றுத் திருத்தாண்டகம் - 977 - 1 - 3
589. சு. தே. - 7 - 81 - திருக்கழுகுன்றம் - 829 - 2 - 4
590. சு. தே. - 7 - 88 - திருவீழிமிழலை - 895 - 3 - 4
591. திரு. நாவு. - 4 - 14 . பொது - 134 - 2
592. திரு. நாவு. - 4 - 14 - பொது - 140
593. திரு. நாவு. - 4 - 99 - திருக்கச்சியேகம்பம் - 965 - 2 - 3

கூறப்படுகின்றன. இக்கருத்துகள் நாவுக்கரசர் திருமுறையில் இலிங்க புராணத் திருக்குறுந்தொகைப் பதிகப் பாடல்களில் விளக்கமாகப் பேசப்படுகின்றன.[594] இங்கு செருக்கோடு கூடிய உடல் வலிமையால் தேடலுற்றனர் என்றும் கூறப்படுகின்றது. இருவரது சிறுமையும் நெருங்குவதற்கு அரியவன் என்று சிவனது பெருமையும் கூறப்படுகின்றது.[595] பிற தேவரோடு சேர்ந்தும், மிக்க தவம் செய்தும் காண இயலாமல் வருந்தினான் என்று இகழ்ச்சி தோன்றத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[596]

''மாலயனோடிந்திரனும் எப்பிறவியுந் தேட'' என்னுமிடத்துப் பல பிறப்புகளிலும் தவஞ் செய்து நாடினர் என்று குறிக்கப்படுகின்றது.[597] சிவன் ஆலம் உண்டிலையேல் திருமால் முதலிய தேவரெல்லாம் இறந்தொழிவர் என்ற கருத்துக் கூறப்படுகின்றது.[598] திருமால் முதலிய தேவர்கள் சிவனால் ஒடுக்கப்படுதலின் திருமாலும், பிரமனும், இந்திரனும் சிவனுக்குப் பரம்பரை அடியார்கள் என்று குறிக்கப்படுகின்றனர்.[599] தக்கன் வேள்வியில் அக்கினி, பிரமன், திருமால் என்னும் மூன்று தேவரையும் தண்டித்தும் அவர்கள் மேல் இரக்கம் கொண்டு கொல்லாது விடுத்தருளினான் சிவன் என்ற குறிப்பு கூறப்படுகின்றது.[600] திருமால், பிரமன், இந்திரன் இவர்தம் பரிசழியப் பொங்கியவன் சிவன் என்ற கருத்து கூறப்படுகின்றது.[601] திருமாலும், பிரமனும் சிவனால் ஆட்கொள்ளப்பெறாமை குறித்து வருந்தியதாகவும்,[602-603] சிவனருளைப் பெறுதற்குச் செயற்கரிய தவத்தைச் செய்கின்றார்கள் என்றும், சிவனருளை நாடி நின்றனர் என்றும் குறிப்புகள் இடம் பெறுகின்றன.[604]

---

594. திரு. நாவு.-5-95-இலிங்கபுராணத் திருக்குறுந்தொகை பதிகம் - பாடல்கள்
595. திரு. நாவு. - 6 - 92 - திருக்கழுகுன்றம் - 907 - 3
596. திரு. வா. - திருஅம்மானை - 4 - 1 - 2
597. திரு. வா. - திருஅம்மானை - 12 - 1 - 2
598. திரு. வா. - திருச்சாழல் - 8 - 3 - 4
599. திரு. வா. - திருச்சாழல் - 12 - 4 - 4
600. திரு. வா. – திருப்பூவல்லி - (மாயாவிசயம் நீக்குதல்) - 6 - 1 - 4
601. திரு. வா. - திருப்பூவல்லி - 15 - 2 - 4
602. திரு. வா. - திருப்பள்ளியெழுச்சிப் பாடல் - 10
603. திரு. வா. - செத்திலாப்பத்து - பாடல் - 4 - 1
604. திரு. வா. - செத்திலாப்பத்து - பாடல் , 8 - 1 - 2

திருமாலால் காணப்பெறாத திருவடிகளையுடையவன் சிவன் என்று குறிக்கப்படுகின்றான்.[605] சிவனடி காணல் வேண்டித் தில்லை யம்பல முற்றத்தின்கண் யானென்னுஞ் செருக்காற் காணலுற்ற மாயவன் வரங்கிடந்தான் என்று இகழ்ச்சி தோன்றக் கூறப்படு கின்றது.[606] அன்பினால் தேடவேண்டிய அடிகளைச் செருக்கினால் தேடுதலின் நெறியல்லா நெறி என்ற கருத்துத் தோன்ற இங்குக் கூறப்படுகின்றது. சிவனது திருவருளாணையால் பிரமன் படைத்த உலகைக் காப்பவன் திருமால் என்றும், அவர்கள் சிவனை உணரார் என்றும் கூறுமிடத்து மிகுஞாலம் கடந்தவன் என்று வாமனாவதாரக் குறிப்புடன் காத்தல் தொழில் தோன்றத் திருமால் குறிக்கப் படுகின்றான்.[607]

சிவபிரான் சாவா மூவாத் தனி முதற்பொருள் என்றும், திருமால் உள்ளிட்ட தேவர் செத்துச் செத்துப் பிறக்கும் உயிரினங்கள் என்னும் உண்மை தெளிவிப்பதே சிவன் நஞ்சுண்டு சாகாமையும், விண்ணவர்கள் அமுதுண்டும் இறந்தமையும் ஆகும் என்று குறிக்குமிடத்துத் திருமாலைச் செத்துப் பிறக்கும் தன்மை யுடையவனாகக் குறிப்பிடுகின்றார் திருமூலர்.[608]

இச்சைவ இலக்கியங்களில் திருமால், பிரமன், இந்திரன் போன்ற வர்கள் சிவனுக்கு அடங்கியவர்கள் என்று சொல்லும் போது சிலவிடங்களில் வேகம் மிகுந்து காணப்படுகிறது.

''நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயண ரங்கனே
ஏறுகங்கை மணலெண்ணில் இந்திரர்
ஈறில்லாதவன் ஈசனொருவனே''[609]

என்று இவ்வாறு பாடுவது காலநிலை அல்லது வரலாற்றின் விளைவே எனலாம். திருமால் நெறியும், சிவநெறியும் மூர்த்தியின் பரத்துவத்தை முன்னிட்டு இகலி நின்றதோடு, ஒரு கூட்டத்தினர் பிறிதோர் கூட்டத்தினரை எதிர்த்துப் புராணங்களும் எழுதி யுள்ளனர். புராணக் கால்வழியே நின்றுதான் தங்கள் மூர்த்தத் துக்குப் பரத்துவம் கூறுவதற்காகப் பிற மூர்த்தங்களைத் தாழ்த்திக் கூறுகின்றனர் எனலாம்.

---

605. திரு. வா. - செத்திலாப்பத்து - பாடல் - 9 - 3
606. திரு. கோ. - குறைநயப்புக் கூறல் - 86 - 1 - 4
607. திரு. மந். - அடியார் பெருமை - 1846 - 1 - 4
608. திரு. மந். - ஞானோதயம் - 2772 - 1
609. திரு. மந். - 2183 - 1

**திருமால் - சிவனுக்கு விடையாக அமைதல் :** "மால் விடை யூரும்" சிவனது மாட்சி பல இடங்களில் கூறப்படுகின்றது. அவ்விடங் களில் நிறம் தோன்றவும், அழகு தோன்றவும், பண்பு தோன்றவும் திருமால் பல அடைமொழிகளால் கூறப்படுகின்றான்.

"மழமால் விடை"[610], "கொல்லை விடை"[611], "மால் விடை"[612], "செங்கண்ணேற்றன்"[613] "முல்லை நில இடபவாகனன் சிவன்"[614], "பட்டி ஏறு"[615] என்று கண்ணனாய்த் திருமால் ஆயர் பாடியில் சுற்றித் திரிந்து வெண்ணெய் திருடி உண்ட தன்மை தோன்றவும், "மூதெருதேறு மொருவனார்"[616] என்னும், "கொல்லை ஏற்றினர்"[617] என்று முல்லை நிலத்திற்குரிய திருமாலை ஏறாக உடையவன் சிவன் என்ற கருத்திலும் "செங்கண் மால்விடை"[618], "கனை குரல் கொல்லையேறு"[619], "கொல்லை மால் விடை"[620], "செருவளருஞ் செங்கண் மாலேற்றினான்"[621], "பொருவெள் விடையூர்தி"[622], "அலைத்த செங்கண் விடை"[623], "சினமால் விடை"[624], "கருமால் விடை"[625], "மஞ்சு போல் மால் விடை"[626] என்று நிறம் தோன்றவும், திருமால் சிவனுக்கு விடை யாகிய செய்தி இச்சைவ இலக்கியங்களில் பலவிடத்தும் காண முடிகின்றது. திரிபுரமெரித்தற் பொருட்டு விண்ணவர் சமைத்த தேரின் அச்சு முறிந்த காலத்தில் காளை வடிவாய்த் திருமால்

---

610. சம். தே. - 1 திருமுதுகுன்றம் - 7 - 2
611. சம். தே. - 1 - 1 - சீகாழி - 7 - 1 - 2
612. சம். தே. - 2 - 1 - திருப்பூந்தாராய் - 8 - 3
613. திரு. நாவு. - 4 - 37 - திருநெய்த்தானம் - 369 - 2
614. சம். தே. - 3 - 81 - திருத்தோணிபுரம் - 4 - 1
615. திரு. நாவு. - 5 - 5 - திருஅண்ணாமலை - 42 - 1 - 4
616. திரு, நாவு. - 5 - 25 - திருப்பாசூர் - 25 - 2
617. திரு. நாவு. - 5 - 23 - திருச்சோற்றுத் துறை - 326 - 1
618- திரு. நாவு. - 5 - 53 - திருஅதிகை வீரட்டம் - 538 - 1
619. திரு. நாவு. - 5 - 70 - திருக்கொண்டீச்சுரம் - 706 - 2 - 3
620. திரு. நாவு. - 5 - 83 - திருநாகைக் காரோணம் - 823 - 1
621. திரு. நாவு. - 6 - 30 – திருவாரூர் - 309
622. சம். தே. - 7 - 3 - திருநெல்வாயில் அரத்துறை - 24 - 1
623. சம். தே. - 7 - 57 - திருவாழ்கொளிபுத்தூர் - 581 - 3
624. திரு. வா. - உயிருண்ணிப் பத்து - சிவானந்தம் மேலிருத்தல் - 3 - 3
625. திரு. கோ. - வேந்தற் குற்றுழிப் பிரிவு - 326 - 1 - 3
626. காரைக்காலம்மையார் - அற்புதத் திருவந்தாதி - 84 - 3

இறைவனுக்கு ஊர்தியானான் என்பது புராணக் கருத்து. காளை அறத்திற் கறிகுறியாகக் கருதப்படுதலின், திருமால் காளை வடிவங் கொண்டனன் போலும். திருமாலைக் காளை ஊர்தியாகக் கொண் டவன் சிவன் என்னுமிடத்து சிவபிரானைத் திருமால் இடபமாகச் சுமந்தமை பெறப்படுகின்றது.

இக்குறிப்புகள் அமையும் இடங்களில் திருமால் முல்லை நிலக் கடவுள், மேன்மையும், அழகும் பொருந்தியவன், காத்தல் தொழிலை உடையவன், சிவந்த கண்களையும், வலிமையையும், கரிய முகில் போன்ற நிறமும் உடையவன் போன்ற கருத்துக்கள் பெறப் பேசப் படுகின்றான்.

**சிவனுக்கு திருமால் மேகவாகனமாக அமைதல் :** இந்திரன் செய்த வேள்வியை அழித்து ''வியன் கொண்டல்மேற் செல்விகிர்தர்'' என்று சிவன் பேசப்படுகின்றான்.[627] சிவனது பல்கணத்தில் ஒருவராக எண்ணப்படுவதற்குத் திருமாலை ஏத்திலோமே எனக் கூறும் சம்பந்தர் கருத்தில் திருமால் மேக வடிவங்கொண்டு வாகனமாகி நிற்க, அந்த மேகத்தை வாகனமாகக் கொண்டருளினான் சிவன் என்ற செய்தி கூறப்படுகின்றது.[628] மேகவண்ணனை விடையாகக் கொண்டு வளர்தல் உடையவனாக சிவன் குறிக்கப்படுகின்றான்.[629] ஒரு காலத்தில் திருமால் மேகமாய் நின்று சிவபிரானை சுமந்தார் என்பதும், அதனால் அக்காலம் ''மேகவாகன கற்பம்'' எனப் பெயர் பெற்றது என்பதும் புராண வரலாறுகள். இச்செய்தி மேற்குறித்த இடங்களில் தெளிவாகப் பேசப்படக் காணலாம்.

**சிவனது அணிகலனாக - ஆமை - ஏனம் :** பாம்பாகிய நாணில் ஆமையோட்டையும், பன்றிக் கொம்பையும் கட்டியணிந்த இறைவன் என்று சிவன் பலவிடங்களில் குறிக்கப்படுகின்றான்.[630 - 637]

---

627. திரு. நாவு. - 6 - 16 - திருவிடைமருதூர் - 162 - 2
628. சம். தே. - 3 - 117 - சீகாழி - 6 - 1 - 2
629. திரு. நாவு. - 4 - 16 - திருப்புகலூர் - 157 - 1
630. சம். தே. - 1 - திருக்கோளிலி - 2 - 1 - 2
631. சம். தே. - 2 - 65 - திருப்பிரமபுரம் - 2 - 2 - 7 - 1
632. சம். தே. - 3 - 60 - திருவக்கரை - 5 - 1
633. திரு. நாவு. - 4 - 2 - திருவதிகை வீரட்டானம் - 12 - 1
634. திரு. நாவு. - 5 - திருஅண்ணாமலை - 33 - 3
635. திரு. நாவு. - 6 - 52 - திருவீழிமிழலை - 523 - 2
636. சுந். தே. - 7 - 18 - மூப்பதும் இல்லை - 181 - 1 - 2
637. காரைக்காலம்மையார் - அற்புதத் திருவந்தாதி - 38 - 3 - 4

''ஏனத்தின்மருப்பு, இளவாமையும் பூண்டு'' என்று சிவன் குறிக்கப்படு மிடத்துத் திருமால் வராகமாய்த் தோன்றிய சில நாட்களுக்குள்ளே அழித்தமையாலும், கூர்மமாக வடிவங்கொண்ட சில நாளிலே அதனை அழித்தமையினாலும் இளஆமை என்ற குறிப்புத் தோன்றக் கூறப்படுகின்றது.

ஒரு காலத்தில் நிலத்தைப் பாதாளத்திற் சுருட்டிச் சென்ற இரணியாக்கனைக் கொன்று நிலத்தை மேலெடுத்த போது, பன்றி யுருவெடுத்த திருமால் அவன் குருதியைக் குடித்துப் பிறரைத் துன்புறுத்தியமையால் அப்பன்றியின் பல்லைப் பறித்துத் தன் மார்பில் சிவபிரான் அணிந்த கதை சிவ ரகசியத்துட் காணப்படு கின்றது. இக்கருத்தமையக் கூறுமிடங்களில் பல்வேறு அடைமொழி களோடு ஏனக் கொம்பும், ஆமையோடும் கூறப்படுவதைக் காணலாம்.

**திரிபுராதிகள் அழிந்த வரலாறு :** நெடுமால் செய்த மாயத்தால் திரிபுரத்து அசுரர்கள் ஈசன் ஓரம்பு எய்ய எரித்து சாம்பலாயினர் என்ற குறிப்புச் சம்பந்தர், நாவுக்கரசர், மணிவாசகர் ஆகிய மூவர் குறிப்பில் மட்டும் ஒரு சில இடங்களில் இடம் பெறுகின்றது. திரிபுரம் அழிக்க உதவிய காத்தற் குறிப்புடன் திருமால் குறிக்கப்படு கின்றான்.[638]

சிவ பூசனை துரந்தவர்களாகிய திரிபுராதிகள் தம் நிலை கெட்டது புத்தாவதாரங் கொண்ட திருமாலின் இந்திர ஜாலப் பேச்சால் என்றும், திருமால் உபதேசம் மனத்தைக் கெடுத்தமையும் அதனால் அசுரர்கள் அழிந்தமையும் ஆகிய வரலாறு நினைவூட்டப் படுகின்றது.[639 - 640]

திருமால் புத்தாவதாரங் கொண்டதாகக் கூறும் இக்கருத்து முந்தைய சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காணப் படாத புதிய செய்தியாகும்.

**திருமால் மோகினி வடிவு கொண்டது :** இராகு பூசித்த தலப் பெருமையாகிய வரலாறு கூறப்படுமிடத்தில் திருமால் மோகினியான செய்தி இடம் பெறுகின்றது.[641] திருமால் மோகினி வடிவங் கொண்டு சிவனுக்கு மனைவியாகப் புணர்ந்த வரலாறு, குருந்தொசித்த

---

638. திரு. நாவு. - 5 - 72 - திருநீலக்குடி - 724 - 2 - 4
639. சம். தே. - 1 - திருவாரூர் - 10 - 1 - 4
640. திரு. வா. - திருவுந்தியார் - 4
641. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - 7 - 3 - 4

மாயவனாகக் கிருட்டிணாவதாரக் குறிப்புடன் கூறப்படுகின்றது.[642] ''மாலனமாயன்றன்னை மகிழ்ந்தனர்'' என்று ''சிவன் திருமாலைத் தேவியாகக் கொண்டான்'' என்று ''அரியலால் தேவியில்லை'' என்ற கருத்துக் கூறப்படுகின்றது.[643] முருகனுக்குத் தந்தை என்று சிவன் குறிக்கப்படுமிடத்துத் திருமாலுக்கு நாயகன் என்றும் கூறப்படு கின்றான். இங்கு சக்கரப்படையோனாக, விண்ணவர் தலைவனாக, அயனுக்கு முதல்வனாகவும் திருமால் காட்டப்படுகின்றான்.[644] இச்செய்திகளில் திருமால் மோகினி வடிவங் கொண்ட செய்தியும், சிவனுக்கு மனைவியாகவும் கூறப்படும் கருத்தையும் அறிய முடிகின்றது.

**அமுது கடையத் துணை நின்றவன் :** சிவன் நஞ்சுண்ட செய்தி இடம் பெறுமிடத்து, மந்திர மலையுடன் வாசுகி என்னும் பாம்பு சுழலத் திருமால் முன்னின்று பாற்கடலைக் கடைந்தான் என்ற குறிப்புக் கூறப்படுகின்றது.[645] இதே குறிப்பு நாவுக்கரசர் தேவாரத் திலும் இடம் பெறுகின்றது. இங்கு வாமனாவதாரக் குறிப்புடன் திருமால் குறிக்கப்படுகின்றான்.[646] உயிர்களுக்கு இரங்கி, பாற்கடல் கடைந்தவன் என்று திருமால் குறிக்கப்படுகின்றான்.[647] திருமால் பாற்கடல் கடையத் துணை நின்ற இச்செய்தி முந்தைய இருகால கட்ட இலக்கியங்களிலும் இடம் பெறுகின்றது.

**சிவன் — திருமால், பிரமன் எலும்பணிந்து ஆடல் :** சங்கார காரணனாகச் சிவன் குறிக்கப்படுமிடத்து மால் அயன் இருவரது எலும்பை அணிந்து தான் ஒருவனே தலைவன் என்பதை உணர்த்து பவன் சிவன் என்ற கருத்து கூறப்படுகின்றது.[648] சிவன் அரி, அயன் தலைகளை வெட்டி வட்டாடினார் என்ற குறிப்பு இடம் பெறு கின்றது.[649] ''கழிந்தவர் தலை கலனேந்தி'' என்னுமிடத்துப் பிரம விட்டுணு தலைகளைக் கோத்த மாலைக்கலன் உடையவனாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[650]

---

642. சம். தே. - 2 - 30 - திருப்புறம்பயம் - 3 - 2 - 3
643. திரு. நாவு. - 4 - 43 - திருக்கச்சி மேற்றளி - 425 - 1
644. திரு. வா. - திருப்பொற்சுண்ணம் - 3 - 3
645. சம். தே. - 3 - 60 - திருவேட்டக்குடி - 5 - 1 - 2
646. திரு. நாவு. - 4 - 71 - திருநாகைக்காரோணம் - 69 - 1 - 2
647. திரு. வா. - நீத்தல் விண்ணப்பம் - 50 - 4
648. சம். தே. - திருமறைக்காடு - 7 - 2 - 3
649. திரு. நாவு. - 4 - 8 - பொது - 78 - 1
650. திரு. நாவு. - 4 - 10 - திருவதிகை வீரட்டானம் - 100 - 1

வையனை வையமுண்ட மாலங்கந்தோள் மேற்கொண்ட செய்யனை என்று சிவன் குறிக்கப்படுகின்றான்.[651] ''கங்காளம் தோள் மேலே காதலித்தான் காணேடி'' என்று இக்கருத்தை மாணிக்கவாசகரும் கூறுகின்றார்.[652] திருமாலும், பிரமனும் ஒரு சேரத் துஞ்சும் நாளில் அவரது காயங்களை மேலே எடுத்து நின்று ஆடல் புரிந்த இடமாகக் ''காயாரோகணம்'' குறிக்கப்படுகின்றது.[653]

சிவன் பேருழி முடிவிலே அரி அயன் என்பவரது வாழ்நாளை முடிவு செய்து அவர்கள் எலும்பைத் தரித்தவன்.[654 - 655] விண்டுவின் கூர்மாவதாரத்தில் கூர்மத்தின் செருக்கையடக்கி அதன் ஓட்டைப் பறித்தணிந்தான் என்றும் புராணம் கூறும். எலும்பு முதலியன அணிதல் இறைவன் ஒடுக்கும் முதல்வன் என்பதையுணர்த்தும்.

தக்கன் வேள்வியில் பிரமன் தலையையும், திருமால் தலையையும், சிவன் சிந்திய வரலாற்றுண்மை கூறப்படுகின்றது.[656] கோன் நாரணன் அங்கந்தோள் மேற்கொண்டு கொழுமலரான் தன் சிரத்தைக் கையிலேந்தி சிவன் ஆடிய செய்தி குறிக்கப்படுகின்றது.[657] பிரமனது கபாலம் சிவன் கரத்து ஏற்குங் காலமாக விளங்கிற்று என்றும், அதில் நறவாகிய திருமாலின் மார்பிலுள்ள அமுதத்தை அருந்தியதாகக் குறிப்பு இடம் பெறுகின்றது.[658] தன்னோடு மாறுபட்ட பிரமன் தலைகளில் ஒன்றை உகிரொன்றினால் களைந்தான், அதனை நிறைய நெடுமால் குருதி வளைந்தான் என்ற செய்தி கூறப்படுகின்றது.[659] இது சிவ புராணத்துட் கூறப்படுகின்றது. காஞ்சி புராணத்து வைரவேசப் படலத்துள்ளும் விரித்துக் கூறப்படுகின்றது. ''தாமரையான் சிரமறிந்து கையிற் கொண்டார், தலையதனிற் பலி கொண்டார், நிறைவாம் தன்மை வாமனனார் மாகாயத் துதிரங்கொண்டார்'' என்று சிவன் குறிக்கப்படுகின்றான். திருமால் மூன்றடி மண் பெற்றுத் திரிவிக்கிரமனாய் மூவுலகத்தையும் அளந்து, மகாபலியையும் பாதாளத்தில் இருத்திய பின்னர்ச்

---

651. திரு. நாவு. - 4 - 71 - திருநாகைக்காரோணம் - 689 - 1 - 2
652. திரு. வா. - 265
653. திரு. நாவு. - 6 - 2 கோயில் 6 - 1
654. திரு. வா. - திருச்சாழல் - 11 - 3 - 4
655. அற்புதத் திருவந்தாதி - 30 - 1 - 4
656. திரு. நாவு. - 6 - 40 - திருமழபாடி - 405 - 1
657. திரு. நாவு. - 6 - 40 - திருஆவடுதுறை - 474 - 1
658. சம். தே. - 1 - திருவாரூர் - 9 - 2
659. திரு. நாவு. - 4 - 84 பொது - 807 - 1 - 4

செருக்குற்று உலகத்னைத் துன்புறுத்தியமையால் சிவபிரான் திரிவிக்கிரமனை அழித்து அவன் முதுகெலும்பைத் தண்டாயுதமாகக் கொண்டருளினான் என்பது புராண வரலாறு.[660] இப்புராணக் கருத்து, மேற்குறித்த செய்திகளில் குறிப்பாக அமையக் காணலாம்.

சைவர்கள் தங்கள் தெய்வத்தை உயர்த்திப் பிற தெய்வத்தைத் தாழ்த்திக் கூறும் உச்சக்கட்டத்தைக் காணலாம். இந்த நிலை பிற்காலத்தில் வளர வளரப் பெருகிப் போய்விட்டது. சிவனிடத்து பக்தி காரணமாகத் திருமாலைத் தாழ்த்துதல் அதிகமானது. இந்த வளர்ச்சியின் எல்லையினைச் சிவப்பிரகாசரது பிரபுலிங்க லீலையில் காணலாம். திருமால் குருதி வளைந்த செய்தியினைச் சிவபிரகாசரும் கூறுவதைக் காணலாம்.

**மும்மூர்த்தி :** புராண இதிகாசங்களின் செல்வாக்கு குப்தர்கள் காலத்திலேயே மிகுந்திருந்தது என்பர் (Indian History - Golden age of Guptas). பாரதம் போன்ற இதிகாச வளர்ச்சியினையும் இக்காலத்தில் ஏற்பட்டதாகக் கொள்வர். புதிய புராணங்கள் பல தோன்றின. இவை சிவ பரத்துவத்தையும், திருமாலின் பரத்துவத்தையும் நிலைநிறுத்த முயன்றன. இதன் விளைவாக சிவன், பிரமன், மால் என்னும் மூன்று தெய்வங்களையும் மும்மூர்த்தி என ஒரே நிலையில் வைத்துக் கருதாமல் சிவனுக்கு அடங்கிய நிலையில் திருமாலையும், திருமாலுக்கு அடங்கிய நிலையில் சிவனையும் கூறலாயினர். பல திருக்கோவில்களுக்கும் தெய்வத் தன்மை கூறும் முயற்சிகளும் இக்காலத்தேதான் தோன்றின போலும்.

புராண இதிகாசக் கால்வழியே வளர்ந்து வந்த சிந்தனை மும்மூர்த்தி பற்றியது எனலாம். பரம்பொருள் பிரமனாக நின்று படைத்து, மாலாக நின்று காத்து, சிவனாக நின்று அழிக்கின்றான் என்று காட்டவே, ''மும்மூர்த்தி'' என்ற எண்ணம் உருவாயிற்று. பரம்பொருளுக்கு அடங்கிய நிலையில் தனித்தனியாக நின்று தம்தம் தொழில்களைச் செய்கின்றவர்களாதலின் இவர்களை ஒத்த நிலையில் மதிப்பிட்டார்கள்.

சிவனடியாருக்குச் சிவன் மூவருள் ஒருவன் மட்டுமல்லன். அவன் மூவருக்கும் முதல்வன். சிவனோடு ஒத்த மதிப்புடையவர்களாக ஏனைய வடிவங்களையே பெறாது ''மூவரென்றே எம்பிரானொடும்

---

660. திரு. நாவு. - 6 - 96 - தனித்திருத் தாண்டகம் - 939 - 2 - 3

எண்ணி விண்ணாண்டு மண்மேல், தேவரென்றே இறுமாந்து என்ன பாவம் திரிவரே'' என்றும்[661] தேவர்

''கோவறியாத தேவதேவன்
செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கு மற்றை
மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி''

என்றும் பாடுவர் மாணிக்கவாசகர். இந்திரனைப் பொறுத்த அளவில் ''தேவ தேவனாக'' வேதங்களில் கொள்ளப்பட்டதை எண்ணி உண்மையில் ''தேவ தேவன் சிவனே'' என்ற எண்ணத்தை ஏற்படுத்தவே சிவ மூர்த்தத்துக்கு அடங்கியவனாக இந்திரனைப் பேசுகிறார். வேதங்களில் பாராட்டப்படும் பிற தேவர்களுக்கும் மேலானவனாகச் சிவனை எடுத்துப் பேசுவதுண்டு. வேதங்கள் பாராட்டும் அக்கினியும், அருக்கனும் அரனுக்கு அடங்கிவர்கள் என்று பாடக்காணலாம்.

வேதங்களில் ஒரே தெய்வம் என்ற சிந்தனை வளர்ந்து வந்தமை யினை அறிஞர்கள் குறிப்பிடுவர். உபநிடதங்களில் ''பிரம்மன்'' என்ற பொருளாக அது கூறப்படுகிறது. இப்பிரம்மன் சகுணப் பிரம்மமாக விளக்கப்படும் நிலையில் மும்மூர்த்தியாக முத்தொழி லடிப்படையில் விளக்கப்படலாயிற்று. வேத காலத்து வளர்ச்சி அடைந்த தெய்வங்களாகிய திருமால், சிவன், பிரம்மன் மூன்று தெய்வங்களையும் ஒரே தெய்வத்தின் மூன்று கூறுகளாகக் கொள்ள லாயினர். இவ்வாறு கொள்ளும்போது அவ்வத் தெய்வங்களை வழிபடுவோர் தாங்கள் வழிபடும் தெய்வமே ''முழுமுதல்'' என்றனர். ''பிரமன்'' வணக்கம் பரவலாக இல்லாமையின் திருமால் சிவன் வழிபாட்டினரே கட்சி பேசலாயினர். இப்பிணக்கினை வளர்த் தவர்கள் பௌராணிகர்கள் என்றே கூறலாம். எனவே தங்கள் மூலத்தினை வேதங்களில் கண்டு பாராட்டும் இந்நெறிகள் இதன் விளைவாக நாமரூபங்களையே பகைமைக்குரிய பெருங்காரணமாகக் கொண்டு பகைத்து நின்றன எனலாம்.

**சிவன் - மூவராய முதல்வன் (சிவன், திருமால், பிரமன்) :** படைத்தளித்தழிக்கும் மும்மூர்த்திகளானவன் சிவன் என்ற குறிப்பும், அவருக்கு முதல்வனாகவும், அவர்களின் வேறாய் நின்று இயக்கும் சிவமுமாகி, பிரமனையும், மாலையும் இடத்தினும், வலத் தினும் கொண்டு திரிமூர்த்தியாகி நின்றவன் என்றும் சிவன் சொல்லப் படுகின்றான்.[662-664] இக்கருத்து சிவாகமங்களுள் காணப்படும்.

661. மாணிக்கவாசகர் - திருச்சதகம்
662. சம். தே. - 1 - திருப்புன்கூர் - 2 - 1 - 2
663. சம். தே. - 1 - திருப்பேணு பெருந்துறை - 2 - 1 - 2
664. சம். தே. - 1 - திருப்பிரமபுரம் - பதிகம் - 128 - 4 - 5

இக்கருத்தினை சிவஞானபோத முதற் சூத்திரக் சுருத்துரைப் பாடியத்துள் ''பாடியம் உடையார்'' எடுத்துக்காட்டி விளக்கினமை அறியலாம்.

ஏகபாத திரிமூர்த்தி வடிவமாகச் சிவன் குறிக்கப்படுகின்றான்.[665-667] ''முந்துருவிருவரோடு மூவருமாயினாரும், மூவர்க்கும் முதற் பொருளானவன்''[668]. ''மாயனாய், மாலனாகி, மலரவனாகி மண்ணாய்''[669], ஒருவராயிருமூவருமாயவன்''[670], ''மூவர்க்கும், மூலமாகிய மூர்த்தியாக''[671] ஆதியும் அரனாய், அயன்மாலுமாய்''[672] என்று சிவன் மும்மூர்த்தியாகப் பலவிடங்களில் காட்டப்படுகின்றான். மேலும் ''படைத்தானும்'' ''பாரையிடந்தானாகும்''[673] ''தாமரையான் செங்கண்மால் தானுமானவன்''[674] ''முந்தைகாண் மூவரினும் முதலானான்''[675] ''சிவனாகித் திசைமுகனாய்த் திருமாலாகி''[676], ''மூவருருத்தனதாம் மூலமுதற் கருவை''[677], ''மும்மூர்த்திக்கும் முற்பட்டவன்''[678], ''மூவுருவும் போர்த்துகந்த அம்மான்''[679], ''மூர்த்திகள் மூவர்க்கும் மூவேழ் குரவர்க்குந் தீர்த்தமானவன்''[680] என்று சிவபெருமான் மும்மூர்த்தியாகவும், திருமூர்த்திகளில் மேம்பட்டவனாகவும் காட்டப்படுகின்றான்.

இவ்விடங்களில் எல்லாம் முப்பெருங் கடவுளாகவும், அவருள் முதல்வனாகவும், இவ்வுலகெல்லாவற்றையும் காப்பவனாகவும் சிவன் குறிக்கப்படுகின்றான். சிவனே மூவரோடு கலந்து ஒன்றாயும்,

---

665. சம். தே. - 3 - 102 - திருநாரையூர் - 3- 1 - 2
666. சம். தே. 3 - 119 - திருவீழிமிழலை - 6 - 1 - 2
667. சம். தே. - 4 - 31 - திருக்கடவூர் வீரட்டம் - 313 - 1
668. சம். தே. - 4 - 35 - திருவிடைமருதூர் - 345 - 1
669. சம். தே. - 4 - 43 - திருக்கச்சி மேற்றளி - 429 - 1
670. சம். தே. - 5 - 20 - திருக்கடவூர் - 195 - 1
671. சம். தே. . 5 - 57 - திருக்கோளிலி - 596 - 1
672. சம். தே. - 5 - 82 - திருவான்மியூர் - 817 - 1
673. திரு. நாவு, - 6 - 15 - திருக்கருகாவூர் - 152 - 1
674. திரு. நாவு. - 6 - 23 - திருமறைக்காடு - 234 - 2 - 4
675. திரு. நாவு. - 6 - 65 - திருக்கச்சியேகம்பம் - 658 - 1 - 4
676. திரு. நாவு. - 6 - 79 - திருத்தலையாலங்காடு - 757-1
677. சுந். தே. - 7 - 84 -திருக்கானப்பேர் - 852 - 2
678. திரு. வா. - திருஅம்மானை - 19 - 1 - 2
679. காரைக்காலம்மையார் - திருவிரட்டை மணிமாலை - 16 - 2 - 1
680. திரு. மந். - 13 - மகேசுவர பூசை - 1833 - 3 - 4

வேறாகியும் நின்று அருள் புரிவோன் என்னுமிடத்து மூவரில் ஒருவனாகத் திருமால் குறிக்கப்படுகின்றான்.[681]

இவ்விடங்களில் திருமால் இருநிறமுடைய மாயவன், உள்ளம் கவர் கள்வன், கருட ஊர்தியான், பாரையிடந்தான், செங்கண்மால், நாரணன், மாலவன், மால், திருமால், அரி, மேவி வையம் அளந்தவன், பாம்பணையான், ஆழியான், காத்தற் கடவுள் போன்ற பண்புகள் அமையவும் பெயர்களோடும் குறிக்கப்படுகின்றான். மும்மூர்த்திகளுள் ஒன்றாக இருக்கும் காட்சி சுசீந்தரம் கோயிலில் காணப்படுகின்றது. இங்கு, தாணுமாலயனாக இறைவன் காட்சி தருகிறான்.

இந்துக்கள், பரம்பொருளே மும்மூர்த்தியாக நின்று உலகைப் படைத்தும், காத்தும், அழித்தும் அருள் செய்வதாகக் கூறுவர். இந்துக்களும் வைணவர்களும் இதனை ஏற்றுக் கொண்டாலும் தாங்கள் வழிபடும் திருமாலை மூவருள் ஒருவன் என்ற அளவில் கொள்ளாது மூவர்க்கும் முதல்வனாகப் பரம்பொருளாகவே கண்டு வழிபடுவர்.

''ஒத்து நின்ற
மூவுருவும் கண்டபோது ஒன்றாம் சோதி
முகிலுருவம் எம்மடிகள் உருவம் தானே''[682]

என்று அப்பெருமான் திருவுருவில் மும்மூர்த்தியும் அடங்கி நிற்றலை,

''கைய வலம்புரியும் நேமியும்கார் வண்ணத்து
ஐய ! மலர்மகள் நின்னாகத்தாள் — செய்ய
மறையான்நின் உந்தியான் மாமதிற் மூன்றெய்த
நின் ஆகத்து இறை''

என்றும் கூறுவர்.[683] திருமாலடியார்களின் போக்கும் இத்தகையதே. திருமாலையே வழிபடுகடவுளாகக் கொண்ட ஆழ்வார்கள் திருமாலோடு ஒத்தநிலையிற் பிற மூர்த்தங்களை வழிபட விரும்பவில்லை. திருமாலையும் ஒரே வடிவில்தான் வணங்கினார்கள் என்பதில்லை. பல மூர்த்தங்களில் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த திருக்கோலம், அவதார மூர்த்தங்கள் என்ற இவையனைத்தும் திருமாலுடையனவே. திருமாலடியார்களும் பிரமன், இந்திரன், சிவன் முதலிய மூர்த்தங்களைப் பழித்தனர் என்பர். உண்மையில் திருமாலுக்குப் பரத்துவம் வழங்கி முன்னிட்டுத்

681. திரு. மந். - சிவபூசை - 1838 - 3 - 4
682. திருநெடுந்தாண்டகம் - 2053
683. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 2109

திருமாலுக்கு அடங்கிய மூர்த்தங்களாகக் கூறினரே ஒழியப் பழித்ததாகக் கூற முடியாது. தங்கள் வழிபடு கடவுளரிடம் முற்றாக ஈடுபட்டு நிற்றற்கும் புராண உணர்ச்சி அடியவர்களுக்குப் பெரிதும் உதவியமையும் இங்கு நினைக்கத்தக்கது.

மேலும் பிற தேவர்களை அடைந்து பெறும் பயனில்லை. பிறவியறுக்க மாலே மருந்து என்றும் அறிவுறுத்தப்படுகின்றான்.

''எருத்துக்கொடியுடையானும் பிரமனும் இந்திரனும் மற்றும்,
ஒருத்தரும் இப்பிறவி என்னும் நோய்க்கு மருந்தறி
வாருமில்லை மருத்துவனாய் நின்ற மாமணி வண்ணர்''[684]

எனப் பெரியாழ்வார் பாடுவது இங்கு நினைவு கூரத்தக்கது. எனவே திருமாலுக்கு முழுமுதன்மை கூறுவார் பிற மூர்த்தங்களுக்கு ஒத்த மதிப்பளித்துப் பேசுதல் என்ற பேச்சுக்கே இடமில்லை என்ற நிலையைக் காணமுடிகின்றது.

புராணங்கள் மூவருள் ஒருவனாகத் திருமாலைக் கூறும்போது, மூவருள் ஒருவன் மட்டுமல்ல மூவருள் முதல்வனும் எங்கள் இறைவனே என்ற எண்ணத்தைச் சிவனடியார்கள் போன்று திருமாலடியார்களும் கூறுவர்.

''மூவராகிய ஒருவனை''[685] ''மூவரில் முதல்வனாய் ஒருவனை''[686] என்பன போன்ற பிரபந்தத் தொடர்கள் இவ்வுண்மையினை உணர்த்தும். பிற தேவர்களுக்கும் தலைவன் திருமாலே என்பதும் திருமாலடியார்களின் உறுதி எனலாம்.

''திருக்கலந்து சேரும் மார்ப, தேவதேவ தேவனே''[687]
''மேவும் நான்மறைவாணர், ஐவகை வேள்வி
ஆறங்கம் வல்லவர் தொழும் தேவ தேவபிரான்
திருக்கோட்டியூரானே''[688]

எனத் திருமாலையே தேவதேவனாகப் பாடுவர்.

தங்கள் வழிபடும் கடவுளரின் முழு முதன்மையினைப் பலவாறு விதந்து பாடும் இவ்வடியார்கள் ஒரு தெய்வம், ஒரு நெறியென நின்று உயர்ந்தவர்கள். பல நெறியினர்களும் வழிபட்டு வரும்

684. நா. தி. பிர. - 458
685. நா. தி. பிர. - 1157
686. நா. தி. பிர. - 2037
687. நா. தி. பிர. - 853
688. நா. தி. பிர. - 1846

மூர்த்தங்களிலும், தாங்கள் வழிபடும் ஒரே பரம்பொருளே உறைகிறது. எல்லா நெறிகளும் எங்கள் இறைவன் படைத்த நெறிகளே என்ற எண்ணமும் இவர்கள் பாடல்களில் வெளிப்படுகிறது. இந்து மதம் சிறந்த தத்துவ அடிப்படையை அமைத்துக்கொண்டு தன்னை விளக்க வைதிக நிழலைத் தேர்ந்தெடுத்தது என்று கொள்ளலாம். ஜைன பௌத்த நெறிகள் தெளிந்த தத்துவ அடிப்படையில் நின்று வேதவேள்விகளை மட்டும் சாடாமல் அடிப்படையான சமய உண்மைகளை, தெய்வத்தை, அருளை, உண்மையான இறை வழிபாட்டையும் எதிர்த்தெழுந்தபோது வைதிக நிழலில் ஒதுங்கி நின்று தங்களைக் காத்துக் கொண்டனர் எனல் வேண்டும். தத்துவங்களை ஒட்டியே பின்னாளில் சைவர்களும் வைணவர்களும் தங்கள் தத்துவங்களைச் சைனர்களுக்கும், பௌத்தர்களுக்கும் எதிராக அமைத்துக் கொண்டனர் எனலாம்.

சமயக் குரவர்கள் நால்வர் பாடல்களை விடவும் விளக்கமாகத் திருமந்திரத்திலேயே ஆகமங்களைப் பற்றிக் கூறப்படுகிறது. திருமந்திரம் ஒன்பது ஆகமங்களின் விளக்கமாக ஒன்பதாகவே பாகுபடுத்தப்படுகிறது. சைவர்கள் ஒன்பது ஆகமங்களைச் சிறப்பாகக் கூறுவதுபோல், வைணவர்கள் பாஞ்ச ராத்திரம், வைகானசம் என்னும் இரண்டையும் கூறுவர். இவை திருக்கோயில் வழிபாட்டு முறைகளையே பெரிதும் பேசுவனவாகத் தோன்றுகின்றன. ஆகமங்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு பகுதிகளை உடையன என்பர்.

வைதீக நெறியினையே பக்திப் பாடல்கள் பாடுகின்றன என்பதைச் சம்பந்தர் போன்ற தெய்வக் கவிஞர்களின் பாடல்கள் தெளிவாகவே உணர்த்துகின்றன. அவரது பாடல்கள் சிலவற்றை நோக்கின்.[689] வேதநெறி தழைத்தோங்கவே சம்பந்தர் பாடினார் என்பதைத் தெளிவாகக் காட்டும். வேதநெறிக்கு உட்பட்ட துறையாகவே சைவத்தைக் கருதுகிறார் என்பது தெளிவு. இதைப் போன்று வைணவமும் வேதநெறிக்கு உட்பட்ட துறையே எனலாம்.

**திருக்கோவில்கள் :** இந்தியா முழுவதிலுமாக வளர்ந்து வந்த பண்பாட்டின் சின்னங்களாகவே சைவ, வைணவங்கள் வளர்ந்து வந்தன என்பதைச் சைவம், வைணவம் ஆகியவற்றின் பக்திப் பாடல்களாலும், அடியார்கள் பாடிய கோவில்களாலும் அறியலாம். வைணவர்கள் சிறப்பாகக் கூறும் திருப்பதிகள் நூற்றெட்டு - சோழ

689. சம். தே. - 3956, 3957, 3960, 3962

நாட்டில் நாற்பது. பாண்டி நாட்டில் பதினெட்டு. மலை நாட்டில் பதின்மூன்று. நடு நாட்டில் இரண்டு. தொண்டை நாட்டில் முப்பத்து இரண்டு. வடநாட்டில் பன்னிரண்டு. திருநாடு ஒன்று என இவற்றைப் பாகுபடுத்துவர். சைவர்கள் இவ்வாறு திருக் கோவில்களை வரையறை செய்வதில்லை.

திருக்கோவில்களுள்ள திருத்தலங்களுக்குப் புராணப் பெருமை கூறும் வழக்குப் பக்திப் பாடல்கள் தோன்றிய காலத்துக்கு முன்பே தொடங்கப் பெற்றுவிட்டது. பாரதம் போன்ற இதிகாசக் கதை நிகழ்ச்சிகளோடு தங்களைச் சேர்த்துக் கூறுவதனைத் தமிழ் மன்னர்கள் எவ்வாறு பெருமையாகக் கருதினார்களோ[690] அதைப் போன்று தமிழகத்துத் திருத்தலங்களும் புராண இதிகாச மாந்தர் களோடு தொடர்பு கொண்டிருந்தமையினை அந்நாளைய தமிழர்கள் பெருமையாகக் கருதினராதல் வேண்டும்.

திருத்தலங்கள் புராண இதிகாச மாந்தர்களால் பூசிக்கப் பெற்ற சிறப்பினை இத்தெய்வக் கவிஞர்கள் மக்களுக்குத் தெய்வ உணர்ச்சியை ஊட்டத் தாங்களே படைத்துக் கொண்டனர் எனக் கூறமுடியவில்லை. சில திருத்தலங்களுக்கு வழங்கிய பெயர்களே புராண இதிகாசத் தொடர்பினைப் படைத்து இறைவழிபாட்டு உணர்வை வளர்த்துக் கொள்ளும் மனநிலை இக்கவிஞர்களின் காலத்துக்கு முன்பே ஏற்பட்டு விட்டமையினை நன்கு விளக்கும். அண்ணாமலை பஞ்சபூதத் தலங்களுள் நெருப்பைக் குறிக்கும் மாலும், அயனும் அடிமுடி தேட நின்ற கோலத்தை நினைவுறுத் துவது. இராமேச்சுரம் - இராமன் இதிகாசத்தலைவனே. மாணிகுழி - திருமால் வழிபட்டமை (மாணி - பிரமச்சாரி - வாமனன்) திருக் கோவில்கள் சங்க நாளிலும் அதற்கு முற்பட்ட நாளிலும் கூட இருந்தனவென்றே கூறலாம். புராண இதிகாசச் செய்திகள் சில சங்க இலக்கியத்திற் காணப்படினும் அவை திருக்கோவில்களோடு தொடர்பு படுத்தப்பட்ட செய்திகளாகவில்லை. திருக்கோவில்கள் புராண இதிகாசங்களோடு தொடர்பு படுத்தப்பட்டுச் சிறப்பிக்கப் படுதல் சங்க காலத்துக்குப் பின் வழிபாட்டு உலகில் ஏற்பட்ட ஓர் வளர்ச்சி என்றே கூறலாம். பல்லவர் காலத்தை ஒட்டிப் பக்தி இயக்கம் தோன்றி வளர்வதற்கும் அதற்கு முன்னரே தமிழகத்தில் வளர்ந்து வந்த புராண இதிகாச உணர்ச்சியும் ஒரு காரணமென்றும் கூறலாம். குறிப்பாகப் பாரத, இராமாயணங்கள் இக்காலத்தில் தமிழர் வாழ்க்கையை வாழ்க்கைச் சிந்தனைகளைப் பெரிதும் மாற்றி யமைத்தன எனலாம்.

---

690. புறம். - 2 - பாரதப் போரில்
பெருஞ்சோறு வழங்கிய - உதியன் சேரலாதன்

இதற்கெல்லாம் காரணம் பல்லவர்கள் சைவர், வைணவராக மாறி மாறி வந்தனர். பக்தியை ஆராதித்த சிம்ம விஷ்ணுசித்தன் என்பது சிம்ம விஷ்ணுக்குப் பெயர். இதனை டாக்டர் இராசமாணிக்கனார் பல்லவர் வரலாறு என்ற தம்முடைய நூலில் குறிப்பிடுகின்றார். இரண்டாம் நந்தி வர்மனைத் திருமாலின் அவதாரமாகவே கருதினர் என்று வரலாறு கூறுகிறது ''அரிசரணபரன்'' என்று அடைமொழி கொடுத்துக் காரைக்குடிப் பட்டயம் குறிப்பிடுகின்றது. இவனது காலம் திருமங்கையாழ்வார் காலம். இரண்டாம் நந்தி வர்மன் மகன் தந்தி வர்மன் செந்தாமரைக் கண்ணனாகிய திருமால் அவதாரம் என்று குறிப்பிடப்படுகின்றான். இரண்டாம் பரமேசுவர வர்மன் சிவலிங்க வடிவமாக முடிதரித்தவன், சிவபக்தன் என்று அறிகிறோம்.

புராண இதிகாசங்களின் செல்வாக்கு குப்தர்கள் காலத்திலேயே மிகுந்திருந்தது என்பர். திருக்கோயில்களுக்குத் தெய்வத் தன்மை கூறும் முயற்சியும் இக்காலத்தேதான் தோன்றின போலும், இராமாயண, பாரதப் பகுதிகளை இலக்கியமாகப் படைக்கும் முயற்சிகளும், ஓவியம், சிற்பம் போன்ற கலைகளில் வடிக்கும் முயற்சிகளும் இக்காலத்தேதான் மேற்கொள்ளப்பட்டிருக்க வேணடும் எனலாம். மாமல்லபுரச் சிற்பங்களில் இம்முயற்சியினை காண முடிகின்றது. பரிபாடல் விளக்கும் ஓவியம் ஒன்றும் இவ்வீடுபாட்டின் எதிரொலியே எனலாம். இப்புராண இதிகாசங்களால் வைதிகப் பயிர் வளர்வதற்கு ஏற்ற ஒரு பண்பட்ட நிலமாகத் தமிழகம் முழுவதும் விளங்கிற்று எனல் வேண்டும், திருக்கோவில் வளர்ச்சி இந்தியாவின் பல பாகங்களிலும் ஏற்பட்டமையினை வரலாறு கூறுகின்றது. எனவே சைவ, வைணவ நெறிகள் இந்தியா முழுவதும் பரவியிருந்த ஒரு பண்பாட்டின் விளக்கங்களாகவே வளர்ந்தன என்பது இதனாலும் விளங்குகின்றது. திருக்கோவில்களோடு இணைத்துக் கூறப்படும் தீர்த்தச் சிறப்பும் இவ்வழிபாடு இந்தியா முழுமையினையும் எண்ணி மேற்கொள்ளப்பட்ட ஒன்று என்பதை உறுதி செய்வதேயெனலாம்.

**அடியவர்கள்:** இத்திருக்கோவில்களின் வரலாறு மொழி அடிப்படையில் எழுந்த பண்பாட்டின் விளக்கமாக அன்றி இந்தியா முழுவதிலுமாக அமைந்த பண்பாட்டை எதிரொலிப்பதாகவே உள்ளது. அடியவர்களும் ஒரு மொழி இனத்தவர்களாக இல்லாமல் பலமொழி இனத்தவராக இந்தியாவெங்கும் பரவிக் கிடந்தனர். இவ்வடியார்களேயன்றிச் சைன பௌத்தத் துறவிகளும் முத்தீ வளர்க்கும் அந்தணர்களும் மொழி அடிப்படையிலன்றி சமய அடிப் படையில் இந்தியா முழுவதும் வாழ்ந்தவர்கள், ஒன்றுபோல் மதிக்கப்

பட்டனர். மேலும் இவர்கள் இந்தியா முழுமையினையும் தங்கள் நில எல்லையாகக் கொண்டு நாடு முழுவதும் சுற்றித் திரிந்தனர். எனவே சைவ சமயக் குரவர்களும் ஆழ்வார்களும் இந்தியா முழுவதும் பரவிக்கிடந்த திருந்தலங்களில் தங்கள் வழிபடு கடவுளரின் தெய்வ ஒளியினைக் கண்டு வழிபட்டனர் என்பது தெளிவாகின்றது.

இறைவன், நாம் அவனை அடைய வேண்டியதைச் செய்கின்றான் என்னும்போது நம் வாழ்வு முழுவதையும் இறைவனே இயக்குகிறான் என்பதே பொருள். இறைவன் முத்தொழில்கள் நிகழ்த்துகிறான், ஐந்தொழில்கள் நிகழ்த்துகிறான் என்று கூறுவதெல்லாம் இறைவன் அருளாளனாக இருந்து இயக்குகிறான் என்பதை விளக்குவனவே எனலாம். இதனை விளக்கும் திருமூலர்,

''அருளில் பிறந்திட்டு அருளில் வளர்ந்திட்டு
அருளில் அழிந்து இளைப்பாறி, மறைந்திட்டு
அருளால் ஆனந்தத்து ஆரமுதூட்டி
அருளால் என்நந்தி அகம் புகுந்தானே''

எனப்பாடுவர். இங்கு இறைவனருள் நிகழ்த்தும் ஐந்தொழில்கள் நல் வாழ்க்கைப் பயணத்தை இறைவன் இயக்குவதை விளக்குகின்றன. ''ஆக்குவாய், காப்பாய், அழிப்பாய், அருள் தருவாய், போக்குவாய், என்னைப் புகுவிப்பாய் நின் தொழும்பின்'' என்னும் மணிவாசகர் பாடலும் இதனை உணர்த்துவதே எனலாம். நமக்குப் பிறவியைத் தந்தவனும் இறைவனே. தந்ததும் தன்பால் சேர்த்துக் கொள் வதற்கே என்பர். ''பிறப்பு'' அவன்அருளால் அமைந்தது என்பதோடு நம் வாழ்வுக்கும் அவனருளே கண்ணாக உள்ளது என்பர். இறைவனைக் காண்பதற்குத்தான் அவன் அருள் வேண்டும் என்பதன்று. நம்மையும், உலகையும் கண்டு இவ்வுலக வாழ்வில் செம்மையோடும், இன்பத்தோடும் வாழ்வதற்கும் அவன் அருள் இன்றியமையாதது.

**அருட்கோலம் :** ''நானாவித உருவாய் நமையாள்வான்'' என்று இறைவன் அருள் திருமேனிகொண்டு நம்மைக் காத்தருள்வதை ஞானசம்பந்தர் பாடுவர். சைவ, வைணவ அடியார்களும் தங்கள் வழிபடு கடவுளையே முழுமுதலாகக் கொண்டு வழிபட்டு வந்தனர். சிவனடியார்கள் சிவனையே முழுமுதலாகக் கொண்டு வழிபட்டனர். திருமாலடியார்கள் திருமாலையே முழு முதலாகக் கொண்டு வழிபட்டனர். சிவனடியார்கள் சிவ மூர்த்தங்கள் பலவற்றையும், அம்பலவாணர், தட்சிணாமூர்த்தி, அர்த்தநாரி, இலிங்கம் போன்ற வடிவங்களை வேறுபாடில்லாமல் ஒரே நிலையினவாகவே மதித்துப் பக்தி செலுத்தினர். இதைப் போலவே திருமாலடியார்களும் இறைவனின் நின்ற திருக்கோலம், இருந்த திருக்கோலம், கிடந்த

திருக்கோலம், இராமன், கண்ணன், போன்ற மூர்த்தங்களை ஒன்று போல மதித்துப் பக்தி செலுத்தினர்.

எனவே பக்திப் பாடல்களைப் பொறுத்த அளவில் சிவ மூர்த்தங்களையும், திருமால் மூர்த்தங்களையும் ஒன்றாகத்தான் கருத வேண்டும். சிவனடியார்கள் திருமால் மூர்த்தங்களைப் பழித்தனர் என்றும், திருமாலடியார்கள் சிவ மூர்த்தங்களைப் பழித்தனர் என்றும் கூறுவர். உண்மையில் சிவனடியார்கள் சிவ மூர்த்தங்களிலேயே முழுமுதலைக் கண்டனர். திருமாலடியார்கள் திருமால் மூர்த்தங்களிலேயே முழுமுதலைக் கண்டனர் என்பது புலனாகின்றது.

தேவாரத் திருப்பதிகங்களுள் சம்பந்தர், அப்பர் திருப்பதிகங்கள் பெரும்பாலும் ஒருகாலத்தே தோன்றியன. சுந்தரர் திருப்பதிகங்கள் அவைகட்கு ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு பின்னர் தோன்றியவை. முன்னை இருவரது காலமும், தமிழ்நாட்டில் புறச்சமயங்கள் மேலோங்கியிருக்க சைவ சமயம் அருகியிருந்த காலம். அதனால் அவர்கள் புறச்சமயங்களைக் களைந்து சைவ சமயத்திற்குப் புத்துயிர் கொடுத்து வளர்க்க வேண்டிய நிலையில் இருந்தனர். சுந்தரரது காலம் அவ்வாறின்றி ஞானசம்பந்தர், நாவுக்கரசரது நல்லருட் செயல்களால் புறச்சமயம் அறவே மறையச் சைவ சமயம் மேலோங்கியிருந்த காலமாகும். மக்களும் சைவ சமயத்தில் ஆர்வமும் ஊக்கமும் கொண்டிருந்தனர். மேலும் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் சைவ சமயத்தவராய் விளங்கினமை குறிப்பிடத்தக்கது. ''முடியால் உலகாண்ட மூவேந்தர் முன்னே மொழிந்த'' என்ற வன்றொண்டர் வாக்கால் இதனை அறியலாம். ஆகவே ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் காடுபோக்கி, நிலந்திருத்தி, விதைத்துச் சென்ற வித்து விளைவைத்தர அதன் பயனை மக்கள் மகிழ்ந்துண்ணும் காலமே நம்பியாரூரர் வாழ்ந்திருந்த காலம் என்பது நன்கு புலப்படுகின்றது.

ஞானசம்பந்தர் பாடல்களில் உள்ளவற்றினும் நாவுக்கரசரது பாடல்களில் பணிவு மிகுதியாய்த் தோன்றும். எனினும் அவரது பாடல்களினும் அள்விட இயலாத பணிவு நம்பி ஆரூரது பதிகத்திலே காணப்படுகின்றது. முன்னை இருவரும் ஆண்டவனுக்கு அடிமையானவர்கள். நம்பியாரூரர் அடியார்க்கு அடியாரானவர். அதனாலே இறைவன் தனக்கு அடிமைப்பட்டவரினும் தன் அடியார்க்கு அடிமைப்பட்டவரிடம் பெரிதும் எளியனாய் இருந்தான் எனலாம்.

**இயற்கைப் பொருளின்பம் :** இயற்கைக் காட்சிகளிலே இதயத்தைச் செலுத்தி, இதயத்து உணர்ச்சியை எழுதி வைத்த இனியவர்கள் எங்கெங்கும் உண்டு. நம் நாட்டில் வாழ்ந்த முன்னோர்

இயற்கைக் காட்சிகளே இறைக்காட்சியாகக் கண்டாலும் அவற்றை அழகு பெற உரைப்பதில் தவறவில்லை.

சங்க காலம் இயற்கையின் நாப்பண் இறைவனைக் கண்டு இன்புற்ற காலம். அக்காலத்து வாழ்ந்த மெய்பொருளியற் புலவர்களான நக்கீரர், கபிலர், பரணர் போன்றோர் இயற்கையை உடலாகக் கொண்ட பேரா இயற்கைப் பெரியோனாம் இறைவன் புகழை எடுத்தோதியுள்ளனர். இதனை ஆங்கு அவர் தம் வாக்குகளில் பரக்கக் காணலாம். ஆயின் பிற்காலத்தே திருமுறை ஆசிரியர்கள் வாழ்ந்த காலத்தே இறைவனைத் தனித்தும், இயற்கைக் கண்ணும் கண்டு போற்றுகின்ற பண்புகளைக் காணுகின்றோம். எனினும் சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காண்பது போல இயற்கையோடு இறைப் பண்புகளை இணைத்துப் பார்க்கும் பாங்கு அவற்றினும் இச்சைவ இலக்கியங்களில் ஓரளவே காணப்படுகின்றது.

**தெய்வக் காட்சி :** கடவுட் காட்சி மனித உள்ளத்தின் மாசு போக்க வல்லது. கடவுளைக் காணும் பண்பட்ட உள்ளத்திலும் பற்பல வேறுபாடுகள் கடவுளைத் தந்தை, தாய், மனைவி, மணாளன், தோழன் முதலியோராகக் கண்டனர் நம் சமயப் பெரியோர், அவனது அருளை, அருளில் விளையும் இன்பத்தை எப்படி அனுபவித்தால் என்ன என்ற நிலை ஏற்படுகின்றது. இந்தப் பாவனையில் இறைவனின் உருவம் மட்டுமல்ல. விஸ்வரூபமும் வெளிப்படுகின்றது. தாயைப் பார்க்கும் மகனைப் போல் ஆண்டவனை நாம் பார்க்கிறோம். மனிதர்கள் அணியும் ஆடைகளையே அவனுக்கு அணிவிக்கிறோம். மனிதர்கள் சூடிக்கொள்ளும் மலர்களையே இறைவனுக்கும் சூட்டுகிறோம். இந்த மனித பாவத்தில் நம்முடைய அறிவு லயித்து விடுகிறது. தெய்வம் என்பது எல்லாவற்றையும் கடந்தது என்ற நிலை போய், அவன் நம்மோடு இருக்கும் ஒன்று என்ற நிலை வந்து விடுகிறது. மனிதனுடைய பகுத்தறிவு தெய்வத்தைப் பக்கத்தில் காணவே விரும்பி இருக்கிறது. அந்த விருப்பத்தின் உருவகங்களே அவதாரங்கள்.

கடவுளைக் காதலனாக, மணாளனாகக் காணும் முறை புதிய முறை. கடவுள் வழிபாட்டிலும் சிறந்த முறை. இம்முறையில் தப்பினோர் சமயக் குரவர்களில் ஒருவரும் இலர். திருநாவுக்கரசரும், மாணிக்கவாசகரும் இறைவனைத் தங்கள் தலைமகனாகக் கொண்டு வழிபட்டமையைத் திருமுறைகளில் காணலாம். துன்பமே இல்லாத நிலையான இன்பத்தைப் பெற விழைவிப்பதே தெய்வப் பெரியோர்களின் திருவுள்ளம். இன்பமே எந்நாளும் துன்பமில்லை. இன்ப சுகத்துள்ளே இருக்கலாம். எப்போதும் துன்ப வினை நம்மைத்

தொடராது என்றெல்லாம் கூறி, பொங்கித் ததும்பி வழியும் முழு இன்பத்தையும் நுகரச் செகத்தீரே சேரவாரும் என அறைகூவி அழைத்தலைக் காணலாம். எல்லோரும் இருவினையொப்பு எளிதில் எய்துதற்குத் தோத்திரப் பாடல்களைக் கைக்கொள்ளலாம். என்றனர். தோத்திரங்கள் நமக்கு இறைவன் செய்த அருட்செயல் களைப் பலகாலும் சொல்லி கருத்தூன்றச் செய்து மனத்தைக் கனிய வைக்குங் கருவிகள். மனித மனத்தைத் தெய்வ மனமாக்கும் மருந்து. கவலை மனத்தைக் களிப்பு மனமாக்கும் குளிகையெனலாம்.

இச்சைவ இலக்கியங்கள் மூலமாகச் சிறப்பாக, நமது தமிழ் மன்னர்களுடைய தெய்வபக்தி, திருமுறை அன்பு, திருமுறை ஆசிரியர் களிடம் இவர்களுக்குள்ள இணையீடற்ற பக்தி, ஆட்சிச் சிறப்பை அறிகின்றோம். மேலும் வெற்றி தோல்வி முதலிய வரலாற்றுக் குறிப்புகள், தானச் சிறப்பு இவற்றைக் காட்டும் கல்வெட்டுக் குறிப்புக்களையும் அறிகின்றோம். தமிழ் மக்கள் தெய்வ பக்தியைத் துணைக் கொண்டே தமது புகழையும் வாழ்வையும் வளர்த்து வந்தமையையும் அறியலாம்.

**புராணம் :** உலகம் தோன்றிய நாள் முதல் இன்று வரையுள்ள பழமையான வரலாறுகளைச் சிந்திப்பதால் பல உண்மைகள் நமக்குப் புலப்படுதல் கண்கூடு. இவ்வரலாறுகளுள் இறைவன் அருள் விளை யாடல்களைத் தெரிவிக்கும் புராணச் செய்திகள் நம் உள்ளம் பண்படுவதற்கும் உயிர் உறுதி அடைவதற்கும் துணை செய்வன என்று கூறலாம். புராணம் என்ற சொல்லுக்குப் பழமையானது என்பது பொருள். இச்சொல் புராதனம் என்பதன் திரிபு. புராணம் என்பது நம்பிக்கைக்குரியது, கற்பிக்கப்படுவது என்பர்.

புராணங்களின் முக்கிய நோக்கம் மக்களை நல்வழிப்படுத்தி இறையுணர்வை ஏற்படுத்துவது. அவற்றை அறிவுக் கண்கொண்டு ஆராய்ந்து பார்க்கக் கூடாது. புராண வரலாறுகள் இறைவன் உயிர்கள் மேல் வைத்துள்ள பெருங்கருணைத் திறத்தைப் புலப் படுத்துகின்றன. இறைவன் திருவருளைப் பெறும் வேட்கையை நமக்குத் தூண்டுகின்றன. புராண வரலாறுகளைத் தத்துவ உணர் வோடும், இறைவனது அருளாற்றலை விரித்துரைப்பன இவ் வரலாறுகள் என்ற எண்ணத்தோடும், நம்பிக்கையோடும் நாம் அணுகவேண்டும். அவ்வாறு அணுகும்போது நம் மனம் கனிவுறும். இறைவன்பால் அன்பு ஊற்றெடுத்துப் பாயும். உள்ளம் பண்படும் என்பது ஒரு தலை.

இறைவன் அருள் பெற்றால் செயற்கரிய செயல்களைச் செய்ய லாம். இறைவன் தன் அடியார்களுக்குத் தொண்டும் செய்வான்.

இறைவன் அடியார் அன்பிற்குக் கட்டுப்பட்டவன். எவ்வளவு தீமைகள் செய்தாராயினும் இறைவனை வழிபட்டால் முக்தி பெற லாம். மாபாதகம் செய்தோரையும் மன்னிக்கும் இயல்பினன் இறைவன் என்னும் இக்கருத்துக்களை வலியுறுத்தப் புராணக் கருத்துகளை இலக்கியங்கள் எடுத்தாண்டுள்ளன.

மிகப் பழங்காலத்திலிருந்தே புராணக் கருத்துகள் தமிழ்நாட்டில் பரவியிருந்தன. தமிழகத்தில் சங்க காலந்தொட்டே புராணக் கருத்துகள் நிலவி வந்தன என்பதற்கு ஆதாரங்கள் உண்டு. தொல்காப்பியர் நானிலத்துக்குரிய தெய்வங்களைக் குறிப்பிட்டு விளக்கம் தருகிறார். பத்துப் பாட்டிலும், எட்டுத் தொகையிலும் திருமால், சிவபெருமான், முருகன், ஆகியோரைப் பற்றிய பல புராணத் தொடர்பான செய்திகள் பேசப்படுகின்றன. புராணக் கதைகள் காலப்போக்கில் பெருகின. புராணக் கருத்துகளைப் பக்தி இலக்கியங்கள் மிகவும் பயன்படுத்திக் கொண்டுள்ளன. இத்தகைய புராண வரலாறுகள் சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் இச்சைவ இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுவதையும், சமுதாயச் சூழலும், மக்களின் உள்ளப்பாங்கும் அதற்குக் காரணமென்றும் கூறலாம்.

சைவ இலக்கியங்களில் இடம்பெறும் திருமால் பற்றிய இக் குறிப்புகளையெல்லாம் நோக்கும்போது பெயர்கள் பற்றிய நிலையில் ஒரு வளர்ச்சியினைக் காணமுடிகின்றது. பல்வேறு தொடர்களால் விளக்கப் பெறுமிடத்துச் சங்கம், சங்கம் மருவிய கால நிலையே நீட்டிக்கக் காண முடிகின்றது. சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் பற்றிய வருணனைகள் பலவிடங்களில் அமைகின்றன. வருணனை பற்றிய அளவில் முந்தைய இருகாலங் களைப் போன்ற வருணனை அமைப்பு இடம் பெறாமையை உணர முடிக்கின்றது. பக்திப் பாடல்கள் தோத்திரப் பாடல்களாக, இறைவன் அருட்திறம் விளக்குவதையே இலக்காகக் கொண்டிருப்ப தால் அத்தகு வர்ணனைகள் இடம் பெறவில்லை எனலாம். திருமால் கோலங்களின் சிறப்பும் முந்தைய கால இலக்கியங்களைப் போல இங்குக் காட்டப்படவில்லை. கண்ணன் பற்றிய பாரதக் கதைக் குறிப்புகள் முந்தைய இருகால இலக்கியங்களில் இடம் பெறுவது போல் இங்குக் காணப்படவில்லை. திருமால் பற்றிய புராணச் செய்திகளே மிகுதியும் கூறப்படுகின்றன. இங்குக் காணும் இப் புராண வரலாறுகள் பெரும்பான்மையும் இச்சைவ இலக்கியங் களிலேயே காணப்படுகின்றன. முந்தைய இலக்கியங்களில் காண முடியவில்லை. புராணங்களின் செல்வாக்கு மக்களிடையே மிகுந் திருந்தமை இதற்குக் காரணமாக இருக்கலாம். இயற்கையோடு

இறைப் பண்பை இணைத்துப் பார்க்கும் முந்தைய இருகாலக் கட்ட நிலையைக் காண முடியவில்லை. சிவனது புகழ் பாடும் இச்சைவ இலக்கியங்கள் சிவ பரத்துவத்தைப் பேசினாலும் அவ்விடங்களிலே திருமாலின் அருட் பண்புகளும் பல்வேறு பெயர்களும், தோற்றமும் விளங்கக் காத்தற் கடவுளாக அவன் காட்டப்படுவதை உணர முடிகின்றது.

சங்க கால முதல் மக்கள் மனத்தில் உறைந்திருந்த இறையுணர்வு படிப்படியாக வளர்ந்து பரிபாடலில் நன்கு பரிணமித்து, காப்பியங் களில் சிறந்து நாயன்மார், ஆழ்வார்களால் பெரிதும் பாராட்டப் பட்ட நிலை தெளிவாகிறது. இலக்கியம் அவ்வக் கால மக்களின் நிலையினை எடுத்துக் காட்டும் கண்ணாடி போன்றது. இவ்வகையில் பக்தி இலக்கியங்கள் சமயச் சார்புடையனவாக விளங்கி மக்களின் சமய நிலையை, இறையுணர்வை, வழிபாட்டு முறைகளை முதன்மை யாக எடுத்துக் காட்டுகின்றன.



# நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் திருமால் வழிபாடு

**அவதாரங்கள் :** தமிழகத்திற்கு வடக்கேயிருந்த பல்லவர் தமிழகத்தின் பெரும் பகுதியைக் கைப்பற்றி ஏறத்தாழ அறுநூறு ஆண்டுகள் ஆண்டனர். களப்பிரர் தோற்கடிக்கப்பட்டதை அடுத்துக் கி. பி. ஆறாம் நூற்றாண்டின் பின் பாண்டிய பல்லவ சாதனைகளின் புதிய சகாப்தம் ஆரம்பமாகிறது. கி. பி. ஐந்தாம் நூற்றாண்டுக்கு முன்னர் இந்த அரச வம்சங்கள் ஆட்சி புரிந்த காலத்தில் பௌத்தமும் சமணமும் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் அடைந்தன. இச்சமயங்கள் அரசர்கள் மத்தியில் பெரிதும் வரவேற்கப்பட்டதுடன் குடிமக்கள் மத்தியிலும் கணிசமான பகுதியினருடைய ஆதரவைப் பெற்றிருந்தன. அடுத்த காலத்தில் (கி. பி. 600முதல் 950) முன்னையவற்றை விட விசாலமான அரசுகள் தென்பகுதியில் தோன்றின. இவை போரிலாயினும், சமாதானத்திலாயினும் சிறந்து விளங்கின. தென்னகத்தைப் பல்லவர்களும் பாண்டியர் களும் பகிர்ந்து கொண்டனர்.

இந்து சமயம் மிகவும் சிறப்பாகப் போற்றப்பட்ட காலம் பல்லவர் காலமாகும். பல்லவர் காலம் பக்திக் காலம் எனப்படுகிறது. தமிழிலுள்ள பக்தியிலக்கியங்களுக்கு ஒப்புவமையான பக்தியிலக் கியங்கள் வேறு மொழிகள் எவற்றிலும் இல்லையெனப்படுகிறது. சைவம் வைணவம் என்ற சமயங்கள் அக்காலத்தே சமணம், பௌத்தம் என்ற சமயங்களை எதிர்த்துப்போரிட வேண்டியிருந்தது. வளர்ந்து வந்த சமண பௌத்த மதங்களின் செல்வாக்கிற்கு எதிரான ஒரு தீவிர இயக்கம் முதலாவது மகேந்திரவர்மன் காலத்தில் தோன்றியது. இதன் விளைவாகச் சைவ, வைணவ சமயத்தவர் மத்தியில் பெரும் பக்தி இயக்கம் எழுந்தது. இப்பக்தி இயக்கத்தின் தலைவர்கள் நாயன்மார்களென்றும், ஆழ்வார்கள் என்றும் அழைக் கப்பட்டனர். ஆழ்வார்கள் பலதடவை சென்று வழிபட்ட புண்ணியத் திருப்பதிகள் பற்றிப் பாடிய மிக அருமையான பக்திப் பாடல்கள் திவ்வியப் பிரபந்தங்கள் என்று பின்னர் தொகுக்கப் பட்டன. தமிழ் இலக்கியத்தில் விலை மதித்தற்கரிய மிக உயர்ந்த செல்வமாக மதிக்கப்படும் இப்பக்திப் பாடல்கள் சமயக் குரவர்களால் மதம் பரப்பும் யாத்திரையில் அருளிச் செய்யப்பட்டவையாகும். சம்பந்தர், அப்பர், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார் என்பார் பாடல்களிலே சமணம் பௌத்தம் பற்றிய கண்டனங்களைக் காணலாம். நாயன்மார் ஆழ்வார் பாடல்களைப்

படிக்கும்போது அவர்களின் பக்திஉறுதி உடனே புலப்படுகின்றது. நாயன்மார் வாழ்க்கை வரலாறு இப்பக்தி வைராக்கியத்தையே உணர்த்தி நிற்கிறது. தேவாரம் பாடிய மூவர் வரலாறு மட்டு மல்லாது பெரிய புராணத்தில் இடம் பெறும் நாயன்மார் வரலாறு களும் பக்தி உறுதியை உணர்த்த எழுந்தவையென்றே கூறவேண்டும். வைணவ பக்திப் பாடல்களைப் பார்க்கும் போது ஆழ்வார்கள் திருமாலிடத்திலே எவ்வளவு ஈடுபட்டவர்கள் என்பதைக் கண்டு கொள்ளலாம். வைதிக சமயம் தமிழ்நாட்டை வெற்றி கொள்ள உதவியது பக்தியின் உறுதியேயெனலாம்.

தமிழ் இலக்கியத்திலே மிகப்பெரும் பகுதி சமய இலக்கியமாகக் காணப்படுகிறது. சமய இலக்கியத்துள் குறிப்பிடத்தக்க பகுதி பக்தி இலக்கியமாக விளங்குகிறது. சமய இலக்கியத்துக்கும் பக்தியிலக் கியத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டெனலாம். சமய இலக்கியம் சமய நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டு எழுகிறது. சமய நம்பிக்கை இறை ஈடுபாட்டுக்குக் காரணமாகிறது.

இறைவன் மேல் புகழ்ச்சிப் பாடல்களாக அமைந்தவற்றை மட்டும் பக்தியிலக்கியம் என்று கூறலாம். தமிழ் இலக்கிய வரலாற்றிலே பக்தி நயங்கனிந்த இலக்கியங்கள் நீண்ட காலமாகத் தோன்றி வந்துள்ள போதிலும் பல்லவர் காலத்தில் எழுந்த புகழ்ச்சிப் பாடல்களே பக்தி இலக்கியம் என்ற சிறப்பு பெயரைப் பெறுகின்றன. சிவபெருமான், திருமால் என்னும் இருவர் மேலும் அக்காலத்தில் எழுந்தவனாக இன்று காணப்படும் அருட்பாடல்கள் பதின்மூவாயிரத்துக்கும் அதிகம். இவ்வளவு பெருந்தொகையான அருட்பாடல்கள் புகழ்ச்சி உருவத்திலே வேறு எம்மொழியிலும் இறைவன்மேல் எழுந்தனவாகத் தெரியவில்லை. உலகிலுள்ள செம்மொழிகள் சில ஒவ்வொரு வகைப் பயன்பாட்டில் ஈடிணையில் லாமல் விளங்குவதை எடுத்துக் காட்டுவோர் பக்தியைப் பாடுவதிலே தமிழ் மொழிக்கு ஈடிணையில்லை என்ற உண்மையை வற்புறுத்திக் கூறுவர்.

திருமாலடியார்களுள் தலைவர்களாகத் திகழ்பவர்களை ஆழ்வார்கள் என்பர். ஆழ்வார்கள் என்பதற்குத் திருமாலினது பக்தி வெள்ளத்தில் ஆழ்ந்தவர்கள் எனப் பொருள் கொள்ளலாம். சைவ சமயக் குரவர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் சைவ சமயத் தலைவர்களாகக் கருதப் படுவது போன்று, வைணவ சமயத் தலைவர்களாகக் கருதப்படுப வர்கள் ஆழ்வார்கள். சைவ சமயக் குரவர்களுள் முதல் மூவர் பாடிய பாக்களின் தொகுதியைத் தேவாரம் என்றும், மாணிக்கவாசகர்

பாடியவற்றைத் திருவாசகம் என்றும் வழங்கினாற்போலப் பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களைத் தொகுத்து நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்று வழங்கி வருகின்றனர். அத்தொகை நூலுள் ஒவ்வொரு ஆழ்வார்கள் பாடிய பாடல்களுக்குத் தனித்தனியே பெயர்களும் சூட்டப்பட்டுள்ளன.

**ஆழ்வார்களும் அவர்கள் பாடிய பாடல் தொகுதிகளின் பெயர்களும் :**

| | | | |
|---|---|---|---|
| 1. | பொய்கையாழ்வார் | — | முதல் திருவந்தாதி |
| 2. | பூதத்தாழ்வார் | — | இரண்டாம் திருவந்தாதி |
| 3. | பேயாழ்வார் | — | மூன்றாம் திருவந்தாதி |
| 4. | திருமழிசையாழ்வார் | — | திருச்சந்த விருத்தம்<br>நான்முகன் திருவந்தாதி |
| 5. | மதுரகவியாழ்வார் | — | கண்ணிநுண் சிறுத்தாம்பு |
| 6. | நம்மாழ்வார் | — | திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி |
| 7. | குலசேகராழ்வார் | — | பெருமாள் திருமொழி |
| 8. | பெரியாழ்வார் | — | பெரியாழ்வார் திருமொழி |
| 9. | ஆண்டாள் | — | திருப்பாவை, நாச்சியார் திருமொழி |
| 10. | தொண்டரடிப் பொடியாழ்வார் | — | திருமாலை, திருப்பள்ளியெழுச்சி |
| 11. | திருப்பாணாழ்வார் | — | அமலனாதிபிரான் |
| 12. | திருமங்கையாழ்வார் | — | பெரிய திருமொழி, திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் |

ஆழ்வார்களுள் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் முதலாழ்வார்கள் என அழைக்கப்பட்டனர். பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகராழ்வார், திருமழிசையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், மதுரகவியாழ்வார் ஆகியோர் பாடிய பாடல்கள் பொதுவாக முதலாயிரம் என அழைக்கப்படும். இவர்களுள் பெரியாழ்வார் இறைவனுக்குப் பல்லாண்டு பாடிய பெருமையுடையவர்.

தமிழ்நாட்டில் வைதீக சமயங்களாகிய சைவம், வைணவம் இரண்டும் வடநாட்டிலிருந்து தமிழகத்தில் புகுந்த பௌத்தம், சமணம் முதலியவற்றால் தாக்குண்டு செல்வாக்கிழக்கும் நிலையில் இருந்தன. கி.பி. 7, 8, 9-ஆம் நூற்றாண்டுகளில் செல்வாக்குடன்

தமிழகத்தை ஆண்ட பல்லவர்கள் காலத்திலும், அதற்கு முன்பு ஆண்ட களப்பிரர் காலத்திலும் வடமொழியும், பிற மதங்களும் அரசியல் செல்வாக்குப் பெற்றிருந்தன. பௌத்தம், சமணமாகிய மதங்களின் கோட்பாடுகளில் வெறுப்புக் கொண்ட நிலையில் தமிழக மக்களிருந்த காலத்தில் சைவ சமய நாயன்மார்களும், வைணவ சமய ஆழ்வார்களும் ஊர்கள் தோறும் சென்று இசையொடு கூடிய இனிய தமிழ்ப் பக்திப் பாக்களினால் மக்கள் மனத்தைக் கவர்ந்து பக்தி வெள்ளம் பெருகுமாறு செய்தனர். இக்காலக் கட்டத்தினைத் தமிழகத்தில் ஒரு மறுமலர்ச்சிக் காலம் என்றே கூறலாம். இவ்வாறு ஆழ்வார்களும் நாயன்மார்களும் பாடிய பக்திக்கால இன்னிசைப் பாடல்களில் திருமால் பற்றிய செய்திகள் இவ்வியலில் ஆராயப் படுகின்றது.

**அவதாரங்களும் அவற்றின் சிறப்புகளும்:** உலகில் மறம் மிகுந்து அறம் தேயும் காலத்து இறைவன் மனித வடிவிலே வந்து மறம் மடிய, அறம் வெல்லத் தோன்றுவதே அவதாரம் எனலாம். எல்லாப் புராணங்களும், இதிகாசங்களும் இதனை மன்பதைக்குணர்த்தவே எழுந்தன. மக்கள் அறவாழ்வு வாழ வேண்டும் இல்லையேல் அழிவர் என்பதைப் புராணங்கள் வாயிலாகச் சான்றோர் உணர்த்தினர். எவ்வளவு ஆற்றல் மிக்கவராயினும், அறத்தின் வழி நில்லாது உலகை நலிய வைப்பார்களேயாயின் அவர்கள் அழிவது திண்ணம் என்பதை இரணியன், இராவணன், சூரன், துரியோதனன் ஆகியோர் மூலம் அறியலாம்.

முக்கடவுளர்களில் பிரமன் படைக்கும் தொழிலும், திருமால் காக்கும் தொழிலும், உருத்திரன் அழிக்கும் தொழிலும் உடையவர் என்பது வைதிக சமயக் கருத்து. சான்றோர்கள் இம் முத்தொழிலையும், மூன்று வடிவிலே இருந்து செய்யும் ஒருவரென்று இறைவனைக் கூறுவர். இவ்வாறு முக்கடவுளரிலே பிரமனுக்குப் படைப்புத் தொழிலன்று வேறில்லை. ஆயினும் தன்னை வழிபடுவோருக்குப் பல வரங்களைக் கொடுக்கும் ஆற்றல் உடையவன். சிவன் எல்லாம் வல்லவன், தன்னை வியந்து கூறும் தன் அடியார்களுக்கு முன்பின் தெரியாமல் வரம் நல்கும் இயல்புடையவன். ஆகவேதான் சிவப்பிரகாச சுவாமிகள் சிவனை ''புகழ்ச்சி விருப்பன் போலும், இகழ்ச்சியறியான் என்பறிவோனே''[1] எனக் குறிப்பிடுகின்றார்.

1. சிவப்பிரகாச சுவாமிகள் - நால்வர் நான்மணி மாலை : பாடல் - 24 - அடி 12 - 13

சிவனைப் பற்றிப் புராணங்கள் பலவுள. சிவனது அருளிச் செயல்களையும், அற்புதச் செயல்களையும் உள்ளடக்கமாகக் கொண்ட பெரிய புராணம், திருவிளையாடற்புராணம் ஆகிய இரண்டினையும் அடிப்படையாகக் கொண்டு ஆராயின், சிவபிரான் அடியார்கள் உற்ற துயரினைப் போக்க அவ்வப்போது மனித வடிவங் கொண்டு வருகின்ற நிலையினையே காணுகின்றோம். பூமியில் கொடுமைகள் மிகுதியான போதும், வலியோன் ஒருவன் தன் வர பலத்தினால் உலகத்தவரையும், தேவர்களையும் நலிவிக்கும் போதும் திருமால் ஒருவனே மானிடனாகப் பிறந்து, மானிடனுக்குரிய இன்ப துன்பங்களைத் தானும் துய்த்துக் காலங்கருதிக் கொடியவரை அழித்து உலக மக்களைப் பாதுகாக்கும் தன்மையுடையவனாகத் திருமால் பற்றிக் கூறும் வைதிக நெறி நூல்களில் காண்கிறோம். நன்மையை நிலைநிறுத்தவும், தீமையைக் களையவும் திருமால் தன் நிலையினின்று இழிந்து வந்து ஆற்றும் அற்புதச் செயல்களையும், அருளிச் செயல்களையுமே அவதார நிகழ்ச்சிகள் என்பர். திருமால் பத்து அவதாரங்கள் எடுத்தவன். இந்த அவதாரக் கதைகள் பெரும் பாலும் இந்திய நாடு முழுமையும் பரவிய ஒரு செய்தியாகும். சங்க இலக்கியங்களில் இராமாயண, பாரதக் கதைக் குறிப்புகளைப் பல இடங்களில் காணலாம்.

**திருமால் எடுத்த அவதாரங்கள்:** 1. மச்சாவதாரம், 2. கமடம், (ஆமையவதாரம்), 3. வராக அவதாரம், 4. நரசிங்காவதாரம், 5. வாமனன், 6. பரசுராமன், 7. இராமன், 8. பலராமன், 9. கிருட்டிணன், 10. கல்கி. இதனைப் ''பத்துருவத்தழகர்'' என அழகர் கலம்பக ஆசிரியர் கூறுவர்.[2] ''மீனமாகியும், கமடமதாகியும்'' எனவரும் வில்லிப்புத்தூரார் பாரதப் பாடலும் நினைவு கூர்தற் குரியது.[3]

திருமால் எடுத்த பத்து அவதாரங்களின் பெருமையினை ஆழ்வார்கள் தங்கள் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். பொதுவாக அவதாரங்களில் கிருட்டிணாவதாரமே நாலாயிரத்தில் பெரிதும் பேசப்படுகின்றது. கிருட்டிணாவதாரத்தில் மிகவும் ஈடுபட்ட பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், இருநூற்றுக்கு மேற்பட்ட இடங்களில் கிருட்டிணாவதாரப் பெருமையை எடுத்துக் கூறி உள்ளனர். அடுத்தபடியாக ஆண்டாள் இயற்றிய திருப்பாவை, நாச்சியார் திருமொழி ஆகியவற்றில் பெரும்பாலும் கண்ணனைப் பற்றியே இருப்பதைக் காணலாம். அவதாரங்களை முறைப்படிக்

2. முக்கூடற்பள்ளு - செய்யுள் - 67
3. வில்லிபாரதம் - உத்தியோகப் பருவம் - பாடல் - 1

கூற வேண்டுமாயினும் பெரிதும் பாராட்டப்படும் நிலையினை ஒட்டிக் கிருட்டிணாவதாரம் இங்கு முதற்கண் எடுத்துக் கொள்ளப்பட்டது.

இறைவன் கிருட்டிணாவதாரம் எடுத்தது பூபாரம் தீர்ப்பதற்கே எனச் சான்றோர் கூறுவர். இதனைப் ''பாரையூரும் பாராந்திரப் பார்த்தன் தன் தேரையூரும் தேவதேவன்''[4] ''பன்னிய பாரம் பார் மகட்கொழியப் பாரத மாபெரும் போரில் மன்னர்கள் மடிய மணி நெடுந்திண்டேர் மைத்துனர்க்குய்த்த மாமாயன்''[5] எனத் திருமங்கை யாழ்வார் குறிப்பிடுகின்றார். ''பூமிபாரம் தீர்ப்பதற்கே திருவவதரித்த கிருட்டிணன்'' என வை. மு. கோ. தமது பாரத உரையில் சுட்டிக்காட்டியுள்ளார்.[6] கொடியோர்களை அழிப்பதற்கே கிருட்டிணன் அவதரித்தான். இதனை, ''சாது சனத்தை நவியும் கஞ்சனைச் சாதிப்பதற்கு ஆதியஞ் சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த வேத முதல்வன்'' என நம்மாழ்வார் திருவாக்கில் விளங்கக் காணலாம்.

மதுராபுரி மன்னன் உக்கிரசேனன் மகன் கஞ்சன், மக்களை மிகவும் கொடுமையாக நடத்தி வந்தான். தன் தாய் தந்தையரையே சிறையில் அடைத்தவன் எனில் அவனது கொடுமைக்கு வேறு சான்று வேண்டுவதில்லை. கஞ்சன், உடன் பிறந்த தங்கை தேவகியைத் தன் நண்பன் வசுதேவனுக்குத் திருமணம் செய்து வைத்தான். தேவகி வயிற்றில் பிறக்கும் எட்டாவது குழந்தையே தன்னைக் கொல்லும் என்பதை அசரீரி மூலம் கேட்டறிந்த கஞ்சன் அவர்களுக்குப் பிறந்த ஏழு குழந்தைகளையும் கொன்றுவிட்டான். எட்டாவது குழந்தையாகப் பிறந்த கண்ணனையும் கொல்ல முயன்றான். இதனையுணர்ந்த பெற்றோர் கண்ணனை யசோதையின் வீட்டில் மறைத்து, அவளுடைய பிள்ளையாக வளர விட்டனர். அன்றுமுதல் கண்ணன் யசோதையின் மகனானான். இச்செய்தியினை

''ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவில்
ஒருத்தி மகனாய் ஒளித்து வளர''[7]

''தந்தை காலில் பெருவிலங்கு தாளவிழ நல்லிருட்கண் வந்த எந்தை பெருமானார்''[8] ''வேண்டித் தேவர் இரக்க வந்து பிறந்ததும்

4. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 6 - 9
5. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 1 - 9
6. வை. மு. கோபால கிருட்டிணமாச்சாரியார் - பாரத முன்னுரை
7. நா. தி. பிர. திருப்பாவை - 24
8. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 5 - 1

வீங்கிருள்வாய் பூண்டன்று அன்னை புலம்பப் போயங்கோர் ஆய்க் குலம் புக்கதும்''[9] என வரும் பாசுர அடிகள் எடுத்துரைக்கின்றன.

கண்ணன் திருவவதாரச் சிறப்பினைப் பெரியாழ்வார் பெரிதும் பாராட்டிக் கூறுகின்றார். கண்ணன் திருவோணத்தில் பிறந்தவ னாகையால் அவன் உலகையாளுவான்''.[10] கண்ணன் பிறந்த மகிழ்ச்சிக் கடலில் திளைத்த ஆய்ப்பாடியின் நிலையினைப் பல பாடல்களால் தெரிவிக்கின்றார் பெரியாழ்வார்.

''ஓடுவார், விழுவார், உகந்து ஆலிப்பார்
நாடுவார் நம்பிரான் எங்குத்தான் என்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே''[11]

குழந்தைக் கண்ணனை நீராட்டி நாவழித்தபோது அவன் வாயில் வையமேழுங் கண்டாள் யசோதை. அதைக் கண்டவர்கள் இவன் ஆயர் புத்தரனல்லன் அருந்தெய்வம் என்றும் மாயனாகிய திருமாலே என்றும் மகிழ்ந்தனர்.[12] பெரியாழ்வார் கண்ணனது குழந்தைப் பருவத்தைப் பாராட்டி ஒரு பிள்ளைத் தமிழையே படைத்து விட்டார். தமிழ் இலக்கியத்தில் பிள்ளைத் தமிழைத் தோற்றுவித்த பெருமை இவரையே சாரும்.

**கஞ்சனால் கண்ணனுக்கு இழைக்கப்பட்ட தீமைகள் : 1. பூதனை விடப்பால் ஊட்டியது :** கண்ணன் குழந்தையாக இருந்தபோது கஞ்சன் பூதனை என்கிற ஓர் அரக்கியயை ஏவி, விடப்பாலூட்டச் செய்தான். ஆனால் கண்ணன் பூதனையின் பாலுடன் அவள் உயிரையும் குடித்தான். இதனை ''வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட அஞ்சன வண்ணனை''[13] என்றும், ''கள்ளதாய பேய்மகள் வீடவைத்த வெய்ய கொங்கை ஐயபாலமுது செய்து''[14] என்றும் அமையும் பாசுர அடிகள் எடுத்துரைப்பதைக் காணலாம். இதே கருத்து இன்னும் பலவிடங்களிலும் பேசப்படுகின்றது.[15,16,17]

9. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 4 - 5
10. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 1 - 3
11. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 – 1 - 2
12. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 7
13. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 3 - 10
14. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 36
15. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 5 - 6
16. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 5 - 9
17. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 74

**2. சகடாசுரன் :** சகடாசுரன் சக்கர வடிவிலே உருண்டு வந்து குழந்தையாகிய கண்ணனை கொல்ல முயன்றான். ஆனால் கண்ணன் அச்சகடத்தைத் தாளால் உதைத்து அவ்வசுரனைக் கொன்றான்.

''கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதைசெய்த பிள்ளை அரசே''[18] ''கள்ளச் சகடம் கலக்கழியக் காலோச்சி''[19] என்றும், இன்னும் இதே கருத்தமைய அமையும் பாசுரங்களின் அடிகள் மூலம்[20-24] கண்ணன் சகடாசுரனைக் கொன்ற செய்தி சுட்டப்படுகின்றது.

**3. இணைமருதம் சாய்த்தது :** நளகூபரன், மணிக்கிரீவன் எனப்படும் இருவர் இணைமருதமாக வளர்ந்து வந்தனர். கண்ணனை யசோதை உரலோடு கட்டியிருக்கக் கண்ணன் அவ்வுரலோடு தவழ்ந்து போனான். இணைமருதத்திற்கு இடையில் உரல் அகப்பட, அம்மருத மரங்கள் முறிந்து வீழும்படி செய்து நளகூபரன், மணிக்கிரீவனது சாபத்தைப் போக்கினான் என்பது புராணம். இதனை,

> ''ஒருங் கொத்த விணை மருதம் உன்னிய வந்தவரை
> ஊரு கரத்தினொடும் உந்திய வெந்திறலோய்''

எனப் பெரியாழ்வாரும்[25]' ''மருதிடை போய் மண்ணளந்த மால்'' எனப் பொய்கையாழ்வாரும்[26] எடுத்துரைக்கின்றனர்.

**4. புள்ளின் வாய் கீண்டது :** கஞ்சனுடைய நண்பனான பகாசுரன் என்பான் கொக்கு வடிவிலே வந்து கண்ணனைக் கொல்ல முயன்றான். ஆனால் கண்ணன் அக்கொக்கினது அலகினை இரண்டாகப் பிளந்து பகாசுரனைக் கொன்றான். இதனை, ''புள்ளிதுவென்று பொதுக் கோவாய் கீண்டிட்ட பிள்ளையை''[27] 'புள்வாய் பிளந்த புனிதா''[28] ''புள்ளின்வாய் கீண்டானை, பொல்லா

---

18. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 8 - 7
19. நா. தி. பிர. திருப்பாவை - 6
20. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 86
21. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 9 - 6
22. நா. தி. பிர. பெரிய திருமொழி - 10 - 7 - 9
23. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 1 - 8
24. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 54
25. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 5
26. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 18
27. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 5 - 4
28. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 1 - 4

அரக்கனை கிள்ளிக் களைந்தானை''[29] ''புள்ளின் வாய் பிளந்து''[30], [31] ''புள்வாய் கீண்டானும்''[32] என்னும் ஆழ்வார்களின் பாசுர அடிகள் தெரிவிக்கின்றன.

5. **கன்றினால் விளவெறிந்தது :** வத்சராசுரன் என்பவன் கன்று வடிவிலே வந்து கண்ணனுக்குத் தீங்கிழைக்க நினைத்தான். கண்ணன் அக்கன்றினைக் கால்கள் பற்றி விளாமரத்து மேலெறிந்து கொன்றான். இதனை, ''விளங்காய் விழக்கன்று வீசிய ஈசனை''[33] ''கனிந்த விளவினுக்குக் கன்றெறிந்த கண்ணபிரான்''[34] ''கனிசாயக் கன்றெறிந்த தோளான்''[35] ''விளங்கனிக்குக் கன்றெறிந்தான்''[36],[37] எனத் திருமங்கை மன்னனும், பொய்கையாரும், பேயாரும், நம்மாழ்வாரும் குறிப்பிடுவதைக் காணலாம்.

6. **குதிரை வடிவாய் வந்த கேசி என்னும் அசுரனை கொன்றது:** கஞ்சனது ஏவலால் குதிரை வடிவில் வந்த கேசி என்பவனது வாயைப் பிளந்து கண்ணன் கொன்ற செய்தியினை, ''மாவாய் பிளந்தானை''[38] என ஆண்டாளும், ''துரங்கம் வாய் கீண்டுகந்தான்''[39] எனத் திருமங்கையாழ்வாரும் ''வெம்மாவாய் கீண்ட — செம்மா கண்ணனே''[40] என நம்மாழ்வாரும் ''மலையால் குடை கவித்து மாவாய் பிளந்து''[41] எனப் பொய்கையாழ்வாரும், முன்னொருநாள் மாவாய் பிளந்த மகன்''[42] எனப் பூதத்தாழ்வாரும் ''துரகூத்தைவாய் பிளந்தான் தொட்டு'' எனப் பேயாழ்வாரும்[43] எடுத்துரைப்பதனைக் காணலாம்.

---

29. நா. தி. பிர. திருப்பாவை - 13
30. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 17 - 19
31. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 7 - 9
32. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 18
33. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 10 - 6
34. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 3 - 5
35. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 87
36. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 68
37. நா. தி. பிர. பெரிய திருவந்தாதி - 54
38. நா. தி. பிர. திருப்பாவை - 8
39. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 2 - 7
40. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 8 - 2
41. நா. தி. பிர. முதலாம் திருவந்தாதி - 27
42. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - 28
43. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 98

**7. குவாலயா பீடம்:** கஞ்சன் தனது பட்டத்து யானையாகிய குவாலயா பீடம் என்னும் யானையை ஏவிக் கண்ணனை கொல்ல முயன்றபோது கண்ணன் அந்த யானையின் கொம்புகளை ஒடித்து அழித்தான். ''வெங்கண் — திண்களிறு அடர்த்தாய்''[44] என்னும் பெருமாள் திருமொழிச் செய்தியும், ''கஞ்சன் விட்ட வெஞ்சினத்த களிறு அடர்த்த காளை'' எனும் பெரிய திருமொழிச் செய்தியும்''[45] ''கவளக்கடாக் களிறு அட்டபிரான்''[46] ''பனைத்தாள் மத களிறு அட்டவன் பாதம் பணிமினோ''[47] என வரும் பாசுர அடிகளும் குவாலயா பீடத்தினைக் கண்ணன் வதைத்த செய்தியைப் பேசுகின்றன.

**8. மண்ணையுண்டது:** குழைந்தையாயிருந்தபோது கண்ணன் மண்ணை வாரியுண்டான். அதனைக் கண்ட யசோதை வெகுண்டு அவன் வாயைத் துடைக்க முயன்றபோது அவன் வாயில் எல்லா உலகங்களையும் கண்டாள். இதனை ''ஆய்ச்சி பாலையுண்டு மண்ணையுண்டு வெண்ணையுண்டு''[48] எனத் திருமழிசைப்பிரானும், ''உன் வாயில் விரும்பியதனை நான் நோக்கி மண்ணெல்லாம் கண்டு''[49] எனப் பெரியாழ்வாரும், ''ஞால முற்றுமுண்டு உமிழ்ந்த நாதன்''[50] எனத் திருமங்கையாழ்வாரும் ''இது நீ படைத்திடத் துண்டுமிழ்ந்த பார்''[51] எனப் பொய்கையாழ்வாரும் பாடியிருக்கக் காணலாம்.

**9. வெண்ணையுண்டது:** கண்ணனது குழந்தைப் பருவக் கள்ளத்தனங்கள் பல. அவற்றில் ஒன்று கோபியர் மெய்ந்நோவத் தயிர் கடைந்து வெண்ணைய் எடுத்து உறியில் வைத்ததனைக் கள்ளத்தனமாக உண்டது. அவ்வாறு அவன் செய்யும் படிறுகளை ஆய்ப்பாடிப் பெண்கள் யசோதையிடம் முறையிடாத நாட்கள் இல்லையெனறே கூறலாம். அம்முறையீட்டினைக் கேட்டுப்

---

44. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 5 - 5
45. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8 - 2
46. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 6 - 5
47. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 1 - 4
48. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 37
49. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 3 - 6
50. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8 - 6
51. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 2

பொறாத யசோதை அவனைத் தாம்பால் அடித்து உரலோடு கட்டி விட்டாள். இதனை,

''ஒளியா வெண்ணெ யுண்டான் என்று உரலோடு
ஆய்ச்சி யொண்கயிற்றால்
விளியா ஆர்க்க ஆப்புண்டு விம்மி அழுதான்''[52, 53]

எனத் திருமங்கையாழ்வார் எடுத்துரைக்கின்றார். மேலும் இச்செய்தியை,

''மத்து உறு கடைவெண்ணெய் களவினில்
உரலிடை யாப்புண்டு,
எத்திறம் உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே''[54]

''காம்பேய் மென்தோளி கடை வெண்ணெயுண்டாயைத்
தாம்பே கொண்டார்த்த தழும்பு''[55]

''கண்ணிநுண் சிறுத்தாம்பினால்
கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்''[56]

என வரும் பாசுர அடிகளால் உணரலாம்.

**10. காளியனை அடக்கியது :** காளியன் என்னும் பெரிய பாம்பொன்று யமுனை நதித்துறையில் தங்கி அங்கு வருவோர்க்குத் தீங்கிழைத்து வந்தது. இதனை ஆயர்கள் கண்ணனிடம் முறையிடக் கண்ணன் யமுனை நதிக்கரையிலுள்ள கடம்ப மரத்தின்மேல் ஏறிச் சரேலெனக் காளியனுடைய படத்தின் உச்சியில் பாய்ந்து நின்று நடனமாடி அவனை அலைக்கழித்தான். பின் காளியனின் மனைவியின் வேண்டுகோளுக்கிரங்கி அருள் செய்து அவனை மிடல் தணித்து வேறிடம் புகச்செய்தான். இச்செய்தியை,

''கடுவிடம் உடைய காளியன் தடத்தைக்
கலக்கிமுன் அலக்கழித்து அவன்தன் படமிறப்
பாய்ந்து பல்மணி சிந்தப் பல்நடம் பயின்றவன்''[57]

என வரும் பெரிய திருமொழியினாலும், ''காளியன் பொய்கை கலங்கப் பாய்ந்திட்டு...மீள அவனுக்கருள் செய்த வித்தகன்''[58] என வரும் பெரியாழ்வார் திருமொழியாலும், ''காளியன் மேல் நடம்

---

52. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 7 - 4
53. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 4 - 3
54. நா. தி. பிர. முதல் திருவாய்மொழி - 1 - 3 - 1
55. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 22
56. நா. தி. பிர. மதிரகவி - 1
57, நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 10 - 3
58. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 9 -7

ஆடிய கூத்தனார்''[59] என வரும் நாச்சியார் திருமொழியினாலும், ''சலங்கலந்த பொய்கைவாய், ஆடராவின் வன்பிடர் நடம்பயின்ற நாதனே''[60] என வரும் திருச்சந்த விருத்தத்தாலும் அறிய முடிகின்றது.

**11. கஞ்சனைக் கொன்றது :** கஞ்சனால் விடுக்கப்பட்ட அசுரர் யாவரையும் அழித்த பின்னர் கண்ணன் கஞ்சனைக் கொல்லும் காலம் வந்தது. அவனை மஞ்சத்திலிருந்து இழுத்துக் கொன்றான் என்பது கதை. கஞ்சனால் தன் மகனுக்கு இன்னல் வருமோ என்று கருதிய யசோதை வருந்துவதாக,

''தீயபுந்திக் கஞ்சன் உன்மேல் சினமுடையன் சோர்வுபார்த்து,
மாயந்தன்னால் வலைப்படுக்கில் வாழகில்லேன் வாசுதேவா''[61]

எனப் பெரியாழ்வார் பேசுகின்றார். அத்தாயின் அச்சம் தீரவும், தீவினைகள் அகலவும் கண்ணன் இறுதியாகக் கஞ்சனைக் கொன்றான். இச்செயல் சீவகசிந்தாமணியில் வரும் கட்டியங் காரனைச் சீவகன் கொன்றதை ஒத்திருப்பதைக் காணலாம், கண்ணன் கஞ்சனைக் கொன்றதை,

''கஞ்சனும், காளியனும், களிறும், மருதும், எருதும்
வஞ்சனையால் மடிய''[62]

''மல்லொடு கஞ்சனுந் துஞ்சவென்ற மணிவண்ணன்''[63]

என வரும் பெரியாழ்வார் திருமொழியும்,

''கதவி கதம் சிறந்த கஞ்சனை முன்காய்ந்து''[64]

என வரும் பூதத்தாழ்வார் திருவந்தாதியும் குறிப்பிடுவதைக் காணலாம்.

**12. ஏழு விடைகளை அடக்கியது :** முல்லை நில மக்களாகிய ஆயர்களது வழக்கங்களுள் ஒன்று ஏறுதழுவுதல். ஓர் ஆயப்பெண்ணை மணக்க விரும்பும் தலைவன் அப்பெண்ணின் தந்தை வளர்த்து வரும் ஏற்றினை அடக்க வேண்டும். ஏறுதழுவுதல் என்பது ஒரு விழாவாக நடத்தப் பெறும். ''ஏறுதழுவிய வீரனையே ஆயகுலப்

---

59. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 4 - 4
60. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 86
61. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 2
62. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 2
63. நா. தி. பிர. பெரிய திருமொழி - 11 - 2 - 3
64. நா. தி. பிர. பூதத்தாழ்வார் - 89ம் பாடல்

பெண்கள் கணவனாக ஏற்றுக் கொள்வர். ஏற்றின் கூரிய கொம்புகளுக்கு அஞ்சும் ஆடவரை ஆயமகள் விரும்பாள்''[65] என்கிறது கலித்தொகை.

நப்பின்னையைக் காதலித்த கண்ணன் அவளது தந்தை வளர்த்து வந்த ஏழு விடைகளை அடக்கி மணந்தான் என்பது கதை. இதனை,

''ஆயர் மடமகள் பின்னைக்காகி அடல்விடை யேழினையும்
வீயப்பொருது வியர்த்து நின்றானை''[66]

''ஆயர் இடிகொள் வெங்குரலின் விடையடர்த்தவன்''[67]

''வாராரும் முலைமடவாள் பின்னைக்காகி
வளை மருப்பில் கடுஞ்சினத்து வன்தாளார்ந்த
காரார்திண் விடையடர்த்து, வதுவையாண்ட கருமுகில்''[68]

''காம்பு அணை தோள் - பின்னைக்கு ஆய் ஏறு உடன்
ஏழ் கொன்றதுவும்''[69]

''வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும்''[70]

என வரும் பாசுர அடிகளால் உணரலாம்.

**13. கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்தது :** ஆண்டு தோறும் ஆயர்கள் இந்திரனுக்குப் பூசை நடத்துவது வழக்கம். ஒரு நாள் பூசையில் இந்திரனுக்காகச் செய்து வைத்த உணவுகளையெல்லாம் கோவர்த்தன மலைக்கு இடச்செய்தான். கண்ணன் தானே அம்மலையாக இருந்து அமுது செய்தான். சினமுற்ற இந்திரன் ஏழு நாள் பெருமழை பெய்வித்து ஆயர்பாடியை அல்லலுறச் செய்தான். அதனைப் பார்த்த கண்ணன் கோவர்த்தன மலையை எடுத்து குடையாகப் பிடித்து மழையினால் வருந்திய ஆயர்களையும் ஆநிரைகளையும் காப்பாற்றினான். கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்த செய்தி நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தில் பலவிடங்களில் பேசப்படுகிறது. பெரியாழ்வார் தமது திருமொழியில் பத்துப் பாடல்கள் மூலம் அதனை எடுத்துரைக்கின்றார்.[71] ''குன்று

---

65. முல்லைக் கலி - 3
66. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 1 - 4
67. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 2 - 3
68. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 4 - 4
69. நா. தி. பிர, திருவாய்மொழி - 2 - 5 - 7
70. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 10 - 2
71. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3-5-1 முதல் 10

குடையா யெடுத்தாய் குணம் போற்றி''[72] என்கின்றார் ஆண்டாள், ''வெற்பு எடுத்து மாரி காத்த மேகவண்ணன்''[73] என்கிறார் திருமழிசையார். இவ்வெற்பெடுத்த செய்தியைப் பாசுரம் ஒன்றில் விளக்கமாகக் கூறுகின்றார் திருமங்கை மன்னன்.[74]

**14. துகில் கவர்ந்தது :** கிருட்டிணன் சிறு வயதில் செய்த பட்டித்தனங்கள் பல. அவற்றுள் ஒன்று கோபியரின் துகில் கவர்ந்தது. அவனது திருவிளையாடல்களினால் துன்பமுற்ற சில பெண்கள் யசோதையிடம் முறையிடுவதனைப் பெரியாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

ஆற்றிலிருந்து விளையாடும் பெண்கள்மீது சேற்றை வாரி எறிந்து அவர்களது ஆடையைக் கவர்ந்து காற்றினும் கடியனாய் ஓடி விட்டான் என்கின்றாள் ஓர் ஆயப்பெண்.[75]

''வண்டமர் பூங்குழலார் துகில் கைக்கொண்டு
விண்தோய் மரத்தானால் இன்று முற்றும்
வேண்டவும் தாரானால் இன்று முற்றும்''

என்கின்றார் பெரியாழ்வார்.[76] தாங்கள் இழந்த துகிலைத் தருமாறு கண்ணனிடம் வேண்டிக் கேட்பதனை ஆண்டாள் பத்துப் பாசுரங்களில் பாடியுள்ளார்.[77]

**15. சிற்றில் சிதைத்தல் :** ஆண் பிள்ளைகளின் சிறுபருவ விளையாட்டுகளில் ஒன்று சிற்றில் சிதைத்தல். சிறுமியர் மெய் நோவ அழகுபட அமைத்த சிறு வீட்டினைக் காலால் இடறிவிட்டு ஓடிப்போவது சிறு பிள்ளைகளின் குறும்புத்தனம். சிற்றில் சிதைத்தல் என்னும் விளையாட்டு பிள்ளைத் தமிழில் ஒரு பருவமாகவே கொண்டாடப்படுகிறது.

''சுடர்த்தொடி கேளாய் தெருவில் நாம்ஆடும்
மணற்சிற்றில் காலிற் சிதையா அடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி''[78]

என்னும் குறிஞ்சிக்கலிப் பாட்டு சிற்றில் சிதைத்த நிகழ்ச்சி பற்றிக்

---

72. நா. தி. பிர. திருப்பாவை - 24
73. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 39
74. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 3 - 4
75. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 10 - 1
76. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 10 - 2
77. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 3 - 1 முதல் 10 வரை
78. குறிஞ்சிக் கலி - 15

கூறுவதைக் காணலாம். கண்ணனும் இதற்கு விலக்கல்லன், ஆயச் சிறுமியர்கள் வீதி பெருக்கிக் கோலமிட்டு மணலாலும், மற்றைப் பொருள்களாலும், மிகச் சிறிய விளையாட்டுச் சிற்றல்களை அமைக் கின்றனர். அவற்றைக் கண்ணன் அழிக்க முயலுகின்றான். தங்கள் சிற்றிலைச் சிதைக்க வேண்டாமென்று அப்பெண்கள் முறையிடு வதனை நாச்சியார் திருமொழி எடுத்துரைக்கின்றது.[79]

16. **ஆநிரை மேய்த்தது :** ஆயர்பாடியிலுள்ள சிறுவரோடு ஆநிரை மேய்க்கச் செல்லுவதில் கண்ணன் பெருவிருப்புடையவன். ஆனால் கன்றுகள் திரியும் கானில் ஏதாவது ஆபத்து ஏற்படுமோ என்று யசோதைக்கு அச்சம். கண்ணனைக் கன்றின்பின் போகவிட்டு யசோதை வருந்துவதனைப் பெரியாழ்வார் பத்துப் பாசுரங்களில் பாடியுள்ளார்.[80]

**கண்ணன் குழலூதியது :** ''குழலினிது யாழினிது என்ப'' எனக் கூறுகின்றார் திருவள்ளுவர். இனிய ஓசையைத் தரக்கூடியது குழலும், யாழும். கண்ணன் வேய்ங்குழலூதியபோது நிற்பனவும், இயங்கு வனவுமாகிய எல்லாம் இசையில் மயங்கி அசைவற்றுக் கிடந்தன. இக்காட்சியினைப் பெரியாழ்வார் ஓர் ஓவியக் கலையாகத் தீட்டிக் காட்டுகின்றார்.[81]

''சிறு விரல்கள் தடவிப் பரிமாறச்
செங்கண் கோடச் செய்யவாய் கொப்பளிப்ப
குறு வெயர்ப் புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழல் கொடூதின போது
பறவையின் கணங்கள் கூடு துறந்து
வந்து சூழ்ந்து படுகாடு கிடப்ப
கறவையின் கணங்கள் கால் பரப்பிட்டுக்
கவிழ்ந் திறங்கிச் செவியாட்ட கில்லாவே''[82]

கோவிந்தன் குழலூதுகின்ற போது நடந்த நிகழ்ச்சிகளில் ஒன்று தந்நிலை மறந்த பறவை, ஆநிரை முதலியவற்றின் சித்திரத்தினை இப்பாடல் மூலம் காணலாம்.

---

79. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1-2-1 முதல் 10 வரை
80. நா. தி. பிர. பெரியாழ்வார் - 3 - 2 - 1 முதல் 10 வரை
81. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 6 - 1 முதல் 10 வரை
82. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 6 - 8

கண்ணன் குழலூதியது போன்று திருத்தொண்டர்களில் ஒருவராகிய ஆனாய நாயனார் குழலூதிய பெருமையைச் சேக்கிழார் பெரிய புராணத்தில் எடுத்துரைக்கக் காணலாம்.[83]

**திருவாய்மொழியில் கூறப்படும் திருமால் பற்றிய செய்திகள் :** கிருட்டிணாவதாரத்தின் பெருமையைப் பலபடப் பேசினாலும் அதன் சிறப்புத் தன்மை கண்ணன் பாரதப் போர் முடித்ததே எனலாம். கண்ணன் ''எல்லாந் தலையான பெருமாள்''. அவன் மாயன். அரசியல் சூழ்ச்சிகளில் கைதேர்ந்தவன். பாட்டிற்கொரு புலவனாகிய பாரதி கண்ணனைப் பல நிலைகளிலே பாடியுள்ளமை அவனது எளியனாம் தன்மையையும், அதே சமயத்தில் உண்மைக்கு உதவும் தன்மை, கொடியோரை வதைப்பதில் கொடியோனாகும் தன்மை இவற்றை எடுத்துணர்த்தும்.

அதியமானைப் பற்றி ஔவையார் கூறும்போது அவன் நண்பர்களுக்கு இனியவனாகவும், பகைவர்களுக்குக் கொடியவனாகவும் இருப்பவன் என்பதை ஓர் உவமை வாயிலாக,

''ஊக்குறு மாக்கள் வெண்கோடு கழாஅலின்
நீர்த்துறை படியும் பெருங்களிறு போல
இனிமை பெரும எம்மனோர்க்கே மற்றதன் துன்னருங்
கடாம்போல் இன்னாய் பெரும ! நின்ஒன்னாதார்க்கே''[84]

என எடுத்துரைத்துள்ளார். கண்ணனும் அத்தன்மையன் என்பதை ஆழ்வார்கள் பலவிடங்களில் எடுத்துக் காட்டியுள்ளனர். கண்ணன் பாரதப் போர் முடித்தது, ''பூ பாரம் நீங்கவே'' எனக் கூறுகின்றார் திருமங்கையாழ்வார்.

''பாரையூரும் பாரந்தீரப் பார்த்தன் தன்
தேரையூரும் தேவ தேவனே''[85]

அத்தை குந்தி தேவியின் மக்களாகிய பஞ்ச பாண்டவரைத் துரியோதனன் வஞ்சகமாய்ச் சூதில் வென்று பன்னிரண்டு ஆண்டு வனவாசமும் ஓராண்டு கரந்துறை வாசமும் முடிந்து வந்த பின்னரும் முன்பு கூறியபடி நாடு கொடாமையின் பாரதப்போர் தொடங்கிற்று. தருமராசன் துரியோதனனிடம் உலூக முனிவனையும், சஞ்சய முனிவனையும் தூதனுப்பிப் பயன்படாமையின் கிருட்டிணனே

83. பெரிய புராணம் - ஆனாய நாயனார் புராணம்- செய்யுள் 30 முதல் 35 வரை
84. புறம் - 94
85. நா. தி. பிர. - பெரிய திருமொழி - 5 - 6 - 9

பாண்டவர்களுக்காகத் தூது சென்று, ஐந்து நாடு கேட்டுப் பின் ஐந்து ஊர் கேட்டுப் பின் ஐந்து இல்லமாவது தாவெனக் கேட்டும் துரியோதனன் மறுத்தமையால் இறுதியாக அடுபோர் வேண்டினான். பாரதப் போர் மூண்டது. இதில் கண்ணனுடைய பங்கினை ஆழ்வார்களின் பாடல்கள் பலவிடங்களில் பேசுகின்றன.

**தூது நடந்தது :** கண்ணன் தூது நடந்த செய்தியினை,

''சீரொன்று தூதாய்த் துரியோதனன் பக்கல்
ஊரொன்று வேண்டிப் பெறாத உரோடத்தால்
பாரொன்றிப் பாரதம் கைசெய்து பார்த்தற்குத்
தேரொன்றை யூர்ந்தாற்கோர் கோல்கொண்டு வா''[86]

எனப் பெரியாழ்வாரும், ''பஞ்ச பாண்டவர்க்காகி வாயுரை தூது சென்றியங்கும் என் துணை''[87] எனத் திருமங்கையாழ்வாரும், ''நாடுடை மன்னர்க்குத் தூது செல் நம்பிக்கு''[88] என நம்மாழ்வாரும் எடுத்துரைத்துள்ளனர்.

**பார்த்தன் தேரூர்ந்தது :** பாரதப் போரில் தமக்கு உதவ வேண்டும் என்று துரியோதனன் கண்ணனைக் கேட்டான். கண்ணன் தான் முன்னதாக விசயனைக் கண்டு வாக்களித்தமையால் அவனுக்கு உதவ இயலாமையைக்கூறி அதற்கு மாறாகத் தான் பாரதப்போரில் படை தொட்டுப் போர் செய்ய மாட்டேன் என உறுதியளித்தான். எனவே படை தொடாத தொழிலாகிய தேரோட்டும் நிலையைத் தான் ஏற்றுக்கொண்டான், இச்செய்தியை,

''பார்படைத்த சுயோதனற்குப்
படையெடேனமரில் எனப்பணித்த கோவை
சீர்படைத்த கேண்மையினால்
தேரூர்தற்கிசைந்தருளும் செங்கண்மால்''

என வில்லிபுத்தூரர் பாரதத்தில் காணலாம்.[89]

''பார்த்தற்குத் தேரொன்றை ஊர்ந்தாற்கு''[90] ''விசயனுக்காய் மணித்தேர்க் கோல்கொள் கைத்தலத்தெந்தை''[91]

---

86. நா. தி. பிர. - பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 5
87. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 3 - 5
88. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 6 - 4
89. வில்லி பாரதம் - உத்தியோக பருவம் - கிருட்டிணன் தூதுச் சுருக்கம் - 1
90. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 5
91. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 9 - 9

படையெல்லாம் ''பாரதத்து விண்ணின் மீதேற விசயன் தேர் ஊர்ந்தான்''[92] ''தேசம் அரிய ஓர் சாரதியாய்ச் சென்று''[93] எனவரும் பாசுர அடிகளும் கண்ணன் தேரூர்ந்த செய்தியினைத் தெரிவிக் கின்றன.

**பாஞ்சாலிக்கு அருள் செய்தது :** மாயச்சூதில் தருமன் பாஞ்சாலி யைத் தோற்றபின் துரியோதனன் தன் தம்பி துச்சாதனனை ஏவிப் பாஞ்சாலியைச் சபை முன் வருவித்துத் துகில் உரிந்தான். அந்நிலையில் பாண்டவர்கள் செயலற்றுத் திகைத்தனர். பாஞ்சாலி கண்ணனைத் துதிக்கக் கண்ணன் அவளது துகில் வளருமாறு அருள் செய்தான். அன்று பாஞ்சாலி விரித்த அருங் கூந்தலைத் துரியோதனன், துச்சாதனன் ஆகியோருடைய குருதி கொண்டு முடிப்பேன் எனச் சூளுரைத்தாள். அச்சூள் பொய்யாதவாறு கண்ணன் பாரதத்தை முடித்துத் துரியோதனன் முதலானாரை மடியும்படி செய்தருளினான். கண்ணன் பாஞ்சாலிக்கு அருள்செய்த திறத்தினை,

''பாண்டவர் தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம்
ஆண்டங்கு நூற்றுவர்தம் பெண்டிர்மேல் வைத்த அப்பன்''[94]
''சந்தம் அல்குழலாள் அலக்கண் நூற்றுவர்தம்
பெண்டிரும் எய்தி, நூல் இழப்ப,
இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானை''[95],

எனவும்,

''பந்தார் விரலாள் பாஞ்சாலி கூந்தல் முடிக்கப் பாரதத்து
கந்தார் களிற்றுக் கழல் மன்னர் கலங்கச்
சங்கம் வாய் வைத்தான்''[96]

எனவும் வரும் பாசுர அடிகள் எடுத்தியம்புவதைக் காணலாம். இந்நிகழ்ச்சியினைப் பாரதியார் ''பாஞ்சாலி சபதம்'' என்னும் குறுங் காப்பியமாக இயற்றியுள்ளமை ஈண்டு நினைவு கூர்தற்குரியது.[97]

**சயத்திரதனை அழித்தல் :** பாரதப் போரில் பதிமூன்றாம் நாள் துரோணரோடு போர் புரிந்து அபிமன்யு பல வீரர்களைத் திறன் அழியச் செய்து இறுதியில் ஆயுதமிழந்து சக்கரவியூகத்தில் சிக்கிக்

92. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 8 - 8
93. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 5 - 9
94. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 6
95. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 3 - 6
96. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 7 - 8
97. பாரதியாரின் பாடல்கள் - பாஞ்சாலி சபதம்

கொண்டான். ஆயுதமற்றவனைக் கொல்லல் நீதியன்று எனப் பலர் திகைத்தனர். அவ்வேளை துரியோதனன் சயத்திரதன் என்பவனை அழைத்து ஆயுதமற்றிருந்த அபிமன்யுவைக் கொல்லச் செய்தான். தன் மகன் அநியாயமாகக் கொலையுண்டதனைக் கேட்ட அருச்சுனன் அன்று கதிரவன் மறையும்முன் சயத்திரதனைக் கொல்வேன், இல்லையெனில் எரிபுகுவேன் எனச் சூளுரைத்தான். மாலைநேரம் நெருங்க உள்ளது. துரியோதனன் சயத்திரதனை வெளிவராமல் மறைத்து வைத்திருந்தான். எரிபுகுமுன் அருச்சுனன் அம்பும், வில்லும் தாங்கிய கோலத்தோடு எரிபுக வேண்டும் என கண்ணன் கேட்டுக் கொண்டான். இந்நிலையில் கண்ணன் தன் சக்கரப் படையினால் சூரியனை மறைத்தான். மாலை வந்துவிட்டது. அருச்சுனன் தீயில் புகப் போகின்றான் என யாவரும் எண்ணினர். இக்காட்சியைக் காணச் சயத்திரதன் விரைந்தோடி வந்தான். திடீரெனக் கண்ணன் தன் சக்கரத்தை நீக்கக் கதிரவன் தென்பட்டான். உடனே நாணேற்றிய வில்லுடன் இருந்த அருச்சுனன் சயத்திரதனைக் கொன்றான்.

இவ்வாறான கண்ணனது மாயச் செயலினை ஆழ்வார்கள் சுட்டிக் காட்டாமலில்லை.

> ''ஆழி கொண்டன்று இரவி மறைப்பச் சயத்திரதன் தலையை
> பாழி லுருளப் படைபொருதவன்''[98]

எனப் பெரியாழ்வாரும்

> ''பார்த்தனுக் கருளிப் பகலவ னொளிகெட பகலே
> ஆழியாலன்றங்கு ஆழியை மறைத்தான்''[99]

எனத் திருமங்கையாழ்வாரும்,

> ''போர்மாள வெங்கதிரோன் மாயப் பொழில்மறைய
> தேராழியால் மறைத்தாரால்''[100]

எனத் திருமழிசையாழ்வாரும் பார்த்தனுக்காகப் பகலவனை மறைத்த தீர்த்தன் செயலைச் சுட்டிக் காட்டியுள்ளனர்.

**சிசுபாலனைக் கொன்றது :** கிருட்டிணனுக்கு அத்தை மகனாகிய சிசுபாலன் சேதி நாட்டரசன். முற்பிறவியில் இரணிய கசிபாக இருந்தவன். வைகுண்ட துவார பாலகனாய் இருந்து துருவாச

---

98. நா. தி. பிர. பெரியாழ்வார் - 4 - 1 - 8
99. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 9 - 8
100. நா. தி. பிர. திருமழிசையாழ்வார் - நான்முகன் திருவந்தாதி - 16

முனிவரால் சபிக்கப்பட்டவன். சிசுபாலன் எப்போதும் கண்ணனை இழித்துக் கூறுவதையே தன் தொழிலாகக் கொண்டவன். கண்ணன் அவற்றைப் பொருட்படுத்தாமல் இருந்து காவங் கருதி அவனை அழித்தான்.

''பலபல நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன் தன்னை
அலவலைமை தவிர்த்த அழகன்''[101]

எனப் பெரியாழ்வார் சிசுபாலனைக் கண்ணன் கொன்றதைக் கூறுகின்றார்.

ஆழ்வார்கள் கூறும் இத்தகு குறிப்புகளால் திருமாலின் அவதாரங்களுள் ஒன்று கிருட்டிணாவதாரம் என்பதுடன் கஞ்சனால் கண்ணனுக்கு இழைத்த தீமைகள் பல இடம் பெறுவதையும் காண முடிகின்றது. பூதனையை அழித்தவன், சகடாசுரனை அழித்தவன், மருத மரத்தைச் சாய்த்தவன், புள்ளின் வாய் கீண்டவன், யானையின் கொம்பொடித்தவன், கன்றினால் விளவெறிந்தவன், கேசிவதம் செய்தவன், மண்ணையுண்டவன், வெண்ணையுண்டவன், காளியனை அடக்கியவன், கஞ்சனைக் கொன்றவன், ஏழு விடைகளை அடக்கியவன், கோவர்த்தன மலையைக் குடையாய்ப் பிடித்தவன், துகில் கவர்ந்தவன், சிற்றில் சிதைத்தவன், ஆநிரை மேய்த்தவன், குழலூதியவன், பூபாரம் நீங்கப் பிறந்தவன் போன்ற செய்திகள் அமையக் காண்கிறோம். இவற்றில் காளியனை அடக்கியது, கஞ்சனைக் கொன்றது, துகில் கவர்ந்தது, சிற்றில் சிதைத்தது, ஆநிரை மேய்த்தது போன்ற செய்திகள் முந்தைய தமிழ் இலக்கியங்களில் இடம் பெறாதவை.

சைவ இலக்கியங்களில் கண்ணன் பற்றிய பாரதக் கதைக் குறிப்புகள் காணப்படவில்லை. சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெற்றதைப் போலவும் இன்னும் சில கூடுதலான பாரதச் செய்திகளும் ஆழ்வார் பாடல்களில் இடம் பெறுகின்றன. கண்ணன் பற்றிய பாரதக் குறிப்புகளாகத் தூது சென்றது, பார்த்தன் தேரூர்ந்தது, பாஞ்சாலிக்கு அருள் செய்தது, சயத்திரதனை அழித்தது, சிசுபாலனைக் கொன்றது போன்ற செய்திகள் அமைகின்றன. ஆழ்வார் பாசுரங்களில் இடம் பெறும் பாஞ்சாலிக்கு அருள் செய்த செய்தியும், சிசுபாலனைக் கொன்ற செய்தியும் முந்தைய கால இலக்கியங்களில் இடம் பெறாதவை.

---

101. நா. தி. பிர. பெரியாழ்வார் - 4 - 3 - 5

பலராமனைப் பற்றிய குறிப்புகள் மிகக் குறைவே என்றாலும் முந்தைய காலங்களைப்போல இருவரும் அண்ணன் தம்பியராகவே காட்டப்படுகின்றனர். முந்தைய கால இலக்கியங்களைப்போல நப்பின்னையோடு சேர்த்துப் பேசப்படுகின்றான். நப்பின்னையின் கணவனாகவே காட்டப்படுகின்றான். கிருட்டிணாவதாரச் செய்திகள் பிற அவதாரக் கருத்துகளுடன் சேர்த்துச் சொல்லப் படுகின்றன. இயற்கைக் காட்சிகளில் உவமமாக அமைகின்ற போக்கு காணப்படவில்லை. முந்தைய கால இலக்கியங்களைப் போலத் திருமாலின் பண்புகள் பூவை நிலைத் துறையில் மன்னர்களுக்கு ஏற்றி உரைக்கும் வழக்கையும் காண முடியவில்லை. திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட தளர்ச்சி என்ற நிலையில் இதைக் கூறினாலும் மன்னனைப் போற்றுகின்ற மரபு மாறி இறைவனையே ஆண்டானாகக் கண்டு போற்றிய நிலை இதற்குக் காரணம் எனலாம்.

சங்க காலத்தில் மன்னனைப் போற்றுவதும், இரத்தலும் காணப் படுகின்றது. பக்திக் காலத்தில் இறைவன் பெரியவன் எனறு கூற வேண்டிய நிலை ஏற்படுகின்றது. ''நாமார்க்கும் குடியெல்லோம்'' எனற உணர்வு மேலோங்குகிறது. சமண பௌத்த மதங்கள் இறைவன் அரியவன், முக்தி எளிதல்ல என்றெல்லாம் கூறும் நிலையில் இறைவன் எளிமையானவன், நம் அருகிலேயே உள்ளவன் என்ற உணர்வுகளை ஏற்படுத்துகின்ற நிலையை ஆழ்வார்களின் பாடல்களில் காணமுடிகின்றது.

திருமாலின் அவதாரமே கண்ணன் என்பது பெறக் காட்டப்படு கின்றான். முந்தைய கால இலக்கியங்களைப் போலவே ''கோவலன்'' என்று குலப்பெயரோடு சுட்டப்படுகின்றான். மேலும் நிறம், ஆடை, ஊர்தி, கொடி, படைகள், மாலை முதலிய குறிப்புகளோடு பேசப்படுகின்றான். காக்கும் தெய்வமாகவும், பரம்பொருளாகவும் காட்டப்படுகின்றான். காலந்தோறும் வளர்ந்துள்ள கண்ணன் பக்தியில் ஆழ்வார்கள் காலத்தில் புதியன புகுதல் என்ற நிலையில் ஒரு வளர்ச்சி நிலையினைக் காண முடிகின்றது. முந்தைய காலங் களைப் போலவே கிருட்டிணாவதாரச் செய்திகளே மிகுதியாகக் காணப்படுகின்றன. ஆழ்வார்கள் திருமாலின் அவதாரங்கள் பத்தினுள் கிருட்டிணாவதாரத்தை மிகுதியாக எடுத்தாண்டுள்ளனர். இறைவன் எளிய ஆயர்பாடி மக்களுள் ஒருவனாகப் பிறந்து ஆயர் பாடியில் வளர்ந்து மக்களோடு கலந்து பழகிய எளியனாந் தன்மையை இவ்வவதாரத்துள் காண்கிறோம். பக்தி இயக்கத்தைப் பரப்ப வந்த ஆழ்வார்கள் இறைவனின் அளப்பரிய வீர தீரச் செயல் களையும் எல்லையற்ற கருணைச் செயல்களையும் குறிப்பிடுவதோடு, மக்களைக் காக்க மக்களுள் ஒருவனாக வருவோன் என்று கூறுவதன்

மூலம் மக்கள் மனத்தில் இறைவன் கருணை செய்பவன், எளிதில் வரக்கூடியவன், ஆபத்துக் காலத்தில் விரைந்து வந்து உதவக் கூடியவன் என்ற நம்பிக்கையைப் புகுத்தினர். அத்தகு இறைவனை அடைய எளிய வழி உண்மை அன்பே என உணர்த்தினர். ஞான விரதங்களால் புலனொடுக்கம் மேற்கொண்டு பெறவேண்டிய நற்பேற்றை, எளிய முறையில் பக்தியால் அடைய முடியும் என்ற கோட்பாட்டை ஆழ்வார்கள் அருளிச் செயல்கள் மூலம் மக்கள் இடையே பரப்பினர். இறைவன் இல்லை என்ற அவைதீக நெறியினரின் கருத்தை முறியடிக்க, இறைவன் உளன், அவன் எங்கும் உளன், அவன் அரியனல்லன், எளியன், உண்மையான பக்தி செலுத்துவோர்க்கு ஓடிவந்து உதவும் இயல்பினன் எனக் கூறிப் பக்தி நெறியை வளர்க்க ஆழ்வார்கள் கிருட்டிணாவதாரத்தை மிகுதி யாகப் பாடினர் எனலாம். சமண, பௌத்த நெறியை எதிர்த்துத் திருமால் பக்தியை வளர்க்க இயக்கம் அமைத்துப் பாடுபட்டவர்கள் ஆழ்வார்கள். ஆதலால், எளியனாய் வந்துதவும் கிருட்டிணாவ தாரத்தை மிகுதியாகக் கையாண்டனர் எனலாம். மொத்தத்தில் கிருட்டிணாவதாரச் செயல்கள் பக்தி நெறியை பரப்பத் துணை நின்றதால் ஆழ்வார்கள் அதனை மிகுதியாகப் பாடினர் எனலாம்.

**இராமாவதாரம்:** திருமாலின் அவதாரங்களில் இராமாவதாரம் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் இரண்டாவது இடத்தினைப் பெற்றுள்ளது. திருமங்கையாழ்வார் இராமாவதாரத்தில் பெரிதும் ஈடுபட்டவராகக் காணப்படுகின்றார். அவரது பாசுரங்களில் சுமார் நூறு இடங்களில் இராமாவதாரச் சிறப்புகள் கூறப்படுகின்றன. அடுத்தபடியாக நம்மாழ்வாரும், பெரியாழ்வாரும் இராமாவதாரச் சிறப்பினை எடுத்துக் கூறுகின்றனர். குலசேகராழ்வார் இராமாவ தாரத்தில் பெரிதும் ஈடுபட்டுத் திருமால் இராமனாய்த் தோன்றிய இராமாயணக் கதையினை இரத்தினச் சுருக்கமாய்ப் பதினோரு பாடல்களில் எடுத்தியம்பியுள்ளார்.[102] அதுவன்றியும் பெரியாழ்வார் போன்று பிள்ளைத் தமிழ்ப் பருவங்களில் ஒன்றாகிய தாலாட்டும் பாடியுள்ளார்.[103] யசோதை கண்ணனைக் குழந்தையாக வளர்க்கும் பெருவாய்ப்பினைப் பெற்றதுபோல் கண்ணனைப் பெற்றெடுத்த தாயாகிய தேவகி பெறவில்லையே என்று குலசேகரர் அங்கலாய்த்துக் கொள்வதையும் பார்க்கலாம். ''என் வாயிடை நிறைய தாலொலித் திடும் திருவினையில்லாத தாயரில் கடையாயின தாயே''[104] என்ற

102. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 10 - 1 முதல் 11 வரை
103. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 1, 9 - 1 முதல் 11வரை
104. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 7 - 1

கூற்றால் அதனை உணரலாம். கைகேயின் சொற்கேட்டு இராமன் காடு சென்றான். இராமனையே உயிராகக் கொண்ட தயரத மன்னன் தன் மகன் காடு சென்றதனால் பெருந்துயருற்றுப் புலம்புவதாகக் குலசேகரர் இயற்றிய பாசுரங்கள் கற்றார் மனத்தைக் கரையவைக்கும் திறமுடையன.[105]

''வா, போகு, வா இன்னம் வந்தொருகால் கண்டு போ மலராள் கூந்தல் வேய் போலும் எழில் தோளிதன் பொருட்டா விடையோன் தன் வில்லைச் செற்றாய். மா போகு நெடுங்கானம் வல்வினையேன் மனமுருக்கும் மகனே! இன்று நீ போக, என்னெஞ்சம் இரு பிளவாய்ப் போகாதே நிற்குமாறே!'' என வரும் பாடலில்[106] தயரதனின் மனநிலையைத் தெற்றெனக் காட்டுவதை உணரலாம்.

**இராமாவதாரத்தின் காரணம்:** திருமாலின் அவதாரங்களில் மிகச்சிறந்ததாகக் கூறப்படுவது இராமாவதாரம். கிருட்டிணாவதார நிலை வேறு, இராமாவதார நிலை வேறு. மன்பதைக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கிய சான்றோனாக இராமன் சித்தரிக்கப் படுகின்றான். ''அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம்'' ஆகிய நால்வகைக் குணங்களும் நிரம்பப் பெற்றவன் இராமன். விசுரவசுவின் மகனான இராவணன் பிரமனைக் குறித்துத் தவமிருந்து, தனக்கு மனிதராலன்றி வேறு யாராலும் இறப்பு வரக்கூடாது என வரம் பெற்ற களிப்பினால் ஆணவம் கொண்டு மூவுலகத்தாரையும் ஆட்டிப் படைத்தான். தேவர்கள் இராவணனது இன்னலைப் பொறுக்காது பிரமனிடம் முறையிட, பிரமனும் தேவர்களும் ஒன்றாகச் சேர்ந்து திருப்பாற்கடலில் அறிதுயில் அமர்ந்திருக்கும் திருமாலிடம் இராவணனால் தாங்கள் துன்புறும் நிலையினை எடுத்துரைத்துத் தங்களைக் காப்பாற்ற வேண்டினர். திருமால், அயோத்தி மாநகரில் தயரதனுக்கு மகனாய்த் தோன்றி இராவணனை அழிக்கின்றேன். நீங்கள் அஞ்ச வேண்டாவென அபயமளித்தார். எனவே திருமால் அயோத்தியில் தயரதன் மதலையாய் அவதாரமெடுத்தார் என்பது இராமாயணம் கூறும் செய்தி.[107] கம்பராமாயணப் பாடல் ஒன்றும் திருமால் தயரதன் மகனாகப் பிறப்பேன் எனக்கூறுவதை எடுத்துரைக்கின்றது.[108] இராமனைப் பற்றியும் அவனது செயற்கரிய செயல்களைப் பற்றியும் ஆழ்வார்கள் குறிப்பிடுவனவற்றைக் காண்போம்.

---

105. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 9 - 1 - 11
106. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 9 - 4
107. கம்பராமாயணம் - திருவவதாரப் படலம் - 6 முதல் 22 வரை
108. கம்பராமாயணம் - பாலகாண்டம் - திருவவதாரப் படலம் - பாடல் - 21

**1. கைகேயியின் சூழ்ச்சியால் இராமன் காடேகல் :** கைகேயி தயரத மன்னனிடம் கேட்ட வரங்கள் இரண்டில் ஒன்று இராமன் காடேக வேண்டியது. அவ்வெம்மொழியைக் கேட்ட தயரதன் தன்னிலை மறந்தவனாக மூர்ச்சையடைந்தான். கைகேயி இராமனை அழைத்து காடேகும்படி மன்னன் பணித்ததாகக் கூறினாள். அதற்கு இராமன் மறுவார்த்தை பேசாமல் ''மன்னவன் பணியன்றாகில் நும்பணி மறுப்பனோ'' எனக் கூறி வனத்திற்கு இன்றே போகின்றேன் என்று விடையும் பெற்றுக் கொண்டான். இதனை,

''மாற்றுத் தாய் சென்று வனம் போகேயென்றிட
ஈற்றுத் தாய் பின்தொடர்ந் தெம்பிரான்! என்றழ
கூற்றுத் தாய் சொல்லக் கொடிய வனம் போன
சீற்ற மிலாதானைப் பாடிப்பற! சீதை மணாளனைப்
பாடிப்பற''[109]

எனப் பெரியாழ்வார் மாற்றுத் தாய் ஏவியதனால் சிறிதும் சீற்ற மிலானாய் இராமன் வனம் போனான் என்று பேசுகின்றார். தான் கைகேயியின் சொற்கேட்டதனால் இராமன் காடு செல்ல நேர்ந்ததை,

''கேகயர் கோன் மகளாய்ப் பெற்ற
அரும் பாவி சொற்கேட்ட அருவினையேன்
என் செய்கேன்! அந்தோ! யானே''[110]

எனத் தயரதன் செயலற்று வருந்துவதைக் குலசேகரர் குறிப்பிடுகின்றார்.

''கலையும், கரியும், பரிமாவும் திரியும் கானம் கடந்துபோய்
சிலையும் கணையும் துணையாகச் சென்றான்.''[111]
''கானமரும் கல்லதர் போய்க் காடுறைந்தான்''[112]

என வரும் திருமங்கையாழ்வாரின் பாசுர அடிகளும் இராமன் காடு சென்றதைத் தெரிவிக்கின்றன.

**தாடகையைக் கொன்றது :** சுகேது என்னும் இயக்கனின் மகள் தாடகை. அவள் ஆயிரம் யானை பலங்கொண்டவள். தாடகையின் மக்களே மானாக வந்த மாரீசனும், இராமனால் கொல்லப்பட்ட சுபாகுவும். அகத்தியர் சாபத்தினால் தன் கணவனை இழந்த தாடகை இராவணனோடு தமக்கை முறை கொண்டு முனிவர்கள் செய்யும் யாகங்களைத் தன் மக்களுடன் அழித்து வந்தாள்.

109. நா. தி. பிர. பெரியாழ்வார் - 3 - 9 - 4
110. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 9 - 5
111. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 5 - 1
112. நா. தி. பிர. பெரிய திருமொழி - 11 - 5 - 1

தாடகையின் கொடுமையினை அழிக்க விசுவாமித்திரர் இராமனைத் தன் அடைக்கலமாகக் கொண்டு வனம் சென்றார். உருத்தெழுந்து வந்த தாடகையை இராமன் கொன்றான். இதனை, ''முன் வில் வலித்து முதுபெண் உயிருண்டான்''[113] எனவும் ''தண் திறலாள் தாடகைதன் உரமுருவச் சிலை வளைத்தாய்''[114] எனவும், ''வந்தெதிர்ந்த தாடகைதன் உரத்தைக்கீறி வருகுருதி பொழிதர வன்கணை ஒன்றேவி மந்திரங்கொள் மறை முனிவன் வேள்வி காத்து''[115] எனவும் வரும் பாசுர அடிகள் உணர்த்துகின்றன.

**வில்லிறுத்தது :** சீதையின் பொருட்டாக மிதிலை நகரில் சனகனால் வைக்கப்பட்டிருந்த வில்லை முறித்து இராமன் சீதையை மணம் புரிந்தான் என்ற செய்தி யாவரும் அறிந்த ஒன்று. இலங்கை சென்று சீதையைக் கண்ட அனுமன் தான் இராமதூதன் என்பதனைத் தெரிவிக்கு முகத்தான், ''நெறிந்த கருங்குழல் மடவாய்! நின்னடியேன் விண்ணப்பம் செறிந்த மணிமுடிச் சனகன் சிலையிறுத்து நினைக்கொணர்ந்தது'' எனக் கூறுகின்றான்.[116]

''காந்தள் முகிழ்விரற் சீதைக்காகிக் கடுஞ்சிலை சென்றிறுக்க''

எனப் பெரியாழ்வாரும்[117] சிலையிறுத்த செய்தியினைத் தெரிவிக்கின்றார்.

**பரதனுக்குப் பாதுகம் கொடுத்தது :** காடேகிய இராமனை நாட்டிற்கு மீண்டும் அழைத்துவரச் சென்ற பரதனைத் தேற்றுவித்து அவனையே அரசாளவும் பணித்தான் இராமன். அவன் பணித்தமைக்கேற்ப, பரதன் தன் அண்ணனின் பாதுகையைத் தனக்களிக்குமாறு வேண்டிப் பெற்றான். அதனையே ஆசனத்தமர்வித்து அரசு புரிந்தான் என்பது இராமாயணம். பரதனுக்கு இராமன் பாதுகை அளித்ததை,

''படியில் குணத்துப் பரத நம்பிக்கு அன்று
அடிநிலை யீந்தானைப் பாடிப்பற''[118]
''மரவடியைத் தம்பிக்கு வான்பணையம் வைத்துப் போய்''[119]

எனவரும் பெரியாழ்வார் பாசுர அடிகளில் காணலாம்.

---

113. நா. தி. பிர. பெரியாழ்வார் - 3 - 9 - 2
114. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 8 - 2
115. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 10 - 2
116. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 – 10 - 1
117. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 1 - 2
118. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 9 - 6
119. நா. தி. பிர. பெரியாழ்வார் - திருமொழி - 4 - 9 - 1

**பரசுராமன் செருக்கழித்தது :** இராமன் சிவதனுசினை ஒடித்ததை அறிந்த பரசுராமன் திருமணமாகிச் சீதையுடன் அயோத்தி செல்லும் இராமனை வழியில் இடைமறித்தான். அப்பொழுது நடைபெற்ற போரில் பரசுராமனது தருக்கையும், தவவலிமையையும் இராமன் அழித்தான். இதனை,

''அருந்தவத்தோன் இடைவிலங்க,
செறிந்த சிலைகொடு தவத்தைச்
சிதைத்ததும் ஓர் அடையாளம்''

எனவரும்[120] பாசுர அடி தெரிவிக்கின்றது. மேலும் பரசுராமனைப் பற்றிய செய்திகளைப் பரசுராம அவதாரம் பற்றிக் கூறும் பகுதியில் காணலாம்.

**சூர்ப்பனகை மூக்கரிந்தமை :** தண்டக வனத்தில் தன்னிச்சையாகத் திரிந்து கொண்டிருந்த இராவணன் தங்கை சூர்ப்பனகை இராமனைக் கண்டாள். அவனது அழகில் மயங்கிய அவள் அரக்கியுருவொழித்து அழகிய பெண்ணாகி இராமனிடம் வந்து தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தினாள். இராமனுடன் சீதையைக் கண்ணுற்ற சூர்ப்பனகை சீதை இருக்கும்வரை இராமன் தன்னை விரும்ப மாட்டான் என எண்ணி மறைந்திருந்து சீதையைக் கவர்ந்து செல்ல முயன்றாள். அருகில் காவலிருந்த இலக்குவன் சூர்ப்பனகையின் மூக்கை அரிந்து விட்டான். இலக்குவன் செய்த இந்தச் செயலை இராமன் மீது ஏற்றிக் கூறுவது மரபாயிற்று. இச்செய்தி,

''வல்லாளன் தோளும், வாளரக்கன் முடியும் தங்கை
பொல்லாத மூக்கும் போக்குவித்தான்''[121]

''தங்கையை மூக்கும் தமையனைத் தலையும்
தடிந்தஎம் தாசரதீ''

''கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்''[122]

எனவரும் பாசுர அடிகளாலும், இன்னும் பல குறிப்புகளாலும் அறியப்படுகின்றது.[123-127]

---

120. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 10 - 1
121. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 2 - 2
122. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 7 - 1
123. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 10 - 4
124. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 5 - 5
125. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 9 - 4
126. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 5 - 5
127. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 3 - 6

**மராமரம் ஏழினைத் துளைத்தது :** வாலியைக் கொல்லும் ஆற்றல் உடையனோ இராமன் என ஐயுற்ற சுக்ரீவனுக்கு இராமனது ஆற்றலை அறியும்படி அனுமான் செய்த உபாயம் மிகப்பெரியன வாயும் பலத்தனவாயும் உள்ள ஏழு மராமரங்களையும் ஒரே அம்பினால் எய்யச் செய்தது. இராமன் மராமரங்களை ஒரே அம்பினால் எய்த செய்தி இலக்கியங்களில் பலவிடங்களில் பேசப் படுகின்றது.

''மராமரம் ஏழும் தம் வாளியால் எய்த இராமர் சும்மா— மேலும் எய்யாரோ'' என ஒரு பிரிவுத் துயருற்ற தலைவி கூறுவதாகப் பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் தென்றல்விடு தூதில் எடுத்துரைக்கின்றார். மராமரங்களை இராமன் ஒரே அம்பினால் எய்த செய்தியை,

''மரம் பொதச் சரம்துரந்து, வாலிவீழ முன்ஓர்நாள்
உரம்பொதச் சரம்துரந்த உம்பர்ஆளி எம்பிரான்''[128]

''தேம்பணைய சோலை மராமர மேழ் எய்ததுவும்''[129]

எனவும், இன்னும் சிலவிடங்களிலும் நாலாயிர திவ்வியப் பிரபந்த அடிகள் தெரிவிக்கின்றன.[130-132]

**வாலியைக் கொன்றது :** கிட்கிந்தையின் குரங்கரசனான வாலி தன் தம்பியாகிய சுக்கிரீவனை அடித்துத் துரத்தி அவனுடைய மனைவி உருமையையும் கவர்ந்து கொண்டான். வாலிக்கு அஞ்சிய சுக்கிரீவன் (மதங்க முனிவர் ஆசிரமம்) குருசியமுக மலைப்பக்கம் தன் நண்பர்களோடு தங்கியிருந்தான். சீதையைத் தேடிவந்த இராம இலக்குவரைக் கண்டு அவர்கள் அஞ்சியோடினர். அனுமன் ஒரு மாணவ வடிவங் கொண்டு இராமனுடன் உரையாடி சுக்கிரீவ்னுக்கும் இராமனுக்கும் நட்பு ஏற்படச் செய்தான். சுக்கிரீவன் வாலி தனக்கிழைத்த தீங்கைக் கூறி அபயம் வேண்டினான். சுக்கிரீவனது மனைவியை வாலி வவ்விக் கொண்டான் என்பதைக் கேட்ட இராமன் தானும் அவ்வாறான இன்னலுக்கு ஆட்பட்டிருந் ததால் வாலியைக் கொன்று உனக்கு முடி சூட்டுவேன் எனச்

---

128. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 73
129. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 5 - 7
130. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 10 - 5
131. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 5 - 5
132. நா. தி. பிர. பெரிய திருமொழி - 11 - 2 - 4

சுக்கிரீவனுக்கு உறுதி கூறினான். அதனை நிறைவேற்றும் பொருட்டு வாலியைக் கொன்றான். இச்செய்தி,

> ''வாலி மாவலத்தொரு வனதுடல் கெட
> வரிசிலை வளைவித்து''[133]

> ''உருத்தெழு வாலிமார்பி லொருகணை யுருவவோட்டி
> கருத்துடைத் தம்பிக்கின்பக் கதிர்முடி யரசளித்தாய்''[134]

என வரும் பாசுர அடிகளால் உணரப்படும்.

**அனுமனைத் தூதனுப்பியது :** இராமன் சுக்கிரீவனுடன் நட்புக் கொண்டபின் கார்காலம் கழிந்து வானர வீரர் பலரைத் திக்குகள் பலவற்றிலும் சீதையைத் தேட அனுப்பினர். இறுதியாக அனுப் பப்பட்ட தூதனே அனுமன். அனுமன் மீது பெரும் நம்பிக்கை கொண்ட இராமன் அவனிடம் தன் கணையாழியை அடையாள மாகக் கொடுத்தனுப்பினான். இலங்கையில் அசோக வனத்தில் சிறையிருந்த சீதையைக் கண்டு அனுமன் இராமன் தந்த அடையாளங் களால் தான் இராம தூதனே எனத் தெளிவித்துச் சீதைக்கு ஆறுதல் கூறினான். அதனால் தன்னையே அழித்துக் கொள்ளவிருந்த சீதை துயர் நீங்கி உயிருடன் ஆற்றியிருந்தாள். சீதைக்கு அனுமன் தெரிவித்த அடையாளங்கள் பற்றிப் பெரியாழ்வார் எடுத்துரைப் பதைக் காணலாம்.[135] ''முன்னோர் தூது வானரத்தின் மொழிந்து'' எனவரும் அடி[136] அனுமன் தூதினை அறிவிக்கின்றது.

**சேது கட்டியது :** அனுமன் மூலம் சீதையிருக்கும் இடமறிந்த இராமன் இலங்கையின் மீது படையெடுத்தான். இராமேச்சுவரத்தி னின்று கடல் மீது அணை கட்டிக் கடலைக் கடந்தான். குரங்குகள் மலைகளைக் கொண்டுவந்து கடலில் சேர்த்தன.

> ''குரக்கினத்தாலே குறைகடல் தன்னை
> நெருங்கி யணைகட்டி''[137]

> ''குரக்கினப் படைகொடு குரைகடலின் மீதுபோய்''[138]

---

133. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 2 - 1
134. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 6 - 3
135. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி 3 - 10 - 1 முதல் 10 வரை
136. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 2 - 3
137. நா. தி. பிர. பெரியாழ்வார் - 1 - 6 - 8
138. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 32

''மல்லை மாமுந்நீ ரதர்பட,
மலையா லணைசெய்து மகிழ்ந்தவன்''139

''இது—இலங்கை யீடழியக் கட்டிய சேது''140

என வரும் குறிப்புகள் சேது அணை கட்டிய செய்தியினைத் தெரிவிக்கின்றன. சேது கட்டியபோது சிறு அணிலும் இராமனுக்கு உதவி செய்தது என்பதை,

''குரங்குகள் மலையைத் தூக்கக்
குளித்துத்தாம் புரண்டிட்டோடி
தரங்கநீ ரடைக்கலுற்ற சலமிலா அணிலும் போலேன்''141

எனத் தொண்டரடிப் பொடியாழ்வார் கூறுகின்றார்.

**இலங்கை அழிவும், இராவண வதமும் :** இறுதியில் இராமன் அங்கதனைத் தூதாக அனுப்பிச் சீதையை விட்டுவிடும்படிக் கேட்டான். இராவணன் மறுக்கவே போர் ஏற்பட்டது. போரில் அரக்க வீரர்கள் மாண்டனர். இராமன் இறுதியில் இராவணனைக் கொன்றான். இராமன் இராவணனைக் கொன்றதும் அவன் தம்பி வீடணனுக்கு அரசளித்ததும் ஆழ்வார்களால் பெரிதும் பேசப்படுகின்றது.

''இராக்கதர்வாழ் இலங்கை
பாழாளாகப் படைபொருதான்''142

''வல்லாள் இலங்கை மலங்கச் சரந்துரந்த வில்லாளன்''143

''இலங்கையர் மன்னன் மணிமுடி பத்துமுடன் வீழ''144

''விபீடணநம்பிக்கு என்னிலங்கு
நாமத்தளவும் அரசு என்ற''145

எனவும், இது போன்று இன்னும் அமையும் குறிப்புகளாலும்146-151 இராமன் இலங்கையை அழித்து இராவணனைக் கொன்ற செய்தி

139. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 3 - 6
140. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 28
141. நா. தி. பிர. திருமாலை - 27
142. நா. தி. பிர. திருப்பல்லாண்டு - 3
143. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 1 - 10
144. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 8
145. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 9
146. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 9 - 10
147. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 8
148. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 7
149. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 8 - 5
150. நா. தி. பிர. திருப்பாவை - 24
151. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 3 - 3

யைக் கூறக் காணலாம். இதுவன்றியும் திருமழிசையாழ்வாரும்[152], நம்மாழ்வாரும்[153], தொண்டரடிப்பொடியாழ்வாரும்[154], திருப்பாணாழ்வாரும்,[155] திருமங்கையாழ்வாரும்[156] இராமன் இலங்கையை அழித்ததைப் பற்பல இடங்களில் தெரிவிக்கின்றனர்.

**திருவரங்கத்தில் திருமால் தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டது :** இலங்கையை வென்று வீடணற்களித்து. சீதையுடன் திரும்புங்கால் வீடணனின் வேண்டுகோளுக்கிணங்கத் தென்திசை நோக்கித் திருவரங்கத்தில் பள்ளி கொண்ட நிலையில் உள்ளார் என்பது நம்பிக்கை. இக்கருத்தினை,

''விபீடணற்காய் மதிலிலங்கைத் திசை நோக்கி
மலர்க்கண் வைத்த என்னுடைய திருவரங்கற்கு''[157]

எனப் பெரியாழ்வாரும்,

''அன்பொடு தென்திசை நோக்கிப்
பள்ளி கொள்ளும் அணியரங்கன்''[158]

எனக் குலசேகரரும் குறிப்பிடுவதைக் காணலாம்.

வைணவக் கோவில்களிலே மிகச்சிறந்தது திருவரங்கமாகும். சைவர்களுக்குச் சிதம்பரம் எப்படிப்பட்டதோ, வைணவர்களுக்குத் திருவரங்கம் அப்படிப்பட்டதாகும். தொண்டரடிப்பொடியாழ்வார் திருவரங்கத் தொண்டுக்கே தம்மை அர்ப்பணித்து ''இச்சுவை தவிர யான் போய் இந்திரலோகம் ஆளும் அச்சுவை பெறினும் வேண்டேன்'' என்று பாடியவர். இத்திருவரங்கம் கோயில் பெரிய கோவில், பூலோக வைகுந்தம் என்றெல்லாம் பலவாறாகச் சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

ஆழ்வார்களுடைய பாசுரங்களில் இலங்கையைப் பற்றிய குறிப்புகளும் வருகின்றன. அவை யாவும் இராமாயணக் கதைத் தொடர்பானவை. தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கத்தானைப் பாடிய திருமாலையில் வரும் ஒரு பாசுரம் இக்கருத்தை விளக்குவது போல அமைகின்றது. ஆழ்வார் பாசுரங்களில் காணப்படும் இராம காதை பற்றிய செய்திகளாக, இராமாவதாரத்தின் காரணம்,

152. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 32, 33, 91
153. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 6 - 9, 7 - 2 - 8
154. நா. தி. பிர. திருமாலை - 7
155. நா. தி. பிர. அமலனாதிபிரான் - 4
156. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 2 - 1, 1 - 4 - 3, 1 - 10 - 2
157. நா. தி. பிர. பெரியாழ்வார் - 4 - 9 - 2
158. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 1 - 10

இராமன் தோன்றிய கதை, கைகேயியின் சூழ்ச்சியால் இராமன் காடேகல், தாடகையைக் கொன்றது, வில்லிறுத்தது, பரதனுக்குப் பாதுகம் கொடுத்தது, பரசுராமனது செருக்கழித்தது, சூர்ப்பனகை மூக்கரிந்தது, மராமரம் ஏழினைத் துளைத்தது, வாலியைக் கொன்றது, அனுமனைத் தூதனுப்பியது, சேது கட்டியது, இலங்கையை அழித்தது, இராவண வதம் செய்தது, திருவரங்கத்தில் தென்திசை நோக்கிப் பள்ளிகொண்டது போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன. அவதாரப் பெயரோடு இராமாவதாரம் விளக்கம் பெறுகின்றது.

சங்க நூல்களில் இராமாயணத்தைப் பற்றிய செய்திகளும், கதைகளும், குறிப்புகளும் விரவிக் காணப்படுகின்றன. சங்க காலப் புலவர்கள் தாம் பாடத் தலைப்பட்ட செய்திகளையும், கருத்து களையும் தகவுற விளக்குவதற்கு இராமாயண நிகழ்ச்சிகளையும், கதைகளையும் ஆங்காங்கே அழகிய இனிய உவமைகளாக எடுத்துக் காட்டி விளக்கிப் பாடியுள்ளனர். எல்லோருக்கும் தெளிவுறத் தெரிந்தனவும், யாவரும் சுவைத்து உவந்து விரும்புவனவும் ஆகிய செய்திகளே இலக்கியங்களில் உவமைகளாகப் புலவர்களால் கையாளப்படும். இவ்வடிப்படையில் ஆராய்ந்தால், மிகப் பழங் காலத்திலேயே இராமாயண வரலாறு தமிழ்நாட்டில் நன்கினிது பரவியிருந்தமை புலனாகின்றது. சங்க இலக்கியச் சான்றுகள் இவ்வுண்மையை விளக்கும். சங்க இலக்கியங்களில் இரு இடங்களில் இராமாவதாரச் செய்திகள் உவமைகளாகக் கூறப்படுகின்றன. இவற்றால் சங்க காலத்தில் இராமாவதாரம் பற்றிய பல்வேறு கதைகள் தமிழகத்தில் செவிவழிக் கதைகளாக உலவி வந்தமை புலனாகின்றது.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் அறத்தின் நாயகனாக இராமன் காட்டப்படுகின்றான். இராமன் காடு சென்றது, அகலிகை சாபம் தீர்த்தது போன்ற செய்திகள் இடம் பெறுகின்றன. பூவை நிலைத் துறையில் மன்னர்களுக்கு இராம காதைச் செய்திகள் ஏற்றி உரைக்கப்பட்டுள்ளன.

சைவ இலக்கியங்களில் முந்தைய இருகாலகட்ட இலக்கியங்களை விடவும் மிகுதியான செய்திகள் இடம் பெற்றுள்ளன. சைவ இலக்கியங்களில் இராவண வதம் பற்றிய செய்தியே மிகுதியும் கூறப் படுகின்றது. இராமாயணக் கருத்துகள் சிலவும் இடம் பெறுகின்றன. சைவ இலக்கியங்களில் சிவனது பெருமை பேசும் இடங்களில் இராமாவதாரக் கருத்துகள் அமைந்தாலும் திருமாலின் அவதாரமே இராமன் என்பது வலியுறுத்தப்படுகின்றது. பேராற்றலும், பெருவலியும் தோன்றப் பேசப்படுகின்றான்.

ஆழ்வார் பாசுரங்களில் திருமாலின் பெருங் கருணைத் திறமும், பேராற்றலும் விளங்க இராமாயணச் செய்திகள் அமைகின்றன. முந்தைய காலங்களை விடவும் ஆழ்வார்களின் காலத்தில் இராமா வதாரச் செயல்கள் எண்ணிக்கையில் மிகுந்துள்ளன. இராமனின் நற்பண்புகள் மக்கள் மனத்தைப் பெரிதும் ஈர்த்திருந்தமையை இதனால் உணரலாம். இராமகாதை தமிழகத்தில் வாழும் எல்லோர் இதயங்களிலும் இடம் பெற்றிருந்தது. இராம காதையைக் கற்பது கலையாயது என்று கருதப்பெற்று வந்தது. ''அறம் வெல்லும் பாவம் தோற்கும்'' என்ற நீதியும், தன்னைச் சரணடைந்தவர் களைப் பேணுதலையே தன் சிறந்த தருமமாகக் கொண்டு இராமன் வாழ்ந்து காட்டியதையும் திருமால் மக்களை உய்விப்பதற்காக மேற்கொண்ட அவதார கோலமாகவும் கண்டு அவன் பெருங் கருணைத் திறத்தை வியத்தலும் ஆழ்வார்களின் சிறப்பாக உள்ளது. இதனை நம்மாழ்வார் வாக்கால் அறியலாம்.

''கற்பார் இராம பிரானை அல்லால் மற்றும் கற்பரோ''

என்று இராம காதையைப் படிக்க வேண்டும். அதையன்றி வேறொன்றைப் படிப்பரோ ! என்கின்றார் நம்மாழ்வார்.

பக்தி உணர்வைப் பெருக்கவும், இறையுணர்வுக் கோட்பாட்டை வளர்க்கவும் இராமகாதையைப் படிக்கும் நிலையினை மக்கள் உள்ளத்தில் வேரூன்றச் செய்தனர் ஆழ்வார்கள் எனலாம். சமண, பௌத்த மதங்களை ஒடுக்குதற்கு உரிய கருவியாகவும் இச்செய் திகளை ஆழ்வார்கள் மிகுதியும் பாடினர் எனலாம்.

**வாமனாவதாரம் :** மாவலி என்னும் அசுரன் தேவலோகத் தையும், பூவுலகையும் கவர்ந்து தானே ஆளத் தொடங்கினான். அவனது கொடுமைகளைத் தாங்காத தேவர்கள் திருமாலிடம் முறையிட்டனர். திருமாலும் மாவலியினால் ஏற்படும் துன்பத்தைத் தீர்ப்பதாக உறுதியளித்தான் என்பது ''தீயவன் வெந்தொழில் தீரென நின்றார் நாயகனுமது செய்ய நயந்தான்''[159] எனும் கம்பராமாயணப் பாடலில் பேசப்படுகின்றது.

திருமால் காசிப முனிவர்க்குக் குறள் வடிவாய்ப் பிறந்தான். மாவலி ஒரு வேள்வி தொடங்கி அந்தணர்க்கு வேண்டியதைத் தானம் செய்யத் துணிந்தான். திருமால் அழகான குறள் வடிவத்தோடு சென்று மாவலியை மூன்றடி மண் தருமாறு வேண்டினான். வந்திருப்பவன் திருமாலேயாகையால் அசுர குருவாகிய சுக்கிரன்

159. கம்பராமாயணம் - பாலகாண்டம் - செய்யுள் - 487

வாமனனுக்கு வரம் தரவேண்டாமென மறுத்தான். அதைப் பொருட்படுத்தாமல் மாவலி திருமால் வேண்டிய மூன்றடியைத் தருவதாக வாக்களித்தான். மாயனாகிய திருமால் பேருருவங் கொண்டு ஒரு காலைக் கீழ் உலகிலும், மற்றொரு காலைத் தேவர் உலகத்திலும் ஊன்றி மூன்றாவது அடி தருமாறு வேண்டி மாவலியின் தலையில் காலை ஊன்றி அவன் செருக்கழித்தான்.

ஆழ்வார்களின் பாசுரங்களில் பெரிதும் பேசப்படுகின்ற நிலையில் வாமன அவதாரம் மூன்றாவது இடத்தினைப் பெற்றுள்ளதைப் பார்க்கலாம்.

''வானவர்தம் துயர்தீர வந்துதோன்றி
மாணுருவாய் மூவடி மாவலியை வேண்டித்
தானமர ஏழுலகும் அளந்த வென்றித்
தனிமுதல் சக்கரப் படையான்''[160]

எனத் திருமங்கையாழ்வார் வாமனாவதாரத்தின் காரணத்தைக் கூறுகின்றார்.

தனக்கு மாவலி கரக நீர் ஊற்றித் தானம் செய்யும்போது வண்டுருக் கொண்டு அந்நீர் வராமல் சுக்கிரன் தடுத்தான். திருமால் துரும்பால் கீறி சுக்கிரன் கண்ணைப் போக்கினான் என்பது புராணம். இன்றும் மக்களில் சூழ்ச்சியில் மிக்கவரையும், ஒரு கண்ணில் லாதவரையும் சுக்கிராச்சாரியார் என வழங்கும் நிலை நோக்கத் தக்கது. இச்செய்தி,

''மிக்க பெரும்புகழ் மாவலி வேள்வியில்
தக்கதி தன்றென்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய, சக்கரக் கையன்''[161]

எனப் பெரியாழ்வார் பாடலால் அறியப்படுகின்றது.

திருமால் வாமனனாகத் தோன்றிய கதையினை, ''மூவுலகு மீரடியால் முறைநிரம்பா வகைமுடியத் தாவிய சேவடி''[162] என இளங்கோவடிகளும்,

''நனந்தலை யுலகம் வளைஇநேமியொடு வலம்புரி பொறித்த
மாதாங்கு தடக்கை நீர்செல நிமிர்ந்த மாஅல்போல''[163]

எனச் சங்க கால நப்பூதனாரும் கூறுவதைக் காணலாம்.

---

160. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 8 - 6
161. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 7
162. சிலம்பு, ஆய்ச்சியர் குரவை - பாடல் - 35
163. முல்லைப் பாட்டு - 1 - 3

''மாவலி வேள்வியில் மாணஉருவாய்ச் சென்று
மூவடி தாஎன்று இரந்தஇம் மண்ணினை
ஓரடி இட்டு இரண்டாம் அடிதன்னிலே
தாவடி இட்டானால், இன்று முற்றும்
தரணி யளந்தானால், இன்று முற்றும்''[164]

என வரும் பாசுரத்தால் பெரியாழ்வார் திருமால் ஈரடியால் மூவுலகும் அளந்த தன்மையினைக் குறிக்கின்றார். ''ஓங்கி உலகளந்த உத்தமன்''[165] ''அன்று பாரளந்த பாதம்''[166] என வரும் பாசுர அடிகளும், இன்னும் இவைபோல அமையும் குறிப்புகளும்[167-169] வாமன அவதாரச் செய்தியைக் கூறுவதைக் காணலாம். திருமால் மாவலியிடம் மூவடி மண் கேட்டு, ஓரடியைப் பாதலத்தும், ஓரடியை விண்ணிடத்தும் போக்கியபோது பிரமன் கங்கை நீரை ஊற்றிக் கால்களைக் கழுவினான் என்ற செய்தியை,

''அங்கை யாலடி மூன்றுநீர் ஏற்றயன் அலர்கொடு தொழுதேத்த
கங்கை போதரக் கால் நிமிர்த்தருளிய கண்ணன்''[170]

எனப் பெரியதிருமொழி கூறுகின்றது. திருமங்கையாழ்வார் தமது பாசுரங்கள் பலவற்றில் வாமனனைப் பற்றிக் குறிப்பிடுவதைக் காணலாம். முதலாழ்வார்களாகிய பொய்கையார், பூதத்தார், பேயார் மூவரும் தாம் பாடிய பாசுரங்களில் பல இடங்களில் வாமனாவதாரத்தைப் பற்றிக் குறிப்பிடுகின்றனர்.[171-173] திருமழிசையாழ்வார் தாம் பாடிய நான்முகன் திருவந்தாதியில் திருமால் உலகத்தை காலில் அளந்த தளர்ச்சியினால் போலும் பேசாமல் படுத்துறங்குகின்றான் என்கிறார். அவர்,

---

164. நா. தி. பிர. பெரியாழ்வார் - 2 - 10 - 7
165. நா. தி. பிர. திருப்பாவை - 24
166. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 66
167. நா. தி. பிர. திருமாலை - 35
168. நா. தி. பிர. திருப்பாணாழ்வார் - அமலனாதிபிரான் - 2
169. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 4 - 1
170. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 2 - 6
171. நா. தி. பிர. பொய்கை இயற்பா - 2, 3, 9, 14, 17, 20, 21, 36
172. நா. தி. பிர. பூதத்தார் - 2ம் திருவந்தாதி - 5, 20, 30, 33, 36, 47, 49, 87
173. நா. தி. பிர. பேயார் - 4, 5, 6, 8, 13, 36, 39, 41, 47. 52, 63

''தாளால் உலகம் அளந்த அசைவேகொல்?
வாளா கிடந்தருளும் வாய்திறவான் - நீள்ஓதம்
வந்தலைக்கும் மாமயிலை மாவல்லிக் கேணியான்
ஐந்தலைவாய் நாயகத்தணை''[174]

எனக் கேட்கின்றதைப் பார்க்கலாம்.

நம்மாழ்வார் வாமனனைப் பற்றித் தமது திருவிருத்தத்தில் பல பாசுரங்களில் எடுத்துரைக்கின்றார்.[175] மேலும் திருமால் ஓரடியால் மண் முழுதுமாப்படுத்தி ஓரடியை விண்ணில் பிரமன் உலகம்வரை செலுத்தித் தேவர்கள் வழிபட நிறுவினான். அவ்வாறு செய்யும் ஆற்றல் நெடியோனாகிய திருமாலுக்கு அல்லால் வேறு யாருக்கு இருக்கக்கூடும் என வியந்து கூறுகின்றார். ''நெடியோர்க்கு அல்லது அடியதோ உலகே''[176], மற்றும் பெரிய திருவந்தாதிப் பாசுரங் களிலும்[177], சிறிய திருமடலில் ''ஆரால் இவ்வையம் அடி அளப் புண்டது''[178] என வரும் அடியும் வாமனாவதாரம் பற்றிக் குறிப் பிடுவதைக் காணலாம். திருமால் வாமனனாக அவதரித்து மாவலியைக் கொன்று உலகைக் காத்த செய்தி ஆழ்வார்கள் பலருடைய மனத்தையும் கவர்ந்தமை தெற்றெனப் புலனாகின்றது. இவ்வாமனாவதாரமும் கொடியவர்களை அழித்து நல்லோரைக் காப்பாற்ற எடுத்த ஒன்று என்பது புலப்படுகின்றது.

ஆழ்வார்களது பாசுரங்களில் காணப்படும் வாமனாவதாரச் செய்திகளைக் காணும்போது அவதாரத்தின் காரணமும், திருமால் துரும்பால் கீறிச் சுக்கிரன் கண்ணைப் போக்கிய செய்தியும், ஈரடியால் மூவுலகும் அளந்த செய்தியும் சொல்லப்படுகின்றது காணலாம். ஆற்றல் வாய்ந்த நெடியோனாகவும், திருமாலின் அவதாரமாகவும் வாமனன் காட்டப்படுகின்றான்.

சங்க காலத்தில் திருமாலின் பரத்துவத்தைக் காட்டும் இருநிலங் கடந்த செய்தி காட்டப்படுகின்றது. வாமனாவதாரப் புகழோடு அனைவர்க்கும் முதல்வனாகத் திருமால் சுட்டப்படுகின்றான். இங்கு இயற்கை வர்ணனைகளில் இவ்வவதாரக் காட்சி தெளிவுறுத்தப் படுகின்றது. சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருவடிப்

174. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 35
175. நா. தி. பிர. திருவிருத்தம் - 35, 58, 61, 64, 68, 69, 76, 80. 85, 90
176. நா. தி. பிர. நம்மாழ்வார் - திருவாசிரியம் - 5
177. நா. தி. பிர. பெரிய திருவந்தாதி - 8, 15, 20, 27, 42
178. நா. தி. பிர. சிறிய திருமடல் - 11 - 5

பேராற்றல் தோன்ற உலகளந்த மாண்பு விரிவாகப் போற்றப்படு கின்ற நிலையில் உலகளந்த செய்தியும், நின்ற வண்ணமும், திருவடிச் சிறப்பும் விரிவாகப் பேசப்படுகின்றது. இவ்வவதாரப் பெருமைகள் மன்னர்களுக்கு ஏற்றி உரைக்கப்பட்டுள்ளது. பேருருவும், பேராற் றலும், பரம்பொருள் தன்மையும், தீமையை அழித்து அறத்தைக் காக்கும் பண்பும் தோன்றப் போற்றப்படுகின்றான்.

சைவ இலக்கியங்களில் வாமன அவ்தாரம் மிகவும் விளக்கமாக அமையாவிட்டாலும் மாவலியிடம் நீரேற்றுத் தன் ஈரடியால் மூவுலகும் அளந்த செய்தி தோன்றத் திருவிக்கிரமனாகிய வரலாற்றுக் குறிப்பு அமைகின்றது. முந்தைய இருகால கட்ட இலக்கியங்களைக் காட்டிலும் அதிக அளவில் இவ்வவதாரக் குறிப்புகள் சைவ இலக் கியங்களில் அமைகின்றன. சிவனது பெருமை கூறப்படுமிடங்களிலே இவ்வவதாரக் குறிப்புகள் அமைந்தாலும் திருமாலின் பேராற்றலும் தீமையை அழிக்கும் பண்பும் தோன்ற முந்தைய காலங்களைப் போலவே பேசப்படுகின்றான்.

சைவ இலக்கியங்களில் காணப்படாததுபோல ஆழ்வார் பாசுரங் களிலும் இவ்வவதாரக் கருத்துக்கள் மன்னர்கள்மீது ஏற்றி உரைக்கப் படவில்லை.

சங்க காலத் தமிழகத்திலிருந்து தொடர்ந்து வாமனாவதார நிகழ்ச்சி சொல்லப்பட்டு வருகின்றது. ஆட்சி உரிமையுள்ள அரசர்கள் பலம் வாய்ந்தவர்களாக இருந்து தம்மை எதிர்த்தோரை அழிப்பதில் வல்லவர்களாகத் திகழலாம். அத்தகைய வல்லாண்மை படைத்த மன்னர்களையும் அல்லது ஆளும் மன்னர்களையும் எளிய மனிதர்களின் முயற்சியால் புறங்காண முடியாது. ஆனால் திருமாலின் அருள் இருக்குமானால் புறங்காண முடியும் என்ற குறிப்புப் பொருளை இத்தகைய அவதாரங்கள் விளக்குகின்றனவோ என எண்ண இடமளிக்கிறது. மன்னனைவிட வல்லமை வாய்ந்த சக்தி மண்ணுலகில் இல்லை என நம்பிக்கொண்டிருந்த மக்கள் உள்ளத்தில் மன்னர்களையும் தோல்வியுறச் செய்யும் வல்லமை திருமால் என்ற கடவுளுக்கு உண்டு என்ற நம்பிக்கையை இவ்வவ தாரச் செய்திகள் தோற்றுவிக்கின்றன எனலாம்.

**நரசிங்காவதாரம்:** முன்னொரு காலத்தில் இரணியன் என்பான் வேதத்தில் சொல்லப்பட்டுள்ள தவங்களையெல்லாம் செய்து தான் நினைத்த வரங்களை யெல்லாம் பிரமதேவனிடம் பெற்றான். அவன் யாவராலும் வெல்ல முடியாத ஆற்றல் மிக்கவனானான். மனித ராலும், தேவராலும், விலங்குகளாலும், பறவைகளாலும், உலகத் திலுள்ள மற்றப் பிராணிகளாலும் அவன் அழிவுறான். மண்ணிலும்

மடியான், வானிலும் அழியான், நீரிலும் சாகான், நெருப்பிலும் வேகான். காற்றிலும் இறவான், எவரது சாபத்தாலும் அவனுக் கழிவில்லை. இரவிலும் இறப்பில்லை, பகலிலும் அழிவில்லை, இயமனாலும் அவன் அசைக்கப்பட மாட்டான்.

இவ்வாறான வரபலத்தைப் பெற்ற இரணியன் ஆணவங் கொண்டு தேவர்களும், முனிவர்களும், உலக மக்களும் தன்னையே வணங்க வேண்டும், தானே இறைவன், தனக்கு மேலானோர் இல்லை என ஆணையிட எல்லோரும் அவனையே வணங்கிப் பூசித்தனர். வேள்விகளும், சடங்குகளும் அவன் பெயரிலேயே செய்யப்பட்டன. ''நாராயணாய நம'' என்பதற்குப் பதிலாக ''இரணியாய நம'' என்று உலகத்தார் எல்லோரும் அவனையே வணங்கினர். இரணியனுக்குக் கருவிலே திருவுடைய பிரகலாதன் என்னும் மகன் பிறந்தான். அவன் சிறுவனாயிருந்தபோது அவனுக்குக் கல்வி கற்பிக்கத் தொடங்கிய ஆசான் ''இரணியாயநம'' என்று கூறும்படி சொல்லித்தர, பிரகலாதன் ''நாராயணாயநம'' என்று கூறினான். அவ்வார்த்தையைக் கேட்டு வியப்பும் அச்சமும் கொண்ட ஆசிரியன் பிரகலாதனைத் திருத்த முயன்று, முடியாமை யால் தனக்கு ஆபத்து வருமென்றெண்ணிப் பிரகலாதன் செய்தியை இரணியனுக்குத் தெரிவித்தான். இரணியன் தன் தனயனை அன்புடன் அழைத்துத் தன் மடியிலிறுத்தி தன் பெயரைச் சொல்லச் சொல்ல பிரகலாதன் நாராயணனே உலகத் தலைவன், அவன் பெயரை ஓதுவதுதான் நன்மை எனக் கூறினான். எவ்வளவு முயன்றும் பிரகலாதனைத் திருத்த இயலாமையின் அவனைக் கொல்லவும் முயற்சித்த இரணியன் பல முறையும் தோல்வி அடைந்தான். இறுதியாக இரணியன் மிக்க சீற்றமுற்றவனாய்த் தானே தன் மகனைக் கொல்லத் துணிந்தான். பிரகலாதன் தன்னை இரணியனால் கொல்ல முடியாது எனக் கூற இரணியன் நீ கூறுகின்ற அரி எங்கிருக்கின்றான் என வினவினான். பிரகலாதன் நாராயணன் தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான் என்று கூறினான். அதைக் கேட்ட இரணியன் தன் எதிரிலிருந்த தூணைக் காட்டி இதில் இருப்பானா இறைவன் எனக் கேட்டு அத்தூணை ஓங்கி அறைந் தான். அறைந்த பொழுதே திருமால் நரசிங்க வடிவமாய்த் தோன்றி இரணியனை அழித்தான் என்பது புராண வரலாறு.

இந்த இரணியன் வரலாற்றினைக் கம்பர் தமது இராமாயணத்தில் ஒரு தனிப்படலமாகவே எடுத்துக் கூறியுள்ளார்.[179] இந்த வரலாற்றின் மூலம் திருமாலின் அளப்பரிய சக்தி மக்கள் உள்ளத்தில்

---

179. கம்பராமாயணம் - இரணியன் வதைபடலம் - பாடல் 121

ஊன்றப் பெறுகிறது. திருமால் எங்கும் உளன், எதிலும் உளன் என்ற பரிபாடல் கூறும் தத்துவம் இவ்வாறு கதையாக மலர்கிறது.

நரசிங்காவதாரம் ஆழ்வார்களின் பாசுரங்களில் நான்காம் இடத்தைப் பிடித்துள்ளது. நரசிம்ம அவதாரத்தில் திருமங்கை ஆழ்வார் பெரிதும் ஈடுபாடு கொண்டவராகக் காணப்படுகின்றார். அவரது பாடல்களில் நாற்பதுக்கும் மேலான இடங்களில் நரசிங்கத்தைப் பற்றிப் பேசுகின்றார். திருமால் அரியுருவாய்த் தூணில் தோன்றிய நிலையினை.

''அளந்திட்ட தூணை அவன்தட்ட ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச் சிங்க உருவாய்
உளந்தொட்டு இரணியன் ஒண்மார் வகலம்
பிளந்திட்ட கைகளால் சப்பாணி
பேய் முலை உண்டானே ! சப்பாணி''[180]

என வரும் பெரியாழ்வார் பாசுரமும், பெரிய திருமொழிப் பாசுரமும்,[181] திருவாய்மொழிப் பாசுரமொன்றும்[182] தெரிவிக்கின்றன.

இரணியனது கொடுமையைத் தாங்க முடியாது தேவர் இறைவனை வேண்டத் திருமால் நரசிங்கமாய்த் தோன்றி இரணியனை அழித்தான் எனக் குலசேகரர் கூறுவதைக் காணலாம்,[183] திருமால் அரியுருவாகி இரணியனைக் கொன்றிராவிடின் தேவர்கள் எப்படிப் பிழைப்பார்கள் எனத் திருமங்கையாழ்வார் கூறுவதைக் காணலாம்.[184]

இரணியன் தன்னை மனிதனும், விலங்கும் கொல்ல இயலாது என வரம் பெற்றிருந்தான். எனவேதான் திருமால் மனிதனும், விலங்குமல்லாத இரண்டும் கலந்த நரசிங்கமாய்த் தோன்றி ஆயுதமல்லாத கூரிய நகங்களால் அவனது மார்பைப் பிளந்தார் என்பது,

''கோளரியின் உருவங் கொண்ட வுணன் உடலம்
குருதி குழம்பி யெழக் கூருகிரால் குடைவாய் !''[185]

---

180. நா. தி. பிர. பெரியாழ்வார் - 1 - 7 - 9
181. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 3 - 8
182. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 8 - 9
183. நா. தி. பிர. குலசேகரர் - 10 - 6 - 4
184. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 7 - 5
185. நா. தி. பிர. பெரியாழ்வார் - 1 - 6 - 2

''வால் நிறத்தொர் சீயமாய் வளைந்த வாளெயிற்றவன்
ஊன் நிறத்து கிர்த்தலம் அழுத்தினாய் ''[186]

என்னும் பாசுர அடிகளாலும் மற்றும் பலவிடங்களிலும் இச்செய்தி பேசப்படுகின்றது.[187-191]

இரவிலும் பகலிலும் தான் மாயக் கூடாதென்று வரம் பெற்ற இரணியனை இரவும் பகலுமல்லாத அந்திப் போதில் அரியுருவாகி அழித்தான் எனும் செய்தியை,

''அந்தியம் போதில் அரியுருவாகி அரியை அழித்தவனை''[192]
அந்திப் போதவுணன் உடலிடந்தானே''[193]

என வரும் பாசுர அடிகள் உணர்த்துவதைத் காணலாம்.

திருமாலது அரியுருவத்தின் அழகினில் தன்னைப் பறிகொடுத்த திருமழிசையாழ்வார்,

''இவையா — பிலவாய் திறந்தெரிகான்ற !
இவையா — எரிவட்டக் கண்கள் ! — இவையா
எரிபொங்கிக் காட்டும் இமையோர் பெருமான்
அரிபொங்கிக் காட்டும் அழகு !''[194]

எனக் கூறுகின்றார்.

அரியுருவமான திருமால் கொண்ட சீற்றம் விண் சுடப்போய் மூவுலகும் பிறவும் அஞ்சும்படி இருந்தது.[195] நரசிங்கத்தினை கண்ட சிவனும், பிரமனும் பிறரும் பெருவியப்பினில் ஆழ்ந்தனர். உலகங்கள் பேரச்சம் கொண்டு அவனை வணங்கின.[196] அரியும், மானிடமும் உடனாய்த் தோன்றி அவன் கொண்ட சீற்றத்தினால் ஆகாயமும்

---

186. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 23
187. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 25
188. நா. தி. பிர. பெரியாழ்வார் - 4 - 9 - 8
189. நா. தி. பிர. நான்காம் திருவந்தாதி - 18
190. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 8 - 6, 3 - 10 - 4
5 - 3 - 3 , 6 - 5 - 2
191. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 17
192. நா. தி. பிர. திருப்பல்லாண்டு - 6
193. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 2 - 5
194. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 21
195. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 7 - 7
196. நா. தி. பிர. பெரிய திருமொழி 2 - 8 - 1

வெதும்பியது.[197] நரசிங்கத்தினது அடி உலகத்தைக் கடந்தது. தோள் திசைகளுக்கும் மேற்சென்றது. முடி விசும்பினை அளந்தது.[198] தன்னை வணங்காத மூர்க்கனாகிய இரணியனை நரசிங்கமாகிக் கொன்ற திருமாலின் அடிகளே உலகத்தில் அமுதாவது,

''வரங்கருதித் தன்னை வணங்காத வன்மை
உரங்கருதி மூர்க்கத்தவனை — நரம் கலந்த
சிங்கமாய்க் கீண்ட திருவன் அடியிணையே
அங்கண்மா ஞாலத் தமுது''

எனப் பொய்கையாழ்வார் போதிக்கின்றார்.[199] இப்பாடலால் எத்தகைய ஆற்றல் பெற்றவராயினும் இறைவனை வணங்காதோர் அழிவர் என்பது திண்ணம் என்ற உண்மையை உணரலாம்.

''கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை''[200] —

எனும் குறட் கருத்தும் இங்கு ஒப்புநோக்கத் தக்கது.

முந்தைய கால இலக்கியங்களிலும் இவ்வவதாரம் பேசப்படுகின்றது. சங்க இலக்கியத்தில் பரிபாடலில் ஓரிடத்தில் மட்டும் இவ்வவதாரக் கருத்து இடம் பெறுகிறது. திருமாலே பரம்பொருள் என்ற பண்பு தோன்றவும், தன் அடியவர்களைக் காக்க அவதாரமெடுத்துத் தீமையை அழிக்கும் அருள் செயல்களை விளக்குமுகமாகவும் இவ்வவதாரக் கருத்து அங்கு விளக்கமாக இடம் பெறுகின்றது.

சங்கம் மருவிய காலத்தில் சிலம்பில் ஓரிடத்தில் மட்டுமே செய்திக் குறிப்பாக நரசிம்மாவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. அச்ச உணர்வு தோன்றவும், பகையை அழித்து அன்பர்களுக்கு அருளும் திறமும் தோன்றப் போற்றப்படுகின்றான்.

சைவ இலக்கியங்களில் இவ்வவதாரக் குறிப்பு மூவர் தேவாரங்களில் மட்டுமே விளக்கமாகவும், செய்திக் குறிப்பாகவும் அமைகின்றது. சிவனுக்கு ஏற்றம் தரும் இடங்களில் அவை அமைந்தாலும் அனைவரையும் வெற்றி கொள்ளும் பண்பும், தீமையை அழித்து நன்மையைக் காக்கும் இறைப்பண்பும் தோன்றத் திருமால் சுட்டப்படுகின்றான்.

---

197. நா. தி. பிர. பெரிய திருமொழி 8 - 8 - 4
198. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 17
199. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - பாசுரம் - 84
200. திருக்குறள் - கடவுள் வாழ்த்து

முந்தைய காலங்களைக் காட்டிலும் நரசிங்காவதாரத்தைப் பற்றி எண்ணிக்கையில் மிகுதியாகச் செய்திகள் ஆழ்வார் பாசுரங்களில் அமைகின்றன. திருமால் அரியுருவாய்த் தூணில் தோன்றும் நிலை வருணிக்கப்படுகின்றது. நரசிங்கமாய்த் தோன்றியதும், ஆயுதமல்லாத கூரிய நகங்களால் இரணியன் மார்பைப் பிளந்ததும், அந்திப் போதில் அரியுருவாகி அழித்ததும் பலவிடங்களில் காட்டப் படுகின்றன. அவதாரப் பெயரோடு திருமால் சுட்டப்படுகின்றான். திருமாலது அரியுருவத்தின் அழகும் போற்றப்படுகின்றது. இரணியனை அழித்த திருமாலின் அடிகளே உலகில் சிறந்தது என்று வியக்கப்படுகின்றது. இறைவனின் எங்கும் நீக்கமற நிறைந்த இறைப் பண்பையும் தீமையை அழிக்கும் ஆற்றல் வாய்ந்த பரம் பொருள் திருமால் என்பதையும் விளக்குமுகமாக இவ்வவதாரக் கருத்துகள் அமைந்தன எனலாம்.

**கமடம் (ஆமை)** ; தேவர்களும் அசுரர்களும் சேர்ந்து மந்தர மலையை மத்தாகவும், வாசுகியைக் கடை கயிறாகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்தனர். இக்கடல் கடைந்த செய்திகள் பல இலக்கியங்களில் பேசப்படுவதைக் காணலாம். இளங்கோவடிகளும் தம் காப்பியத்தில் இச்செய்தியைக் குறிப்பிடுகின்றார். மந்தர மலையை மத்தாகக் கொண்டு கடலைக் கடையும் போது அம்மலை கடலுள் ஆழ்ந்து விடாமலிருக்கத் திருமால் ஆமையாய் அவதரித்து தன் முதுகோட்டினால் மலையைத் தாங்கினான் என்பது புராணச் செய்தி. இச்செய்தியினை ஆழ்வார்கள் தம் திருப்பாசுரங்களில் பலவிடங்களில் எடுத்துரைத்துள்ளனர்.

''பொங்கு நீள்முடி யமரர்கள் தொழுதெழ
அமுதினைக் கொடுத்தளிப்பான்
அங்கொராமைய தாகிய வாதி''[201]

எனத் திருமங்கையாழ்வாரும்,

''அன்று தேவர் அசுரர் வாங்க,
அலைகடல் அரவம் அளாவிஓர்
குன்றம் வைத்த எந்தாய்''[202]

என நம்மாழ்வாரும், ஆமையாய்த் திருமால் அவதரித்த செய்தியினைக் கூறுகின்றனர். பூதத்தாழ்வார் பாடல் ஒன்றும் இச்செய்தியைத் தெரிவிக்கின்றது.[203]

---

201. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 3 - 6
202. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 1 - 7
203. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 46

மேலும் மலை மத்தாக, பாம்பு கயிறாகக் கடல் கடைந்த செய்தி திருமங்கையாழ்வாரது சிறிய திருமடலிலும்[204] திருமால் கமடமாகத் தோன்றியதை, ''ஆமையு மானவனே! ஆயர் நாயகனே!''[205] ''பன்றியு மாமையும் பிறவுமாகிய பாற்கடல் வண்ணர்''[206], ''ஆமையாய்''[207] எனப் பெரியாழ்வாரும், ''பாசம் நின்ற நீரில் வாழும் ஆமையான் கேசவா''[208] எனத் திருமழிசைப் பிரானும், ''அன்னமு மீனுமாமையும் அரியுமாய வெம்மானை''[209], ''ஏனம் மீனாமையோடரியும்''[210], ''ஆமையாகி''[211] எனத் திருமங்கை மன்னனும், ''மாவாகியாமையாய்''[212], ''மீனாமையாம்''[213] எனப் பெரியாழ்வாரும் குறிப்பிடுவதைக் காணலாம். ஆமையும், மீனும் நீரில் வாழும் உயிரினங்களாயதால் பெரிதும் அவை சேர்த்துச் சொல்லப்படுகின்றன எனலாம். ஆழ்வார்களால் அதிகமாகப் பேசப் படுகின்ற அவதாரங்களில் ஆமை ஏழாவது இடத்தினைப் பெற் றுள்ளதைக் காணலாம்.

முந்தைய சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கூர்மாவதாரச் செய்தி இடம் பெற்றுள்ளது. சைவ இலக்கியங்களில் இடம் பெறவில்லை. சங்க இலக்கியத்தில் திருமாலினது அருள் பண்பினை விளக்கக் கூர்மாவதாரம் விளக்கமாக வர்ணிக்கப்படு கின்றது. சங்கம் மருவிய காலத்தில் செய்திக் குறிப்புகளாக இவ்வவதாரச் செய்தி அமைந்துள்ளது. மன்னர்கள் மேலும் ஏற்றிப் பாடப்பட்டுள்ளது. பிற அவதாரங்களுடன் சேர்த்துப் பேசப் பட்டுள்லது.

ஆழ்வார்கள் திருமால் ஆமையாய் அவதரித்துத் தன் முதுகோட் டினால் மலையைத் தாங்கிய செய்தியைப் பலவிடங்களில் செய்திக் குறிப்புகளாகவே கூறியிருப்பதையும், பிற அவதாரங்களுடன் சேர்த்துப் பேசியிருப்பதையும், அவதாரப் பெயரோடு சுட்டிக் கூறியிருப்பதையும் காண முடிகின்றது. முந்தைய காலங்களை விட

204. நா. தி. பிர. சிறிய திருமடல் - 24
205. நா. தி. பிர. பெரியாழ்வார் - 1 - 5 - 11
206. நா. தி. பிர. பெரியாழ்வார் - 3 - 3 - 7
207. நா. தி. பிர. பெரியாழ்வார் - 4 - 9 - 5
208. நா. தி. பிர. திருமழிசையாழ்வார்
209. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 7 - 10
210. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 4 - 8
211. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 6 - 5
212. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 8 - 5
213. நா. தி. பிர. பெரியாழ்வார் - 5 - 1 - 10

அதிக இடங்களில் இவ்வவதாரத்தைச் சுட்டியுள்ளனர். அடியவர்க்கு உதவும் இறைவனின் அருள் பண்பும், பேராற்றலும் பரம்பொருள் தன்மையும் விளக்க இவ்வவதாரக் கருத்துகள் அமைந்தன எனலாம்.

**ஏனம் (வராகவதாரம்):** ஆழ்வார்களின் பாடல்களில் ஐந்தாவது இடத்தினைப் பெறுவது வராக அவதாரம். இரணிய கசிபுவின் தம்பியாகிய இரணியாக்கன் பூமியைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு கடலில் மறைந்தான். அதனால் நிலமகள் பெரிதும் வருந்துவாளா யினாள். நிலமகள் வருத்தம் தீரவும், பூமியைத் தானே கொண்டு வந்து சேர்க்கவும். திருமால் பன்றியாய் வடிவெடுத்துக் கடலில் புகுந்து இரணியாக்கனைக் கொன்று தன் கொம்பில் பூமியைத் தாங்கிக் கொண்டு வந்து நிலை நிறுத்தினான். தன் தம்பியாகிய இரணியாக்கனைக் கொன்றதினாலேயே இரணியகசிபு திருமாலைத் தன் பெரும் பகைவனாகக் கொண்டான்.

''பாசி தூர்த்துக் கிடந்த பார்மகட்கு பண்டொருநாள்
மாவிசும்பில் நீர்வார மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர் திருவரங்கச் செல்வனார்
பேசி யிருப்பனகள் பேர்க்கவும் பேராவே''[214]

எனத் திருவரங்கத்துச் செல்வன் மீது காதல் கொண்ட தலைவி அவன் தனக்கு அருள் செய்யாமல் இருப்பதனால் வருந்தி முன்பு அவன் தன்னுடன் பேசின வார்த்தைகளைத் தன் மனத்தை விட்டுப் பேர்க்கவும் பேர்க்க முடியவில்லை எனக் கூறுகின்றாள்.

''மண்மகள் அழுங்க, முந்நீர்ப் பரப்பில்'
ஏனமாகி அன்று இருநிலம் இடந்தவனே''[215],

''வளை மருப்பின் ஏரார் உருவத்து ஏனமாய்
எடுத்த ஆற்றல் அம்மானை''[216]

எனத் திருமால் வராக அவதாரமெடுத்துத் தன் வலிய கொம்பில் பூமியைத் தாங்கி வந்த செய்தியினைக் கூறுகின்றார் திருமங்கை ஆழ்வார்.

''தொல்லை யங்காலத் துலகைக்கேழ லொன்றாகி
இடந்த கேசவன்''[217]

எனவும் இன்னும் பலவிடங்களிலும்[218],[219] நம்மாழ்வாரும் வராகவதாரத்தின் பெருமையை எடுத்தியம்புவதைக் காணலாம்.

---

214. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 11 - 8
215. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 3 - 5
216. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 8 - 3
217. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 9 - 2
218. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 2 - 6
219. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 5 - 5

முதலாழ்வார்களில் பூதத்தாழ்வார் ''வராகத்து அணியுருவன்''[220] எனவும், ''மண்ணகலங் கீண்டு அங்குஓர் மாதுகந்த மார்வன்''[221] எனப் பேயாழ்வாரும் வராகவதாரத்தினைக் குறிப்பிடுவதனைக் காணலாம்.

தமிழகப் பல்லவ மன்னர்களில் முதன்மையான சிம்ம விஷ்ணு ஆதிவராகர் கோயிலைக் கட்டியுள்ளான். நரசிம்ம வர்மன் மாமல்ல புரத்தில் வராக மண்டபம் ஒன்று அமைத்தான் என்பது பல்லவர் வரலாற்றினால் அறியப்படுகின்றது. இதால் ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளிலேயே வராகவதாரச் சிறப்பும் போற்றப்பட்டிருப் பதைக் காணலாம்.

சங்க காலத்தில் வராக அவதாரப் புகழ் பல இடங்களில் இடம் பெறுகின்றது. மன்னர்கள் மீதும் இவ்வவதாரச் செய்தி சொல்லப் பட்டுள்ளது. அனைத்துலகையும் படைத்து அளிக்கும் பண்பினனாகக் காட்டப்படுகின்றான். இவ்வவதாரம் பிற அவதாரச் செய்திகளுடன் சேர்த்து உரைக்கப்படுகின்றது. சங்கம் மருவிய கால இலக்கியங் களில் வராக அவதாரம் இடம் பெறவில்லை. சைவ இலக்கியங்களில் சிவனது பெருமை கூறும் இடங்களில் இவ்வவதாரக் கருத்து அமைந் தாலும் திருமால் வராக அவதாரம் கொண்டு பூமியைப் பிரளய வெள்ளத்தில் ஆழாதபடி கொம்பில் ஏற்று நிலைநிறுத்திய செய்தி காட்டப்படுகின்றது. பக்தி இலக்கியங்களில் நில மகளுடன் சேர்த்து வராக அவதாரப் புகழ் பேசப்படுகின்றது. திருமால் வராகமாகத் தன் வலிய கொம்பில் பூமியைத் தாங்கி வந்த வராகவதாரப் பெருமையை ஆழ்வார்கள் பாடுகின்றனர். இறைவனின் பேராற்றல் பொருந்திய அருட்பண்பினை விளக்க இவ்வவதாரக் குறிப்புகளை அமைத்தனர் எனலாம்.

**மச்சாவதாரம்:** சோமுகன் என்னும் அசுரன் பிரமதேவன் உறக்கத்திலிருக்கும்போது வேதங்களைத் திருடிக்கொண்டு கடலில் புகுந்தான். திருமால் மீனுருக் கொண்டு கடலில் புகுந்து சோமுகனைக் கொன்று வேதங்களை மீட்டுத் தந்தான் என்பது புராணம். மச்சாவதாரப் பெருமை நாலாயிர திவ்வியப் பிரபந் தத்தில் மிகுதியாகப் பேசப்படவில்லையெனிலும்,

''அன்னமும் மீன்உருவும் ஆளரியும் குறளும்
ஆமையும் ஆனவன்''[222]

---

220. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - 31
221. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 54
222. நா. தி. பிர. பெரியாழ்வார் - 1 - 5 - 11

''பன்றியு மாமையு மீனுமாகிய பாற்கடல் வண்ணன்''[223]

எனப் பெரியாழ்வாரும்,

''அம்புலாவு மீனுமாகி''[224]

எனத் திருமழிசையாரும் குறிப்பிடுகின்றனர். மேலும், ''அன்னமு மீனு மாமையு மரியாய எம்மான்[225]'' ''ஏன மீனாமை யோடரியும் சிறு குறளும்''[226], ''நீரை மீனாயமைத்த பெருமான்''[227], ''பன்றியாய் மீனாகி''[228], ''நீர்மலிகின்றதோர் மீனாய்''[229], ''வலியுருவில் மீனாய் வந்து வியந்துய்யக் கொண்ட தண் தாமரைக் கண்ணன்''[230] ''மீனோடாமை''[231] எனத் திருமங்கையாழ்வாரும் ஊழிக் காலத்தில் உலகம் நீரில் அமிழ்ந்தபோது திருமால் பெரியதோர் மீனாகத் தோன்றி எல்லா உயிர்களையும் தன் செதிலில் அடக்கினான் என்று குறிப்பிடுவதைக் காணலாம். நம்மாழ்வார் தமது திருவாய்மொழியில் சில இடங்களில் திருமால் மீனாய் அவதரித்த செய்தியைக் குறிப்பிடுவதைக் காணலாம்.

சங்க இலக்கியங்கள், சங்கம் மருவிய கால இலக்கியங்கள், சைவ இலக்கியங்கள் ஆகிய மூன்று காலத்திலும் மச்சாவதாரம் இடம்பெற வில்லை. ஆழ்வார் பாசுரங்களில் மட்டும் மச்சாவதாரக் குறிப்பு இடம் பெற்றுள்ளது. பிற அவதாரங்களுடன் சேர்த்துச் சொல்லப் படுகிறது. ஆழ்வார்கள் திருமாலின் பரத்துவத்தை நிறுவுவதையே உயிர் மூச்சாகக் கொண்டவர்கள் ஆதலின் திருமாலின் பத்து அவதாரங்களையும் பேசுகின்றனர். திருமாலின் காத்தற்பண்பை விளக்க இவ்வவதாரக் குறிப்புகளை அமைத்தனர் எனலாம்.

**பரசுராமன் :** சத்திரிய குலத்தைச் சார்ந்த அரசர்கள் ஆணவங் கொண்டு தன்னிச்சைபோல் நடந்து வந்தனர். அவர்களது ஆணவத்தை அடக்கவே திருமால் பரசுராமனாக அவதரித்தார்

---

223. நா. தி. பிர. பெரியாழ்வார் - 3 - 3 - 3
224. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 35
225. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 7 - 10
226. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5- 4 - 8
227. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 8 - 2
228. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 8 - 10
229. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 4 - 4
230. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 8 - 1
231. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 8 - 10

எனலாம். கார்த்த வீரியார்ச்சுனன் என்பான் ஆயிரம் கைகளை யுடையவன். அவன் இராவணனையும் சிறையில் அடைத்தவன். கார்த்த வீரியார்ச்சுனன் பரசுராமனின் தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கொன்றான். சமதக்கினி முனிவர் இறந்தபோது இரேணுகாதேவி இருபத்தோரு முறை தன் மார்பில் அடித்துக் கொண்டாள். தன் தந்தை கொல்லப்பட்டதனால் பெரும் சீற்றம் கொண்ட பரசுராமன் கார்த்த வீரியாச்சுனனது ஆயிரம் தோள்களையும் தன் கோடரிப் படையால் துணித்து அவன் மக்களையும் கொன்றான். தன் தாய் இருபத்தொரு முறை மார்பில் அடித்துக் கொண்டதற்கேற்ப, பரசுராமன் சத்திரிய குல மன்னவரை இருபத்தொரு தலைமுறை அழித்தான். அம்மன்னர்களைக் கொன்று அதனால் சிந்திய குருதியைத் தேக்கி அதில் மூழ்கித் தந்தையின் ஈமக்கடனை முடித்தான். பின்னர் சினமாறிய பரசுராமன் மேருமலைக்குச் சென்று தவம் மேற்கொண்டான். மிதிலையில் இருந்த சிவதனுசினை இராமன் ஒடித்ததையறிந்த பரசுராமன் பெருஞ்சீற்றங்கொண்டு, திருமணமாகி அயோத்தி திரும்பிவரும் இராமனை இடைமறித்துத் தன் கையிலுள்ள திருமால் தனுசினைக் கையில் வாங்கும் ஆற்றல் உள்ளதோ எனக் கேட்க இராமன் அவ்வில்லை எளிதில் வாங்கி நாணேற்றினான். தனது ஆணவம் அழியப்பெற்ற பரசுராமன் இராமனுடைய அம்பிற்குத் தன் தவ வலிமையை இரையாக்கிக் கொள்ளுமாறு கூறி வலிமையிழந்து சென்றான். அவதாரங்களில் ஒன்று தோன்றும்போது மற்றொன்று செயலிழக்கும் என்பதற்கு இது ஒரு சான்று எனக் கொள்ளலாம்.

கார்த்த வீரியாச்சுனன் பல மன்னர்கள் தன்னை வந்து இறைஞ்சும்படி பெருமிதத்துடன் வாழ்ந்ததும், அவனைப் பரசுராமன் கொன்றதும்,

> ''ஆழியந் திண்தேர் அரசர் வந்திறைஞ்ச
> அலைகடல் உலகம் முன் ஆண்ட
> பாழியந் தோளோராயிரம் வீழப்படை
> மழுப்பற்றிய வலியோ ?''

என வரும்[232] பெரிய திருமொழி அடிகள் உணர்த்துகின்றன. இருபத்தோரு தலை முறை சத்திரிய குல மன்னர்களைக் கொன்றான் என்பதை,

> ''வென்றி மாமழு வேந்திமுன், மண்மிசை மன்னரை
> மூவெழுகால் கொன்ற தேவ !''[233]

232. நா. தி. பிர. பெரிய திருமொழி - 10 - 9 - 7
233. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 3 - 1

''முனியாய்வந்து மூவெழுகால் முடிசேர் மன்னர் உடல்துணிய
கனிவாய் மழுவின் படையாண்ட தாரார் தோளான்''[234]

எனத் திருமங்கையாழ்வார் தெரிவிக்கின்றார்.

மன்னர்களது குருதியினையெல்லாம் ஒன்றாகத் தேக்கி அதனில் மூழ்கித் தன் குலத்தில் இறந்தோர்க்கு ஈமக்கடன் செய்தான் பரசுராமன் என்பதனை,

''மழுவினால் அவனி அரசை மூவெழுகால்
மணிமுடி பொடிபடுத்து உதிரக்
குழுவுவார் புனலுள் குளித்து வெங்கோபம் தவிர்ந்தவன்''[235]

''தெவ்வாய மறமன்னர் குருதி கொண்டு
திருக்குலத்தில் இறந்தோர்க்குத் திருத்திசெய்து''[236]

என வரும் பாசுர அடிகள் நிறுவுகின்றன. பரசுராமனைப் பற்றித் திருமங்கையாழ்வார் ஒருவரே தமது பாசுரங்களில் அதிகமாகப் பேசுவதைக் காணலாம்.

சங்க இலக்கியங்களில் பரசுராம அவதாரம் அகநானூற்றில் மட்டும் உவமையாக ஓரிடத்தில் அமைகின்றது. சங்கம் மருவிய காலத்திலும், மணிமேகலையில் மட்டுமே இவ்வவதாரக் குறிப்பு இடம் பெறுகின்றது. திருமாலின் அவதாரமே பரசுராமன் என்ற கருத்துடன் பேசப்படுகின்றான். சைவ இலக்கியங்களிலும் சுந்தரர் தேவாரத்தில் மட்டும் ஓரிடத்தில் பரசுராம அவதாரம் பேசப்படுகின்றது. அங்கு சிவனது பெருமை தோன்றக் கூறப்பட்டாலும் பரசுராமனாகிய திருமாலின் ஆற்றல் தோன்றக் காட்டப்படுகின்றான்.

ஆழ்வார் பாசுரங்களில் முந்தைய காலங்களைக் காட்டிலும் சிறிது மிகுதியான செய்திகள் பரசுராமனைப் பற்றிக் கூறப்படுகின்றன. ஆற்றல் வாய்ந்தவனாகவும், திருமாலின் அவதாரமாகவும் பரசுராமன் காட்டப்படுகின்றான். கார்த்த வீரியார்ச்சுனனைப் பரசுராமன் கொன்றதும், இருபத்தொரு தலைமுறை சத்திரிய குல மன்னர்களை அழித்த செய்தியும் மன்னர்களது குருதியினைத் தேக்கி, அதில் மூழ்கித் தன் குலத்திலிறந்தோர்க்கு ஈமக்கடன் செய்தான் பரசுராமன் என்பதும் ஆழ்வார் பாசுரங்களில் தெளிவுறுத்தப்படு

234. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 7 - 2
235. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 1 - 6
236. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 4 - 5

கின்றது. இச்செய்திகள் பரசுராம அவதாரத்தில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையென்றே கூறலாம்.

**பலராமன் :** திருமால் இராமன், பரசுராமன், பலராமன் எனத் தோன்றியவன். பரசுராமன் இராமனால் வலியொடுக்கப்பட்டவன். பலராமன் கண்ணனுக்கு மூத்தவனாய்த் தோன்றியவன். இராமாவதாரத்தில் இலக்குவனாகப் பிறந்து இராமனுக்குத் தொண்டு புரிந்தான். அதற்கீடாகக் கிருட்டிணாவதாரத்தில் ஆதிசேடனைத் தமையனாக்கி அவனுக்கடங்கியவனாகக் கண்ணன் இருந்தான் என்பர் வைணவப் பெரியார்கள்.

பலராமனைப் பற்றிய செய்திகள் தொன்று தொட்டே தமிகத்தில் நிலவி வந்திருக்கின்றன. சங்க இலக்கியங்களில் ஒன்றான புறநானூற்றில் மதுரைக் கணக்காயனார் பாடலால்[237] பலராமன் கடவுளரில் ஒருவனாக மதிக்கப்பட்டமையும், வலிமையில் மிக்கவன் என்பதும் பெறப்படுகின்றது. கலித்தொகையிலும்[238] சிலப்பதிகாரத்திலும்[239] வரும் செய்திகள் பலராமனுக்குக் கோயில் இருந்ததை உணர்த்துகின்றன.

நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் பலராமனைப் பற்றிய குறிப்புகள் சிலவேயெனலாம்.

''செம்பொற் கழலடிச் செல்வா ! பலதேவா !
உம்பியும் நீயுமுறங்கேல் ஓர் எம்பாவாய்''[240]

என ஆண்டாளும்,

''மாரி மாக்கடல் வளைவணற் கிளையவன்''[241]

''ஒற்றைக் குழையும், நாஞ்சிலும் ஒருபால் தோன்ற''[242]

''முன்னும் இராமனாய்த் தானாய் பின்னும் இராமனாய்த்
தாமோதரனாய்க் கற்கியும் ஆனான் தன்னை''[243]

எனத் திருமங்கையாழ்வாரும் குறிப்பிடுவதைக் காணலாம். பொதுவாக நோக்குமிடத்துப் பலராம அவதாரம் நாலாயிரத்தில் ஒரு சாதாரணமாகவே காட்சியளிப்பது தேற்றம்.

---

237. புறம் - பாடல் - 56
238. கலி - 104
239. சிலம்பு - ஊர்சூழ்வரி - 6
240. நா. தி. பிர. திருப்பாவை - 17
241. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 5 - 2
242. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 8 - 8
243. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 8 - 10

சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் பலராம அவதாரம் மிகுதியும் இடம் பெற்றுள்ளது. ஆழ்வார்களின் பாசுரங்களில் இடம் பெறுவதைவிடச் சங்க இலக்கியங்களில் பலராம அவதாரம் பற்றிய செய்திகள் மிகுதியாக அமைந்துள்ளன. கண்ணனும், பலராமனும் இணையாக, வழிபடு கடவுளராகப் போற்றப்பட்ட நிலையினையும் திருமாலின் படுக்கையாகிய ஆதிசேடனே பலராமன் என்பதனையும், கண்ணனோடு இணைந்து வளர்ந்து வணக்கத்திற்குறியவனாகப் பலராமன் விளங்குவதையும் சங்கப் புலவர்கள் தெளிவுறுத்தியுள்ளனர். பலராமனின் நிறம், படை, ஆற்றல் தோன்றக் காட்டப் படுகின்றான்.

சங்க இலக்கியங்களைப் போல பலராமனைப் பற்றி மிகுதியான செய்திகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறாவிட்டாலும் இணையாகவே கிருஷ்ண பலராமர் காட்டப்படுகின்றனர். நிறப்பண்பு தோன்றவும், படையும், கொடியும் உடையவனாகவும் கண்ணனுக்குத் தமையனாகவும் கோயிலில் வைத்துத் தெய்வமாக வணங்கப்பட்ட செய்திகளும் அமைகின்றன.

சைவ இலக்கியங்களில் பலராமனைப் பற்றிய குறிப்புகளே இல்லை. முந்தைய காலங்களைப் போல மிகுதியான செய்திகளை ஆழ்வார்கள் பாடவில்லையெனிலும் நிறமும், படையும், ஆற்றலும் தோன்றவும், கண்ணனின் தமையனாகவும், பிற அவதாரங்களுடன் சேர்த்தும் கூறுகின்றனர். திருமாலின் அவதாரமாகப் பலராமன் சுட்டப்படுகின்றான்.

**கல்கி :** திருமால் எடுத்த அவதாரங்களுள் இறுதியாகக் கூறப் படுவது கல்கி அவதாரம். கல்கி அவதாரத்தைக் குறித்துப் பத்து அவதாரங்களில் ஒன்று என்பது தவிர வேறொன்றும் பேசப்பட வில்லை. இதனைத் திருமங்கையாழ்வார் மட்டும் குறித்துள்ளார்.[244]

பல்வேறு நூல்களிலும், கல்கி அவதாரம் எடுத்ததின் காரணமோ அதற்குரிய சிறப்பையோ நன்கு அறிய முடியவில்லை. ''தவநெறிக்கு ஓர் பெரு நெறி ஆய், வையம் காக்கும் கடும்பரி மேல் கற்கியும் ஆனான்'' என வையாபுரிப் பிள்ளை தமது நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பதிப்பில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.[245]

முந்தைய காலகட்ட இலக்கியங்களிலும் திருமால் பத்து அவதாரங்கள் எடுத்த குறிப்புக் காணப்படுகின்றதே தவிரக் கல்கி

244. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 4 - 7, 8 - 8 - 10
245. நா. தி. பிர. வையாபுரிப் பிள்ளை - பக்கம் - 190

அவதாரம் பற்றிய செய்திகள் எங்கும் இடம் பெறவில்லை என்பது நோக்கத்தக்கது. ஆழ்வார்களும் கல்கி அவதாரத்தை பற்றிக் கூறியுள்ளனரே தவிர அதைப்பற்றிய விளக்கங்களைக் கூறவில்லை. செய்திக் குறிப்பாகவே அமைகின்றது. கல்கி அவதாரம் அவதாரப் பெயரோடு சுட்டப்படுகின்றது. வையகத்தைக் காப்பதற்காகத் திருமால் கொள்ளும் அவதாரமாகப் பேசப்படுகின்றது.

பொதுவாக அவதாரங்களைப் பற்றிய செய்திகளை நோக்கும் போது புராணங்கள் கூறும் பத்து அவதாரங்களில் மச்சாவதாரம், கல்கி அவதாரம் ஆகிய இரு அவதாரங்களைப் பற்றிய செய்திகள் சங்கச் சான்றோர் பாடல்களில் இடம் பெறவில்லை. வராக அவதாரம், மச்சாவதாரம், கல்கியவதாரம் தவிர்த்த பிற அவதாரக் குறிப்புகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. வராக அவதாரக் குறிப்பு சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. சங்கம் மருவிய காலத்தில் காணப்படவில்லை. பலராம அவதாரம், கூர்மாவதாரம், மச்சாவதாரம், கல்கியவதாரம் தவிர்த்த பிற அவதாரக் குறிப்புகள் சைவ இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. பலராம அவதாரம் சங்க காலத்திலும், சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் மிகுதியும் இடம் பெற்றுள்ளது. சைவ இலக்கியங்களில் பலராமன் பற்றிய குறிப்பு இடம்பெறவில்லை. கூர்மாவதாரம் சங்கம், சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. சைவ இலக்கியங்களில் காணப்படவில்லை. வராக அவதாரக் குறிப்புகள் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் இடம் பெறவில்லை. சைவ இலக்கியங்களில் இடம் பெறுகின்றது. திருமால் எடுத்த மச்சம், கமடம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், இராமன், பலராமன், கிருட்டிணன், கல்கி ஆகிய பத்து அவதாரங்களின் பெருமையினையும் ஆழ்வார்கள் தங்கள் பாடல்களில் இடம்பெறச் செய்துள்ளனர். பத்து அவதாரங்களும் அவதாரப் பெயரோடு விளக்கம் பெறுகின்றன. எல்லாக் குறிப்புகளையும் நோக்கும்போது எல்லாக் காலங்களிலும் அமைவது போலவே கிருட்டிணாவதாரச் செய்திகளே மிகுதியும் ஆழ்வார்களால் பேசப்படுகின்றது. சைவ இலக்கியங்களில் சிவனுக்கு ஏற்றம் தந்து செய்திகள் அமைவது போலத் திருமாலின் பெருமை பேசும் செய்திகளாக நாலாயிரத்தில் திருமால் பற்றிய செய்திகள் அமைகின்றன. திருமாலினது பரத்துவம் ஆற்றல், காத்தல் பண்பு, அடியவர்க்கு அருளல், தீமையை அழித்தல், எளியனாகும் தன்மை, எங்கும் பரந்து நிற்கும் பண்பு ஆகியன வெளிப்பட அவதாரப் பண்புகள் விளக்கம் பெறுவதைக் காணமுடிகின்றது. திருமால் வழிபாடு பக்திக் காலத்தில் முந்தைய காலங்களைவிட வளர்ச்சி பெற்ற நிலையினையும் காண முடிகின்றது. மனிதனைப் பாடும்

நெறி மறைந்து, மன்னனைப் பாடும் நெறி தளர்ந்து இறைவனைப் பாடும் நிலை உயர்ந்து தெரிகின்றது. ஆளும் வர்க்கமாகிய மன்னர்கள் அடிபட்டுப்போய் இறைவனே எல்லாம் என்பதைக் காட்டும் நிலையில் அவதாரங்களின் நோக்கம் அமைகின்றதெனலாம்.

சங்க இலக்கியங்கள், தொல்காப்பியம் என்பவற்றை நோக்கினால் சைவமும், வைணவமும் தமிழ்நாட்டின் பழைய நெறிகள் என்பது புலனாகின்றது. பல்லவர் காலத்தில் தமிழர்க்கே உரிய சிவ நெறியும், மால் நெறியும் வைதிகரால் சைவம், வைணவம் என்று பெயரிடப்பட்டன. வழிபாட்டு முறைகளும் மாறுதல் அடைந்தன. பெரும் கோயில்கள் தோற்றம் கொண்டன. சுருங்கக் கூறின் இப் புதிய சைவமும், வைணவமும் நாயன்மார்களையும் ஆழ்வார்களையும் தோற்றுவித்தன எனலாம். நாளடையில் வடமொழி இலக்கணம் தமிழில் புகுந்தது. இம்மாறுபாடுகளைத் தேவாரம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம், திருவாசகம் முதலிய நூல்களில் காணலாம். இவை யாவும் வரலாற்றால் தமிழகத்தில் உண்டான மாறுதல்கள் ஆகும்.

சைவர்கள் வேதத்தைச் சிவபெருமான் அருளினார் என்று கூறுவது போலவே வேதத்தை உலகுக்கு அருளியவர் திருமாலே என்ற நம்பிக்கையுடைய வைணவர். உலகை உய்விப்பதற்காகக் கருணைக் கடலான இறைவன் உருக்கள் பல கொண்டதை எடுத்துக் காட்டுவர். வேதத்தைப் புணையாகக் கொண்டு உயிர்கள் கடைத்தேறாமையைக் கண்ட திருமால் உலகத்தை உய்விப்பதற்காகவும், தருமத்தை நிலை நாட்டுவதற்காகவும் தீமையை ஒழிப்பதற்காகவும் பத்து அவதாரங்கள் எடுத்தார் என்பர்.

அவதாரங்கள் மூலமும் உலகை உய்விக்க முடியவில்லை என்பதைக் கண்ட திருமால் எடுத்த அடுத்த முயற்சியே ஆழ்வார்கள் அவதாரமெனப்படுகின்றது. திருமாலின் அணிகள், ஆயுதம், வாகனங்கள் ஆகியவையே ஆழ்வார்கள் பன்னிருவராகத் தமிழ் நாட்டிலும், கேரளத்திலும் தோன்றி வேதத்தைத் தமிழ் செய்தன. சைவ மறுமலர்ச்சிக்காக நாயன்மார் தோன்றியது போல, வைணவ மறுமலர்ச்சிக்காக ஆழ்வார்கள் தோன்றினர்.

பொய்கையாழ்வார் முதலியோர் தொண்டை நாட்டிலும், திருமங்கையாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார் சோழ நாட்டிலும், பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார், மதுரகவியாழ்வார் பாண்டிய நாட்டிலும், குலசேகர ஆழ்வார் சேர நாட்டிலும் தோன்றிப் பாசுரங்களை அருளிச் செய்து வைணவ பக்தியியக்கத்தை ஆரம்பித்து வைத்தனர். ஆழ்வார்களும்,

நாயன்மார்களும் செய்த பணியால் தமிழைப் போலப் பக்திப் பாடல்கள் மிகுந்துள்ள மொழி பிறிதில்லை என்ற பெருமை தமிழுக்குக் கிடைத்தது. வட இந்திய வைணவர்கள் ''ஆழ்வார்கள் அவதரித்த நாடு'' என்று தமிழ்நாட்டை மரியாதையோடு குறிப்பிடும் நிலை தோன்றியது.

திருமால் எடுத்த அவதாரங்களை விளக்கிக் கூறும் பாகவத புராணம் முதலிய புராணங்களும், பாரதம், இராமாயணம் என்னும் இதிகாசங்களும் எழுந்தன. இதிகாசங்களில் இடம்பெற்ற கண்ணன், இராமன் அவதாரங்கள் மக்கள் மனதைப் பிணித்தன. திருமால் அவதாரக் கதைக் குறிப்புகள் தமிழ் இலக்கியத்துள் சங்க காலத்திலிருந்து இடம் பெறுகின்றன. பாரதத்தில் ஒரு பகுதியாக இடம் பெறும் பகவத் கீதை கண்ணன் வாக்காகப் புகழப் பெறுகின்றது. வைணவ சமய மறுமலர்ச்சிக்கு பகவத் கீதை வழி வகுக்கிறது. வைணவ மக்களுக்குப் பாராயண நூலாகவும், வாழ்க்கை வழிகாட்டியாகவும் விளங்குகின்றது. இந்து மத நூல்களுள் மிகவும் முக்கியமானதொன்றாகப் பகவத் கீதை கணிக்கப்படுகிறது.

கல்கி அவதாரம் இன்னும் நிகழவில்லை. இனிமேல் நிகழும் என்று நம்பப்படுகின்றது. கண்ணன் அவதாரமே திருமாலுடைய அவதாரங்களுள் மிகவும் பூரணமான அவதாரமெனப்படுகின்றது. மீன், ஆமை, பன்றி, சிங்கம் என்ற உருவங்களிலே திருமால் தோன்றி மக்களுக்கு நன்மை பயக்கும் செயல்களை ஆற்றியமையை முதல் நான்கு அவதாரங்கள் சுட்டுகின்றன.

சங்க காலத்திலேயே வடநாட்டு வைணவ சமயக் கருத்துகள் தமிழ்நாட்டுக்குள் புகுந்து கலந்து விட்டன எனலாம். திருமால் பற்றிக் குறிப்பிடும் வேதமும், புராணங்களும் வட இந்தியாவிலே தோன்றித் தென்னிந்தியாவை நோக்கிப் பரவி வந்தபோதிலும், தமிழ் நாட்டு முல்லை நிலத் தெய்வம் பற்றிய சில கூறுகளும் வைணவத்துள் கலந்தன என்றே கூறலாம். கண்ணனைப் பற்றிய கதைகள் சில தமிழ் நாட்டிலே மட்டும்தான் காணப்படுகின்றன. குருந்தொசித்தது, குடக்கூத்து முதலிய ஆடல்கள், ததிபாண்டனுக்கும் தாழிக்கும் வீடளித்தது, அவுணர் சூரியனை மறைத்தது முதலிய குறிப்புகள் தமிழ் இலக்கியத்தில் மட்டும் இடம் பெற்றுள்ளன. வட புராணங்களில் எங்குமே காண முடியாத கண்ணன் நப்பின்னை வரலாறு தமிழகத்தில் மட்டுமே பழங்கால முதல் வழங்குகின்றது. அந்த வரலாறே உருமாற்றம் பெற்று — ராதை வரலாறாக அரிவமிசம், பாகவதம், ஆகிய நூல்களில் இடம் பெற்றிருக்கலாம். இத்தகைய பல காரணங்களால் திருமால் நெறியின் பிறப்பிடம் தமிழகம் என்பார் கருத்தும் வலுப்பெறுகின்றது.

# பொதுச்செய்திகள்

ஆழ்வார் பாசுரங்களின்கண் கூறப்படும் அவதாரங்கள் அருளிச் செயல்கள் பற்றிக் கூறப்பட்டது. இவ்வதிகாரத்தில் திருமால் பற்றிய பல்வேறு புராணக் குறிப்புகளில் காணப்பெறும் பொதுவான செய்திகள் ஆராயப்பெறும். வேதம், ஆகமம், உபநிசத்துக்கள், பழைய புராண இதிகாசங்கள் என்பன வடமொழி யிலேயே எழுந்தன. இந்த நூல்களிலுள்ள கருத்துகளும், கதைக் குறிப்புகளுமே பக்திப் பாடல்களில் இடம் பெறுகின்றன. ஆனால் பக்திப் பாடல்கள் இவற்றுக்குப் புதிய உருவத்தையும், புதிய சக்தியையும் கொடுக்கின்றன.

1. **அன்னமாகி அருமறை பயந்தது :** மதுகைடவரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களைப் பறித்துக் கொண்டு கடலில் மூழ்கி மறைந்து விட்டார்கள். ஞான ஒளியைத் தரும் வேதங்கள் மறைந்ததனால் உலகில் பேரிருள் மூடி வருத்தியது. பிரமனை உள்ளிட்ட தேவர்களனைவரும் திகைத்து வருந்தினர். அவர்களுக்காக மனமிரங்கித் திருமால் கடலினுட் புகுந்து அவ்வசுரர் களைத் தேடிக் கொன்று வேதங்களை மீட்டுக் கொண்டு வந்து அன்ன வடிவில் நின்று பிரமனுக்கு உபதேசித்தருளினான். இச்செய் தியினைப் பெரியாழ்வார் விளக்கமாகக்கூறி

> ''அன்றன்னம தானானே அச்சோ அச்சோ !
> அருமறை தந்தானே அச்சோ அச்சோ !

என எடுத்துரைக்கின்றார்.[246] பெரியாழ்வார் போன்று திருமங்கை யாழ்வாரும் இச்செய்தியை விளக்கி ''அன்னமாய் அன்றங் கருமறை பயந்தான்''[247] என எடுத்துரைப்பதனைக் காணலாம்.

மதுகைடவர்கள் என்பவர் திருமாலின் ரஜஸ்தமோ குணங்களின் வடிவாகத் தோன்றியவர்கள். ''எம்மை நீ கொலை புரிக'' என்று தம் வாயால் சொல்லிய பின்னரே தம்மைப் பிறர் கொல்லலாகும் என்று வரம் பெற்றவர். இனிய பாட்டொலியினால் தம்மை ஏமாற்றித் தாம் கவர்ந்து சென்ற வேதங்களைக் காணாது திருமாலிடம் போரிட்டனர். திருமாலுக்கும், மதுகைடவர்களுக்கும் வெற்றி தோல்விகளின்றி நெடுங்காலம் போர் நிகழ்ந்தது. திருமாலின் ஆற்றலை வியந்த அவ்வசுரர்கள் ''உனது ஆற்றலுக்கு உவந்தோம். வேண்டும் வரம் பெற்றுக்கொள்'' என்ன, திருமால் யான் உங்களைக்

---

246. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 9 - 10
247. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 7 - 3

கொல்ல வேண்டும் என்று வரம் வேண்ட அவர்கள் வரமளிப்பத் திருமால் தனது துடையில் அவ்வசுரர்களை இறுக்கிக் கொன்றான் என்பது கதை. அம்மதுகைடவர்களைக் கொன்றதால் திருமாலுக்கு ''மதுகைடபமர்த்தனன்'' எனப் பெயருண்டாயிற்று. மதுகைடவர்களைக் கொன்ற செய்தி,

''வளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள் உலப்பில்
வலியால் அவர்பால், வயிரம்
விளைந்திட்ட தென்றெண்ணி விண்ணோர் பரவ
அவர் நாளொழித்த பெருமான்''[248]

எனப் பெரிய திருமொழியில் பேசப்படுவது காணவாம்.

2. **ஆனைக்கு அருள் செய்தது :** திருமாலடியாரான இந்திரத்யும்நன் என்னும் அரசன் திருமால் பூசையில் ஈடுபட்டிருந்த போது அவ்விடம் வந்த அகத்திய முனிவரைக் கவனியாதிருந்தான். அரசனது அருமையறியாது அகத்திய முனிவர் தன்னை அவன் மதிக்கவில்லையென்று தவறாக உணர்ந்து அவனை யானையாகச் சபித்தார். சாபத்தால் யானையாயினும் திருமால் பக்தி குறையா அவ்வியானை நாள்தோறும் தாமரை மலர்களைப் பறித்துக் கொண்டு வந்து திருமாலைப் பூசிப்பதில் தவறாதிருந்தது. தேவலனென்னும் முனிவன் தண்ணீரில் நின்று தவஞ் செய்து கொண்டிருக்கையில் அவர் காலைப்பற்றி ஈர்த்ததன் காரணமாக முனிவரால் முதலையாகச் சபிக்கப்பெற்ற ஹுஹு என்னும் கந்தர்வன் நாட்பூசைக்கு மலர் பறிக்கத் தடாகத்தில் இறங்கிய கசேந்திரனது காலைப் பற்றிக் கொண்டான். செய்வதறியாது திகைத்த கசேந்திரன் ஆதிமூலமே என்று திருமாலிடம் முறையிட பக்தர்க்கெளியோனாகிய திருமால் உடன் வந்து முதலையைக் கொன்று யானையை விடுவித்தான். ஹுஹு என்னும் கந்தர்வனும், இந்திரத்யும்நன் ஆகிய அரசனும் சாப விடுதலை பெற்றுத் தத்தம் பழைய நிலையை அடைந்தனர்.

''மூலப்பே ரிட்டழைத்த மும்மதமால் யானைக்கு
நீலக் கரிபோல் முன்னின்ற நெடுமாலே''

என இச்செய்தியினை வில்லிபுத்தூரார் தம் பாரதத்தில் பேசுவதைக் காணலாம்.[249]

---

248. நா. தி. பிர. பெரிய திருமொழி - 10 - 6 - 3
249. வில்லிபுத்தூரார் பாரதம் -
கிருட்டிணன் தூதுச் சருக்கம் - செய்யுள் - 35

இப்புராணக் கதை திருவாய்மொழியில் பல இடங்களில் பேசப் படுகின்றது. ''ஆனையி னருந்துயர் கெடுத்த அரங்கத்தம்மா''[250] எனத் தொண்டரடிப் பொடியாழ்வாரும்,

''யானை யிடர்தீர்த்த கருமுகிலை''[251]
''முதலை துணிபடச் சுடுபடை துரந்தோன்''[252]

எனத் திருமங்கையாழ்வாரும்,

''பூந்தண் புனல் பொய்கை யானை இடர்கடிந்த
பூந்தண் துழாயென் தனி நாயகன்''[253]
''கைம்மா துன்பம் கடிந்த பிரான்''[251]
''ஆனையின் நெஞ்சிடர் தீர்த்த பிரான்''
''களிற்றுக் கருள்செய்த பெருமான்''[256]

என நம்மாழ்வாரும்,

''மேலொரு நாள் கைந்நாகம் காத்தான்''[257]

எனப் பொய்கையாழ்வாரும், ''பூக்கொய்யச் சென்ற யானை முதலையால் பற்றப்பட்டபோது ஆழியானைப் பணிந்தல்லவா வீடு பெற்றது''[258] எனப் பூதத்தாழ்வாரும் திருமால் கசேந்திரனுக்கு செய்ததை எடுத்தியம்புவதைக் காணலாம்.

**3. கடல் கடைந்தது :** தேவர்களும், அசுரர்களும் சேர்ந்து திருப்பாற் கடலைக் கடைந்தபோது மத்தாகிய மந்தர மலை கடலில் அழுந்தாதிருக்கத் திருமால் ஆமையாகித் தன் முதுகில் மந்தர மலை யைத் தாங்கினான் என்பது கமடாவதாரத்தினால் உணரப்படுவது. தேவர்களும், அசுரர்களும் கடல் கடைய இயலாமல் சோர்ந்திருக்கத் திருமால் வாசுகியின் தலை, வால் ஆகிய இருபுறங்களையும் பற்றித்

---

250. நா. தி. பிர. திருப்பள்ளியெழுச்சி - 2
251. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 9 - 1
252. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 1 - 2
253. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 8 - 2
254. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 3 - 1
255. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 10 - 8
256. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 7 - 2
257. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 47
258. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - 13

தான் ஒருவனாகவே கடலைக் கடைந்து அமுதங் கொடுத்தான் என்பர். இச்செய்தியை,

''அமரர்க் கமுதீந்த ஆயர் கொழுந்தை''[259]
''கண்ணாளா கடல் கடைந்தாய்''[260]
''அலைகட லரவம் அளாவிஓர் குன்றம்வைத்த எந்தாய்''[261]
''கடல் கடைந்த கோல மாணிக்கம்''[262]

என நம்மாழ்வாரும், மேலும் இச்செய்தியை விளக்கமாகப் பொய்கை யாழ்வாரும்[263], திருமங்கையாழ்வாரும்[264] தங்கள் பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளதைக் காணலாம்.

**4. மோகினி அவதாரம்:** திருப்பாற் கடலைக் கடைந்து அமுத கலசம் கிடைத்ததை அசுரர் கொண்டு செல்லத் திருமால் அழகிய பெண்ணுருவம் கொண்டு அசுரர்களை வஞ்சித்து அமுத கலசத் தினைப் பெற்றுத் தேவர்களுக்குக் கொடுத்தான். எனவே தேவர்கள் அழியாத நிலை பெற்றனர் என்பது ''அமுதம் தேவர் உண்ண அசுரரை வீடும் வண்ணங்களே செய்துபோன வித்தகமும்''[265], ''வானவரைப் பெண்ணாகி யமுதூட்டும் பெருமானார்''[266], ''பெண்ணாகி யின்னமுதம் வஞ்சித்தானை''[267] என வரும் பாசுரங் களால் அறியப்படுகின்றது.

''மோகினி அவதாரம்'' பற்றிய கதைகள் மேலும் பல கூறப் படுவது யாவரும் அறிந்த ஒன்று. மோகினி அவதாரங்கொண்ட திருமாலுக்கும், சிவனுக்கும் பிறந்தவரே மணிகண்டன் என்று தற்காலத்தில் பாராட்டப்படும் ஐயப்பன் சாமி என்பர்.

**5. கற்பக மரம் கொண்டுவந்தது:** நரகாசுரன் என்பவனை அழித்தபின் கண்ணன் மனைவியான சத்தியபாமையுடன் இந்திர லோகம் சென்றான். அங்கு இந்திராணி சத்தியபாமைக்கு பலவித

---

259. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 7 - 9
260. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 9 - 1
261. நா. தி. பிர. திருவாய்மொழி- 7 - 1 - 7
262. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 4 - 4
263. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 81
264. நா. தி. பிர. சிறிய திருமடல்கண்ணி - 47 - 48
265. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 10 - 10
266. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 5 - 1
267. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 5 - 8

விசேடங்களைச் செய்தும் சத்தியபாமை மானிடப்பெண்ணாகையால் பாரிசாத மலரை அவளுக்குச் சூட்ட மனமில்லாதவளானாள். இதனைக் கண்ணுற்ற சத்தியபாமை கிருட்டிணனிடம் பாரிசாத மரத்தையே துவாரகைக்குக் கொண்டு வரவேண்டும் எனத் தன் விருப்பத்தை எடுத்துரைத்தாள். கண்ணன் பாரிசாத மரத்தை வேரோடு பறித்துக் கருடன்மேல் ஏற்றி வருகையில் இந்திராணியின் ஏவலால் இடைமறித்த இந்திரனையும், அவனது தேவ சேனைகளையும் சங்கநாதத்தினால் பங்கப்படுத்திப் பாரிசாத மரத்தைத் துவாரகையில் கொண்டு வந்து நாட்டியருளினான்.

''மட்டவிழ் குழலிக்கா வானோர்காவில்
மரங்கொணர்ந்தான்''[268]

''ஏவிளங் கன்னிக்காகி இமையவர் கோனைச் செற்று
காவளம் கடிதிறுத்துக் கற்பகம் கொண்டு போந்தாய்''[269]

என வரும் பெரிய திருமொழிப் பாசுர அடிகள் கண்ணன் தன் மனைவிக்காகக் கற்பக மரத்தைக் கொண்டு வந்து பூவுலகில் நாட்டியதை எடுத்தியம்புகின்றன. மேலும் பெரியாழ்வார் திருமொழிப் பாசுரமொன்றும் இச்செய்தியை விளக்கமாகப் பேசுகிறது.[270]

**6. மதி கோள் விடுத்தது :** சந்திரன் தக்க முனிவனது பெண்களாகிய அசுவினி முதலிய இருபத்தேழு பேரையும் மணந்து கொண்டு அவர்களில் உரோகிணியிடத்தில் மட்டும் மிக்க அன்புடன் வாழ்ந்து மற்றைய மனைவிமார்களைக் கடைக்கணியாதவனாயினான். இதனைக் கேள்விப்பட்ட தக்க முனிவன் சினங்கொண்டு சந்திரனைச் ''சயமடை வாயக'' எனச் சபித்தான். முனிவனது சாபம் பலிக்க அதனால் சந்திரன் பதினாறு கலை வடிவமாக உள்ள தனது உடல் நாளடைவில் குறைபவனானான். தனது அழிவைப் போக்கிக் கொள்ளப் புகலிடமொன்றும் காணாத சந்திரன் திருவரங்கத்தையடைந்து அங்குள்ள ஒன்பது தீர்த்தங்களில் ஒன்றான புண்ணிய தீர்த்தத்தில் நீராடி அதன் கரையிலுள்ள புன்னை மரத்தடியில் இருந்து அரங்கனைக் குறித்துத் தவஞ் செய்தான். அவனுடைய தவத்திற்குப் பலனாக திருவரங்கப் பெருமான் அவன் முன் தோன்றி முனிவரது சாபத்தால் தேய்ந்து வரும் கலைகள்

---

268. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 4 - 8
269. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 6 - 8
270. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 9 - 1

நாள்தோறும் வளர்ந்து வரும்படி அருள்பாலித்தனர். இப்புராணக் கதையினை,

> ''மூவர் வானவர்தம் முதல்வா !
> மதி கோள்விடுத்த தேவா !''[271]
>
> ''முற்றா மாமதி கோள் விடுத்தானை''[272]

எனத் திருமங்கையாழ்வார் தம் பெரிய திருமொழியில் எடுத்துரைக்கக் காணலாம்.

**7. வாணாசுரன் போர் :** பலிச்சக்கரவர்த்தியின் குலத்தில் பிறந்தவன் வாணாசுரன். அவனது நகரம் 'வீரசோ' என்பதாகும். வாணாசுரனுக்கு உஷை என்று ஒரு மகளிருந்தாள். உஷை தன் கனவில் ஒரு அழகிய ஆடவனோடு கூடியுள்ளதாகக் கனவு கண்டாள். தான் கண்ட கனவினைத் தன் தோழியாகிய சித்திரலேகைக்குத் தெரிவித்தாள். சித்திரலேகை தனது யோக மகிமையினால் தன் தோழி உஷையின் கருத்தினைக் கவர்ந்தவன் யார் என்று எண்ணிப் பார்த்துக் கிருட்டிணனுடைய பேரனும், பிரத்யும்நனனது மகனுமாகிய அநிருத்தனே என உணர்ந்தாள். தன் மாயையின் வன்மையால் துவாரகை சென்று எவருமறியாமல் அநிருத்தனைத் தூக்கிக் கொண்டு வந்து உஷையினுடைய அந்தப்புரத்தில் இருத்தினாள். அநிருத்தனோடு கூடி மகிழ்ந்திருந்ததை ஏவலாட்கள் மூலம் உணர்ந்த வாணாசுரன் அநிருத்தனைச் சிறையிலிட்டான்.

துவாரகையில் அநிருத்தனைக் காணாமல் எல்லோரும் கலங்கியிருக்க, நாரத முனிவன் அநிருத்தன் வீரசோ நகரில் வாணனால் சிறையிடப்பட்டிருப்பதைக் கூற அறிந்து கண்ணன் பலராமனுடன் வீரசோ நகருக்குச் சென்று அந்நகரைக் காவல் காத்து வந்த சிவபெருமானது கணங்களை அழித்துச் சிவபெருமானால் ஏவப்பட்ட வெப்பத் தேவதையை அழித்து, வாணனுக்காகப் பரிந்து வந்த சிவபெருமானைச் சோர்வடையும்படி செய்து, சிவனுடன் வந்த முருகன், கணபதி ஆகியோரைத் தனது ஊங்கார ஒலியினால் விரட்டித் தனது சக்ராயுதத்தினால் வாணனது தோள்களைத் துணித்தான். சிவனுடைய வேண்டுகோளுக்கிணங்க வாணனை நான்கு கைகளுடன் விட்டுவிட்டார். பின்னர் உஷை - அநிருத்தன்

---

271. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 2 - 8

272. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 9 - 7

திருமணம் இனிது நடைபெற்றது. இந்நிகழ்ச்சி நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பலவிடங்களில் பேசப்படுகின்றது.

"மோடியோடி லச்சையாய சாபமெய்தி முக்கணான்
கூடுசேனை மக்களோடு கொண்டுமண்டி வெஞ்சமத்
தோட, வாணனாயிரம் கரங்கழித்த வாதிமால்"

எனத் திருமழிசைப் பிரானும்"[273],

"வள்ளி கொழுநன் முதலாய மக்களோடு முக்கண்ணான்
வெள்கியோட விறல் வாணன் வியன்தோள்
வனத்தைத் துணித்துகந்தான்"

எனத் திருமங்கையாழ்வாரும்[274] கூறும் செய்தியாலும், இன்னும் சில பாசுர அடிகளாலும் இச்செய்தி விளக்கம் பெறுகின்றது.[275-276] மேலும் கோழிக் கொடியுடைய முருகனும், அக்கினித் தேவனும், முக்கண் மூர்த்தியும் திருமால்வாணன் தோள் துணித்த காலத்தில் தோற்றோடினர்[277] என்றும் வாணபுரம்புக்குச் சிவன்தோற்றோடும்படி செய்து வாணனது ஆயிரம் தோள்களைத் துணித்தான்[278-280] எனவும் வரும் நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரச் செய்திகள் வாணாசுரனது ஆயிரம் கரங்களைத் துணித்ததும் அப்போரில் சிவபெருமான் தன் மக்களோடு தோற்றோடியதும் பற்றிப் பேசுவதனைக் காணலாம். இவைகளேயன்றித் திருமங்கையாழ்வார் தாம் பாடிய பெரிய திருமடலில் வாணன் மகள் உஷை தன்னுடைய தோழி சித்திரலேகையின் உதவியினால் அநிருத்தனை அடைந்து இன்பமனுபவித்த செய்தியினை எடுத்துரைப்பதனைக் காணலாம்.

வாணனுக்காகப் பரிந்து வந்த சிவனும், அவனது மக்களும் போர்களத்திலிருந்து ஓடியதை அட்டப்பிரபந்தம் பாடிய பிள்ளைப் பெருமாளையங்கார் திருவரங்கக் கலம்பகத்தில் எடுத்துக் கூறித் திருமாலின் ஏற்றத்தைப் பறைசாற்றுவதைக் காணலாம்.[281]

---

273. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 53
274. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 7 - 6
275. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 4 - 2
276. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 4 - 8
277. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 4 - 8
278. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 10 - 7
279. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 92
280. நா. தி. பிர. நம்மாழ்வார் திருவிருத்தம் - 78
281. நா. தி. பிர. திருவரங்கக் கலம்பகம் - 305

**8. ஆலிலை மேல் துயின்றது :** ஊழிக்காலத்தில் கடல் பெருகி எங்கும் வெள்ளம் பரவி உலகம் அழியும் தறுவாயில் திருமால் தனது பேராற்றலினாலே உலகையெல்லாம் தன் திருவயிற்றிலொடுக்கி ஆதிசேடனின் அமிசமான சிறியதோர் ஆலிலைத் தளிரிலே யோக நித்திரை புரிவதாக நூல்கள் கூறும். பிரளய காலத்தில் ஆலிலை மேல் திருமால் துயின்றவன் என்பதற்குச் சான்று பகருவதுபோல் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் சில உள்ளன.

''வெள்ளத்துள் ஓர் ஆலிலை மேல் மேவியடியேன் மனம் புகுந்து'' எனத் திருமங்கையாழ்வாரும்,[282], [283] ''அடியார்ந்த வையமுண் டாலிலையன்ன வசஞ்செய்யும்''[284] ''பாலகனாய் ஆலிலை மேல், பையஉலகெல்லாம் மேலொருநாள் உண்டவன்''[285] ''ஆலில் துயின்றதும் ஆரறிவார்''[286] என வரும் பாசுர அடிகளும் திருமால் வெள்ளப்பெருக்கிலே ஒரு குழந்தையாக ஆலிலை மேல் கிடந்தான் என்று பேசுவதைக் காணலாம்.

**9. சிவனை மார்பிலடக்கியவன் :** சிவபெருமானது பெருமையைப் பாடுகின்ற சிவனடியார்கள் சிவன் திருமாலை ஒரு கூறாகக் கொண்டவன் என்பர். பிற்காலப் புலவர்களாகிய இரட்டையர் அரனுக்குப் பெண்பால்தான் அரி என்றும் கூறுவர். உமாதேவியார் திருமாலின் தங்கை என்று கூறுவது உலகியற்கை. ஆயினும் ஆழ்வார்கள் பாடிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பல இடங்களில் திருமால் சிவனை ஒருகூறாக உடையவன் என்று எடுத்துரைப்பதனைக் காணலாம்.

''வானார் மதிபொதியும் சடைமழு வாளியொடொருபால் தானாகிய தலைவன்''[287] ''ஏருருவில் மூவருமே யென்ன நின்ற இமையவர் தம் திருவுருவே''[288], ''குலவரையன் மடப்பாவை யிடப்பால் கொண்டான் பங்கத்தாய்''[289] ''ஏறாரு மிறை யோனுந் திசைமுகனுந் திருமகளும் கூறாளுந் தனியுடம்பன்''[290]

---

282. நா. தி. பிர. திருமங்கையாழ்வார் - 7 - 5 - 4
283. நா. தி. பிர. திருமங்கையாழ்வார் - 8 - 10 - 2
284. நா. தி. பிர. திருவாய்மொழி - 3 - 7 - 10
285. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - பாடல் - 33
286. நா. தி. பிர. நான்காம் திருவந்தாதி - 3
287. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 9 - 4
288. நா. தி. பிர. நெடுந்தாண்டகம் - அடி - 27
289. நா. தி. பிர. நெடுந்தாண்டகம் - 9
290. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 1

''சடாமுடியுடையான் ஒரு பாகத்தில் கொண்டவன்''[291] ''பொருந்து மூவுருவன்''[292,293] ''செஞ்சடையான் ஆகத்தான்''[294] என வரும் பாசுர அடிகள் திருமால் சிவனை ஒருகூறாகக் கொண்டவன் என எடுத்துரைப்பதைக் காணலாம்.

**10. சிவனுடைய துன்பத்தைப் (சாபத்தைப்) போக்கியது :** பிரமனுக்குச் சிவன் போலவே ஐந்து தலைகள் இருந்தன. இதனால் பார்ப்பவர்களுக்குச் சிவனோ, பிரமனோ என ஐயம் ஏற்படுவதுண்டு. அதனால் பிரமதேவனது ஐந்து தலைகளில் ஒன்றைச் சிவன் கிள்ளியெறிந்தான். அவ்வாறு கிள்ளியெறியப்பட்ட பிரம கபாலம் சிவனது கையில் ஒட்டிக்கொண்டது. செய்வதறியாது சிவன் திகைக்கையில் பிரமன் தலையைக் கிள்ளியெடுத்த பாவம் தீரச் சிவன் பிச்சையெடுக்க வேண்டும். அக்கபாலம் என்று நிறையுமோ அப்போதே சிவன் கையில் ஒட்டிக் கொண்ட பிரம கபாலம் அவன் கைவிட்டு நீங்குமெனத் தேவர்களும் முனிவர்களும் கூறினர். சிவபெருமான் பல தலங்களுக்குச் சென்று பலகாலம் பிச்சையேற்றுக் கொண்டே வருந்தித் திரிந்தும் அக்கபாலம் நிறைந்தபாடில்லை. பின்பு ஒருநாள் சிவன் பத்ரிகாச்ரமத்தை அடைந்து அங்கு எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது திருமால் ''அட்சயம்'' என்று பிச்சையிட உடனே கபாலம் நிறைந்து சிவன் கையை விட்டகன்றது. இச்செய்தி வைணவ நூல்கள் பலவற்றுள் பேசப்படுவது. நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் இதனைப் பலவிடங்களில் பேசக் காணலாம். இதனை, தக்கனது வேள்வியைத் தகர்த்த தலைவனாகிய சிவபெருமானது துக்கத்தைத் துடைத்தவன் திருமால்[295], ''அரன் செய்த மாபாவம் நீங்க அவனது கபாலத்தில் பிச்சையிட்ட கோபால கோளரி''[296], ''குமரனார் தாதை துன்பம் துடைத்த கோவிந்தனார்''[297] பிறை சூடிய செஞ்சடையான் திருமாலைக் குறையிரந்து தன் பாவத்தைப் போக்கிக் கொண்டான் என்றெல்லாம் கூறுகின்றார் பூதத்தாழ்வார்.[298]

---

291. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 10
292. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 4 - 2
293 நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 4
294. நா. தி. பிர. பெரிய திருவந்தாதி - 71
295. நா. தி. பிர. பெரிய திருமொழி - 5 - 2 - 6
296. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 2 - 2
297. நா. தி. பிர. திருவாய்மொழி - 10 - 2- 6
298. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - 17

கல்லால மரத்தடியினின்று சனகாதி முனிவர்க்குச் சொல்லாமல் சொல்லிய சிவபெருமான், உலகமளந்தவனும், திருப்பாற்கடலில் இருப்பவனும் ஆலிலையில் துயின்றவனுமாகிய திருமாலை வணங்குமாறு நாமும் ஆழியானையே வணங்க வேண்டும் என்கிறார் திருமழிசையாழ்வார்.[299] ''செந்நிறமுடைய சிவன் பூக்கொண்டு ஏத்தும் திருமாலையன்றி எனது நாவினைக் கொண்டு சாதாரண மனிதரைப் பாடமாட்டேன்'' எனத் திருமழிசையாழ்வார் எடுத்துரைக்கின்றார்.

புலவர்கள் பொருள் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு மிகச் சாமானியரையும் பாடும் நிலை பிற்காலத்து ஏற்பட்டது. மாட்சியில் பெரியோராயினும் வியந்து கூறாத பண்பாடு வேண்டும் எனச் சங்கப்புலவர் கூறுகின்றார்.[300]

மேற்கூறிய பல எடுத்துக்காட்டுகளினால் சிவபெருமானது பாவத்தைத் திருமால் போக்கினார் என்பது பெறப்படுதலைக் காணலாம்.

**11. மார்க்கண்டேயனுக்கு ஈசன் வாழுநாள் அளித்தமைக்குத் திருமாலே காரணமானவன் :** மிருகண்டு முனிவரின் மகனான மார்க்கண்டேயனுக்கு அயன் அளித்த ஆயுள் பதினாறாண்டுகள். பதினாறாவது வருடம் நெருங்க மார்க்கண்டேயனது தாய் தந்தையர் இன்னலில் மூழ்க அதன் காரணத்தை உணர்ந்த மார்க்கண்டேயன் சிவபெருமானைக் குறித்துத் தவமிருந்தான். பதினாறு ஆண்டு நிரம்பியதும் எமதூதுவர் வந்து மார்க்கண்டேயன் உயிரைக் கொள்ள நினைக்க மார்க்கண்டேயனது தவ வலிமையால் அவனை நெருங்க இயலாமல் எமனிடம் சென்று அவன் தவமகிமையை எடுத்துரைத்தனர். எமன் தன் அமைச்சனான காலனை ஏவ அவனும் மார்க்கண்டேயனைக் கவர இயலாமையின் எமனே நேரில் சென்று தனது கால பாசத்தினால் மார்க்கண்டேயனையும் அவன் தழுவிக் கொண்டிருந்த சிவலிங்கத்தையும் சேர்த்திழுக்கத் தொடங்கினான். உடனே சிவபிரான் நாராயணனை மனத்தில் சிந்தித்து அவனது திருவருள் பெற்று, சிவலிங்கத்தினின்று வெளிப்பட்டு யமனைக் காலால் உதைத்துத் தள்ளி மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறு வயதாக இருக்கும்படி வாழ்த்தினர்.

---

299. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 17

300. புறம் - 192

இவ்வாறு எமனை எட்டியுதைக்கும் வன்மையைச் சிவன் பெற்றது நாராயணன் அருளாலே என ஆழ்வார்களும் எடுத்துரைப் பதனைக் காணலாம்.

''புக்கடிமையினால் தன்னைக் கண்ட மார்க்கண்டேய னவனை
நக்க பிரானுமன்று உய்யக் கொண்டது
நாராயணன் அருளே''[301]

''மறுத்தும் அவனோடே கண்டீர் மார்க்கண்டேயனும் கரியே''[302]

மார்க்கண்டேயனுக்கு ஈசன் சாகா வரமளித்தது திருமால் அருள் என்று உணர்ந்தும் கண்ணனுக்கு ஆளாகாமல் இருப்பரோ கற்றார்[303]. என வரும் பாசுர அடிச் செய்திகள் திருமாலின் அருள் பெற்றே ஈசன் மற்றையோருக்கு வரமளிப்பான் என்று எடுத்துரைப்பதைக் காணலாம்.

சிவன் நாராயணனது பெயரைச் சொல்லுகின்ற ஆசையுடையவனாய் இருப்பதால்தான் தன்னை வாழ்த்துவோருக்கு வரங்கள் அளிக்க முடிகின்றது எனக் கம்பர் கூறுவதையும் காணலாம்.[304] வாலி சிவபக்தன். மூன்று வேளையும் சிவ பூசை செய்பவன். சிவ பெருமானது பாதங்களையன்றி வேறொன்றையும் வணங்காதவன். அவன் வாயிலாகவே கம்பர் திருமாவின் ஏற்றத்தைக் கூறுவது வியத் தற்குரிய ஒன்று எனலாம்.

**12. சிவன் முடிமேல் பாய்ந்த கங்கை திருமால் அடிசேர்ந்து அருள் பெற்றமை :** திருமால் உலகமளந்த காலத்தில் மேலே சத்திய லோகத்திற் சென்ற அவரது திருவடியைப் பிரமன் தன் கைக் கமண்டலத்தினால் கழுவி விளக்க அது ஒரு தீர்த்தமாகப் பெருகி ஆகாய கங்கையாக மாறியது. சகர புத்திரர் அறுபதினாயிரவரை நற்கதி பெறும் பொருட்டு நெடுங்காவம் தவஞ்செய்து பகீரதன் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவர முயன்றபோது அக்கங்கை சிவன் முடியில் தரிக்கப் பெற்றுச் சிறிது சிறிதாய்ப் பூமியில் விடப்பட்டது. சிவபெருமான் முடியில் தங்கிய கங்கை திருமால் அடியில் பட்டுப் பெருமை பெற்றாள் என்று பொய்கையாழ்வார் கூறுகின்றார்.

---

301. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 10 - 8
302. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 2 - 7
303. நா. தி. பிர. திருவாய்மொழி- 7 - 5 - 7
304. கம்பராமாயணம் - கிஷ்கிந்தை - வாலிவதை - செய்யுள் எண் - 368

''பிடிசேர் களிறளித்த பேராளா ! உன்றன்
அடிசேர்ந் தருள் பெற்றாள் அன்றே, — பொடிசேர்
அனல்கங்கை யேற்றான் அவிர்சடை மேல்பாய்ந்த
புனல் கங்கை யென்னும்பேர்ப் பொன்?''[305]

இதனையே பேயாழ்வாரும், ''அங்கை நீரேற்றாற் கலர்மேலோன் கால் கழுவ கங்கை நீர் கான்ற கழல்''[306] என எடுத்துரைக்கின்றார்.

**13. ஈசனை வென்ற சிலை கொண்டவன்** : முன்னொரு காலத்தில் தேவதச்சனாகிய மயன் மேரு மலையினின்று இரண்டு துண்டங்கள் எடுத்து இரு விற்கள் செய்து அவற்றை ஈசற்கொன்றும், திருமாலுக்கொன்றும் கொடுத்தான். இந்த இரண்டு விற்களில் ஆற்றலுடையது எது என அறிய விழைந்த தேவர்கள் பிரமன் மூலம் ஈசற்கும், திருமாலுக்கும் போர் மூட்டிவிட்டனர். அப்போரில் ஈசனுடைய வில் சற்று ஒடிந்தது. ஈசற்குக் கோபம் வந்து வில்லையே கையிலெடுத்து நாண் பூட்டாமல் போர் செய்யத் தொடங்கினார். இதனைக் கண்டஞ்சிய தேவர்கள் இரு தேவர்களையும் சினந் தணிந்து போரை நிறுத்துமாறு வேண்டிக்கொண்டனர். அவ்வாறு ஈசன் கையில் பழுதுபட்ட வில்லை ஜனக குலத்துத் தேவராதனென் பவனிடம் கொடுத்தார். அவ்வில்லையே ஜனகராசன் சீதைக்குக் கன்யாசுல்கமாக வைத்தான். திருமால் தன் கைவில்லை சமதக்கினி முனிவரிடம் கொடுக்க அது பரசுராமன் கைக்கு வந்தது, சிவதனுசை எடுத்து நாணேற்றி இராமன் ஒடித்தபின் சீதையை மணந்து அயோத்தி திரும்புகையில் பரசுராமன் இடைமறித்து இராமனை நோக்கிப் பழுதுபட்ட வில்லை ஒடிப்பது ஆண்மையாகாது. தன்னிட முள்ள திருமால் தனுசினை வாங்கினால் போதும் எனக்கூற இராமன் அவ்வில்லை வாங்கி நாணேற்றி அதற்கு இலக்கு யாதெனப் பரசுராமனை வினவப் பரசுராமன் தன் தவ வலிமையெல்லாம் அவ் வம்புக்கு இலக்காக்கி வன்மையிழந்து போயினான். இச்செய்தியினைக் கம்பர் பரசுராமப் படலத்தில் பரக்கப் பேசுவதனைக் காணலாம்.[307]

திருமால் இராமனாக நின்று சிவனை வென்ற வில்லினை எடுத்து நாணேற்றிய பெருமையைத் திருமழிசையாழ்வார், ''ஈசனை வென்ற சிலை கொண்ட செங்கண்மால் அல்லது தனக்கு மற்றோர் துணையில்லை'' என்று கூறுகின்றார்.[308]

---

305. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 97
306. நா. தி. பிர. மூன்றாம் திருவந்தாதி - 6
307. கம்பராமாயணம் - பரசுராம படலம் - செய் - 39
308. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 8

**14. சிவனைத் தோற்றுவித்தவன் திருமால்:** சைவப்பெரியார்கள் சிவனைப் ''பிறவா யாக்கைப்பெரியோன்'' எனக்கூறுவர். ''தாயுமிலி, தந்தையிலி, தான் தனியன்'' என்பார்கள். சிவனே முழுமுதற் கடவுள் என்றும் கூறுவார்கள். வைணவப் பெரியோர்கள் நாராயணன் தான் முதற்கடவுள் என்பர். திருமழிசையாழ்வார் தான் பாடியருளிய நான்முகன் திருவந்தாதியில்,

''நான்முகனை நாராயணன் படைத்தான், நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான் - யான்முகமாய்
அந்தாதி மேலிட்டறிவித்தேன் ஆழ்பொருளை
சிந்தாமல் கொண்மின் நீர் தேர்ந்து''[309]

என்று இக்கருத்தை வலியுறுத்தக் காணலாம்.

உலகம் கடலால் சூழப்பட்டுப் பெரும்பாழான காலத்து, எல்லாப் பொருட்களுக்கு வித்தாக இருக்கின்ற திருமால் பிரமதேவனைப் படைத்து அவன் மூலம் முக்கண் ஈசனையும், பல தேவர்களையும் மூவுலகத்தவர்களையும் படைத்தான் என்று ஆழ்வார்களில் பெரிதும் மதிக்கப்படுபவரான நம்மாழ்வார் கூறுகின்றார்.[310]

இதனால் அறியப்படுவது எத்துணைப் பெரியோராகிலும் தம் கடவுளையே உயர்ந்தவர் என்று கூறும் கருத்து அடியவர்களிடையே தன்னையறிந்தோ, அறியாமலோ வேரூன்றியிருந்தது புலனாகின்றது. இவ்வாறு கூறுவது அக்காலத்தில் அடியார்கள் கூட்டத்தில் ஒரு மரபாயிருந்தது எனலாம்.

**15. திருமால் பெருமை :** இதுகாறும் திருமாலினது செயற்கரிய செயல்களும், பக்தர்க்கு அருள் புரிந்த தன்மை மற்றும் அவனது உயர்ச்சிகள் பலவும் கூறப்பட்டன. இனி முக்கடவுளரில் திருமால் தான் உயர்ந்தவன், முக்கடவுளும் அவனே, சிவனும் பிரமனும் திருமாலுக்கு அடுத்தபடியான கடவுளரே, சிவனும், பிரமனும் திருமாலை வணங்கும் தெய்வங்களே என்பன போன்ற திருமாலின் உயர்வு பற்றி ஆழ்வார்கள் கூறுவனவற்றைக் காண்போம்.

''மூவரில் முதல்வனாய ஒருவனை''[311] என வரும் குறுந்தாண்டகப் பாடலடியும், ''பாருருவில் நீரெரிகால் விசும்புமாகி'' எனத் தொடங்கும் நெடுந்தாண்டகப் பாடலும் திருமால் ஐம்பூதங்களாகவும், பல்வேறு சமயங்களில் பரந்து நின்று சிவன், திருமால்,

309. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 1
310. நா. தி. பிர. திருவாசிரியம் - 4
311. நா. தி. பிர. குறுந்தாண்டகம் - 6

அயன் ஆகிய மூவுருவமும் கலந்து நின்றவன் என்னும் கருத்துப்பட அமைந்து

> ''மூவுருவும் கண்டபோ தொன்றாம் சோதி
> முகிலுருவம் எம்மடிகள் உருவந்தானே''[312]

என்று விளக்குவதைக் காணலாம்.

> ''புள்ளூர்திக் கடவுளான திருமாலை சிவன்
> நான்முகன் இந்திரன் வானவர் பணிந்தேத்துவர்''[313]

> ''நாராயணன் தரமறிய சிவனுக்கும்
> பிரமனுக்கும் இயலுமோ ?''[314]

> ''புணர்க்கும் அயனாம், அழிக்கும் அரனாம்''[315]

எனவும்,

> ''பிறையேறு சடையானும் நான்முகனும் இந்திரனும்
> இறையாதல் அறிந்தேத்த வீற்றிருத்தல் இதுவியப்பே''[316]

எனவும், திருமால் முக்கட் பிரானாகவும், இந்திரனாகவும் மற்றைத் தேவர்களாகவும் மூவுலகத்திலும் இருப்பவனாகவும் உள்ளவன்''[317] எனவும் வரும் திருவாய்மொழிப் பாசுர அடிகளும் மேற்படி கருத்தை அரண் செய்கின்றன.

அரனும் அரியும் ஒருவனே என்பதனைப் பொய்கையாழ்வார் விளக்குகின்றார். அரனும் அரியும் ஒருவனே. அவர் அரன் நாரணன் என்னும் பெயருடையவன். அவனது ஊர்தி விடையேறும், கருடப் புள்ளும். அவனது செயல் அழித்தல், அளித்தல். அவன் நிறம் எரியுருவம், காருருவம் எல்லாம் ஒன்றே என எடுத்துரைப்பதைக் காணலாம்.[318] மேலும் அவர் மூவரில் முதல்வன் கடல்வண்ணனே என்பதனை,

> ''முதலாவார் மூவரே அம்மூவ ருள்ளும்
> முதலாவான் மூரி நீர்வண்ணன்''[319]

எனவரும் அடிகளால் உணர்த்துகின்றார்.

---

312. நா. தி. பிர. நெடுந்தாண்டகம் - 2
313. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 2 - 10
314. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 7 - 12
315. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 8 - 3
316. நா. தி. பிர. திருவாய்மொழி - 3 - 1 - 10
317. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 6 - 4
318. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 4
319. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 15

சைவ சமயத்தைச் சார்ந்த பெரியார்கள் திருமால் பன்றியாகவும், பிரமன் அன்னமாகவும் ஒருவர் பூமியைத் தோண்டிச் சென்றும் மற்றவர் விண்ணில் பறந்தும் சிவனுடைய அடிமுடி காணாமற் போயினர். அவர்கட்குச் சிவபெருமான் திருவண்ணா மலையில் சோதிப்பிழம்பாகக் காட்சியளித்தான் என்பர். இச்செய்தி, சிவபுராணங்கள் பலவற்றிலும் பேசப்படுவதாகும். நாலாயிர திவ்வியப் பிரபந்தம் பாடிய ஆழ்வார்கள் சிவபெருமானும் பிரமனும் காணுதற்கரியவன் திருமால் எனக் கூறுகின்றனர்.

''அரவணையான் பொன்மேனி மாமலரான வார்சடையான் காணவல்லரோ''[320], ''நீறாடி தான் காணமாட்டாத சேவடி''[321] எனத் திருமழிசையாழ்வார் குறிப்பிடுகின்றார்.

''தெரிவரிய சிவன் பிரமன் அமரர்கோன்
பணிந்தேத்தும் விரிபுகழான்''[322]

''பேசநின்ற சிவனுக்கும் பிரமன் தனக்கும்
பிறர்க்கும் நாயகன் அவனே''[323]

என நம்மாழ்வார் போற்றுகின்றார்.

''பெரிய அப்பனை, பிரமன் அப்பனை, உருத்திரன் அப்பனை,
முனிவர்க்குரிய அப்பனை, அமரர் அப்பனை
உலகுக்கோர் தனியப்பன் தன்னை''[324]

என்று திருமால் பிரமனுக்கும், ஈசனுக்கும் உலகத்தார்க்குமெல்லாம் அப்பனாகக் காட்டப்படுகின்றான். பிரமன், சிவன், தேவர்கள் வேண்ட மூவுலகமும் வென்று அளி செய்தவன்[325], பிரமனும் சிவனும் தொழும் தகைமையுடையவன்.[326] நான்முகனும் சிவனும் அடிக்கமலம் இட்டு ஏத்தும் அங்கு[327] திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள வட வேங்கடவனுக்குப் பிரமனும் சிவனும் குடை தாங்கினார்கள்[328] வேங்கட வாணனே வினை கொடுப்பவன் என்று பிரமனும் கண் மூன்றுடைய சிவனும் மலரிட்டு ஏத்துமாகையால் அடியவர்களே

320. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 10
321. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 27
322. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 8
323. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 10 - 4
324. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 1- 11
325. நா. தி. பிர. திருவாய்மொழி - 10 - 1 - 3
326. நா. தி. பிர. இரண்டாம் திருவந்தாதி - 12
327. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 42
328. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 43

நீங்களும் சென்று வேங்கடவாணனைத் தொழுமின்![329] என்று கூறும் பாசுரச் செய்திகளும்,

> ''எறிகடல் நடுவுள் அறிதுயில் அமர்ந்து
> சிவன் அயன் இந்திரன் இவர் முதலனைத்தோர்
> தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்தவன்''

என வரும் பாசுர அடிகளும்[330] திருமாலினது ஏற்றத்தினைத் தெள்ளத் தெளிய எடுத்துரைப்பதைக் காணலாம்.

இதுகாறும் கண்ட இச்செய்திகளில் அன்னமாகி அருமறை பயந்தது, ஆனைக்கு அருள் செய்தது, கற்பக மரம் கொண்டுவந்தது, மதி கோள் விடுத்தது, சிவனை மார்பிலடக்கியவன், மார்கண்டேயனுக்குச் சிவன் வாழ்நாள் அளித்தமைக்குத் திருமாலே காரணமானவன், சிவனுடைய சாபத்தைப் போக்கியவன், ஈசனை வென்ற சிலை கொண்டவன், சிவனைத்தோற்றுவித்தவன் திருமால், சிவன் முடிமேல் பாய்ந்த கங்கை திருமால் அடி சேர்ந்து அருள் பெற்றமை, திருமாலது பெருமையாகக் கூறப்படும் செய்திகள் ஆகியவை முந்தைய காலத் தமிழ் இலக்கியங்களில் இடம் பெறாதவை. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் மட்டுமே காணப்படும் செய்திகளாகும்.

இவற்றுள் வாணாசுரன் போர், ஆலிலை மேல் துயின்றது, கடல் கடைந்தது, மோகினியவதாரம் போன்ற செய்திகள் முந்தைய காலங்களில் இடம் பெற்றிருந்தாலும் ஆழ்வார் பாசுரங்களில் அவற்றினும் விளக்கமாகப் பேசப்படுகின்றன.

சிவனடியார்கள் சிவனுக்கு ஏற்றம் தருவதுபோலத் திருமாலின் முதன்மையையும், பெருமையினையும், புகழையும் எடுத்தோதுவதே ஆழ்வார்களின் நோக்கமாக அமைந்தது. திருமாலின் மீது கொண்ட ஆறாக் காதலினாலும், பக்தியினாலும், திருமாலைப் பரம் பொருளாக நிறுவ வேண்டும் என்ற நோக்கத்தாலும் இவ்வகைச் செய்திகளை அமைத்தனர் எனலாம்.

சைவ இலக்கியங்களில் சிவனுக்கு ஏற்றம் தந்து அடுத்த நிலையில் மாலும் அயனும் சேர்த்தே பெரும்பாலும் பேசப்படுகின்றனர். பிற தெய்வங்களுடன் சேர்த்துத் திருமால் பேசப்படுகின்றான். ஆனால் ஆழ்வார் பாசுரங்களில் திருமாலே முழு முதன்மை பெறுகின்றான், சிவன் அயனோடும், பிற தெய்வங்களுடனும் சேர்த்து அடுத்த

329. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 42
330. நா. தி. பிர. திருவாசிரியம் - 1

நிலையில் வைத்தே பேசப்படுகின்றான். இச்செய்திகளெல்லாம் திருமால் வழிபாட்டில் ஏற்றப்பட்ட மாற்றங்களும் வளர்ச்சி நிலைகளு மெனலாம். இதுகாறும் கண்டவற்றால் திருமால் அவதாரமெடுத்த தன்றி விட்டுணு நிலையில் இருந்து செய்த திருவிளையாடல்களையும் முத்தேவரில் திருமாலே மேலானவன், திருமாலுக்கு அடுத்தபடியான வர்களே சிவனும் பிரமனும் என்பதும் உலகில் ஏற்படும் தீமைகள் எல்லாவற்றையும் போக்கும் வல்லமை படைத்தவன் திருமாலே என்பதும் ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தப் பாசுரங்கள் தெரிவிப்பதனை உணரலாம்.

**அகத்துறைச் செய்திகள்** : தமிழர்கள் உயிரெனப் போற்றிவந்த அகத்திணை ஒழுகலாறுகளைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம். தமிழர்கள் போற்றிய அகத்திணை, இல்லறமாகிய நல்லறத்தை நடத்தத் துணை செய்யும் ஒன்றாகும். இல்லறத்தைத் தலையாகக் கொண்டொழுகிய தமிழர்கள் அவ்வில்லறத்திற்கு உயிர் நாடியாக இருந்த காதல் ஒழுக்கத்தைப் போற்றி அகத்திணை நெறியாகக் கொண்டொழுகினர். ஆனால் சங்கம் மருவிய காலக்கட்டத்தில் தமிழகத்தில் நுழைந்த சமண பௌத்த நெறிகள் தமிழர்கள் உயிரெனப் போற்றிய காதலைப் புறக்கணித்து இல்லறத்தை வெறுத்துத் துறவறத்தைப் போற்றினர். துறவற நெறியே தூயநெறி எனக் கொண்டு போதனை செய்து புலனடக்கம் முதலான ஒழுகலாறுகளை வலியுறுத்தினர், ஆனால் பக்திக் காலத்தெழுந்த ஆழ்வார்களும், நாயன்மார்களும் அவைதிக சமயங்களைக் கடந்து வைதிக நெறியைப் பரப்ப முன்வரும் பொழுது தமிழினத்திற்குரிய தனிச் சொத்தாக இருந்த அகத்திணை நெறியை ''நாயக-நாயகி பாவமாக'' மாற்றினர். காதல் பாசுரங்கள் பாடி மக்களை ஈர்த்தனர். அக்காதல் பாசுரங்கள் மூலம் பக்தியைப் பரப்ப, இறைவனை நாயகனாக்கி, அந்த நாயகன் உறையும் இடங்களைச் சுட்டிக்காட்டி, மக்களைத் திசைதிருப்பினர். திருமால் வழிபாட்டு நெறியை வற்புறுத்த வந்த ஆழ்வார்கள் ''நாயக-நாயகி பாவம்'' என்னும் புதிய உத்தியைப் பாடல் நெறி யாக்கிப் பழமையிலே புதுமை செய்து பக்தியை வளர்த்தனர் எனலாம்.

தமிழ் இலக்கியங்கள் வழி அறிய நின்ற திருமால் வழிபாட்டில் ஒரு புது நெறியை ஆழ்வார் பாசுரங்களில் காண்கிறோம். முந்தைய இலக்கியங்களில் காணப்பெறாத இப்புதிய உத்தி ஆழ்வார் பாசுரங் களில் காணப்படுகின்றது. மானுடக் காதலைப் போற்றிப் பாடிய தமிழ் மண்ணில் வந்து சேர்ந்த சமயங்களின் தாக்குரவால் காதல் என்னும் உணர்வு கடியப்பெற்றது. துன்பத்திற்கு இட்டுச் செல்வது காதல் என்று கண்டிக்கப் பெற்றது. வீட்டுலக வாழ்விற்கு தளை என விதந்தோதப் பெற்றது. திருமால் வழிபாட்டைப் போற்றிப்

பாட வந்த ஆழ்வார்கள் காதல் உணர்வின் வலிமையை உணர்ந்து அதனைத் தம் பாடல்களில் ''நாயக-நாயகி பாவம்'' என்னும் புதிய பாணியில் மடை மாற்றம் செய்தனர். இதன் விளைவால் மக்களுக்கும் இறைவனுக்கும் இருந்த இடைவெளி குறுகியது. பக்தி உணர்வு செழித்தது.

சமய உணர்ச்சிக்கு முதல் அடிப்படை காதல் வாழ்வே என்பது அறிஞர் கொள்கை. இவ்வுண்மையை உணர்ந்தே நாயன்மார்களும், ஆழ்வார்களும் தம்மைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனா கவும் வைத்துப் பக்திப் பாடல்களைப் பாடினர். இம்முறையால் பழந்தமிழரது தூய இறைப்பண்பையும் சமயம் பற்றி அவர்கள் கொண்டிருந்த ஆழ்ந்த அறிவையும் நன்கு உணர முடிகின்றது.

தமிழ் மொழியின் சிறப்பினுக்குக் காரணமாக இருப்பது பொருளிலக்கணம். பிற மொழிகளில் எழுத்துக்கும் சொல்லுக்கும் மட்டுமே இலக்கணம் எழுதப் பெற்ற நிலை இருக்க, பொருளுக்கு இலக்கணம் எழுதிய பெருமை தமிழ் மொழிக்கு உண்டென்பது அறிஞர் கண்டு கூறிய முடிவாகும். அப்பொருளிலக்கணத்தை அகமென்றும், புறமென்றும் பாகுபாடு செய்து விளக்கியுள்ளனர். இவ்வாறு வாழ்க்கைப் பகுதியை அகம் புறம் எனப் பகுத்துக் கூறும் இயல்பு தமிழுக்கே உரியதென்பர். அகம்புறமாகிய இரு திணைகளி லும் சிறப்பு மிக்கது அகமே. ''எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'' என்பது தொல்காப்பியம்.[331] ஆண் பெண் ஆகிய இருவருக்கும் மட்டுமின்றி அஃறிணை உயிர் களுக்கும் காமம் என்பது பொதுவான ஒன்று. புறம் பெரும்பாலும் ஆண்மகற்கு உரியது.

புலவனுக்கு மதம் எனப்படுவது ஆண் பெண் காதலே. அக் காதல், இலக்கியங்களின் வற்றாத ஊற்றிடங்களுள் ஒன்றாக விளங்கு கிறது. உலகம் நீடு வாழ உயிர்க்கொடை செய்யும் காமம் சங்கப் புலவோர் நெஞ்சினைக் கொள்ளை கொண்டதில் வியப்பில்லை என வ. சுப. மாணிக்கம் தமது ''தமிழ்க்காதல்'' என்னும் ஆய்வு நூலில் குறிப்பிடுவதைக் காணலாம்.[332]

எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணை, குறுந்தொகை, கலித் தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய ஐந்தும் அகத்திணைச் சார்புடையன. பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, நெடுநெல்வாடை குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை என்பன அகப்பாடல்கள். ஆரிய

---

331. தொல். நூற்பா - 1168 - பொருளியல் சூத்திரம் - 27
332. தமிழ்க்காதல் - வ. சுப. மாணிக்கம் - பக்கம் - 9 - 10

அரசன் பிரகதத்தனுக்குத் தமிழின் சிறப்பினை அறிவுறுத்தவே கபிலரால் குறிஞ்சிப்பாட்டு பாடப்பட்டது என்பர். தொல்காப்பியர் பொருளதிகாரத்தின் தொடக்கத்தில் அகத்திணையியலை அமைத்துள்ளார். களவியல், கற்பியல், பொருளியல் என்று பல இயல்களைத் தொடர்ந்து அமைத்து அகப்பொருளையே விரிவுபடக் கூறியுள்ளார். எனவே பல்லவர் காலத் தொடக்கத்திலே வாழ்ந்த தமிழ்ப் புலவர்கள் அகத்திணை மரபிலே ஊறித் திளைத்தவர்களாக இருந்துள்ளார்கள். தொல்காப்பியருக்குப் பின் அகத்திணைக்கு இலக்கணம் வகுத்தவர் இறையனார். அந்நூல் இறையனார் களவியல் என வழங்கப்பெறும். இறையனார் அகப்பொருள் பாடியமைக்கு ஒரு கதையே கூறப்படும். இறையனார் இங்கு சிவபெருமானாகச் சுட்டப்படுகின்றார். இறையனார் களவியல், களவியல், கற்பியல் என இரு அதிகாரங்களை உடையது. இறையனாரது களவியல் நூலுக்கு உரை எழுதியோர் பலர். அவற்றுள் தொல்காப்பியம், இறையனார் ஆகிய இருவருக்குப் பின் பதின்மூன்றாம் நூற்றாண்டில் தோன்றிய நாற்கவி ராசநம்பி தொல்காப்பிய அகவிலக்கணத்தைச் சுருக்கியும், இறையனார் கூறிய களவியலை விரித்தும் முன்னோர் மரபினைத் தழுவியும், ''நம்பியகப் பொருள்'' என்னும் நூலினை இயற்றியுள்ளார். நம்பியகப் பொருள் அகத்திணை இயல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என ஐந்து பிரிவுகளையுடையது.

சங்க காலத்துக்குப்பின் திருவள்ளுவர் அகப்பொருளைக் சுருங்கச் சொல்லி விளங்க வைக்குமுகத்தான் அகப்பொருளைக் காமத்துப்பாலில் எடுத்துக் கூறியுள்ளார். திருவள்ளுவர் கூறும் காமத்துப்பால் முதல், கரு, உரி ஆகியவற்றுள் உரிப் பொருளுக்கு முதலிடம் தந்துள்ளது.

அகப்பாடல் இயற்றுதற்கு நிலத்தின், காலத்தின் இயற்கை அறிவு வேண்டும். மரம், செடி, கொடி, பறவை, விலங்குகளின் தன்மைக் கல்வியும் வேண்டும். அஃறிணை உயிர்களின் இன்பப் புணர்வை, மக்களின் இன்பப் புணர்வோடு தரஞ்செய்து பார்க்கும் சீர்மை வேண்டும். காதல் வயப்படும் இள நெஞ்சங்களின் தூய எண்ண நாடிகளைக் கற்பனையால் அளந்து கவின் செய்யும் மனப் பக்குவம் வேண்டும். சங்க இலக்கியத்து அகத்திணைப் பாடல் தொகையும், அகம் பாடினோர் தொகையும் புறத்திணையிலும் மும்மடங்கு மிக்கிருத்தலை மதிக்குங்கால் சங்கச் சான்றோர் அகம் பாடுவதையே புலமைக் கடனாகக் கருதினர் என்ற கருத்து வெளிப் படுகின்றது.[333] இக்கருத்து மக்கள் வாழ்க்கையில் புறமாகிய பொது

333. தமிழ்க் காதல் - வ. சுப. மாணிக்கம் - பக்கம் - 12

வாழ்க்கையின் பண்புகளை எடுத்துரைக்கும் புலவர்கள் தனி மனித வாழ்க்கையின் இன்றியமையாத அகவாழ்விலும் பெரிதும் அக்கறை காட்டியுள்ளனர் என்பதை எடுத்துக் காட்டுகிறது.

அக இலக்கியம் பாடும் புலவர்கள் மிகவும் திறமை வாய்ந்தவர் களாய் இருத்தல் வேண்டும் என்பதை, ''புறத்தே தோன்றும் கருத்துக்களை உணர்ச்சியும், மெய்ப்பாடும் புலப்பட உரைக்கும் ஆற்றல் மிகவும் சிறந்தது. இவ்வகை ஆற்றலுடைய கவிஞர்களே அறிஞர்களுடைய பெருமதிப்பை அடைகின்றனர்'' என்னும் உ. வே. சாமிநாதையர் அவர்களின் குறுந்தொகை முன்னுரைப் பகுதி தெளிவுப்படுத்துகின்றது.[334]

**அகம்** : ஒத்த அன்பான ஒருவனும், ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்ப முறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். எனவே அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்பது ஆகு பெயராகும்.[335] இவ்வகத்திணையையொட்டியே கோவை, உலா, தூது போன்ற இலக்கியங்கள் எழுந்தன. காப்பியங்களிலும், அகத்திணைப் பாடல்கள் இடம் பெற்றுள்ளமையைக் காணலாம். ஆழ்வார்கள் பாடல்களிலும் அக இலக்கியக் கூறுகள் நிரம்பப் பெற்ற பாசுரங்கள் பலவற்றைக் காணலாம். எந்த ஒரு காப்பியமும் புதினமும் நாடகமும் திரைப்படமும் ஒரு தலைவன், தலைவியை ஒட்டி எழுந்தனவாகவே இருக்கும் என்பது வெளிப்படை.

பக்திப் பாடல்களாகிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் அகப் பொருள் வரலாமா என்ற வினாவெழுதல் இயற்கை. ஆனால் நாலாயிர திவ்வியப் பிரபந்தம் போன்றே தேவாரம், திருவாசகம் ஆகியவற்றிலும் அகத்துறைப் பாடல்களைக் காணமுடிகின்றது. பரம்பொருளுக்கும் ஆன்மாவிற்கும் ஒன்பது வகையான தொடர்புகள் ஏற்பட்டுள்ளன என்று வைணவத் தத்துவம் கூறுகின்றது. அவற்றுள் நாயக, நாயகி பாவம் ஒன்று, தாமாகவே நின்று பாடுவது போலவே தம்மைத் தலைவியாகவும், இறைவனைத் தலைவனாகவும் அமைத்துப் பாடல் புனைவார்கள் கவிஞர்கள். இதனையே

334. உ. வே. சாமிநாதையர் - குறுந்தொகை முன்னுரை - பக்கம் 1

335. தொல் - பொருள் - நச்சினார்க்கினியர் - உரை 3

''ஞானத்தில் தம் பேச்சு பிரேமத்தில் பெண் பேச்சு'' என ஆசாரிய இருதயம் குறிக்கின்றது.[336]

''இறைவன் ஒருவனே ஆடவன். உயிர்கள் எல்லாம் பெண்களே'' என்ற எண்ணத்தில் அவனை அடையத் துடிக்கும் பக்தி நெறியின் ஒரு பகுதியாகக் காதல் உணர்வு விளங்கலாயிற்று. அதில் நிறைந்து நிற்கும் உணர்வு இறவாத உணர்வு. அடியவர்கள் அனுபவித்த ''சிவபோகத்தை விளக்க வேண்டின் உலகியல் இன்பத்தைக் துணை யாகக் கொண்டே விளக்க முடியும். சாயுச்சியப் பேற்றை விளக்கும் போதும் ''நாயக நாயகி'' பாவத்தைக் கொண்டே விளக்குவர். சிவஞானத்தை விளக்குவதற்கு உலகியல் மொழி வலுவற்றதாக இருப்பதால் இவ்வாறு விளக்குகின்றார்கள் என்பதல்லாது சிவபோகம் நாயகன் நாயகி இன்பம் போன்றது என்பது பொருளன்று. அவ்வின்பம் இறைவன் போன்று ஒப்புமை கூறமுடியாதது. ஆயினும் உவமானத்தாலேயே அறியப்படுவது எனலாம். அடியவர்கள் பலரும் தெய்வ போகத்தை உவமை வாயிலாகவே விளக்க முயல்வதும் கருதத் தக்கது. பக்தி இலக்கியப் பாடல்களில் பண்டைய இலக்கிய மரபினைக் காணினும் அப்பாடல்கள் உண்மையான பக்தர்களின் உயிர்த் துடிப்பினை வெளிப்படுத்துவனவே'' என்று ப. அருணாசலம் கூறுவது[337] எண்ணத்தக்கது.

அகப்பொருளின் கண் பேசப்படுவோர் (கூற்றிற்குரியோர்) தலைவன், தலைவி, தோழி, பாங்கன், நற்றாய், செவிலி, கண்டோர் இளையர், பாணன், கூத்தர், விறலி, பரத்தை, அறிவர் ஆகிய பதின் மூவராவர். ஆனால் நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் தலைவி, தோழி, நற்றாய் ஆகிய மூவரது கூற்றுக்களே பேசப்படுகின்றன. இங்கு இறைவனைத் தலைவனாக்கிய காரணத்தினால் இறைவனை நாடி உயிர்கள் செல்லுவதையே அடிப்படையாகக் கொண்டு பாடப் படுவதால் தலைவனாகிய இறைவனுக்கும் கூற்று நிகழுமிடமின்மை யாயிற்று. அடியார்கள் ''நாயக நாயகி'' பாவத்தையே மேற்கொள் வதனால் தலைவியின் கூற்றே பெரிதும் பேசப்படுகின்றது. அடுத்த படியாகத் தலைவியின் உடல், மனம், ஆகியவற்றின் சிதைவு கண்டு நற்றாய் வருத்த மேலீட்டினால் தலைவிக்கு அருள் செய்யுமாறு தலைவனை வேண்டிக் கொள்ளும் நிலை காணப்படுகின்றது. தலைவி யின் உடல் மெலிவு கண்டு தாயார் முதலியோர் வேலனைக் கொண்டு வெறியாடல் நிகழ்த்த உள்ள போது தோழி வெறி விலக்கி அறத் தொடு நிற்கின்ற நிலை ஓரிரு இடங்களில் வந்துள்ளமை காணலாம்.

---

336. ஆச்சாரிய இருதயம் - பக்கம் - 118
337. பக்தி இலக்கியம் - ப. அருணாசலம் - பக்கம் - 226

இவற்றில் முதற்கண் தலைவியின் மூலமாக அறியப்படும் அகத்துறைச் செய்திகளைக் காணலாம்.

**தலைவி :** தலைவன், தலைவி என்ற சொற்கள் உலகியல் காதலரை உணர்த்தப் பயின்று தமிழ் மொழியில் வழங்கி வந்ததால் நாயகன், நாயகி என்ற சொற்கள் தெய்வீகக் காதலரை உணர்த்துவ தற்கு ஏற்றனவாகக் காணப்பட்டிருக்க வேண்டும். 'பாவம்' என்ற சொல் பாவனை செய்தலை உணர்த்துகின்றது. எனவே இறைவன் - ஆன்மா நாயகன் - நாயகியாகப் பாவனை செய்யப்படுகின்றது. இறைவன் - ஆன்மா என்பவற்றுக்கிடையிலான தெய்வீக உறவு தலைவன் தலைவிக்கிடையிலான உலகியல் உறவாகப் பாவனை செய்யப்படுதலையே நாயகன் நாயகி பாவம்என்றதொடர் உணர்த்து கின்றது, உலக வாழ்க்கையிலே அமைந்துள்ள உறவு முறைகள் பல வகையின. அவை யாவற்றுக்கும் சிகரமாக அமைந்துள்ளது, தலைவன் தலைவி உறவு முறையாகும். ஏனைய உறவு முறைகள் யாவும் தலைவன் தலைவி உறவு முறையோடு ஒப்பிடும்போது ஒளியிழந்து குறுகுகின்றன.

காதலன் காதலி இருவரும் தலைவன் தலைவி என்று பெயர் பெற்றாலும் அகத்தலைமை பெண்ணுக்கே உரியது. புறத்தலைமை ஆடவனுக்குரியது. மகனைப் பெற்றெடுக்கும் பெண்ணினத்திற்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு மிகுதியாகும். ஆதலின் தலைமை நோக்கி, தலைவன், தோழி, செவிலி, அன்னை முதலான அகமாந் தர்கள் எல்லோரும் தலைவியின் தலைமை நோக்கி இயங்குபவர்'' என வ. சுப. மாணிக்கம் கூறியுள்ளார்.[338] நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பெரிதும் பேசப்படுவது தலைவியின் நிலைமையே ஆகும்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் காணப்படும் சூடிக் கொடுத்த சுடர்கொடியாகிய ஆண்டாள் பாடிய திருப்பாவைப் பாடல்கள் தமிழகமெங்கும் பரவிப் போற்றப்படுவது போன்றே ஆந்திர நாட்டிலும் தெலுங்கு மொழியில் அவ்வாறே எழுதப்பட்டுப் பாராயணம் செய்யப்படுவதையும் காணலாம்.

ஆண்டாள் கண்ணனையே கணவனாகப் பெற வேண்டும் என்று ஆசைப்பட்டாள். கண்ணனுக்காகத் தொடுத்த மாலையையும் தான் தரித்து இன்புற்றாள். கண்ணனைத் தவிர வேறு ஒருவர்க்குத் தன்னைத் திருமணம் பேசில் உயிர் தரியேன் என அறுதியிட்டுக்

338. தமிழ்க்காதல் - வ. சுப. மாணிக்கம் - பக்கம் 461

கூறினாள். ''மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன் கண்டாய் மன்மதனே'' என்பது ஆண்டாளது திருவாக்கு.[339] ஆண்டாள் தான் எண்ணியவாறே கண்ணனையே மணந்தாள் என்னும் செய்தி நாலாயிர திவ்வியப் பிரபந்தம் மூலம் அறியப் படுகின்றது. தனது ஒரே மகளாகிய ஆண்டாளை திருமகள் போல வளர்த்ததாகவும், திருமால் அவளைக்கொண்டு சென்றதாகவும் பெரியாழ்வார் ஆண்டாளது பிரிவினால் வருந்துவது

''ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான்
கொண்டுபோனான்''

என்ற அவரது பாடல் மூலம் அறியப்படுகின்றது.[340] ஆண்டாள் கண்ணன் மீது உற்ற காதலை நாயக நாயகி பாவம் என்று கூறாமல் உண்மைக்காதலே என்ற கூறுதல் பொருந்தும்.

**காமனை வேண்டல்:** மார்கழி நோன்பிருந்த பின்னரும் கண்ணனை அடைய முடியாமல் ஆண்டாள் பிறருதவி கொண்டு அவனை அடைய உறுதி கொண்டாள். உலகில் பிரிந்தாரைப் புணர்விக்கும் தலைமையுடையவன் மன்மதன் ஒருவனே. அவனைத் தொழுது கண்ணனைத் தம்மோடு சேர்ப்பிக்குமாறு வேண்டுவது என முடிவு செய்தாள் ஆண்டாள். கற்புடைய பெண்டிர் பிற தெய்வம் தொழுவதில்லை என்பது ஆன்றோர் வாக்கு. ஆயினும் திருமணமாகாத பெண்கள் கற்புக்கடம் பூண்டவர்கள் அல்லர் ஆதலின் தங்களுக்கு நல்லதோர் கணவன் வாய்க்கப்பெற வேண்டு மென்று விரும்பினால் பிறை தொழுவது பண்டைய தமிழ் வழக்கம். அவ்வாறே எல்லோருக்கும் பொதுவாக உள்ள காமனைத் தொழுவதில் குற்றமில்லையென எண்ணிப் போலும் கண்ணனைத் தன்னோடு கூட்டுவிக்குமாறு வேண்டிக் கொண்டாள் எனலாம். தை மாதம் முழுவதும் வீதி பெருக்கிக் கோலமிட்டு அழகு செய்து வைத்தேன். உன்னையும் உன் தம்பியாகிய காமனையும் தொழுதேன் என்னை வேங்கடவற்கு விதியென்றும்[341], காமதேவா உன்னைக் குறித்து நோன்பு நோற்கின்றேன். உன் பூங்கணை களில் கடல்வண்ணன் என்பதோர் பெயரெழுதி என்னைப் புள்ளின் வாய் பிளந்தான் என்னும் இலக்கில் புகுமாறு எய்யென்றும், என்னை வேங்கட வாணனென்னும் விளக்கினில் புக விதியென்றும். இளவேனிற் பருவமாகிய பங்குனி மாதத்தில் நோன்பு நோற்று

339. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 5
340. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 8 - 4
341. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 1

உன்னைத் தெருவிடை யெதிர்கொண்டு தொழுவேன். கண்ணனது திருமுகத்தை என் கண்களால் நோக்குமாறு அருள் செய் என்றும்[342] "கேசவ நம்பியைக் கால்பிடிப்பாள் என்னுமிப்பேறெனக் கருளுகண்டாய்"[343] என்றும், "பார்க்கடல் வண்ணனுக்கே பணிசெய்து வாழப்பெறாவிடில் நான் அழுதழுதலமந்தம் மாவழங்க ஆற்றவும் அதுவுனக்குறைக்குங் கண்டாய்" என்றும்[344] மன்மதனிடம் முறையிடுவதைக் காணலாம்.

இப்பாசுரங்களால் பண்டைக் காலத்தில் கன்னிப் பெண்கள் மார்கழி நோன்பிருப்பதனோடு மன்மதனுக்குரிய பருவமாகிய இளவேனிற் காலத்து வீதி பெருக்கிக் கோலமிட்டு, அலங்கரித்து, மணலால் சிற்றில் ஒன்றமைத்து அதில் அவனுக்காக மன்மதன் கொடியாகிய சுறா மீனினது கொம்பினை நட்டு, மகரக் கொடி யெடுத்துத் தோரணங்கட்டி அதிகாலையில் நீராடி முள்ளுமிலாச் சுள்ளியினால் நெருப்பு மூட்டிக் காமதேவனைத் தொழுவது வழக்கமா யிருந்ததென்பது புலப்படும். பெண்கள் மன்மதன் படைகளாகக் கருதப்படுதலின் கன்னிப் பெண்களின் ஆவலை மன்மதன் நிறை வேற்றுவான் என்னும் நம்பிக்கையும் இருந்திருக்கலாம். பெண்களில் அழகு மிக்கோர்களுக்கு மன்மதன் சிறப்புச் செய்வான் என்று இளங்கோவடிகளும் கூறியுள்ளதனைக் காணலாம்.[345]

**2. பாஞ்சசன்னியத்தைப் பார்த்துக் கூறல்:** திருமாலின் பஞ்சாயு தங்களில் ஒன்று பாஞ்சசன்னியம் என்னும் திருச்சங்கு. அது மற்ற ஆயுதங்கள் பெறாத பேற்றினைப் பெற்றது. கண்ணனின் திருவாய் அமுதினைப் பருகும் தன்மையது. இதனைக் கண்ட ஆண்டாள் பாஞ்சசன்னியத்தைப் பார்த்துப் பொறாமை கொண்டாள் என்றே கூறலாம். மாதவன் வாய்ச்சுவையும், நாற்றமும் எத்தன்மைத்து எனப் பாஞ்சசன்னியத்தைப் பார்த்துக் கேட்கின்றாள்.[346]

பாஞ்சசன்னியம் மட்டுமே கண்ணனது வாயமுதத்தைப் பருகுவ தால் பூசல் கொண்ட பெண்படையார், "பண்பல செய்கின்றாய் பாஞ்சசன்னியமே" என்று பழிக்கின்றார்கள்.[347]

---

342. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 6
343. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 8
344. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 9
345. சிலம்பு - மனையறம்படுத்த காதை - அடிகள் - 42 - 45
346. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 7 - 1
347. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 7 - 8

''பதினாறா மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
மதுவாயில் கொண்டாற்போல் மாதவன்தன் வாயமுதம்
பொதுவாக வுண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்
சிதையாரோ உன்னோடு? செல்வப் பெருஞ்சங்கே''[348]

என வரும் பாசுரம் பெண்களுக்குரிய பயிர்ப்புக் குணத்தினை ஆண்டாளும் அடைந்த நிலையினை உணர்த்துவதைக் காணலாம்.

நம்மாழ்வாராகிய நாயகி இறைவனைத் தழுவுதற்கு ஆசைப் பட்டு அவனை உருக்கமுடன் அழைக்கின்றாள். இறைவன் வந்த பாடில்லை. அதனால் தலைவி இறைவனுக்கு வேண்டாத இந்த ஆன்மா தமக்கும் வேண்டாவென்று எண்ணுகின்றாள். தன் மானம், நெஞ்சு அடக்கம், மாந்தளிர் நிறம், அறிவு, ஒளி, வளை, மேகலை, உடல், உயிர் ஆகிய அனைத்தும் வேண்டுவதில்லையெனத் தன்னையே வெறுத்துரைக்கின்றாள்.[349] காதல் வயப்பட்ட மகளிர் தளிர் நிறமிழந்து பொன்னிறம் பெறுவர். அப்பொன்னிறம் மாரிக் காலத்து பீர்க்கம்பூப் போன்றது என்பர் புலவர். தலைவன் அருள் பெறின் அந்நிறம் மாறித் தன்னிறம் பெறுவர். கண்ணன் மீது காதல் கொண்ட தலைவி மாமை நிறம் பெறுகின்றாள். கண்ணன் அருள் இல்லாத போது தனக்கு மாமை நிறம் எதற்கு என்று கூறுகின்றாள்.[350]

தலைவன் தலைவியினுடைய நெஞ்சைக் கவர்ந்தான் என்று கூறுவர். தன் நெஞ்சுதான் தலைவன் மீது ஆசை கொண்டதே தவிரத் தலைவன் என் நெஞ்சினைக் கவரவில்லை. அப்படிப்பட்ட நெஞ்சு எனக்கு எதற்கு என வருந்துகின்றாள்.[351] பல தடவை தூது அனுப்பிய பின், தலைவி தனக்குச் சொந்தமான, தானேயாய் இருக்கும் நெஞ்சினைத் தூதுவிடுவது வழக்கம் என்பது உணரத்தக்கது.

பெண்களுக்குரிய குணங்களுள் அடக்கம் ஒன்று. அடக்கம் அமரருள் உய்க்கும் என்பார் திருவள்ளுவர். அது ஆண், பெண் இருவருக்குமே வேண்டிய குணமாகும். அடக்கமே உருவாய் இருந்த கண்ணகியும் சீதையும் பெண்கள் குலத்திற்கோர் எடுத்துக்காட்டாக விளங்குவதைக் காணலாம். தலைவன் மீது காமுற்ற தலைவி தன்னுறுப்புக்கள் தான் நிறையழிந்ததை எடுத்துரைப்பினும் அதைப் பிறர் அறியாவண்ணம் மறைத்தலே இவ்விடம் கூறப்படும் அடக்கம்.

---

348. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 7 - 9
349. நா. தி. பிர. நம்மாழ்வார் திருவாய்மொழி 4 - 8
350. நா. தி. பிர. நம்மாழ்வார் திருவாய்மொழி - 4 - 8 - 1
351. நா. தி. பிர. நம்மாழ்வார் திருவாய்மொழி - 4 - 8 - 2

அவ்வாறு அடக்கமாயிருந்தும் நிறுத்தவும் நில்லாத தன் நிறையினை மாயன் கவரவில்லையே. அவ்வாறான அடக்கம் எனக்கு எதற்கு என்று தலைவி ஏங்குவதாக நம்மாழ்வார் எடுத்துரைக்கின்றார்.[352]

பெண்களின் நிறத்தை மாந்தளிர் எனப் புலவர் கூறுவர். ''மாந்தளிர் மேனி மாதவி மடந்தை'' என இளங்கோவடிகள் அழகிற் சிறந்த மாதவியின் நிறத்தை எடுத்துரைக்கின்றார்.[353] மாந்தளிர் போல உள்ள மேனி நிறமிழந்தும் அது கண்ணனால் விரும்பப்படாததால் அந்நிறம் பயனற்றது எனக் கூறுகின்றாள் ஒரு தலைவி.[354]

ஆண்களைப் போல் பெண்களும் அறிவுக் கூர்மையுடையவர்கள் என்பது பண்டையோரது கருத்து. சங்க காலத்திலும் பிற்காலத்திலும் அறிவுடை மங்கையர் வாழ்ந்ததனைக் காணலாம். அறிவு இருந்தும் ஆண்டவன் அருள் பெறவில்லையே. அதனால் பயன் என்ன எனக் கேட்கின்றாள் தலைவி.[355]

காதல் வயப்பட்ட பெண்கள் துயர மேலீட்டினால் அன்னார் உடல் மெலிதலும், தோள் மெலியத் தோள் வளை கழலுதலும், மேகலை நெகிழ்தலும் உண்டு. இங்குக் காதலுற்ற தலைவி வளை, மேகலை முதலியவற்றைக் கண்ணன் கவர்ந்து சென்றதாகத் தோன்றவில்லை. எனவே வளையும், மேகலையும் பயனற்றவையே எனக் கூறுகின்றதனைக் காணலாம்.[356] இறுதியாக இறைவனால் அணைக்கப்படாத உடலும், உயிரும் இருந்தும் இல்லாதனவே எனத் திருமால்பால் காதல் கொண்ட ஒரு தலைவியின் நிலையிலிருந்து நம்மாழ்வார் பாடிய பாசுரங்கள் திருவாய்மொழியில் கூறப்படும் அகத்துறைப் பாடலுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைவதைக் காணலாம்.[357]

**3. காமம் மிக்க கழிபடர் கிளவி:** காமம் என்பது வேட்கை, மிகுதல் — பெருகுதல். கழிபடர் என்பது மிகுந்த துன்பம். கிளவி என்பது சொல் சிந்தித்துச் சொல்லுதல் என இறையனார்

---

352. நா. தி. பிர. நம்மாழ்வார் திருமொழி - 4 - 8 - 3
353. சிலம்பு - அடைக்கலக் காதை - அடிகள் - 22
354. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 4
355. நா. தி. பிர. திருவ்ாய்மொழி - 4 - 8 - 5
356. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 8
357. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 8 - 9 முதல் 10 வரை

களவியலுரை தெளிவுபடுத்துகின்றது.[358] தலைவனைப் பெற முடியாது தவிக்கும் தலைவி தன்னிலை இழந்தவளாய்க் கேளாதன வற்றைக் கேட்குன போலவும், கிளவாதவற்றைக் கிளக்குந போலவும் சொல்லித் தன் ஆற்றாமையை வெளிப்படுத்துவாள். நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் ஆண்டாளும், பெரியாழ்வாரும் திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் பாடியுள்ள இவ்வகை அகப் பாடல்களால் அறியப்படும் செய்தியினைக் காணலாம்.

**ஆண்டாள் :** ஆண்டாள் திருமாலிருஞ் சோலையின் அழகிலும், அழகரின் திருமேனியழகிலும் ஈடுபட்டவளாய் அவரை அடைய விரும்புகிறாள். கார்காலம் தனித்திருக்கும் தலைவியர்க்கு மிக்க துன்பம் தருங்காலம் அன்றோ![359] கார்கால மழையால் காடுகளில் முல்லை பூத்து முறுவலிக்கின்றது. கருவிளை மலரும், காயா மலரும் பூத்துத் திருமாலின் உருவை வெளிக்காட்டுகின்றன; சோலைக்குயில் களும், மயில்களும், கருவிளைப் பூக்களும், களங்கனிகளும் பூவைப் பூக்களும் துன்பத்தை மிகுவிக்கின்ற ஐம்பெரும் பாதகர்களாக இருக்கின்றன. அழகரது மாலை செய்த பூசலை யாரிடத்துச் சொல்லியழுவது எனத் தோழியிடம் முறையிடுவதாகப் பாடுகின்றாள்.[360] கருவிளை மலர்களையும், காயாம் பூவினையும் அழகரது உருவொளி காட்டும் நீங்கள் எனக்கும் பிழைக்கும் வழி ஒன்றினைக் கூறுவீர் என்கிறாள்.[361] பசுமை நிறம் கொண்ட சோலைகளே, மயில்களே, கருவிளை மலர்களே, களங்கனிகளே உங்களுக்கு அழகரது நிறம் ஏன் என்று கேட்கின்றாள்.[362] வண்டினங் களைப் பார்த்து, மலர்களைப் பார்த்து, எனக்குச் சரணாவதோர் இடத்தினை எடுத்துரையுங்கள் என வேண்டுகின்றாள்.[363] தான் சமைத்து வைத்துள்ள அக்கார அடிசிலையும் வெண்ணெயையும் அழகர் வந்து ஏற்றுக் கொள்ளுவாரோ, அவ்வாறு அவர் வந்து அமுது செய்திடில் அவருக்கு ஆட்செய்வேன் என்கின்றாள்.[364] துயருற்ற நிலையில் இருந்த ஆண்டாள் மறுநாள் காலை, கரிக்குருவிக் கூட்டம் ஒலிக்கின்ற ஒலியைக் கேட்டு அவை திருமாலின் வரவினைக் கூறுகின்றன என மனத்துள் சற்று நிம்மதியடைகின்றாள்.[365]

358. இறையனார் களவியலுரை - பக்கம் - 36
559. யாப்பருங்கலக்காரிகை - மேற்கோள் பாட்டு - பக்கம் - 36
360. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 2
361. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 2
362. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 4
363. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 5
364. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 6
365. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 9 - 8

இவ்வாறு தன் நிலையிழந்து பேசுவதை நாச்சியார் திருமொழி மூலம் அறிய முடிகின்றது.

நம்மாழ்வார் ஆழ்வார்களில் மிகச்சிறந்தவராகக் கருதப்படுபவர். அவர் இறைவன் மீது ஆராவன்பு கொண்டமையால் அவனை அடைய வேண்டுமென எண்ணித் தன்னை ஒரு பெண்ணாகப் பாவித்துக் கொண்டார். தலைவன் வாராமையால் பேதுற்றுப் பேசும் காதல் வசப்பட்ட பெண்டிரைப்போல் நம்மாழ்வாரும் தன்னைப் பிரிவால் வாடும் ஒரு பெண்ணாகப் பாவித்துக்கொண்டு நாரை, அன்றில், கடல், வாடைக்காற்று, மேகம், சந்திரன், இருள், நந்தாவிளக்கு முதலியவற்றைப் பார்த்துப் பாடுகின்றார். தன்னைப் போல் அவைகளும் திருமால் மீது காதல்கொண்டு வருந்துகின் றனவோ என உசாவுகின்றார்.[366]

''யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரை யலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே''

என வரும் அம்மூவனாரது குறுந்தொகைப் பாடல் நள்ளிரவிலும் ஓயாது ஒலிக்கும் கடலே நீ என்னைப்போல் யாரால் துன்பமிழைக்கப் பட்டாய் எனக் கூறுகின்றது.[367]

சங்க கால மரபினையொட்டி நம்மாழ்வார்,

''காமுற்ற கையறவோ டெல்லே இராப்பகல்
நீமுற்றக் கண்துயிலாய்; நெஞ்சுருகி யேங்குதியால்
தீமுற்றத் தென்னிலங்கை யூட்டினான் தாள்நயந்த
யாம்உற்றது உற்றாயோ? வாழி கனைகடலே''[368]

என்கிறார். தலைவன் தன்னைத் துறந்தான் என வருந்தும் தலைவியின் நிலை கண்டு கடலே நீ வருந்துகின்றனையோ அல்லது நீயும் எம்போல் ஒருவனைக் காதலித்து அவன் அகன்றமையால் வாடுகின்றனையோ[369] என வரும் கலித்தொகை 129-ஆம் பாடலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

---

366. நா. தி. பிர. நம்மாழ்வார் திருவாய்மொழி - 2 - 1 - 1
367. குறுந்தொகை - அம்மூவனார் - 163
368. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 1 - 3
369. கலி - பாடல் - 129

நந்தா விளக்கு எரிகின்றது. எரிந்துகொண்டே இருக்கின்றது. அதனைக் கண்ட தலைவி தன் சிந்தை வேகின்ற நிலையினை எண்ணுகின்றாள். அவ்விளக்கினைப் பார்த்து நந்தா விளக்கே நீயும் என்னைப்போல் திருமாலின் துளவ மாலை மீது ஆசைப்பட்டு நைந்து உள்ளம் உருகுகின்றனையோ என தலைவி கூறுவதைத் திருவாய்மொழி மூலம் அறியலாம்.[370]

இரவு நேரம், தனித்திருக்கும் காதலர்க்குத் துன்பம் தருவது. கண்ணன் மீது காதல் கொண்ட தலைவி இரவுக் கடலுக்குள் சிக்கிக் கொள்ளுகின்றாள். கடலைக் கடந்து நீந்த முயலுகின்றாள். கடல் நீண்டுகொண்டே போகின்றது. என் செய்வாள்? தன் உள்ளக் குமுறலை,

''ஊரெல்லாம் துஞ்சி யுலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறியோர் நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்ட நம் பாம்பணையான் வாரானால்
ஆரெல்லே ! வல்வினையேன் ஆவிகாப்பா ரினியே?''

என வாய்விட்டுக் கதறுகின்றாள்.[371]

''நள்ளென்றன்றே யாமம்'' என வரும் குறுந்தொகைப் பாடலும் இரவு தலைப்பெய்தக் கண் வருந்தும் தலைவியின் நிலையினைக் கூறுவதைக் காணலாம்.[372]

**மாலைப் பூசல் :** கண்ணன் ஆநிரை மேய்த்து மாலையில் வீடு திரும்பும்போது சில நாட்களில் ஆநிரைகளுக்கு முன்னே குழலூதிக் கொண்டு வருவான். சில நாட்களில் ஆநிரை முன்னே வர, கண்ணன் பின்னே வருவதுமுண்டு. அவ்வாறு கண்ணன் ஆநிரைகளின் பின்னே வருவதை அறியாத ஆயர்பாடிப் பெண்கள் கண்ணன் வரவில்லை என்ற நினைவால் வருந்திய நிலையினை நம்மாழ்வார் தெரிவிக்கின்றார். அதனை ''மாலைப் பூசல்'' எனக் கூறுவர். மாலைக் காலத்து ஆயர்பாடிப் பெண்களால் எழுந்த பூசல் எனினும் பொருந்தும்.

மல்லிகை மணம் கலந்த தென்றற்காற்று தலைவி ஒருத்தியை ஈர்க்கின்றது. குறிஞ்சிப் பண் ஒலிக்கின்றது. அந்தி மாலை மயக்கம் தருகின்றது. செவ்வானம் படர்ந்துள்ளது. தனிமை வாட்டுகின்றது.

---

370. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 1 - 9

371. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 4 - 1

372. குறுந்தொகை - 6ஆம் பாடல்

கண்ணன் புல்லிய முலைகளும் தோளும் என்ன புகலிடத்தைப் பெறப் போகின்றனவோ என அத்தலைவி பூசலிடுவதாக ஆழ்வார் எடுத்துரைப்பதைக் காணலாம்.[373]

மாரிக்காலத்துக் கண்ணன் வந்து அருள் செய்யாவிடில் என் உயிரை எப்படிக் காப்பேன், அவன் நினைவு என்னை ஈர்க்கின்றதே, மாலைக் காலத்து நெஞ்சிற்கு மற்றோர் துணையில்லையே, ஆயன் மனம் கல்லாகி விட்டதா; அவன் அருள் பெறும் வரை ஆவி நில்லாதே, என் நெஞ்சம் அவன் பக்கமே சென்று விட்டதே, கண்ணனை விட அவனது கள்ளத்தனம் கொடியது. மாலையும் வந்தது. ஆனால் மாயன் வரவில்லையே என வருந்தித் தலைவி பாடுவதாக ஆழ்வார் பாடியிருப்பதைக் காணலாம்.[374]

மேலும் மாலைக்காலத்து நிகழ்ச்சிகள் பலவற்றைக் கோத்து அந்நிகழ்ச்சிகள் தனித்திருக்கும் தனக்குத் துன்பமிழைப்பன வாகையால் கண்ணன் வராததால் தான் தனித்திருந்து எங்ஙனம் பிழைப்பேன் எனத் தலைவி புலம்புவதனை நம்மாழ்வார் அழகுபட எடுத்துரைப்பதைக் காணலாம்.[375]

மாலை நேரத்தில் தலைவன் பிரிவால் துயருற்ற தலைவியின் நிலையினை இளங்கோவடிகளும்[376], திரிகூடராசப்பக் கவிராயரும்[377] தங்கள் நூல்களில் கூறியுள்ளவை இங்கு நினைவுகூர்தற்குரியன.

**காலைப் பூசல் :** நம்மாழ்வார் திருவனந்தபுரம் சென்று எம்பெருமானுக்கு அடிமை செய்ய விரும்பினார். ஆனால் அப்பொழுதே அங்கு செல்ல இயலாமல் போயிற்று. அதனால் வருந்திய ஆழ்வாருக்கு இறைவன் தன்னைத் திருவனந்தபுரம் செல்ல முடியாமல் இங்கேயே இருக்கச் செய்து விடுவானோ என ஐயம் எழுந்தது. இதனை இடைப்பெண்களுக்கு ஏற்பட்ட ஐயமாக எடுத்துரைக்கின்றார். இது காலைப்பூசல் எனக் கருதப்படுகிறது. ஒன்றை விட்டு ஒன்று பிரியாத அன்றிற் பறவைகள் போன்று கண்ணனுடன் வாழ விரும்பினர். ஆய்ச்சியர் கண்ணன் ஆநிரை மேய்க்கச் செல்லுவதால் பகற்காலமெல்லாம் தனிமையில் கழிக்க வேண்டியுள்ளது. அந்தத் தனிமையும் தரிக்க முடியாது என்கின்றனர் ஆய்ச்சியர்.

---

373. நா. தி. பிர. திருவாய்மொழி - 9 - 9 - 1
374. நா. தி. பிர. திருவாய்மொழி - 9 - 9 - 2,3,4,5,6,7,8,9
375. நா. தி. பிர. திருவாய்மொழி - 9 - 10
376. சிலம்பு, கானல்வரி, பாடல் - 42
377. குற்றாலக் குறவஞ்சி - பாடல் - 25

தனிமையால் தோள்கள் மெலிகின்றனவாம்; தன் தனிமையைச் சிறிதும் எண்ணிப் பார்க்காது குயில்கள் இசைக்கின்றனவாம்; மயில்கள் ஆடுகின்றனவாம்; கண்ணன் சென்ற ஒரு பகல் நேரம் ஆயிரம் ஊழிக்காலம் போல் இருக்கின்றதாம். ஆகவே கண்ணா! நீ ஆநிரை மேய்க்கப் போவதைக் கைவிடுகவெனப் பூசலிடுகின்றாள்.[378] கண்ணன் ஆநிரை மேய்க்கப்பிரிந்தால் தன் உயிர் அனலிற்பட்ட மெழுகுபோல் உருகும் என்கிறாள் ஒரு தலைவி. இதனை நம்மாழ்வார் பாசுரம் அழகுபட எடுத்துரைப்பதனைக் காணலாம்.[379]

**தலைவியின் மனத்தேர்** *(மனோரதம்)* **:** பலவற்றைத் தூது விட்ட தலைவி அவை மீண்டும் வந்து செய்திகளைச் சொல்லும்வரை பொறுத்திருக்க முடியாமல் இருந்த இடத்திலிருந்தே தன் மனமாகிய தேரைச் செலுத்துகின்றாள். இறைவன் எழுந்தருளியுள்ள திருநாவாய் திருத்தலத்தினைச் சென்றடையும் வகையும் கொடிய வளாகிய தனக்கு உண்டோ?; அத்திருநாவாய் அடையப்பெறும் நாள் எந்நாளோ? திருநாவாய் திருநாரணன் அவையுள் புகக்கூடிய நாளை அறியாமல் இருக்கின்றேனே; தான் எவ்வளவு நாள் காத்திருப்பது, திருநாவாயைக் கண்ணாரக் களிப்பது என்றோ; அதனைத் தரிசிக்க உனக்கே தொண்டனாகி விட்டேன்; அடியவள் இவள் என்று அருள் செய்க; உன்னை என் நெஞ்சத்திருத்தும் அறிவைத் தருக எனத் தன் நெஞ்சத்திடம் கூறித் தன் மனத்தேரை செலுத்துவதாக நம்மாழ்வார் பாடியுள்ளமை காணலாம்.[380]

**உருவெளிப்பாடு கண்டுரைத்தல்** *:* தலைவன் உருவத்தினை மனக்கண்ணால் கண்டு தன் நிலையிழந்து உரைக்கும் சொற்களை உருவெளிப்பாடு கண்டுரைத்தலாகத் திருமங்கையாழ்வாரும், நம்மாழ் வாரும் கனவிற் கண்டு பிதற்றுவதைப் பிறர் கூறுவதையே கனவு நிலையுரைத்தல் எனப் பாடியுள்ளனர். ஆழ்வார்கள் தாங்களே தலைவியின் நிலையிலிருந்து பாடுகின்றனர்; இது ஒரு புதிய நிலை எனலாம்.

கச்சியம்பதியில் அட்டபுயகரம் என்னும் கோயில் உள்ளது. அங்கெழுந்தருளியுள்ள திருமால் அட்டபுயகரத்தான். அவன் மீது காதல் கொண்டாள் திருமங்கையாழ்வாராகிய காதலி. திருமாலின்

---

378. நா. தி. பிர. திருவாய்மொழி - 10 - 3 - 1
379. நா. தி. பிர. திருவாய்மொழி - 10 - 3 - 6
380. நா. தி. பிர. திருவாய்மொழி - 9 - 8 - 1 முதல் 10 வரை

நரசிங்காவதாரம், வாமனாவதாரம், கிருட்டிணாவதாரம் முதலியனவும் அவள் கண்முன் தோன்றுகின்றன. திருமாலினது நிறம் கடல், நீலமேகம், பூவைப்பூ, காயாம்பூ போன்று உள்ளது. அவற்றைக் கண்ட அளவில் கண்ணனை நினைந்து, தன் மனக்கண் முன் தோன்றிய இறைவன்தான் அட்டபுயகரத்தான் எனத் தம்முள் எண்ணி, தானே கூறிக்கொள்ளுகின்றாள். இறைவனைக் கண்ட நிலையில் தன் வளை, நெஞ்சம் ஆகியவற்றை இழந்த தலைவி, வாய்விட்டுப் பேசுகின்றாள். தன் மனக்கண் முன் நின்ற தலைவன் தனது வஞ்சிக் கொடி போன்ற இடையினை நெருங்கிப் பார்த்து வாய் திறந்தும் பேசினானாம். அவனுடைய பார்வை தன்னை வாட்டுவிக்கும் நஞ்சு கலந்ததாம்.

''தஞ்சம் இவர்க்கென் வளையும் நில்லா
நெஞ்சமும் தம்மதே, சிந்தித்தேற்கு

வஞ்சி மருங்குல் நெருங்க நோக்கி,
வாய் திறந்தொன்று பணித்த துண்டு

நஞ்ச முடைத்திவர் நோக்கும் நோக்கம்;
நானிவர் தம்மை யறிய மாட்டேன்.

அஞ்சுவன் மற்றிவர் ஆர்கொல்? என்ன
அட்ட புய கரத்தேன் என்றாரே''

என வரும் பாசுரம் உருவெளி கண்ட தலைவியின் நிலையினை அழகுபட எடுத்துரைப்பதனைக் காணலாம்.[381]

இறைவனது அழகினை உருவெளித் தோற்றத்தில் கண்டாள் ஒரு தலைவி. அவனுடைய கண்கள் உயிரை யுண்ணும் கூற்றுவன் என்றும், கொவ்வைக் கனி போன்ற வாய் தன்னைத் துயர்படுத்தும் தன் பொல்லா வினையென்றும், மன்மதனது கரும்பு வில் போன்ற இரு புருவங்களும் புன்முறுவலும், காதுகளும் திருமுகமும் திருநுதலும் தன்னை வருத்துகின்றனவென்று கூறுகின்றாள். கண்ணனது கண்கள் தன்னைக் கொல்விக்கும் எமன்தானோ என்கின்றாள்.[382]

காமநோய் முதிர்ந்தால் இறக்கவும் துணிவர் என்பது ''பிறிதும் ஆகும் காமம் காழ்க் கொளினே'' என்னும் குறுந்தொகைப் பாடல் அடியால் அறியப்படுவதாகும்.[383]

---

381. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 8 - 9
382. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 7 - 1 முதல் 10 வரை
383. குறுந்தொகை - 17

கண்ணன் மீது காதல் கொண்ட தலைவியொருத்தி தன் நிலை கெட்டுப் பிறிதாகின்றாள். அவள் மேல் கண்ணன் ஆவேசித்து இருப்பது போல் தோன்றுகின்றது. தானே கண்ணன். தானே எல்லாம் எனப் பிதற்றுகின்றாள். இதனைக் கண்ணுற்ற, அயலவர் இவளுக்கு என் நிகழ்ந்தது? எனக் கேட்கின்றனர். அவள் தாய் அவளது நிலையினைக் கூறுகின்றாள்.

உலகத்தைப் படைத்தவன், உலகமானவன், உலகை அழிப்பவன், உலகமுண்டவன் எல்லாம் தானே என்கின்றாள்.[384] கற்கும் கல்வியும், அக்கல்வியைச் செய்பவனும் அதன் சாரமும் தானே எனக் கூறுகின்றாள்.[385] பஞ்ச பூதங்களும் நானே என்கின்றாள்.[386] முக்காலமும் நானே, முக்கால வினைப் பயன்களும் நானே, எல்லோரையும் ஆட்டுவிப்பவனும் நானே, மலையைக் குடையாக எடுத்தவனும் நானே, மண்ணைக் காப்பவனும் நானே, அசுரரைக் கொன்றவனும் நானே, ஏழு ஏறுகளை அடக்கியவனும் நானே, ஆயர் தலைவனும் நானே. எனக்கு உற்றார்களில்லை, எல்லோரும் உற்றார்களே. உற்றார்களைச் செய்பவனும் அழிப்பவனும் யானே என்கின்றாள். சிவன், பிரமன், தேவர்கள், தேவேந்திரன், முனிவர்கள் எல்லாம் தானே என்கின்றாள். என் மகள் இவ்வாறு உரைப் பதற்கெல்லாம் கண்ணன் அவள் மீது ஆவேசித்து வந்துள்ளமையால் போலும் என அயலவர்க்கு எடுத்துரைக்கின்றாள்.[387]

காதல் வயப்பட்டவர்கள் அக்காதல் விருப்பம் நிறைவேறாமற் போனால் பித்தம் பிடித்தவர்போல் பிதற்றுவது அன்றும் இன்றும் உலகியற்கை. இதற்கு எம்பெருமானிடத்துக் காதல் கொண்ட ஆழ்வாரும் விதிவிலக்கல்ல என்பது போல் இத்திருவாய் மொழி அமைந்துள்ளமை காணலாம்.

**புலவி :** காதல் வாழ்க்கை இனிமையுடையதாக இருக்க வேண்டின் ஊடல் வேண்டும். ''உப்பமைந்தற்றால் புலவி'' எனக் கூறுகின்றார் திருவள்ளுவர். கண்ணன் தன் காதலியொருத்திக்குத் தான் வாக்களித்தபடி உரிய காலத்தில் வந்திலன். ஒருநாள் இரவு

---

384. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 6 - 1
385. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 6 - 2
386. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 6 - 3
387. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 6 - 4 முதல் 8 வரை

கதவருகில் வந்து நின்றான். புன்முறுவல் பூத்தான். அவன்மீது புலவி கொண்ட தலைவி,

"மல்லே பொருத திரள்தோள் மணவாளீர்?
அல்லே யறிந்தோம் நும்மனத்தின் கருத்தை
சொல்லா தொழியீர்; சொன்னபோதினால் வாரீர்
எல்லே இதுஎன்? இதுஎன்? இதுஎன்னோ"

எனக் கேட்கின்றாள்.[388] சொன்னபடி வராமல் பல தேவிமாரோடுங் குலாவி விட்டுத் திடுமென இரவில் வந்து கதவருகில் நின்று புன்முறுவல் பூத்து நிற்பது எதற்காக எனப் புலந்து கூறுகின்றாள்.

கண்ணன் காதலியொருத்திக்குத் தான் குறித்த காலத்தில் வந்தருள் செய்திலன். ஒருநாள் அக்காதலியின் இல்லத்திற்கு வந்தான். ஊடல் கொண்ட காதலி உன் அருள் பெற்ற பெண்கள் பலருண்டு. உன்னுடைய கள்ளத்தனத்தை நான் அறிவேன் எனக் கோபிக்கின்றாள். கண்ணன் அவள் சினத்தைத் தணிக்கக் குழலுதினான். அக்குழலோசை கேட்ட தலைவி மேலும் வெகுண்டு அவனது அருள் பெற்ற மயிலனையார் கேட்க ஊதுகவெனக் கூறுகின்றாள். பல வார்த்தைகள் சொல்லி அவளைத் தேற்ற எண்ணுகின்றான், கண்ணன். அவ்வுரையினைக் கேட்ட தலைவி நின்னுடைய திருட்டுத்தனம் அறியாதவர்களிடத்தில் பொய்களைக் கூறு என எடுத்துரைக்கின்றாள். தன் சொல்லைக் கேட்க மறுக் கின்றாளே தன் காதலியென்று அவளைக் கடிந்துரைக்கின்றான் கண்ணன். தன்னைக் கழற வேண்டாமென்கின்றாள் தலைவி.

தன் சாகசங்கள் பலிக்காததால் கண்ணன் தலைவியினுடைய பூவையோடும், கிளியோடும் விளையாட முற்பட்டான். தனக்கு வேண்டிய ஒருவரைத் தன் வயப்படுத்த அவர்களுடன் தொடர் புடைய ஒன்றினோடு அதிக விருப்பமுற்றவர் போல் நடிப்பது உலகியற்கை. தன் கிளியோடு விளையாட முற்பட்ட கண்ணனைப் பார்த்து, உன் வஞ்சனைகளை நான் நன்கறிவேன். உன் அருள் பெற்ற தேன் போலும் இனிய மொழி பேசும் மனம் வாடி நிற்க, ஊறுகின்ற மொழி பேசும் பூவையொடும், கிளியொடும் குழைந்து விளையாடாதே எனக் கடிந்து கூறுகின்றாள். இறுதியாக உனக்குத் தேவிகளாக அமையக் கூடிய அழகிகள் பலர் இம்மூவுலகத்திலு மிருப்பர். அவருடன் சென்று விளையாடு என ஊடல் கொண்டு ஆய்ச்சி கூறுவதாக நம்மாழ்வார் அகத்துறைப் பொருள்பட அமைத்துள்ள திருவாய்மொழிப் பாடல்கள் படித்தின்புறத்தக்கன.[389]

---

388. நா. தி. பிர. பெரிய திருமொழி - 10 - 8 - 7
389. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 2 - 1 முதல் 6 வரை

**மடல் :** இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் பல்வேறு காரணங்களினால் தலைவியின் அன்பு கிடைக்கப்பெறாத நிலையில் தலைவன் மடலேறுவதாகக் கூறி அச்சுறுத்துவான். இதனை ''மடல் மாக்கூறு மிடனுமாருண்டே''[390] எனத் தொல்காப்பியப் பொருளதிகாரம் சுட்டுகின்றது. பனங்கருக்கால் குதிரையொன்று செய்வித்து, அதற்கு ஆவிரம்பு மாலையும், மணியும் அணிவித்து மடலேறுதல் வழக்கம்.[391] தான் காமுற்ற நங்கையை அடைய முடியாத ஒருவன் மார்பில் எலும்பு மாலையும், தலையில் எருக்கம்பூ மாலையும் சூடி, பனங்கருக்குகுதிரை மேல் ஏறித்தெருவில் வருவான்.[392] அத்தலைவன் கையில் அவனுடைய காதலியின் படமெழுதிய கிழியொன்றிருக்கும். அதனை ஊரவர் காணின் இன்ன தலைவிக்கு இவன் காதலன் என்பதை அறிவர். அதோடு பனங்கருக்கில் தலைவன் ஏறிவரும் போது அக்கருக்கு முள் அவனுடம்பிற்பட்டு மிகுந்த குருதி வடியும். இக்காட்சியைக் காணும் ஊரவர் அவன்பால் பெரிதும் இரக்கம் கொள்வர். இத்தகைய காதலனுக்கு மகளைக் கொடுக்க மறுக்கலாமா என்று அவள் பெற்றோரிடம் முறையிடுவர். ஆகவே பல்லோர் அறிய மடலேறுதல் நிகழாகுபடி தலைவனுக்குத் தலைவியை மணம் செய்விப்பர். தன் எண்ணம் நிறைவேற மடல் ஏறுவதன்றி வேறு வழியில்லை எந்தோழியிடம்

''மாவென மடலு மூர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதின் ஆகுப காமம் காழ்க்கொளினே''[393]

என்று ஒரு தலைவன் கூறுவதைக் காணலாம், இதேபோன்று சங்க இலக்கியங்களில் மடல் குறித்து வரும் பாடல்கள் பதின்மூன்று உள்ளன.[394] மடலேறுதலில் இருவகையுண்டு. இதில் மடலேறுவன் என வாயளவில் சொல்லுதல் ஐந்திணையின் பாற்படும் ''மடல் மாக்கூறும் இடனுமாருண்டே'' என்பது அது. அவ்வாறின்றி மடல் ஏறியே தீருவேன் என்பது பெருந்திணையாகும். இஃது ஏறிய மடற்றிறம் என்பது[395] மடலேறுதல் ஆண்களுக்குரிய வொன்று.

---

390. தொல். பொருள் - நூ - 1047
391. குறுந்தொகை - 173
392. குறுந்தொகை - 182
393. குறுந்தொகை - 17
394. நற். 146, 152, 342, 377
குறுந்தொகை - 14, 17, 32, 173. 182
கலித்தொகை - 138, 139, 140, 141
395. நாலாயிரம் - பெரிய திருமடல் - முன்னுரை

பெண்டிர் மடலேறுதல் வழக்கமன்று எனினும் திருமங்கையாழ்வார் தலைவி மடலேறுவேன் என்று கூறியதாகப் புதுமையான முறையில் சிறிய திருமடல், பெரிய திருமடல் ஆகிய இரண்டு தனி நூல்களை இயற்றியுள்ளார். இது ஒரு இலக்கியப் புரட்சி என்றே கூறலாம்.

**சிறிய திருமடல் :** தலைவி பந்தாடிக் கொண்டிருந்த போது செங்கண்மால் பாரோர்களெல்லாம் மகிழப் பறை கறங்க வீதி வழியே வலம் வந்தான். பந்தாடிய பெண்கள் பலரும் விரைந்து அவனைக் காணச் சென்றனர். அவருடன் தலைவியும் சென்றாள். தன் வல்வினை காரணமாய் உலாச் சென்ற தலைவன் மீது காதல் கொண்டு மணி நிறமும், கைவளையுமிழந்தாள். அறிவழிந்து காம நோயுற்றுப் பேதுறுவாளானாள். இந்நிலை கண்ட தாய்மார் கட்டு விச்சியை அழைத்துக் குறி கேட்டனர். குறி சொல்ல வந்த கட்டு விச்சியும் தலைவிக்குற்ற நோய் பேராயிரமுடைய பிரானாகிய திருமாலால் வந்தது என அறுதியிட்டுக் கூறினாள்.[396] அதனால் தன் கவலை தீர்ந்ததாய் தன்னடிச்சியாகிய தலைவிக்குத் தலைவன் எப்படியும் அருள் செய்வான் என மன அமைதியுற்றாள். இரவு வந்தது. இரவின் தனிமையும், வாடையின் ஈர்ப்பும் தலைவியைப் பெரிதும் வாட்டியது. தன் நெஞ்சினைத் தூதனுப்பித் திருத்துழாய் மாலையைத் தாரானா அல்லது த:நவானா என இரண்டிலொன்று கேட்டு வரும்படி ஏவினாள். தூது சென்ற நெஞ்சு திரும்பி வர வில்லை. ஊரவர் பழிச்சொல்லுக்காளானாள் தலைவி.[397] அவள் நெஞ்சம் நீராய் உருகியது. நெஞ்சமுருகி, கண்கள் நீருகுத்தன. ஊரார் உறங்கியும் தலைவி உறங்காமல் திருமாலின் ஆயிரம் பெயர் களையும் சொல்லிப்பிதற்றுவதானாள்.[398] இவ்வாறு வாடிய தலைவி பல திருப்பதிகள் தோறும் சென்று தன் காதலனைத் தேடினாள். தலைவனைக் காணமுடியவில்லை. எனவே, தான் பெண்ணாயினும் திருமால் பேரைப் பிதற்றிப் பெரிய தெருவின்கண் பெண் மடலூர்வ தால் ஊரவர் இகழ்ந்து கூறினும் பூம்பெண்ணை மடலூர்வதைத் தவிரேன் எனக் கூறுகின்றாள். இப்பாடலில் திருமங்கையாழ்வார் திருமாலின் பெருமைகள் பலவற்றையும் அவன் எழுந்தருளியுள்ள திருப்பதிகள் பலவற்றையும் அழகுபட எடுத்துரைப்பதைக் காணலாம்.[399]

396. நா. தி. பிர. சிறிய திருமடல் - 20 முதல் 24 வரை
397. நா. தி. பிர. சிறிய திருமடல் . 58 முதல் 61 வரை
398. நா. தி. பிர. சிறிய திருமடல் - 62 முதல் 64 வரை
399. நா. தி. பிர. சிறிய திருமடல் - 69 முதல் 78 வரை

பக்தி இயக்கத்தை வளர்த்த ஆழ்வார்களுள் திருமங்கையாழ்வார் குறிப்பிடத் தக்கவராவார். 'மடல்' என்னும் பிரபந்த வகையை வழங்குவதன் மூலம் மக்கள் திருமால் மீது கொள்ள வேண்டிய வரம்பிகந்த காதலைக் குறிப்பால் சுட்டுகிறார். திருமால் எங்கு உளன்? அவன் எத்தகையன்? போன்ற வினாக்களைக் கேட்பார்க்கு விடை கூறி அவர்களைத் திருமால் உறையும் திருத்தலங்களை நோக்கி நடைபோடச் செய்வதற்காக அத்திருமால் உறையும் திருப்பதிகளையெல்லாம் குறிப்பிடுகிறார். எங்கோ இருக்கிறான் இறைவன் என்று எண்ணி மயங்கித் தவிக்கும் மக்களுக்கு வழிகாட்டி அனுப்புவதுபோல் அவன் உறையும் இடங்களையெல்லாம் காட்டி அங்கு சென்று வழிபாடு செய்யத் தூண்டுகிறார்.

**பெரிய திருமடல் :** அறம், பொருள். இன்பம், வீடு என்பது காணாத பொருளுக்கு உரிய சொல்லாக இருக்கின்றது. ''நான் சென்று வந்தேன், வீடு பேறு இப்படி இருந்தது'' எனக் கூறியவர் இதுவரை உலகில் இல்லை. அறத்தால் பெறப்படும் பொருளால் இன்பமனுபவித்தலே சிறந்தது. இதனையறிந்தே திருவள்ளுவரும் அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலைப் படைத்தனர் போலும். இன்பத்தை விரும்பாதவர்கள் உண்மையில் சுவையற்றவர். தமிழர்கள் இன்பத்தை எவ்வாறு துய்த்தனர் என்பதைத் தொல்காப்பியர் பொருளதிகார மெய்ப்பாட்டியலில் சிறப்பாக எடுத்துரைத்துள்ளார்.

திருமங்கையாழ்வாராகிய தலைவி இறைவன் மீது அளவற்ற காதல் கொண்டாள். அவர் பொருள் நான்கில் இன்பமே சிறந்த தாகக் கூறுகின்றார். வீடு பேற்றைக் கண்டவர் விண்டதில்லை. விண்டவர் கண்டதில்லை.[400] தேவருலக இன்பமும் இத்தலைவிக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. தெய்வ இன்ப வழியிலே செல்ல வேண்டும் என நினைக்கிறார்.[401] பெண்டிர் மடலூர்தல் கூடாது என்னும் விதிமுறையினை இத்தலைவி ஏற்றுக்கொளளவில்லை. மடலூர்தல் குற்றமன்று என்னும் வடமொழி நெறியினைத்தாம் ஏற்றுக் கொள்ளுகின்றாள்.[402] சீதை, வேதவதி. உலூபி, உழை ஆகிய பெண்கள் தத்தம் கணவரை விட்டுப் பிரிய மனமில்லாத வரலாற்றை ஆராய்ந்து கூறுகின்றாள்.[403] தலைவி திருநறையூர்ப் பெருமானைக் கண்டாள். அவனுடைய திருவுருவம் அவளைக் கவர

400. நா. தி. பிர. பெரிய திருமடல் - 11 முதல் 15 வரை
401. நா. தி. பிர. பெரிய திருமடல் - 19 முதல் 29 வரை
402. நா. தி. பிர. பெரிய திருமடல் - 38 முதல் 39 வரை
403. நா. தி. பிர. பெரிய திருமடல் - 47 முதல் 70 வரை

அவன் மீது ஆராக் காதல் கொண்டாள். நெஞ்சம் நெகிழ்ந்தது. வளையும், மேகலையும் கழன்று வீழ்ந்தன.[404]

காம வயப்பட்ட பெண்டிற்குத் தொல்லை தரும் கடல், மதி, தென்றல், அன்றில் முதலியன அவளை ஈர்க்கும் வாளாக இருந்தன[405] தனது இளமையின்பம் திருமாலுக்கே உரியது. தான் தலைவனது மார்பை, அணையப் பெறாவிடில் தன் பெண்மைக்குரிய உறுப்புகள் இருந்தும் பயனற்ற பாரமாகும் எனக் கூறுகின்றாள்.[406] மாலை நோய் அவளை வாட்டுகின்றது. திருமாலின் பெருமைகள் பலவற்றையும் பாராட்டிப் பேசுகின்றாள் தலைவி.[407] தனக்கு அவன் அருள் செய்யாவிடில் அவனுடைய இரக்கமற்ற செயல்களை ஊரறியச் சொல்லிப் பறைசாற்றி,

''உன்னி யுலவா — உலகறிய ஊர்வனநான்
முன்னி முளைத்தென்ழுந் தோங்கி யொளிபரந்த
மன்னிய பூம்பெண்ணை மடல்''[408]

எனத் தான் மடலூர்வதாக எடுத்துரைக்கக் காணலாம்.

மேலே கூறப்பட்ட திருமங்கையாழ்வாரின் இரு மடல்கள் மூலம் அவரது புதுமைத் தன்மையும், புரட்சித் தன்மையும் புலனாவதுடன் அவர் திருமால் மீது கொண்டிருந்த ஆராவன்பினையும் பக்தி மேலீட்டையும் அறிய முடிகின்றது.

**கூடல் இழைத்தல்** என்பது, காதல் கொண்ட தலைவி, தலைவன் தன்னை வந்து கூடுவானோ, கூடமாட்டானோ என்பதை யுணரக் கையாளும் ஓர் செயலாகும். பூமியில் மணலைப் பரப்பிக் கண்களை மூடிக்கொண்டு தம்முடைய நான்கு விரல்களையும் மடக்கிச் சுட்டு விரலால் வட்டமாகக் கீறி, கீறும் போது ஊன்றிய இடத்தில் சுட்டுவிரல் நுனி வந்து பொருந்தியதாவென்று பார்த்தல். அங்ஙனம் பொருந்துவது தலைவன் வருவான் என்பதையும், பொருந்தாமை தலைவன் வரமாட்டான் என்பதையும் அறிந்து கொள்ள இயலும் வழியாகக் கருதுவது மரபு.

திருவரங்கன் மீது காதல் கொண்டு அவனையே மணப்பதென்று உறுதி கொண்ட ஆண்டாள் தான் தலைவனைக் கூட இயலுமோ

404. நா. தி. பிர. பெரிய திருமடல் - 81
405. நா. தி. பிர. பெரிய திருமடல் - 83 முதல் 86 வரை
406. நா. தி. பிர. பெரிய திருமடல் - 89 முதல் 91 வரை
407. நா. தி. பிர. பெரிய திருமடல் - 96 முதல் 133 வரை
408. நா. தி. பிர. பெரிய திருமடல் - பாடல் 78 - அடி 150-153

என ஏனைய பெண்கள்போல் கூடலிழைத்துப் பார்க்கின்றாள். திருமாலிருஞ்சோலை மணாளர் வந்து தாம் பள்ளி கொள்ளும் இடம் வருவாராயிற் கூடலே கூடு என்றும், வாமனாவதாரங் கொண்ட திருமால் வந்து தன் கையைப் பற்றி அவனொடும் தன்னைக் கூட்டிக் கொள்ளுமாகில் கூடலே கூடு என்றும், வசுதேவன், தேவகி மகனாகிய கோமகன் வரில் கூடலே கூடு எனவும், காளிங்கநர்த்தனம் செய்த வனும், குவலயாபீடமாகிய மதயானையைச் செற்றவனும், வட மதுரைப் பதியாகிய கொற்றவனும், கஞ்சனைக் கொன்றவனும், துவாரகைத் தலைவனுமாகிய திருமால் தன்னை வந்து கூடுவா ரெனில் கூடலே நீ கூடு என்று ஆண்டாள் கூடலிழைப்பதை நாச்சியார் திருமொழியில் காணலாம்.[409]

**தாயிரங்கல் :** அகத்துறையில் வரும் மாந்தர்களில் செவிலித் தாயும், நற்றாயும் அடங்குவர். செவிலித்தாய் நற்றாயின் தோழியாவாள். தலைவியைக் கண்ணும் கருத்துமாகப் பாதுகாத்தல் அறத்தொடு நிற்றல், தலைவியின் துயர் கண்டு புலம்புதல், உடன் போக்கு நிகழ்ந்த வழி தலைவியைச் சுரத்திடைத் தேடித் திரிதல் ஆகியன செவிலியின் கடமைகளாகும்.

நற்றாய் என்பவள் தலைவியைப் பெற்றெடுத்த தாயாவாள். செவிலியின் மூலம் தலைவியின் களவினை உணர்ந்த நற்றாய் தந்தைக்கும் தனயர்க்கும் அறத்தொடு நிற்றலும், உடன் போக்கு நிகழ்ந்த வழி இல்லின் கண் இருந்து புலம்புவதும் நற்றாயின் செயல்களாகும்.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் பெரியாழ்வாரும், திருமங்கை யாழ்வாரும், நம்மாழ்வாரும் தாயின் நிலையில் நின்று பாடிய பல பாசுரங்கள் காணப்படுகின்றன. அவை தன் மகள் தன்னிலை மாறிப் பித்தேறியவள் போல் காணப்படுவதையும், பிதற்றுவதையும் கண்டு பொறாத தாய் ஊராரிடம் தன் மகள் உற்ற துயரத்தினை எடுத் துரைத்தலும், வருந்துதலும், தலைவனது கொடுமைகளை எடுத்துரைத்தலும் பேசப்படுகின்றன. அடுத்தபடியாக உடன்போக்கு நிகழ்ந்தபின் செவிலியும், நற்றாயும் வருந்தியதாகப் பல பாசுரங்கள் தெரிவிக்கின்றன.

பெரியாழ்வார் தமது திருமொழியில் ஒரு தாயின் நிலையில் புலம்புகின்றார். தாயாரைப் பிரியாப் பருவத்துப் பெண்ணான

---

409. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 4 - 1 - 1 முதல் 10 வரை

தன் மகள் ஆடையைச் செவ்வனே உடுக்கும் திறமும் பெறாதவள், சிற்றில் இழைப்பதையும் கைவிடாதவள். வாயில் பற்களும் முற்ற முளைக்காதவள். தலையில் மயிரும் ஐம்பாலாக முடிக்குமளவிற்கு வளரவில்லை. அவ்வளவு சிறு வயதிலேயே மாயன் மணிவண்ணன் மேல் மயக்கம் கொள்ளுகின்றாள். அவள் சிற்றில் இழைக்கும் போதும் அதில் திருமாலினுடைய பஞ்சாயுதங்களைத் தவிர வேறு இழைக்க முற்படுவதில்லை. சிறு கொங்கைகளும் முதிர்ந்த பாடில்லை. அப்படியிருக்கவும் இவள் கோவிந்தனோடு தொடர்பு கொண்டமையை எண்ணி என் உள்ளம் வருந்துகின்றது.[410]

என் மகளை அவளது தோழிமார்கள் கொண்டுபோய் சக்கரப் படையான் என்னும் ஆழமிகுந்த பள்ளத்தில் தள்ளி அதில் அகப்பட வைத்துவிட்டார்கள். வெளிப்படையாகத் தன் காதலன் இன்னான் என்பதைப் பெண்கள் தெரிவிக்கும் இயல்பினர் அல்லாராயினும் என் மகள் தான் காதலித்த தலைவனை ஏனையோர் நன்கு உணருமாறு அவனது மாலையாகிய துளசி மாலையைச் சூடிக்கொண்டு, நாராயணன் போகுமிடமெல்லாம் கூறி வருந்துகின்றாள். ஊரிலுள் ளோர் பலர் இவளைக் கேசவனோடு பாடிக் காவலிடுமின்! என்று கூறுகின்றனர். என் மகள் மிகவும் அன்பாக வளர்த்த என்னோடு இருக்கவும் விரும்பவில்லை. வெளியில் புறப்பட்டுச் சென்று பூவைப் பூவண்ணாவென வெளிப்படையாகக் கண்ணனை அழைக்கின்றாள். மங்கையரே இவள் மயக்கமுற்ற நிலைக்கு நான் என்செய்வேன் என்கிறாள்.[411]

தன்னை ஒப்பனை செய்துகொண்டு ஆடையுடுத்தி, அயர் வெய்திப் பின் தேறி, திருமாலின் ஆயிரமாயிரம் பெயர்களையும் எடுத்துக் கூறி அவனுடைய நிறங்களைப் பேசுவாள். இவள் மணிவண்ணன் மீது மயக்கம் கொண்டுவிட்டாள். இனி இவளை வாளா விடுவதில் பயனில்லை. இவளுக்கு வேறு திருமணம் செய்வதும் குற்றமாகும். எனவே இவளைத் திருமாலின் பக்கம் கொண்டுவிடுங்கள் என்கின்றனர் பலர். இவளுக்குத் திருமணம் செய்து நம் இல்லத்திலேயே வைத்துக்கொள்ள நாமிருக்க இவளோ வேறு ஒன்றினை எண்ணுகிறாள். இவள் களவு முதிர்ந்து கற்பினில் நுழைவதற்கு முன்னே இவளை உலகளந்த பெருமானாகிய

410. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 7 - 1 முதல் 3 வரை

411. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 7 - 4 முதல் 6 வரை

திரிவிக்கிரமனுடன் ஒன்றுசேர்த்து விடுங்கள் எனச் சிலர் உரைக்கின்றனர் எனப் பெரியாழ்வார் கண்ணன் மீது காதல்கொண்ட தன் மகள் நிலையினை எடுத்துரைப்பதைக் காணலாம்.[412]

திருவிடவெந்தை வராகப் பெருமான் மீது காதல்கொண்ட தன் மகளின் நிலையினைத் தாயாக நின்று கூறுகின்றார் திருமங்கையாழ்வார்.

திருமகள் உன் மார்பில் இருப்பதை அறிந்தும் உன் மீதுள்ள ஆசையைக் கைவிடவில்லை. உன்னையே பற்றாக நினைத்திருக்கும் இவளை என்ன நினைத்திருக்கின்றாய். உன் மீது காதல் கொண்டது முதல் குறுமுறுவலும் பூப்பதில்லை. மார்பில் சந்தனம் பூசாள். கண்ணுக்கு மையெழுதாள். கூந்தலுக்கு மலரும் சூடாள். வையமளந்த திருமாலென்று கூறி மயக்க மொழி பேசுவதையே உடையவளாக இருக்கின்றாள். தோழிமார் சந்தனம் பூசினும் தழல் என்கிறாள். தண்மதியின் சுடர் சுடுகின்றது என்கிறாள். கடல் புலம்பும்போது தானும் புலம்புகின்றாள். மாந்தளிர் போலும் அவளதுஅழகிய நிறமும் பீர்க்கம் பூப்போல் பசலை பூத்தது. தோள் மெலிந்து தொடி கழிந்து வருந்துகின்றாள்.

இரவு ஒவ்வொரு நாழிகையும் ஊழிக்காலத்தைவிடப் பெரியதாய் உள்ளது. கடலும் புலம்புகின்றது. அன்றிற் பறவைகளும் உறங்கவில்லை. தென்றற் காற்றும் தீயைவிடக் கொடிதாயுள்ளது. என் இளமுலைகள் பசப்புறுகின்றன. தோழியரே என் செய்வேன் என்று வருந்துகின்றாள். இரவு, கடல், அன்றிற் பறவை, தென்றற் காற்று இவை காம வயப்பட்ட பெண்டிற்குத் தொல்லை தருவன என்பது பொதுவான செய்தி.

உன் பெயரையே சொல்லி, உன் திருவுருவத்தையே நினைந்து உருகி, உன் மீது அன்பு மிக்குடையவளாய் இருக்கின்றாள். உறக்கத்தை மறந்தாள். தன் குடிக்குக் கேடு வருவதைப் பற்றிக் கவலைப்படாமல் நீ இலங்கையை அழித்த சொல்லைக் கேட்டு இன்புற்று மயங்குகிறாள். உன் மீதன்றித் தாயாகிய என் மீது சிறிதும் அன்பில்லாதவளாக இருக்கின்றாள். ஆயனாகிய கண்ணன் ஊதும் ஆம்பலந்தண் குழற்கு என் உள்ளம் அழியும் என்று கூறுகின்றாள். கண்ணன் எழுந்தருளியுள்ள திருநீர்மலைக்குப் போகலாமா என்கின்றாள். உன்மேல் பெரிதும் ஆசை கொண்ட

412. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 7 - 7 முதல் 10 வரை

என் மகளுக்குற்ற நோயை நான் அறியேன். திருவிடவெந்தையில் எழுந்தருளியுள்ள பெருமானே உன் மீது மாலுற்ற என் பெண்ணை என்ன செய்ய நினைத்திருக்கின்றாய் எனத் திருமங்கை மன்னன் கேட்கின்றார்.[413] மேலும் திருமங்கையாழ்வார் தாயின் நிலையில் இருந்து புலம்பும் பாசுரங்கள் பலவற்றைப் பாடியுள்ளார்.[414] அவற்றுள் நெஞ்சையள்ளுவனவாக உள்ளவை திருநெடுந்தாண்டகத்தில் அவர் பாடிய பாசுரங்கள் எனின் மிகையாகாது.

''பட்டுடுக்கும் அயர்ந்திரங்கும் பாவை பேணாள்
பனிநெடுங் கண்ணீர் ததும்பப் பள்ளிகொள்ளாள்
எட்டனைப்போ தென்குடங்கால் இருக்க கில்லாள்,
எம்பெருமான் திருவரங்க மெங்கே? என்னும்
மட்டுவிக்கி மணிவண்டு முரலும் கூந்தல்
மடமானை இதுசெய்தார் தம்மை, மெய்யே
கட்டுவிச்சி! சொல்என்னச் சொன்னாள், நங்காய்!
கடல்வண்ணர் இதுசெய்தார் காப்பார் ஆரே?

எனத் தன் மகள் அரங்கன் மேல் காதல் கொண்டு தன்னிலை யிழந்ததைத் தாய் வருத்தத்துடன் கூறுவதும்[415] மேலும் தன் மகள் அரங்கனை எண்ணி, நெஞ்சுருகிக் கண்ணீர் சொரிந்து நெடிதுயிர்த்து ஊணும் உறக்கமுமின்றி அயர்வதனையும்[416], திருமாலின் செயல் களையே புகழ்கின்ற திறத்தினையும், அவன் புகழையே கேட்க விரும்புவதனையும், அவன் புகழையே பாடுவதையும், திருமால் செயல் கூறிக் கண்ணீர் விடுவதையும், திருமால் எழுந்தருளியிருக்கும் குடந்தை, கோவலூர் முதலிய நகரங்களைப் பாடுவதையும் எடுத்தியம்பி இறுதியாக அவள் திருநீர்மலை செல்ல விரும்புவதை,

''ஏர்வண்ண என்பேதை என்சொல் கேளாள்;
எம்பெருமான் திருவரங்க மெங்கே? என்னும்
'நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்' என்னும்
இதுவன்றோ நிறையழிந்தார் நிற்குமாறே?''[417]

எனத் தன் மகள் நிறையழிந்து நிற்கும் நிலையினை எடுத்துரைத்துத் தன் மகள் பெருந்தவம் செய்தவள் என்பதனை,

413. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 7 - 1 முதல் 10 வரை
414. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8, 8 - 2, 9 - 9, 10 - 9
415. நா. தி. பிர. திருநெடுந்தாண்டகம் - 11
416. நா. தி. பிர. திருநெடுந்தாண்டகம் - 12
417. நா. தி. பிர. திருநெடுந்தாண்டகம் - 18

''பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து
பாரளந்து பாரையாண்ட
பேராளன் பேரோதும் பெண்ணை மண்மேல்
பெருந்தவத்தள் என்றல்லால் பேசலாமே?''

என வரும் பாசுர அடிகளில் பேசக்காணலாம்.[418]

நம்மாழ்வார் தாய் இரங்குவதாகத் தமது திருவாய்மொழியில் எழுபது பாடல்கள் பாடியுள்ளார். ''உன் மீது காதல் கொண்டதால் தன்னிலையிழந்து துன்புறுகின்றாள். அவளுக்கு நீர் என்ன செய்யப் போகின்றீர்?'' என இறைவனை வினவுகின்றார்.

''ஆடியாடி யகம்கரைந்து இசை பாடிப்பாடிக்
கண்ணீர் மல்கிஎங்கும்
நாடிநாடி நரசிங்கா! என்று வாடிவாடும் இவ்வாணுதலே''

எனத் தம் மகள் வாடி நிற்கின்ற நிலையினைத் தெரிவிக்கின்றார்.[419] மேலும் உம்மைக் காண வேண்டுமென்ற ஆசையால் உள்ளம் நைகின்றாள். உள்ளம் நையுமானால் கண்களில் நீர் மல்கும் என்பது யாவரும் அறிந்தவொன்று. ''நைந்து நொந்துருகி உள்ளம் நயனத்தின் வழியாயோட'' எனத் தேசிகவிநாயகம்பிள்ளை எடுத்துரைப்பதைக் காணலாம்.[420]

நெருப்பில் உருகும் அரக்குப்போல் என் மகள் காணப்படுகின்றாள். உனக்கு அவள்மேல் இரக்கம் எழவில்லையே அதற்கென் செய்வேன்.[421] உன் பெருமைகளைக் கூறிப் பெருமூச்சு விடுகின்றாள். கண்களில் நீர் மல்கிக் கலங்கிக் கைகூப்பி உன்னையே தொழுகின்றாள். உனது திருத்துழாய் மாலையைக் கொடுக்கும்படிக் கேட்கின்றாள். பெருமை மிக்கவனே, தன்னால் பெரிதும் விரும்பப் படுபவனும், தனது உள்ளுயிர்க்கு அமுதமே என்று கூறி நெஞ்சு உக்கிடும்படி உருகி நிற்கின்றாள்.[422] உன் பெருமைகளையே பேசுவாள். உன்னையே தஞ்சமாக அடைந்தாள். அவளுக்கு இரவும் பகலும் கூடத் தெரிவதில்லை துழாய் மாலை உடையவனே! என்று கூறுகின்றாள். சக்கரப்படையைக் கையில் கொண்டவனே என் ஏழை மகள் திறத்தில் உமதெண்ணம் யாது? அவளைப் பெரிதும்

418. நா. தி. பிர. திருநெடுந்தாண்டகம் - 20
419. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 4 - 1
420. தேசிக விநாயகம் பிள்ளை - ஆசிய ஜோதி
421. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 4 - 3
422. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 4 - 5 முதல் 6 வரை

வாட்டாதே எனத் தாயின் நிலையிலிருந்து உருகிக் கூறுவதனைக் காணலாம்.[423]

திருமால் அணிந்துள்ள துளசியைத் தன் மகள் ஆசைப்பட்டு அவதியுறுவதையும், அடிக்கடி துளசி மாலையென்றே கூறிப் புலம்புவதையும், துளசி மாலைக்கே அடிமையாகிவிட்டதையும் பத்துப் பாசுரங்களில் எடுத்துரைக்கின்றார் நம்மாழ்வார்.[424]

காதல் வயப்பட்ட மகளிர் படும் பத்து அவத்தைகளில் ஒன்று தாங்கள் காணும் பொருள்களை எல்லாம் தம் தலைவனுடன் தொடர்புபடுத்திக் கூறுவது. திருமால் மீது மையல் கொண்ட ஒரு பெண் மண்ணையும் விண்ணையும் திருமாலோடு தொடர்புபடுத்தி, ''கண்ணையுள் நீர் மல்க நின்று'' ''கடல் வண்ணன் என்னும்; அன்னே! என் பெண்ணைப் பெருமயல் செய்தாற்கென் செய்கேன் பெய் வளையீரே?'' எனத் தன் மகள் மையல் கொண்ட நிலையினைத் தெரிவிக்கின்றார் நம்மாழ்வார்.[425]

மற்றும் கடல், ஞாயிறு, செந்தீ, காற்று, திங்கள், ஆன்கன்று, கூத்தர், வெண்ணெய், திருநாமம், துழாய்மலர் முதலியவற்றையும் தலைவி திருமாலோடு தொடர்புபடுத்திக் கூறுவதைக் காணலாம்.[426] எல்லாவற்றிற்கும் மேலாக.

''திருவுடை மன்னரைக் காணில்,
'திருமாலைக் கண்டேனே' என்னும்,
உருவுடை வண்ணங்கள் காணில்
'உலகளந்தான்' என்று துள்ளும்
கருவுடைத் தேவில் களெல்லாம்
'கடல்வண்ணன் கோயிலே' என்னும்
வெருவிலும் வீழ்விலும் ஓவாக்
கண்ணன் கழல்கள் விரும்புமே''

என ஆழ்வார் எடுத்துரைக்கின்ற பாசுரம் திருமால் மீது ஆசை கொண்ட தலைவியின் நிலையினைத் தெற்றெனப் புலப்படுத்துவதைக் காணலாம்.[427]

---

423. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 4 - 7 முதல் 10 வரை
424. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 2 - 1 முதல் 10 வரை
425. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 4 - 1
426. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 4 - 2 முதல் 7 வரை
427. நா. தி. பிர. திருவாய்மொழி - 4 - 4 - 8

தன் மகள் தெய்வமுற்றவள் போல திருமாலின் செயற்கரிய செயல்களைத் தாமே செய்ததுபோல் எடுத்துரைப்பதைக் கண்ட தாய் பெரிதும் வருந்தினாள். ஊரார் இவளுக்கு என்ன ஆயிற்று என வினாவ அத்தாய் என் மகன்மீது திருமால் ஆவேசித்துள்ளான் எனவேதான் அப்படிப் பிதற்றுகின்றாள் என எடுத்துரைக்கின்றாள்

திருமால் மீது காதல் கொண்டதால் என் மகள் கை வளை இழந்தாள். மேனி பசலை பூத்தது, குடிப்பெருமையையும், பண்பையும் நிறையினையும் இழந்து உடல் மெலிந்து ஒளி குன்றி, அழகிழந்து காவலையும் கடந்தாள் எனத் தாயின் நிலையில் நின்று ஆழ்வார் இரங்குகின்றார்.[428]

இரவில் தாயுடன் படுத்திருந்த மகள் அங்கிருந்து திருக்கோளூர்க்குச் செல்ல யாரும் அறியாதவாறு நடந்தாள் மகளைக் காணாத தாய் வருத்தமுற்று அவள் எங்கு சென்றிருப்பாள் என எண்ணிப் பார்க்கையில் தன் மகளுக்குத் திருக்கோளூர்ப் பிரான் மீது பெரும் ஆசை, எப்போதும் அவனைப் பற்றியே பேசிக் கொண்டிருப்பாள்; எனவே அவள் திருக்கோளூர்தான் சென்றிருக்க வேண்டும் எனத் துணிந்து மற்றையோரிடம் முறையிடுகின்றாள்.[429]

திருவரங்கத்துப் பெருமானிடம் காதல் கொண்டு துன்பப்படும் தன் மகளுக்குத் திருவரங்கநாதன் என்ன செய்யப் போகின்றான் என்று அவனையே கேட்கின்றாள் ஒரு தாய்.

''கங்குலும் பகலும் கண்துயி லறியாள்;
கண்ண நீர் கைளால் இறைக்கும்
சங்குச் சக்கரங்கள் என்றுகை கூப்பும்;
'தாமரைக் கண்' என்றே தளரும்,
எங்ஙனே தரிக்கேன் உன்னை விட்டென்னும்
இருநிலம் கைதுழா விருக்கும்.
செங்கயல் பாய்நீர்த் திருவரங்கத்தாய் !
இவள் திறத்தென் செய்கின்றாயே ?

என நம்மாழ்வாராகிய தாய் திருவரங்கநாதனைப் பார்த்து வினவக் காணலாம்.[430]

---

428. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 7 - 1 முதல் 10 வரை
429. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 7 - 1 முதல் 10 வரை
430. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 2 - 1

இவ்வாறு பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் தாயின் நிலையில் நின்று இறைவன் மீது ஆசைப்பட்ட தங்கள் மனமாகிய தலைவியின் நிலைக்கு வருந்திப் பாடிய பாசுரங்கள் கற்போர் மனத்தைக் கவர்வதைக் காணலாம்.

**உடன்போக்கு நிகழ்ந்த பின் தாயிரங்கல் :** தலைவன் தலைவி யருடைய களவு நிகழ்ச்சியை அறியாத பெற்றோர்கள் அத்தலைவிக்கு வேறு திருமணம் செய்ய முயல்வர். அப்போது, தோழி அறத்தொடு நின்று, தலைவி ஒரு தலைவனுடன் காதல் கொண்டதைக் குறிப்பாக எடுத்துரைப்பாள். சில சமயங்களில் தலைவியின் பெற்றோர் அத்திருமணத்திற்கு உடன்படாமையாலோ அல்லது காப்பு மிகுதி யினாலோ துன்புற்ற தலைவி தலைவனுடன் யாருக்கும் தெரியாமல் ஓடிப் போதல் உண்டு. இதனையே உடன்போக்கு என்பர் (Elopement). இவ்வுடன்போக்கிற்குத் தோழியும் உடந்தையா யிருத்தல் உண்டு.

தலைவி பெற்றோருக்குத் தெரியாமல் தலைவனுடன் சென்ற பின் தலைவியைப் பெற்ற தாய் பெரிதும் வருந்துவாள். தான் அருமையாய்ப் பேணிப் பாதுகாத்து வளர்த்த தன் மகள் அயலொரு ஆடவனுடன் சென்று விட்டாளே என்று எண்ணிப் புலம்புவாள். ''பெற்ற மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு'' என்ற பழமொழியும், பெண்களுக்குப் பருவம் ஏற்பட்டபின் தாய் தந்தையர் அன்பு தேவையற்றதாகும். பெண்ணின் உள்ளம் புளியம்பழம் காயா யிருக்கும்போது அதன் தோலோடு ஒட்டியிருந்து பழமாகும்போது பழமும் அதன் தோடும் வெவ்வேறாவது போன்றது மகள் தாய் உறவு என்பது ஈண்டு எண்ணிப் பார்க்கத்தக்கது.

தலைவி தன் வீட்டை விட்டுத் தலைவனுடன் சென்றபின் அவளைப் பெற்ற தாய் தலைவி தலைவனுடன் சென்றதற்கு வருந்துவதைவிட ஏதுமறியாச் சிறு பருவத்து மகள் தலைவனுடன் பாலை வழியை எப்படிக் கடந்து சென்றாளோ, இரவு நேரத்தில் யாரோ ஒரு மூதாட்டியின் பழைய குடிசையில் உறங்கும்போது வெட்சி மறவர் கொட்டும் ஆகோட்பறையினைக் கேட்டு எவ்வாறு வருந்துகிறாளோ என்பதை எண்ணிப் பார்க்கும்போது தன் மனம் பெரிதும் வருந்துகின்றது என ஒரு தாய் கூறுவதாக அகநானூற்றுப் பாடல் ஒன்று குறிக்கின்றது.[431]

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்திலும், தலைவியின் உடன் போக்கினால் பெரிதும் கவலையுற்ற தாய்மார் இரங்கியதாகப்

431. அகம் - 63

பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் பாடிய பாசுரங்கள் உள்ளன.

தன் மகள் வீட்டை விட்டு வெளியேறியதால் இல்லம் வெறிச் சென்றாகியது. தன் மகளை யாரும் அறியாமல் நாராயணன் அழைத்துச் சென்றமையால் தங்கள் குடிக்குப் பழியும், ஏச்சும் உண்டாயிற்று. அவ்வாறு நாராயணனுடன் சென்ற தலைவி தலைவனது சுற்றத்தார் புடை சூழத் திருமணம் செய்து கொள்வாளோ! எனப் பெரியாழ்வார் துயருறுகின்றார்.

''மானிடவர்க்கென்று பேச்சுப் படில் வாழகில்லேன்'' என்று உறுதி கொண்டிருந்த தன் மகள் ஆண்டாளை அரங்கன் ஏற்றுக் கொண்டான். சிறு பருவ முதல் பேணிப் பாதுகாத்து வந்த தன் அருமை மகளைத் திருமால் கொண்டு போனதால் அப்பிரிவினைத் தாங்க முடியாமல் பெரியாழ்வார் மனம் கலங்கிப் புலம்புவதனை,

''ஒருமகள் தன்னையுடையேன், உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன்; செங்கண்மால்தான் கொண்டுபோனான்
பெருமகளாய்க் குடிவாழ்ந்து பெரும் பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டுகந்து மணாட்டுபுறம் செய்யுங்கொலோ?''

என வரும் பாசுரத்தினால் நன்குணரலாம்.[432]

மற்றும் கோதை நாச்சியாரைத் தன் மருமகளாகப் பெற்ற நந்த கோபன் இம்மகளைப் பெற்றோர் இவள் பிரிவைச் சகியார் என்று கூறுவானோ, என் மகளை நாடு நகரறிய நல்லதோர் கண்ணாலஞ் செய்வார்களோ, ஆண்டாளாகிய என் மகளுக்கு ஆய்ச்சிப்பட்டம் கட்டித் தன் பல மனைவியருடன் நன்றாகக் கோவிந்தன் இருத்துவானோ, ஆயர்குலப் பெண்களைப்போல் என் மகளும் தயிர் கடைவதால் அவளது மென்மையான கைகள் தழும்பேறி விடுமோ, தயிர் கடையும் ஆற்றல்தான் என் மகளுக்குண்டோ என ஆழ்வார் தம் மகளைப் பற்றிப் பலவிதமாக எண்ணி ஒரு தாயின் நிலையிலிருந்து வருந்துவதைக் காணலாம்.[433]

---

432. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 8 - 4
433. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 8- 5 முதல் 9 வரை

தான் பெற்ற மகள் தலைவனுடன் தனக்குத் தெரியாமல் சென்று விட்டதால் வருத்தமுற்ற தாய் ஒருத்தி வருந்துகின்றாள். என் மகளைக் கருநிறமுடைய கண்ணன் யாருமறியாமல் அழைத்துச் சென்று விட்டான். அவன் கள்வனோ, அவன் பின் கிளிபோலும் மொழி பேசிக்கொண்டே திருவாலி நகரை அடைவாளோ, இக்கண்ணனோ முன்பு இராமாவதாரத்தில் பெண்ணாகிய சூர்ப் பனகையின் மூக்கை யரிந்தவன்; அவன் பின் சென்றாளே, என் ஆகுமோ என்று நான் அஞ்சுகின்றேன்.

கண்ணனுடைய பழம்பிறப்பு என்ன? அவன் சிறு பயல். குழலூது பவன். பஞ்சபாண்டவருக்காகத் தூது சென்றவன். அம்மாதவன் பின் தொடர்ந்து என் மகள் திருவாலி நகர் சென்று சேர்வாளோ! தன்னைப் பெற்ற தாய் என்றும் என்மீது இரக்கங்கொள்ளாமல் மாதவனைப் பெரிதாக மதித்து என்னை விட்டகன்றாள். எனக்குத் துணையாய் இருப்பாள் என எண்ணியிருந்த என்னைச் சிறிதும் மதியாமல் என் வருத்தத்தினையும் பொருட்படுத்தாமல் காதலன் பின் சென்று திருவாலி நகரம் சென்று சேர்வாளோ! தான் இழைத்த முற்றிலையும், தான் வளர்த்த கிளியினையும். பந்தினையும் தானாடிய ஊஞ்சலையும், பூவைப் பறவையினையும் விட்டுச் சென்று பிறப்பிலியாகிய கண்ணனுடன் திருவாலி நகர் சென்றடைவாளோ! எனத் திருமங்கையாழ்வார் உடன்போக்கு நிகழ்ந்த பின் தாயின் நிலையிலிருந்து வருந்துவதனைக் காணலாம்.[434]

தன்னுடன் படுத்துறங்கிக் கொண்டிருந்த தன் மகளைக் காணவில்லை. அவள் யாருடன் சென்றிருப்பாள். எங்கு சென்றிருப்பாள் என எண்ணி ஏங்குகின்றாள். அத்தாய் தன் மகள் அடிக்கடி கண்ணனைப் பற்றியும் அவன் எழுந்தருளியுள்ள திருக் கோளூரைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தது அவள் மனத் திற்பட்டது. எனவே தன் மகள் கண்ணன் வாழிடமாகிய திருக்கோளூர்தான் சென்றிருக்க வேண்டும் எனத் தீர்மானித்தாள்.

என் மகள் உண்ணுகின்ற சோறும், பருகும் நீரும், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே என்று கண்ணீர் பெருக்கிக் கண்ணன் புகழினையே பேசுவாள். கன்ணனுடைய ஊரையும், மாலை யையும் அவனுடைய பெயரையும் கேட்டறிந்து திருக்கோளூர் சென்று சேர்ந்திருப்பாள் எனவும் திருக்கோளூர் சென்ற என் மகள் திருமாலின் அழகிய கண்களையும், சிவந்த வாயினையும் கண்டு எப்படி வருந் தினாளோ, திருக்கோளூர் செல்லும்போது எவ்வாறு கண்ணீரோடும்,

434. நா. தி. பிர. பெரிய திருமொழி - 3 - 7 - 8

காதலொடும் தளர்ந்து தளர்ந்து நடந்து சென்றாளோ, அதை விடக் குடிக்குப் பழி வரும் என்று சிறிதும் நினையாமல் தாயாகிய என்னையும் மற்றைய சுற்றத்தோரையும் மறந்து ஊரார் பழி தூற்றத் திருக்கோளூர் சென்றனளோ என நம்மாழ்வாராகிய தாய் எடுத்துரைக்கின்றார்.[435]

இவ்வாறு நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் ஆழ்வார்கள் தாயின் நிலையிலிருந்து மகள் பிரிவினால் வருந்துவதுபோல் பாடியுள்ளவை கற்போர் மனத்தைக் கவர்வதைக் காணலாம்.

சங்க கால அகப்பொருள் மரபேயன்றிப் புறப்பொருள் மரபும் பக்திப் பாடல் மரபு தோன்ற உதவியிருக்க வேண்டும். இறைவனுக்கு மன்னனுடைய இடத்தைக் கொடுத்துப் புராண இதிகாசங்களிலே பேசப்படும் அவன் வீரச் செயல்களையும், பெருங் கருணைத் திறத்தையும் வியந்து வீடுபேறு வேண்டி நிற்கும் நிலையாகப் பக்திப் பாடல்கள் உருமாறிக் காட்சியளிக்கின்றன. சங்க காலப் பொருள் மரபு காலத்தின் போக்கிற்கிணங்கப் பல்லவர் காலப் பொருள் மரபாக மாறிவிட்டது.

சங்க காலத்தில் உலகியற் காதலின் நுட்ப் உணர்வுகளை வெவ்வேறு வகையிலே சித்தரித்து வந்த தமிழ்ப் புலவர்கள் பல்லவர் காலத்தில் தெய்விகக் காதற் பாடல்களைப் பெருந்தொகையாகப் பாடியதற்கு அக்காலச் சூழ்நிலையும் ஒரு காரணமெனலாம். சங்க காலத்திற்குப் பின்பு தமிழ்நாட்டில் பெரும்பகுதி பெரும்பாலும் அந்நியரால் ஆளப்பட்டு வந்தது. அந்நிய மன்னர் தமிழ்ப் புலவர்களை ஆதரிக்கவில்லை. எனவே தமிழ்ப் புலவர் தம் கால மன்னர்களைப் புகழ்ந்து பாடப் பெரும்பாலும் விரும்பவில்லை. சங்க காலப் பிற்பகுதியிலிருந்து தமிழ்நாட்டில் சமண, பௌத்தர் செல்வாக்கு அதிகரித்து வந்திருக்கிறது.

காதலும் போரும் சமண பௌத்தரால் வெறுத்து ஒதுக்கப் பட்டன. இயற்கைநெறிக் காலம் அறநெறிக் காலமாக மாறியது. குளிர்ச்சியான உணர்ச்சிப் பாடல்களைக் கொண்டிருந்த தமிழ் மரபு வறட்சியான போதனைப் பாடல்களை ஏற்க வேண்டியிருந்தது. சமண பௌத்தரது போதனைகள் நிலை பெற்றுவிட்ட சமுதாயத்திலே உலகியல் வாழ்வு வளம் குன்றிவிட்ட தமிழ்நாட்டிலே பழையபடி அகத்திணை புறத்திணைச் செய்யுட்கள் எழ இடமில்லை. வைதிக சமயம் அகத்திணைத் தலைவனாகவும், புறத்திணைத்

435. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 7 - 1 முதல் 10 வரை

தலைவனாகவும், இறைவனை மாற்ற இடமளித்தது. ''அறத்தினுள் அன்பு நீ, மறத்தினுள் மைந்து நீ'' என்றெல்லாம் இறைவனை உயர்ந்த நிலையில் வைத்துப் பார்த்த நிலை மாறிக் குடும்ப நிலைக்கு இறைவன் அன்பைக் கொண்டுவந்தனர்.

சங்க காலத் தமிழ் மக்கள் இசை, கூத்து என்பனவற்றிலும் ஈடுபாடுடையவராக இருந்தனர். இசையும், கூத்தும் காமத்தை வளர்க்கும் என்று கொண்ட சமண பௌத்தர் இவற்றையும் ஒதுக்கும்படி அறவுரை கூறினர். பல்லவர் காலத்திலே இசையும், கூத்தும் இறைவனுக்கே அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளன. பல்லவர் கால வைதிக சமய மறுமலர்ச்சி பழைய தமிழ்ப் பண்பாட்டின் மறுமலர்ச்சியாகவும் அமைகிறது. உணர்ச்சியைக் கட்டுப்படுத்தல் என்ற சமண பௌத்தர் பிரசாரம் தோற்கிறது. உணர்ச்சியை இறைவன்மேல் செலுத்தல் என்ற சைவ வைணவர் அறிவுரை வெல்கிறது.

நாயகன் நாயகி பாவம் சங்க கால அகப்பொருள் மரபிலிருந்து சில அம்சங்களில் வேறுபடுகிறது. சங்க கால அகப்பொருள் மரபிலே தலைவன் பெயர் சுட்டப்படாது. ஆனால் இப்பாடல்கள் யாவும் சிவபெருமான் அல்லது திருமால் பெயரைச் சுட்டி இறைவன் பெருமை பேசுவனவாக அமைந்துள்ளன. அவ்வாறு அமையா விட்டால் இப்பாடல்கள் பக்திப் பாடல்கள் என்ற தகுதியை இழந்து விடும் எனலாம்.

சங்க கால அகத்திணைச் செய்யுட்களிலே தலைவன் கூற்றுக் களாக அமைந்த பாடல்கள் பல உள்ளன. தலைவன் பிரிவாற்றாமை பற்றியும் செய்யுள்கள் உள்ளன. பல்லவர் கால பக்திப் பாடல்களில் இத்தகைய செய்யுள்கள் இல்லை. இறைவன் நாயகனாகவும் ஆன்மா நாயகியாகவும் பாவனை செய்யப்படுவதால் நாயகியாகப் பாவனை செய்யும் அடியார் தலைவி கூற்றாகவும், தோழி செவிலி முதலியோர் கூற்றாகவும் அமைந்துள்ள பாடல்களே காணப்படுகின்றன. இங்கு சங்க கால இலக்கிய மரபு தமிழ்ப் புலவர்க்குத் துணை வருகிறது.

சங்க கால அகத்திணைப் பாடல்கள் தலைவி மனநிலையையே பெரும்பாலும் சித்தரித்தன. பல்லவர் காலப் பக்திப் பாடல்களிலும் நாயகி மன நிலையே பெரும்பாலும் சித்தரிக்கப்பட்டுள்ளது. மேலும் சங்க கால அகத்திணைப் பாடல்களிலும் பெரும்பாலானவை தலைவியின் பாடல்களே. இப்பாடல்களைப் பாடியவர்கள் ஒரு சிலர் தவிர அனைவரும் ஆண்பாற் புலவர்களே. பெண்கள் தமக்காக ஏங்குவதைப் பற்றிக் கற்பனை செய்வது ஆண்பாற் புலவர்களுக்கு

இயற்கையாக இருந்திருக்கலாம். காரணம் எதுவாயினும் தலைவி யின் நிலை சங்க காலத்து வழக்கெனலாம். பல்லவர் கால நாயகி பாவனை அதன் வழியில் வருகிறது.

வைதிக சமயப் பிரிவுகளான சைவம், வைணவம் இரண்டிலும் நாயகன் நாயகி பாவச் செய்யுள்கள் உள்ளன. வைணவ சமயத்தில் நாயகன் நாயகி பாவச் செய்யுள்கள் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. மாணிக்கவாசகர் நாயகன் நாயகி பாவத்தை மிகச் சிறப்பாகக் கையாண்டுள்ளார். மூவர் பாடிய பதிகங்கள் சிலவற்றிலே நாயகன் நாயகி பாவம் தெளிவாக அமைந்துள்ளன.

நாயகன்-நாயகி பாவச் செய்யுள்களுள்ளே மிகவும் பரவலாகக் கையாளப்பட்ட ஒரு துறை காம மிக்க கழிபடர் கிளவியாகும். இறைவன் மேலே தமக்குள்ள அன்பின் வேகத்தையும், ஆழத்தையும் புலப்படுத்துவதற்காக இக்காமம் மிக்க கழிபடர் கிளவி என்ற துறையை மூவரும் பயன்படுத்தியுள்ளனர். வண்டு, கிளி, அன்னம், குயில், நாரை, பூவை முதலிய அஃறிணைப் பொருள்களைச் சிவபெருமானிடம் தூது விடுவதாக மூவரும் பயன்படுத்தியுள்ளனர். தலைவன் எழில், சிந்தை, நிறை, வளை, நீர்மை என்பனவற்றைக் கவர்ந்துவிட்டதாகவும், தலைவனால் தமக்குப் பசலை நிறம், வளை கழலுதல், கலை சோர்தல் முதலியன ஏற்பட்டதாகவும் மூவரும் பாடியுள்ளனர்.

நாயகன்-நாயகி பாவம் என்ற தொடர் வைணவர்களிடையே நீண்ட காலமாக வழங்கிவந்தது. சைவ சமய குரவர் பாடிய பாடல் களுக்கு அண்மைக் காலம் வரை உரை விளக்கம் எழுதப்படவில்லை. வைணவ பக்திப் பாடல்களுக்கு ஆச்சாரியார்கள் உரைகள் எழுதிப் போற்றி வந்துள்ளனர். அதனால் நாலாயிர திவ்வியப் பிரபந்தத் திலுள்ள நாயகன்-நாயகி பாவச் செய்யுள்கள் நன்கு விளக்கமடைந் துள்ளன. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தினுள்ளும் திருவாய்மொழி மிக உயர்ந்ததாக மதிக்கப்படுகிறது. சைவர்கள் மாணிக்கவாசகரை மதித்து வந்துள்ளமைபோல, வைணவர்கள் நம்மாழ்வாரை வகுளா பரண நாயகி என்று மதித்து வந்துள்ளனர். திருவாய்மொழி நாயகன்-நாயகி பாவத்திலேயே பாடப்பட்டுள்ளது. விரிவும், விளக்க மும் கருதி ஒன்றன்மேல் ஒன்றாக எழுந்த உரைகள் நாயகன் நாயகி பாவத்தை மிக நுட்பமாக ஆராய்ந்துள்ளன.

திருவாய்மொழியில் நாயகன் நாயகி பாவம் பாடப்படும் போது பிருந்தாவனத்துக் கோபிகைகளோடு கண்ணன் இயற்றிய லீலைகள் கவிதைப் பொருளாகின்றன. நாயகன்-நாயகி பாவத்தைக்

கையாண்ட ஆழ்வார்களை பாகவத புராணத்தில் வரும் கண்ணனின் திருவிளையாடல்கள் வெகுவாகக் கவர்ந்தன. கண்ணன் கோபிகை களுடன் சேர்ந்து ஆடியதும், கோபிகைகள் கண்ணன்மேல் மையல் கொண்டு வருந்தியதும் ஆழ்வார்களைக் கவர்ந்தன. அவதாரம் செய்து மனிதன்போல் வாழ்ந்து அருள் புரிய வந்த கண்ணன் பிறவான் யாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானினும் தமிழ்ப் புலவர்களை வசீகரித்துள்ளன. மாயங்கள் வல்ல அழகனாகிய திருமாலின் வசீகர சக்தி, ''உள்ளங்கவர் கள்வன்'' எனத் திருஞானசம்பந்தரால் பாராட்டப்பட்ட சிவபெருமானுக்கு அந்த அளவுக்கு இருந்ததோ தெரியவில்லை. அதனால்தான் சைவ பக்திப் பாடல்கள் வைணவ பக்திப் பாடல்களினும் பெருந்தொகையாக எழுந்துள்ள போதும் ஆழ்வார் பாடல்களிலே மனித உணர்ச்சிகளும் கலையழகும் இருந் திருப்பதாகவும் சைவ பக்திப் பாடல்களிலே தத்துவக் கருத்துக்களும், பக்தி, வைராக்கியமும் மிகுந்திருப்பதாகவும் பி. ஸ்ரீ. திவ்வியப் பிரபந்த சாரம் என்ற நூலிலே கூறியுள்ளார்.

திருமாலின் மேல் அடியார்களுக்குள்ள ஈடுபாடு பகவத் காமம் என்று சிறப்பிக்கப்பட்டுள்ளது. அதற்கு நேராகச் சிவகாமம் என்பது வழக்கில் இல்லை. உமையம்மையார் மட்டுமே சிவகாமி என்று சிறப்பிக்கப்பட்டுள்ளார். யோகம் போலப் போகமும் இறைவனை அடைய வழி என்று வைணவம் கொண்டுள்ளது. சைவம் சிவ போகம் என்று ஒன்றைக் கொள்ளவில்லை. பல்லவர் காலப் பக்திப் பாடல்களைப் பார்க்கும்போது சிவபெருமானுக்கும் சிவனடியாருக் கும் இடையிலுள்ள தொடர்பிலும் பார்க்கத் திருமாலுக்கும் வைணவ அடியாருக்கும் இடையிலுள்ள தொடர்பு நெருங்கியது போலக் காணப்படுகின்றது. திருவாய்மொழியின் சில பாடல்களில் நம்மாழ்வார் தம்மை இராமனைப் பிரிந்த சீதையாகவும், திருமாலை இராமனாகவும் பாவித்துப் பாடியுள்ளார்.

மாணிக்கவாசகரது பாடல்கள் எவ்வாறு சைவ பக்தி இலக் கியத்தின் கொடுமுடியாகுமோ அவ்வாறே நம்மாழ்வார் பாடல்கள் வைணவ பக்தி இலக்கியத்தின் கொடுமுடியாகும். ஆழ்வார்களுள்ளே நம்மாழ்வாரே உயிர் என்றும் ஏனையோர் உடலுறுப்புகள் மட்டுமே என்றும் கூறி, நம்மாழ்வாருக்கே முதன்மை வழங்கப்படுகிறது. நாயகன் - நாயகி பாவத்தைக் கையாளுவதிலே இவர்கள் பெற்ற வெற்றியே இவர்களை இவ்வாறு உயர்த்தியிருக்க வேண்டும். மாணிக்கவாசகர் மகளிர் தொடர்பான நாட்டுப் பாடல்கள் வகை களைக் கையாண்டு பாடியதுபோல நம்மாழ்வார் சடகோப நாயகி யாக மாறி இறைவனுக்கும் தமக்கும் உள்ள உறவையும் தொடர்பையும் நுட்பம் திட்பமாக வகுத்துத் திருவாய்மொழியைப்

பாடியுள்ளார். நாயகன், நாயகி பாவத்தில் தொடர்ச்சியாக அந்தாதி முறையிலே ஆயிரம் பாடல்கள் பாடியது தமிழ்ப் புலவர் வேறு எவருமிலர். இது இவர் பகவத் காமத்திலே திளைத்திருந்தார் என்பதனைக் காட்டுகின்றது.

பெரியாழ்வாரும், குலசேகராழ்வாரும், நாயக நாயகி பாவத்திலே பாடியுள்ளனர். பெரியாழ்வார் கண்ணனைக் குழந்தையாகப் பாவித்துப் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தைத் தோற்றுவாய் செய்து விட்டவர். மேலும் இராமனைப் பிரிந்து வருந்தும் சீதையாகவும், கண்ணனுக்காக ஏங்கும் கோபிகையாகவும் பெரியாழ்வார் சில பாடல்களை யாத்துள்ளார்.

குலசேகராழ்வாரைக் ''குலசேகர நாயகி'' என்று வைணவப் பெரியார் சிறப்பித்துள்ளனர். பெருமாள் திருமொழியில் ஆறாம், ஏழாம் பத்துக்களிலே இவர் நாயக நாயகி பாவத்தைக் கையாண்டு உள்ளார். காதலன் எத்தகைய செயலுடையவனாகவும், பராமுக னாயுமிருந்தாலும் அவனிடம் முழுக்க முழுக்க அன்பு செலுத்தி அவனையே நம்பியிருக்கிற குலமகளாக ஆறாம் பத்திலே பாடியவர் ஏழாம் பத்திலே கண்ணன் சொன்ன குறியிலே காத்திருந்து அவனைக் காணாமல் அடைந்த ஏமாற்றத்தினால் அவனோடு ஊடும் கோபிகை யாகத் தம்மைக் கற்பனை செய்துள்ளார். ஆணாகிய தாம் பெண்ணாகப் பாவனை செய்து நாயகன் நாயகி பாவத்திலே பாடுவதிலுள்ள சிரமத்தை உணர்ந்ததனாற்போலும் அடுத்த பத்துக் களிலே தந்தையாகத் தன்னை பாவனை செய்து குலசேகரர் பாடியுள்ளமையைக் காணலாம். குலசேகரர் தனித் திறமை இராமனைப் பிரிந்து வருந்தும் தயரதன் மனநிலையையும் கண்ணனைப் பிரிந்து வருந்தும் தேவகி மனநிலையையும் சித்தரித்து வாத்ஸல்ய உணர்வின் ஆழத்தையும், வேகத்தையும் எடுத்துக் காட்டித் திருமால் பக்தியைப் புலப்படுத்தும் ஒரு புதுச் சாதனத்தைக் கையாண்டதிலே காணப்படுகிறது.

திருமங்கையாழ்வார் ''பரகால நாயகி'' என்று வைணவர் களாலே சிறப்பிக்கப்படுவர். உலகியற்காதலால் ஏற்படும் ஆற்றாமை யைத் தம்முடைய சொந்த வாழ்க்கையிலே நன்கு உணர்ந்தவர். நாயகன் - நாயகி பாவத்தில் இவர் பாடியுள்ள பாடல்கள் யாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போல் அமைந்தவை இவருடைய பெரிய திருமடல், சிறிய திருமடல் என்னும் பிரபந்தங்களாகும். மடலேறுதல் ஒருவகைத் தற்கொலை முயற்சியாகும். தமிழ் மரபில் மடலேறுதல் பெண்களுக்கு விலக்கப்பட்டுள்ள தென்பதையும், ஆண்களும் கழிபெருங் காமம் கொண்ட வழியல்லாது மடலேறுதல்

கூடாதென்பதையும் தாம் அறிந்துள்ளபோதும் தமக்கு மடலேறுதல் தவிர வேறு வழியில்லையென்று கூறுகிறார். நாயகனான இறைவன் அருளாதவிடத்துத் தன்னைச் சித்திரவதை செய்து அழித்துக் கொள்ளும் நிலையே இங்கு மடலேறுதலாகின்றது. திருமங்கை ஆழ்வார் கண்ணன் காதலுக்காகவும் அதே போன்ற வைராக்கியத்துடன் தன்னையே அழித்துக் கொள்ளத் துணிவதை இங்கே காணலாம். சங்க கால அகத்திணைப் பொருளான மடலேறுதற்குப் பிரபந்த வடிவம் தந்து பக்தி இலக்கியமாக அதனைப் புனைந்து தமிழ்ப் பக்தியிலக்கியத்தின் வளத்தினைப் பெருக்கத் திருமங்கையாழ்வார் உதவியுள்ளார்.

ஆண்டாள் பாடிய பிரபந்தங்கள் தனித்தன்மை வாய்ந்தவை. ஆண்டாள் பிரபந்தங்களுக்குள்ள தனிச் சிறப்பு அவள் பாவனை செய்து பாடியதாகத் தெரியாமையாகும். பெண்ணாகப் பிறந்த ஆண்டாள் கண்ணனைக் காதலித்தாள். தம்முடைய காதல் உணர்ச்சிகளை வெளியிட்டுள்ளாள். கண்ணன் இறைவனாகவும் இருந்ததால் காதலுணர்ச்சியிலே பக்தியுணர்ச்சி கலந்த நிலை ஆண்டாள் பாடல்களிலே காணப்படுகிறது. ஒரு பெண் தன்னுடைய காதலை நேரே வெளிப்படையாக எடுத்துக் கூறும் நிலை சங்க கால அகத்திணை மரபில் இல்லை. உணர்ச்சிகள் அலைபாய ஆற்றாமையால் துடிதுடித்து ஆண்டாள் பாடியுள்ள பாடல்கள் தமிழ் பக்தி இலக்கிய வரம்பிலுள்ள சிகரங்களுள் ஒன்றாகும். அவள் தம்மைக் கோபிகைகளில் ஒருத்தியாகப் பாவனை செய்யும்போது மட்டும் அவள் பாடல்களிலே பாவனை அமைகிறது. ஆண்களாகப் பிறந்தவர்கள் பெண்கள்மேல் செல்லும் இயல்பான தங்களுடைய உணர்ச்சிகளை உருமாற்ற வேண்டியிருந்தது. பெண்ணாசை வேண்டாம் என்று தம்முடைய மனத்தைக் கட்டுப்படுத்துவதையும், பெண்ணாகத் தம்மைப் பாவித்து இறைவன்மேல் ஆசை கொள்வதையும், ஆண்பாற் புலவர்களுடைய பாடல்களிலே காணலாம். ஆண்டாளுக்கு அந்தச் சிரமம் இருக்கவில்லை. ஆண்டாளுக்கு நாயகி பாவத்துக்கு வேண்டிய பெண் பேச்சு இயல்பாக அமைந்தது. பிற ஆழ்வார் பாடல்களிலே அடியார் அடியாராக விளங்கும் நிலை, பிராட்டியான தன்மை (நாயகி பாவனை) என்று இரண்டிருப்பதாக வைணவப் பெரியோர் கொண்டனர். ஆண்டாளே பிராட்டியாராவதால் அவள் பாட்டுக்கள் தனிக் கவர்ச்சியும் தனிச் சிறப்பும் பெறுகின்றன.

தமிழிலக்கியத்தில் நாயகன்-நாயகி பாவம் பல்லவர் காலத்திற்கு பின்பும் கையாளப்பட்டு வந்துள்ளது. தற்காலத்திலும் அது பின்பற்றப்பட்டு வருவதை அறிகின்றோம். இறைவனை நாயகனாகவும்

அடியாரை நாயகியாகவும் கொண்டு பாடல் செய்து வந்த மரபில் சுப்பிரமணிய பாரதியார் கண்ணம்மா என் காதலி என்ற பாட்டில் புதுமையைப் புகுத்தியுள்ளார் என்பதை அறிகின்றோம்.

பக்தியியக்கம் இந்தியா முழுவதும் பரவியபோது பிற இந்திய மொழிகள் பலவற்றிலும் நாயகன் நாயகி பாவச் செய்யுள்கள் எழுந்துள்ளன. நாயகன்-நாயகி பாவச் செய்யுள்கள் தமிழில் எழுந்த அளவு பெருந்தொகையாக வேறு எந்த மொழியிலும் எழுந்ததாகத் தெரியவரவில்லை எனலாம்.

**திருமால் வழிபாட்டு நிலை :** சங்க கால வழிபாட்டு நிலைக்கும் திவ்வியப் பிரபந்தங்கள் தோன்றிய பக்திக் கால வழிபாட்டு நிலைக்கும் உள்ள வளர்ச்சி நிலைகளைக் காணும்போது பெயர்கள் பற்றிய நிலையில் பெரிதும் வளர்ச்சி நிலை காணப்படுகின்றது. திருமாலின் மாலை, ஆடை, ஊர்தி, கொடி, நிறம், ஆயுதங்கள், படுக்கை, திருமகள்—நிலமகள்—நப்பின்னையுடன் உள்ள உறவு, நான்முகன்—காமனது தந்தை, வேத முதல்வன், தேவதேவன், பரம்பொருளாகக் காட்டப்பெறுதல் போன்ற செய்திகளில் காலந்தோறும் உள்ள கருத்து நிலைகளே ஆழ்வார் பாசுரங்களிலும் தொடர்கின்றன. ஆயினும் எண்ணிக்கையில் மிகுதியான அளவில் அச்செய்திகள் பக்திக் காலத்தில் காட்டப் பெறுகின்றன. முந்தைய காலங்களைக் காட்டிலும் இக்காலப்பகுதி இலக்கியங்களில் பல்வேறு கோயில்களின் சிறப்பு கூறப்படுகின்றது. முந்தைய காலங்களைக் காட்டிலும் இக்காலக் கட்டத்தில் மிகுதியான வழிபாட்டுப் பொருட்கள், குறிப்பாக மலர்கள் முதலானவை திருமால் வழிபாட்டிற்குரிய தன்மையில் காட்டப்பெறுகின்றன. பெரியாழ்வாரின் பாதாதி கேச வர்ணனையும், இன்னும் பல்வேறிடங்களில் காட்டப்பெறும் திருமாலின் வருணனைகளும் புதிய முறையில் இக்காலப்பகுதி இலக்கியங்களில் அமைகின்றன. எனினும் திருமாலின் கோலங்கள் சிலம்பில் காட்டப்பெறுவது போல விளக்கமாகக் காட்டப்பெறவில்லை என்றே கூறலாம். சிலம்பில் கிடந்த கோலமும், நின்ற கோலமும் குறிக்கப்பெற்றன. இங்கு திருமாலின் மூன்று கோலங்களும் சுட்டப்பெறுகின்றன.

தமிழகத்தில் திருமால் வழிபாடு பரவியிருந்தது என்பதற்குச் சங்க நூல்களுள் ஒன்றாகிய பரிபாடல் சான்றாக உள்ளது. பரிபாடலின் ஆறு பாடல்கள் திருமாலைப் பற்றியன. முக்தி தரும் கடவுள் திருமால், அவன் முப்பெரும் கடவுளுக்கும் மேலானவன், தேவர் தலைவன் என்பனவெல்லாம் பரிபாடல் திருமாலுக்குச் சூட்டும் புகழாரங்கள்.

திருமாலின் பல இயல்புகளும் செயல்களும் சங்க நூல்கள் பேசுகின்றன. சாணையிட்ட நீலமணி போன்ற நிறத்தினன், கருடக் கொடியன், அவுணர்களை அழித்தவன், திருவோணத் திருநாளில் பிறந்தவன், ஈரடியால் மூவுலகு அளந்தவன், திருவினை மார்பில் கொண்டவன், காத்தல் தொழிலினன், பாம்பணையான், சங்கு சக்கரப்படையான், நீர்செல நிமிர்ந்தவன், நான்முகனைப் படைத்த உந்தியான் எனப் பற்பலவாறு பெரும்பாணாற்றுப்படை, மதுரைக் காஞ்சி, திருமுருகாற்றுப்படை ஆகிய சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. இவையனைத்தும் சங்க காலம் முதல் தொடர்ந்து ஒவ்வொரு கால இலக்கியங்களிலும் பேசப்படுகின்றன.

**மாலை :** ''நாற்றத் துழாய்முடி நாராயணன்''[436], ''நறுந் துழாய் மாலையுற்ற வரைப்பெருந் திருமார்வன்''[437], ''தண் துழாய் அலங்கலாடு சென்னியாய்''[438] ''தேனாலாந் துளபமாலைச் சென்னியாய்''[439] ''தாராய தண்துளப வண்டு முதவரைமார்பன்''[440] என்று மார்பிலும் சென்னியிலும் துழாய் மாலை அணிந்தவனாகத் திருமால் ஆழ்வார் பாசுர அடிகளில் காட்சி தருகின்றான்.

**ஆடை :** முந்தைய கால இலக்கியங்களில் காட்டப்பெறுவது போலவே திருமால் ''பீதகச் சிற்றாடையொடும் மின்னிற் பொலிந்த தோர் கார்முகில்''[441] என்று பீதாம்பர தாரியாகக் குறிக்கப் படுகின்றான்.

**ஊர்தி - கொடி :** சங்க இலக்கிய காலம் முதல் திருமாலுக்கு ஊர்தியும், கொடியுமாகக் கருடன் குறிக்கப்படுகின்றான். ''பையுடை நாகப் பகைக் கொடியான்''[442] ''வன்புற்றரவின் பகைக்கொடி வாமன நம்பீ''[443] ''பறவையேறு பரம புருடா''[444] ''கெருட வாகனன்''[445] என்று ஆழ்வார்களும் திருமாலின் ஊர்தியும், கொடியுமாகக் கருடனைச் சுட்டுகின்றனர்.

---

436. நா. தி. பிர. - திருப்பாவை - 10
437. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 2 - 8
438. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 46
439. நா. தி. பிர. திருமாலை - 41
440. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 1 - 4
441. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 8 - 3
442. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 8 - 4
443. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 3 - 8
444. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 5 - 4 - 2
445. நா. தி. பிர. திருமாலை - 10

**படுக்கை :** ''படுத்த பைந்நாகணைப் பள்ளிகொண்டான்''[446] ''ஆயிரம் பைந்தலைய அனந்தசயனன்''[447] ''நச்சு நாகணைக் கிடந்த நாதன்''[448] ''பணங்களாயிரமுடைய நல்லரவணைப் பள்ளி கொள் பரமா''[449] என்று ஆழ்வார்களின் வாக்கிலும் சங்க காலம் முதல் தொடர்ந்து வரும் செய்தியாகப் பாம்பணைப் பள்ளி கொண் டோனாகத் திருமால் காட்டப்படுகின்றான்.

**நாள் :** முந்தைய கால இலக்கியங்களில் கூறப்பட்டது போலவே ''திருவோணத் திருவிழவில்''[450] ''திருநாள் திருவோணம்''[451] என்று ஆழ்வார் பாசுர அடிகளும் திருமாலைத் திருவோண நாளில் தோன்றியவனாகக் காட்டுகின்றன.

**ஆயுதங்கள் :** திருமால் பஞ்சாயுதங்களுடனும் பலவிடங்களில் காட்டப்படுகின்றான். ''தண்டொடு சக்கரம், சார்ங்கம் ஏந்தும் தடக்கையன்''[452] ''சங்கு, வில், வாள், தண்டு, சக்கரம் ஏந்திய அங்கைகள்''[453] ''நாந்தகம், சங்கு, தண்டு, நாணொலிச் சார்ங்கம், திருச்சக்கரம் ஏந்தும் பெருமையன்''[454] என்று பஞ்சாயுதங்களுடனும், ''வலத்துறையும் சுடராழியும், படைபோர் புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும்''[455], ''வெள்ளை விழிசங்கு வெஞ்சுடர்த் திருச்சக்கரம் ஏந்துகையன்''[456] ''சார்ங்க மென்னும் வில்லாண்டான்''[457] என்று சங்கு, சக்கரதாரியாக வில்லையேந்தும் பெருமகனாகத் திருமால் காட்டப்படுகின்றான். முந்தைய கால இலக்கியங்களில் திருமால் அவனது ஆயுதங்களுடன் சேர்த்துப் பேசப் பட்டிருந்தாலும் பெரும்பாலும் சங்கு சக்கரதாரியாகவே காட்டப் படுகின்றான். சிலவிடங்களில் பஞ்சாயுதங்களுடனும் சேர்த்துப் பேசப்படுகின்றான். முந்தைய கால இலக்கியங்களில் கூறப்படுவதைக் காட்டிலும், எண்ணிக்கையில் மிகுதியான அளவில் ஆழ்வார் பாசுரங்

446. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 9 - 4
447. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 3 - 10
448. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 117
449. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 2 - 6
450. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 9 - 3
451. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 3 - 9
452. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 3
453. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 9 - 2
454. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி 4 - 1 - 2
455. நா. தி. பிர. திருப்பல்லாண்டு - 1 - 2 - 3
456. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 1 - 7
457. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 4 - 2

களில் பஞ்சாயுதங்களின் பெருமை தோன்றத் திருமால் காட்சி தருகின்றான். இது திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட ஒரு வளர்ச்சி நிலையே என்று கூறலாம்.

**சங்கு முழக்கம் செய்தவன் :** ''பற்றார் நடுங்க முன் பாஞ்ச சன்னியத்தை வாய் வைத்த போரேறே''[458] ''ஞாலத்தையெல்லாம் நடுங்க முரல்வன பாலன்ன வண்ணத்துன் பாஞ்சசன்னியமே''[459] என்று திருமால் சங்கு முழக்கம் செய்த தன்மை முந்தைய காலங் களைப் போலக் காட்டப்படுகின்றது.

**ஆலிலை மேல் துயின்றவன் :** ''ஆலின் இலை வளர்ந்த சிறுக்கன்''[460] ''பாலாலிலையில் துயில்கொண்ட பரமன்''[461] ''ஆலினிலைப் பாலகனாய் அன்றுலக முண்டவன்''[462] ''ஆலிலைத் துயின்ற ஆதி தேவன்''[463] என்று பல்வேறிடங்களில் ஆழ்வார் பாசுர அடிகள் திருமாலைப் போற்றுகின்றது. முந்தைய காலங்களிலும் இச்செய்தி இடம் பெற்றுள்ளது.

**குடமாடி :** ''குடமாடு கூத்தன்''[464], ''குரவையாய்ச்சியரோடு கோத்ததும்''[465] என்று குடக்கூத்து, குரவைக் கூத்தாடியவனாகத் திருமால் காட்டப்படுகின்றான். கண்ணனுக்குரிய குடக்கூத்து, பேடு, மல்லாடல், பாண்டரங்கம் முதலிய ஆடல்கள் சிலம்பிலும் காட்சி தருகின்றன. கண்ணன் — நப்பின்னை வரலாறு நாடகமாக நடிக்கப்பட்ட செய்தியும் சிலம்பில் உண்டு.

**பிரமன், காமன், சிவன் — தாதை :** ''காமனார் தாதை''[466] என்றும் ''சந்தச் சதுமுகன் தன்னைப் படைத்தவன்''[467] ''கமலத் தயன் நம்பி தன்னைக் கண்ணுதலானொடும் தோற்றி'' என்று காமன், பிரமன் தந்தையாக மட்டுமன்றிச் சிவனைத்[468] தோற்றுவித் தவனாகவும் திருமால் ஆழ்வார் பாசுரங்களில் குறிக்கப்படுகின்றான்.

---

458. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 3 - 5
459. நா. தி. பிர. திருப்பாவை - 26
460. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 7
461. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 1 - 3 - 2
462. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 8 - 7
463. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 22
464. நா. தி. பிர. பெரிய திருமொழி - 2 - 5 - 4
465. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 4 - 1
466. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 1 - 3
467. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 5 - 8
468. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 9 - 9

சிவனைத் தோற்றுவித்ததாகக் கூறப்படும் இச்செய்தி முந்தைய கால இலக்கியங்களில் இடம் பெறாதது. திருமாலே தெய்வங்களுக் கெல்லாம் உயர்ந்தவன் என்ற கருத்தும் கிடைக்குமாறு ஆழ்வார் களால் பேசப்படும் இச்செய்தி திருமால் வழிபாட்டு நிலையில் ஏற்பட்ட வளர்ச்சியினைத் தெரிவிக்கின்றது.

**நிறம் :** கருமாணிக்க மாமலை, ''மணிவண்ணன்''[469], ''காயா மலர் வண்ணன்''[470], ''கார்முகில் வண்ணன்''[471], ''கடல் நிற வண்ணன்''[472], கரிய திருமேனி[473], அஞ்சன வண்ணன்[474], கொண்டல் வண்ணன்[475], பூவை வண்ணன்[476] என்று திருமாலின் நிறம் காட்டப் பெறுகின்றது. பாதக் கமலங்கள்[477], செந்தாமரைக் கைவிரல்கள்[478], கண்ணனும் வாயும், கைத்தலமும் அடியிணையும் கமல வண்ணம்[479] கொவ்வைக் கனிவாய்[480] என்றும் காட்டப்படுகின்றன. ''மாயனார் திருநன்மார்பும், மரகத வுருவும் தோளும், தூய தாமரைக் கண்களும், துவரிதழ்ப் பவள வாயும் ஆயசீர் முடியும் தேசும்'' திருமாலையில் போற்றப்படுகின்றன.[481] இவை அனைத்தும் சங்க காலம் முதல் தொடர்ந்து காட்டப்பெறும் செய்திகளே.

**பரம்பொருள் :** தேவரையும், அசுரரையும், திசைகளையும் படைத்தவன்[482] ஆதியான வானவர்க்கும் ஆதியானவன்[483], செஞ்சடைச் சிவன் நீதியால் வணங்கும் பாதன்[484], ''முந்நீர் ஞாலம்

---

469. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 2 - 7, 8
பெரியாழ்வார் திருமொழி - 2 - 2 - 3
470. நா, தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 5 - 2
471. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 5 - 3
472. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 1
473. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 7 - 1
474. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 2
475. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 4
476. நா. தி. பிர. பெரிய திருமொழி - 22 - 8
477. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 1 - 4
478. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 5 - 10
479. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 18
480. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 2 - 5
481. நா. தி. பிர. திருமாலை - 20
482. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 8 - 10
483. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 8
484. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 9

படைத்த எம்முகில் வண்ணன்''[485], உலகமேத்தும் ஒருவன் தேவ தேவன் கண்ணன்[486] என்றும் வானவர்கள் காதலித்து மலர்கள் தூவும் என்னன்[487] என்றெல்லாம் ஆழ்வார்கள் வாக்கிலும் திருமால் பரம்பொருளாகக் காட்டப்படுகின்றான். ''அவனே அகல் ஞாலம் படைத்து இடந்தான் அவனே அஃது உண்டு உமிழ்ந்தான்'' என்ற பாசுர அடிகள் முத்தொழிலையும் ஆற்றும் இறைவனாகத் திருமாலைக் குறிக்கின்றன.[488]

**வேதிப் பொருள் :** வேத முதல்வன்[489], வேதப்பொருள்[490], ''பழகு நான்மறையின் பொருளாய்''[491] அங்கமாறும், வேத நான்குமாகி நின்றவற்றுள்ளே தங்குகின்ற தன்மையன்[492], புள்ளதாகி வேதம் நான்கும் ஓதினான் என்றும்[493], நான்மறைகள் தேடியென்றும் காணமாட்டாச் செல்வனாகவும்[494] திருமால் போற்றப்படுகின்றான்.

**வினை தீர்ப்பவன் :** செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்த தேவ தேவனாகத் திருமால் சுட்டப்படுகின்றான்.[495] ''வல்வினை யாயின மாற்றி பங்கப்படா வண்ணம் செய்த அம்மானாக''ப் பெரியாழ்வார் போற்றுகின்றார்.[496]

**முந்தைய கால இலக்கியங்களோடு ஒப்பிட்டுக் காண்கின்ற நிலை :** சொல்லினால் தொடர்ச்சி நீ! சொல்லப்படும் பொருளும் நீ! என வரும் பாசுர அடிகள்[497] சொல்லினுள் வாய்மை நீ என வரும் பரிபாடல் கருத்தையும், ''நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்'' என்னும் திருமங்கை யாழ்வாரின் கூற்று[498] ''நாராயணா என்ன நாவென்ன நாவே''

---

485. நா. தி. பிர. திருவாய்மொழி - 3 - 2 - 1
486. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8 - 8
487. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8 - 9
488. நா. தி. பிர. திருவாய்மொழி - 9 - 3 - 2
489. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 4 - 2
490. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 6
491. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 4 - 10
492. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 15
493. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 19
494. நா. தி. பிர. பெரிய திருமொழி - 4 - 8 - 7
495. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 109
496. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 5 - 2 - 7
497. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 11
498. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 1

என்று கூறும் இளங்கோவடிகளின் கருத்தையும் வலியுறுத்தி நிற்கின்றன.

''திடவிசும்பு எரிவளி நீர்நிலம் இவைமிசைப்
படர்பொருள் முழுவதும் ஆய்''....பரந்துளன்''

என விளக்கும் நம்மாழ்வார்[499] கருத்து இறைவனே எல்லாப் பொருள்களாகவும் விரிந்துள்ளான் என்று வற்புறுத்தும் ''அனைத்தும் நீ அனைத்துப் பொருளும் நீ'' என்ற பரிபாடற் கருத்துகளை விரித்துரைக்கின்றன.

**தேவியர் மூவர் :** திருமகள், மண்மகள், ஆயர் மடமகள் மூவரும் திருமாலுக்குத் தேவிகள் என்று ஆழ்வார்கள் பல இடங்களில் குறிப்பிடுகின்றனர்.

''தேவிமார் ஆவார் திருமகள், பூமி;
ஏவமற்று அமரர் ஆட்செய்வார்
மேவிய உலகம் மூன்று அவை ஆட்சி
வேண்டு வேண்டு உருவம்நின் உருவம்''[500]

என்பதில் அவனது தேவிமார்களும் கூறப்பெற்றுள்ளனர்.

பின்னை கேள்வனாகவும்[501], நிலமங்கை நல் துணைவனாகவும்[502] திருமால் கூறப்படுகின்றான்.

முந்தைய கால இலக்கியங்களில் திருமகள், நிலமகள், பின்னை மூவரும் தனித்தனியே திருமாலுடன் சேர்த்துப் பேசப்படுகின்றனர். இங்கு மூவரும் சேர்த்துப் பேசப்படுகின்ற தன்மையினையும், மானிடப் பெண்களுக்கு மூவரும் உவமமாக அமையும் போக்கையும் காண முடிகின்றது.

''திருமகளும், மண்மகளும், ஆய்மகளும், சேர்ந்தால்''[503],
''பின்னைகொல், நிலமா மகள்கொல், திருமா மகள்கொல்''[504]
''உடனமர் காதல் மகளிர் திருமகள், மண்மகள், ஆயர் மடமகள்''[505]

என்று மூவரும் சேர்த்துப் பேசப்படுகின்ற புதிய தன்மையினை ஆழ்வார் பாசுர அடிகள் உணர்த்துகின்றன.

---

499. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 1 - 2
500. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 1 - 1
501. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 13
502. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 4 - 9
503. நா. தி. பிர. முதல் திருவந்தாதி - 42
504. நா. தி. பிர. திருவாய்மொழி - 6 - 5 - 10
505. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 9 - 4

**திருமகள் :** ''செய்யவள் நின்அகலம் சேமம் எனக்கருதி''[506] திருமாது வாழ் வாட்டமில் வனமாலை மார்வன்''[507] ''திருக்கலந்து சேருமார்ப''[508] ''திருமறுமார்வ''[509] ''செழுங்கடல் அமுதினிற்பிறந்த அவ்ளும் நின்னாகத் திருப்பதும்''[510] ''திருவுடையாள் மணவாளா''[511] ''கமலத் திருவினுக்கரசே''[512] என்று திருமகள் திருமாலின் மார்பில் மறுவாகவும், உறைபவளாகவும், திருமகளின் கணவனாகத் திருமாலும் காட்டப்படுகின்றனர். திருமகள் பாற்கடலில் தோன்றியவள், கமலத்துறைபவள் போன்ற செய்திகளும் இதனால் பெறப்படுகின்றன. ஆழ்வார்கள் திருமகளைத் திருமாலுடன் சேர்த்துப் பல பாடல்களில் பாடியிருந்தும் தனித் தெய்வமாகத் திருமகளை வழிபாடு செய்யவில்லை யெனலாம்.

**வழிபாடு :** செண்பகப்பூ, மல்லிகைப்பூ, பாதிரிப்பூ, செங்கழுநீர், புன்னைப்பூ, குருக்கத்திப்பூ, இருவாட்சிப்பூ, கருமுகைப்பூ என எண்பகர் பூவும்[513], ''பாலொடு நெய்தயிர் ஒண்சாந்தொடு சண்பகமும் பங்கயம் நல்கருப்பூரமும்''[514] ''மஞ்சளும், செங்கழுநீரில் வாசிகையும் நாறும் சாந்தும் அஞ்சனமும்''[515] ''செந்நெல் அரிசி சிறு பருப்புச் செய்த அக்காரம் நறுநெய் பாலால் பண்ணிரண்டு திருவோணம்''[516] ''கன்னல் இலட்டுவத்தோடு சீடை காரெள்ளின் உண்டை கலத்தில் இட்டு வைத்து''[517] என்று திருமாலை வழிபடும் பொருட்கள் நயம்படக் காட்டப்படுகின்றன. பலாப்பழம்[518] அப்பம்[519] நாவற்பழம், கனிகள்[520] போன்றவையும் வழிபடு பொருட்களாகக் கூறப்படுகின்றன.

---

506. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 1
507. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 2 - 1
508. நா. தி. பிர. திருச்சந்தவிருத்தம் - 103
509. நா. தி. பிர. திருமாலை - 40
510. நா. தி. பிர. பெரிய திருமொழி 2 - 7 - 1
511. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 1
512. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 6 - 9
513. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 7 - 1 முதல் 10 வரை
514. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 8
515. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 4 - 4
516. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 7
517. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 9
518. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 3 - 4, 5
519. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 3 - 12
520. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 3 - 11

''பூவில் புகையும், விளக்கும், சாந்தமும் நீரும் மலிந்து
மேவித்தொழும் அடியாரும்'' குறிக்கப்படுகின்றனர்.''[521]

''அவன் பெயர் எட்டெழுத்தும் ஓதுவார்கள் வல்லர் வானமாளவே''[522] என்று திருமாலின் எட்டெழுத்து மந்திரம் போற்றப்படுகின்றது. சிலம்பிலும் திருமாலுக்கே உரிய எட்டெழுத்து மந்திரத்தை மாங்காட்டு மறையோன் பேசுகின்றான்.

''எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும்''[523], இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும்'' பற்றாகத் திருமால் புகழப்படுகின்றான்.[524] ''ஊழி முதல்வனாக[525], வானோர்தம் பெருமானாக[526], வானவர்க் கரசனாகத்[527] திருமால் போற்றப்படுகின்றான். இச்செய்திகள் எல்லாம் ஆழ்வார் பாசுரங்களில் பன்முறை பயின்று வருகின்றன திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையென்று இதனைக் கூறலாம்.

**வருணனை :** பக்திக் கால இலக்கியங்களில் — திவ்வியப் பிரபந்தத்தில் திருமாலின் அழகுக் கோலங்கள் மிகுதியாகச் சித்தரிக் கப்பட்டிருக்கின்றன. திருமாலின் தோற்றத்தை மக்கள் உள்ளத்தில் ஆழப் பதியவைக்கும் முயற்சியாக இதனை ஆழ்வார்கள் கையாண் டிருக்கக்கூடும். திருமாலைப் பற்றிய கோலங்கள் வட இந்தியக் கலாச்சாரக் கலப்பால் மிகுதியாகியிருக்கலாம். பக்திக் காலத்தில் இறைவனை அழகுபடச் சித்தரிக்கும் போக்கு நாயன்மார்களையும், ஆழ்வார்களையும் மிகவும் கவர்ந்திருக்கின்றது. இதனை அவர்களது பாடல்களால் நன்கு தெளியலாம். கடவுள் இல்லை என்ற வைதிக சமயத்தாரின் (சமண புத்தர்) கோட்பாட்டைத் தகர்த்து இறைவன் இத்தகையன், இன்னிறத்தன், இவ்வண்ணத்தன், இவ்வுருவன், இக்கோலத்தன் என்று பாடிப் பக்தியைப் பாமரர் உள்ளத்தில் பதியவைக்க ஆழ்வார்கள் எடுத்த முயற்சி, இம் முருகுணர்ச்சி அவர்களது பாசுரங்களில் பக்தி உணர்ச்சியாகப் பரிணமிக்கின்றது.

---

521. நா. தி. பிர. திருவாய்மொழி - 5 - 2 - 9
522. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 77, 78
523. நா. தி. பிர. திருப்பாவை - 29
524. நா. தி. பிர. நாச்சியார் திருமொழி - 6 - 8
525. நா தி. பிர. திருவாய்மொழி - 10 - 7 - 9
526. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 5 - 3
527. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 6 - 2

இருக்கு வேத காலத்திற்குப் பிறகு தெய்வங்களை வருணித்துப் பாடும் பாடல்கள் தமிழிலுள்ள பரிபாடல்களே. இப்பாடல்களே ஆழ்வார்களுக்குத் தெய்வத்தைப் பற்றிப் பாட வழிவகுத்துக் கொடுத்தன.

ஆழ்வார்கள் அவதாரத்தில் இராமன், கிருட்டிணாவதாரம் இவ்விரண்டையுமே விரிவாக வருணித்து நரசிம்மன், வாமனன், திரிவிக்கிரமன் ஆகியவற்றை ஆங்காங்குக் குறிப்பிட்டு ஏனைய அவதாரங்களை அருகியே பாடியுள்ளனர். பெரியாழ்வார் கண்ணனைப் பாதாதி கேச வண்ணமாகப் பாடுகின்றார். பாதக் கமலங்கள், கணைக்கால், முழந்தாள், குறங்கு, முத்தம், மருங்கு, உந்தி, உதரம், திருமார்பு, தோள்கள், கைத்தலங்கள், கண்டம், செந்தொண்டை, மூக்கு, கண்கள், புருவம், திண்ணம், நெற்றி இருந்த தன்மையைக் காணுமாறு மங்கையரை அழைக்கின்றார். இது முந்தைய கால இலக்கியங்களில் காணப்படாத புதிய வர்ணனையும், வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சியுமாகும்.[528]

''செங்கமலக் கழலில் சிற்றிதழ்போல் விரலில்
சேர்திகழ் ஆழிகளும், கிண்கிணியும், அரையில்
தங்கிய பொன்வடமும் தாளநன் மாதுளையின்
பூவொடு பொன்மணியும் மோதிரக் கிறியும்
மங்கல ஐம்படையும், தோள்வளையும் குழையும்
மகரமும் வாளிகளும் சுட்டியும் ஒத்திலகா''

என்றும்[529] ''அக்குவடம் உடுத்து ஆமைத்தாலி பூண்ட அனந்த சயனனாகவும்''[530], ''மருவும் தமனகமும் சீர்மாலை மணம் கமழ்கின்ற புருவம், கருங்குழல், நெற்றி பொலிந்த முகிற்கன்று போல உருவம் அழகிய நம்பீயாகவும்''[531] திருமால் பெரியாழ்வார் வாக்கில் வருணிக்கப்படுகின்றான்.

''சீலைக் குதம்பை ஒருகா தொருகாது
செந்நிறமேல் தோன்றிப்பூ
கோலப் பணைக்கச்சும் கூறையுடையும்
குளிர்முத்தின் கோடாலமும்''[532]

528. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 3 - 1 முதல் 20 வரை
529. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 10
530. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 8 - 2
531. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 7 - 4
532. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 3 - 1

''மங்கல நல்வன மாலை மார்வில் இலங்க,
மயில் தழைப்பீலி சூடி
பொங்கின வாடையரையிற் சாத்திப்
பூங்கொத்துக் காதிற்புணரப் பெய்து''

என்றும்,[533] ''வலங்காதின்மேல் தோன்றிப் பூவணிந்து. மல்லிகை வனமாலை, மௌவல் மாலை, சிலிங்காரத்தால் குழல் தாழவிட்டுத் தீங்குழல் வாய்மடுத்தூதி அலங்காரத்தால் வருமாயப் பிள்ளை''[534] யாகவும் காட்டப்படுகின்றான். இவையெல்லாம் வருணனை என்ற முறையில் திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட வளர்நிலைகளாகும்.

**கோலம் :** திருமாலின் கோலம் சிலம்பில் சித்தரிக்கப்படுவது போல விரிவாகக் காட்டப்படாவிட்டாலும், ''நின்ற தெந்தை யூரகத்திருந்த தெந்தை பாடகத்து, அன்று வெஃகணைக் கிடந்தது'' என்றும்[535], குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி வடதிசை பின்பு காட்டித் தென்திசை யிலங்கை நோக்கி'' என்று திருமாலின் கோலம் சுட்டப்படுகின்றது.[536]

''கண்கள் சிவந்து பெரியவாய் வாயும் சிவந்து கனிந்து உள்ளே
வெண்பல் இலகுசுடர், இலகு விலகு மகர குண்டலத்தன்
கொண்டல்வண்ணன், சுடர்முடியன் நான்குதோளன்,
குனிசார்ங்கன்,
ஒண்சங்கு கதை வாள் ஆழியான் ஒருவன்''[537]

என்ற பாசுரப் பகுதியில் திருமாலினது திவ்விய மங்களத் திருமேனி காட்டப்படுகின்றது. ''முந்நீர் ஞாலம் படைத்த எம்முகில் வண்ணன்''[538] என்பதால் இந்தத் திவ்விய மங்கள உருவத்துடனிருந்து கொண்டே திருமால் படைத்தல் முதலிய செயல்களை மேற்கொள் வான் என்பது பெறப்படுகின்றது.

**பெயர்கள் :** திருமாலை அனுபவிக்க முற்பட்ட ஆழ்வார்கள் தங்களுடைய பாடல்களில் அன்பு மேலீட்டால் திருமாலைப் பல பெயரிட்டு அழைக்கின்றார்கள். முந்தைய கால இலக்கியங்களில் குறிக்கப்படும் பெயர்களோடும், அவற்றினும் மிகையான பல்வேறு

533. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 6 - 9
534. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 4 - 9
535. நா. தி. பிர. திருச்சந்த விருத்தம் - 63
536. நா. தி. பிர. திருமாலை - 19
537. நா. தி. பிர. திருவாய்மொழி - 8 - 8 - 1
538. நா. தி. பிர. திருவாய்மொழி - 3 - 2 - 1

பெயர்களோடும் திருமால் ஆழ்வார் பாசுரங்களில் விளிக்கப் படுகின்றான். எல்லாவற்றிற்கும் மேலாகப் ''பேராயிரமுடையா'' னாகத் திருமால் சுட்டப்படுகின்றான்.[539]

மூவுலகாளி[540], அச்சுதன்[541], மாணிக்குறளன்[542], தேவகிசிங் கம்[543], சுந்தரத்தோளன்[544], குடந்தைக் கிடந்தான்[545], அரங்கத் தணையான்[546], கோவிந்தன்[547], வித்தகன்[548], வேங்கடவாணன்[549], குழகன்[550], சிரீதரன்[551], ஆயர்கள் போரேறு[552], பட்டிக்கன்று[553], பற்பநாபன்[554], சார்ங்கபாணி[555], திரிவிக்கிரமன்[556], ஆயன்[557], அரட்டன்[558], அதகன்[559], இருடிகேசன்[560], உத்தமன்[561], பரஞ்சோதி[562], கோலப்பிரான்[563], பிள்ளையரசே[564], வாமன நம்பி[565], வித்தகன்[566],

---

539. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 5 - 4
540. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 2 - 10
541. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 6 - 3
542. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 4 - 7
543. நா. தி. பிர. திருவாய்மொழி - 1 - 4 - 4
544. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 4 - 6
545. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 4 - 7
546. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 4 - 9
547. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 1
548. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 3
549. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 3
550. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 5
551. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 5 - 5
552. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 6 - 2
553. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 7 - 5
554. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 7 - 5
555. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 8 - 1
556. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 1 - 8 - 9
557. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 1 - 3
558. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 1 - 4
559. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 1 - 9
560. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 2 - 6
561. நா. தி. பிர. பெரிய திருமொழி - 11 - 8 - 7,8
562. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 3 - 2 - 6
563. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 6 - 6
564. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 7
565. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 2
566. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 2 - 9 - 6

புருடோத்தமன்[567], நமோ நாரணா[568], குலதெய்வம்[569], வைகுந்தன்[570], இராகவன்[571], அரங்கத்தம்மான்[572], சிந்தாமணி[573], தாமோதரன்[574], காகுத்தன்[575] போன்ற பெயர்கள் திருமாலுக்கு ஆழ்வார்கள் கொடுக்கும் புதிய பெயர்களாகும். இவை முந்தைய கால இலக்கியங்களில் காணப்படாதவை. ஆழ்வார் பாசுரங்களில் பெயர்களை இட்டு வழங்குவதில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையென்று இதனைக் கூறலாம். இங்கு காணப்படும் பெயர்கள் திருமாலின் இயற்கை, உருவம், குணம், பெருமை, லீலை இவைகளை அடிப்படையாகக் கொண்டும் நிற்கின்றன.

**ஆலய வழிபாடு** : கி.பி. 700 தொடங்கி ஏறக்குறைய 900 வரை சைவ சமய எழுச்சிக்கு இணையாகத் தமிழ்நாட்டில் வைணவ பக்தி நெறியும் வளரத் தொடங்கியது. எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளில் திருமாலைத் தலைமையாகக் கொண்ட வைணவ வழிபாடு பன்னிரு ஆழ்வார்களின் பக்திப் பாடல்களால் மறுமலர்ச்சி பெற்றது. பல்லவர் வைணவத்தையும் நன்கு வளர்த்தனர். பல்லவர் கால மன்னர்களுள் வைணவ சமயத்தவர்களும் இருந்தனர். முதலாம் நரசிம்மவர்மன், இரண்டாம் நந்திவர்மன், தந்திவர்மன் என்போர் சிறந்த வைணவ பக்தர்கள். பாண்டியரும் ஓரளவு வைணவத்தை வளர்த்தனர். நாயக்க மன்னர்கள் வைணவர்களாகவே இருந்தனர். இவர்களது அரிய தொண்டுகளால் நாளடைவில் சமண, பௌத்த சமயங்கள் தமது செல்வாக்கை இழந்தன. சைவ, வைணவ சமயங்கள் நாட்டுச் சமயங்களாக வளர்ந்தன.

பல்லவர் காலப் பிற்பகுதி சோழர் கால முற்பகுதி கோவில் வளர்ச்சிக் காலம் எனக் கூறலாம். நாயன்மாரும் ஆழ்வாரும் இறைவனைத் தலங்களிலே தரிசித்து இசை பாடித் தொழுதனர். ஆழ்வார்களால் நூற்று எட்டுத் திருப்பதிகளில் இருந்த பெருமாள் கோவில்கள் சிறப்புப் பெற்றன. திருநாவுக்கரசரைப் போலவே

567. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 4 - 10
568. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 5 - 1 - 3
569. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 5 - 4 - 3
570. நா. தி. பிர. திருப்பாவை - 9
571. நா. தி. பிர. பெருமாள் திருமொழி - 8 - 1
572. நா. தி. பிர. அமலனாதிபிரான் - 1
573. நா. தி. பிர. பெரிய திருமொழி - 1 - 10 - 9
574. நா. தி. பிர. திருவாய்மொழி - 2 - 7 - 12
575. நா. தி. பிர. திருவாய்மொழி - 7 - 2 - 3

திருமங்கையாழ்வாரும் பல திருமால் கோவில்களை வழிபட்டு அருட் பாடல்களைப் பாடியுள்ளார். கோவில்களில் இராமாயணம், பாரதம் போன்ற நூல்கள் படித்துப் பொதுமக்களுக்கு விளக்கப் பெற்றன. தலங்கள் இறைவன் கோவில் கொண்டிருந்த இடங்களாகும். ஆனால் அக்காலக் கோவில்கள் அளவில் மிகவும் சிறியன. வழிபாட்டிடங் களாக மட்டும் விளங்கின. பின்பே கோவில்களுக்குப் பொருள் வருவாய், நிலதானம் என்பன மிகுந்தன. சிற்பம், ஓவியம் முதலிய கலைகள் கோவிற் கட்டிடங்களிலே பொறிக்கப் பெற்றன. கோவிலின் செல்வாக்கு வளர்ந்ததோடு அந்தணரின் செல்வாக்கும் வளர்ந்தது. தமிழ்நாட்டு நாகரிகம் கோவில் நாகரிகமாயிற்று. கடவுட் கொள்கை தமிழ்நாட்டிலே மிகச் சிறந்த பக்தியிலக்கியத்தைத் தோற்றுவித்தது. இவை இறைபக்தியின் இரண்டுவித வெளிப்பாடுகளெனலாம். பக்தியிலக்கியமும் கோயிலும் தமிழருக்கு மட்டும் உரியனவன் றாயிலும் இவையிரண்டிலும் தமிழர் பிறர் வியக்கத்தக்க அளவுக்குச் சென்றிருக்கின்றனர் என்பது புலனாகின்றது.

தென்னாட்டில் ஆழ்வார்களின் அருளிச்செயல்களால் புதுமெருகு பெற்று விளங்கும் வைணவ சமயம் திருமாலினுடைய கருணையை கருவாகக் கொண்ட மதம் என்று குறிப்பிட்டுச் சொல்லலாம். ஆழ் வாருடைய பாடல்கள் பொதுவாக இறைவனிடத்து அன்பைச் செலுத்த வேண்டும் என்பதற்கு எடுத்துக்காட்டாக இருப்பதுடன் வைணவ ஒழுக்கக் கொள்கைகளுக்கும் ஆலய வழிபாட்டிற்கும் மூலாதாரமாக உள்ளன.

**தமிழ்நாட்டில் ஆலய வழிபாட்டுத் தொன்மை :** தமிழ்நாட்டில் ஏறத்தாழ 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று கூறப்படும் சங்க காலத்துக்கு முன்பிருந்து இன்று வரை ஆலய வழிபாடு தொடர்ந்து வந்துள்ளது. காவிரிப்பூம்பட்டினம், மதுரை, திருமாலிருஞ்சோலை ஆகிய இடங்களில் ஆலய வழிபாடு சிறப்பாக நடந்தது என்று சங்க இலக்கியம், சிலப்பதிகாரம் முதலியன இயம் புகின்றன. சங்க காலத்திலேயே ஆலயங்களில் திருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பட்டன. ஆழ்வாராதிகள் காலத்தில் ஆலய வழிபாடும் திருவிழாக்கோலமும் மிகச்சிறந்த நிலையில் இருந்திருக் கின்றன. ஆட்சி அரசியல் மாறினாலும் ஆலய வழிபாட்டுக்கு இடையூறு எதுவும் ஏற்பட்டில்லது. வெளி மதத்தினர் படை யெடுப்பைப் பெரும்பாலும் அறியாத தமிழகத்து மக்கள் ஆலயங் களைத் தங்கள் பொதுவுடைமையாகக் கருதிப் பாதுகாத்து வந்ததாலும் ஆலய வழிபாடு தமிழகத்தில் வேரூன்றி விட்டது. நாயன்மார்களும், ஆழ்வார்களும் அருளிச் செய்த பாடல்களாலும் ஆலய வழிபாடு மக்கள் உள்ளத்தில் ஆழங்காற்பட்டது.

தமிழர்களின் வாழ்வு உருவ வழிபாடு, கோயில் வழிபாடு இவற்றோடு இரண்டறக் கலந்துவிட்டது. ஏற்றத்தாழ்வு உணர்ச்சி இல்லாமல் மத அடிப்படையில் மக்கள் சமத்துவத்தோடு வழிபட்டுத் தெய்வஉணர்வைப் பெறும் பொது இடமாகக் கோவில் அமைவதால் அங்கு நடைபெறும் பூசனைகளும் நாட்டின் பொது நன்மையை நாடியே செய்யப்படுவனவாக உள்ளன. ஆண்டவனைக் கோவிலில் கண்டு வழிபட்டு மன அமைதி பெறுவதும், திருவிழாக்களில் கலந்து கொண்டு இறைவனுடைய பேரழகில் திளைந்து மகிழ்வதும் பொதுமக்களின் அன்றாட இயல்பாகி விட்டன.

**ஆலயங்களின் சிறப்பு :** வாழ்க்கையில் மேடு பள்ளங்களைக் கண்டு அலுத்துப் போகும் உள்ளத்திற்குத் தெய்வ வழிபாடு அமைதியைத் தருகிறது. தெய்வ நம்பிக்கை உள்ளத்தில் இருந்தால் மட்டும் போதாது என்ற நிலையில் அதனைச் செயல்களில் காட்டவே ஆலய வழிபாடும் விக்கிரக வழிபாடும் பின்பற்றப்படுகின்றன. தெய்வ நம்பிக்கையும் சிந்தனையளவில் நில்லாது செயற்படற்குத் தமிழ் நாட்டு ஆலயங்கள் நிலைக்களன்களாக உள்ளன. தெய்வ உணர்ச்சி உறுதிப்பட விக்கிரக வழிபாடு பெருந்துணையாகிறது. மனிதன் இருக்கும் இடத்திற்கு வந்து அவனுக்கு எளிமையில் உதவவே இறைவன் விக்கிரக உருவம் கொண்டுள்ளான் என்பதையும் தெரிவிக்கிறது.

**பூசனை முதலியன :** தொடக்கத்தில் பூக்களை மட்டும் இட்டுச் செய்யப்பட்டுவந்த பூசனை பிற்காலத்தில் பெரிதும் விரிவடைந்து விட்டது. பூசனை தெய்வத்தைத் தன்மயமாக்குவதற்குச் செய்யும் செயல் என்று பொருள்படும். ஆராதனம் என்ற சொல்லும் பூசனைக்கு வழங்கப்படுகிறது. இறைவனுடைய பிரசாதமாகப் பெறும் துளசி, தீர்த்தம், சடாரி சாத்தல் முதலியன மனிதனுக்கு மன நிம்மதியை அளிக்கின்றன.

சங்க இலக்கியங்களில் திருமால் வீடுபேறு அருளும் திறமும், திருமாலிருஞ்சோலை மலைச் சிறப்பும், திருவெஃகாவின்கண் கிடந்த கோலமும், கண்ணனையும், பலராமனையும் வணங்குவதே உய்யும் வழி என்பதனையும் குறிப்பிடுகின்றன. சங்க காலத்துக்குப் பிற்பட்ட சிலப்பதிகாரம், திருப்பதியிலும் திருவரங்கத்திலும் நிகழ்ந்த ஆலய விக்கிரக வழிபாட்டை இயம்புகிறது. கோவிலுக்கு நியமம், நகரம், கோட்டம் என்ற வேறு பெயர்கள் இருந்தமையும் போதருகிறது, சேரர் தலைநகராம் வஞ்சியில் ஆடகமாடத்து அறிதுயில் அமர்ந்த திருமால் கோவிலும் இருந்தமை கூறப்படுகின்றது.

**ஆழ்வார்கள் காலத்துக் கோயில்கள் :** சிலப்பதிகார காலத்தை அடுத்து வந்த ஆழ்வார்கள் ''வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேன் அல்லேன், 'ஆய்கொண்ட சீர்த்தி ஆழிப்பிரான் எனக்கே உளன்'' என்ற கோட்பாட்டோடு இறைவனுடைய திருக்கோவில்கள் பலவற்றையும் பாடியுள்ளார். இவர்களுடைய பாசுரங்களால் இவர்கள் காலத்தில் பல திருமால் ஆலயங்கள் திருவிழாச் சிறப்புக் களோடு பொலிவு பெற்றிருந்த செய்தி புலனாகின்றது.

திருமாலிருஞ்சோலை[576], திருக்கோட்டியூர்[577], திருவரங்கம்[578], திருவேங்கடம்[579], சிங்கவேள் குன்றம்[580], திருவிண்ணகர்[581], திருநறையூர்[582], திருவெழுந்தூர்[583], திருக்கண்ணபுரம்[584], திருக்கண்ணங்குடி[585], திருநாகை[586], திருப்புல்லாணி[587], திருக்குறுங்குடி[588], திருக்கோட்டியூர்[589] முதலான பல்வேறு திருமால் தலங்களின் சிறப்பு ஆழ்வார்களின் திருவாக்குகளால் போற்றப் படுகின்றது.

**ஆழ்வார்கள் கண்ட திருவரங்கம் ;** தமிழ்நாட்டில் பக்தி இயக்கம் தோன்றிய காலத்திலும் அதற்குச் சற்று பின்னரும் வைணவத்தின் வளர்ப்புப் பண்ணைகளாகத் திகழ்ந்த பெருந் தலங்கள் திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், காஞ்சிபுரம் என்பவையாகும். இவற்றுள் ''பெரிய கோவில்'' என வழங்கப்பெறும் திருவரங்கம் தனிப்பெறும் புகழிற்கு உரிய தலமாகும்.

---

576. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 2 - 1 முதல் 10
577. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 4 - 1 முதல் 10
578. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 8 - 1 முதல் 10
579. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி - 4 - 9 - 1 முதல் 10
580. நா. தி. பிர. திருமாலை - 11
581. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 3 - 1 முதல் 10
582. நா. தி. பிர. பெரிய திருமொழி - 6 - 4 - 1 முதல் 10
583. நா. தி. பிர. பெரிய திருமொழி - 7 - 5 - 1 முதல் 10
584. நா. தி. பிர. பெரிய திருமொழி - 8 - 1 - 1 முதல் 10
585. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 1 - 1 முதல் 10
586. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 2 - 1 முதல் 10
587. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 3 - 1 முதல் 10
588. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 5 - 1 முதல் 10
589. நா. தி. பிர. பெரிய திருமொழி - 9 - 10 - 1 முதல் 10

பக்தி வளத்திற்குப் பேர்போன இத்தலம் ''பூலோக வைகுந்தம்'' எனப் போற்றிப் புகழப் பெறுகின்றது. ஆழ்வார்கள் பாடிய திருப்பதிகளுள் இதுவே முதன்மையானதாக மதிக்கப் பெறுகின்றது.

''தென்நாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கத் திருப்பதி'' என்பது பெரியாழ்வாரின் திருவாக்கு.[590] அரங்கனது சயனத்திருக் கோலத்தைச் சிலம்பும் தெளிவுறக் காட்டுகின்றது.[591] எல்லா ஆழ்வார்களுமே திருவரங்கத்தையும், ''அரவணையிற் பள்ளி கொள்ளும் மணிவண்ணன் அம்மான்'' திருமாலையும் அனுபவித்துப் பாடியுள்ளனர். திருவரங்கப் பெருமானது திருக்கோயில் வரலாற்றுக் காலத்திலிருந்து நாளதுவரை வாடாத சிறப்புடன் திருமால் பக்தியின் வளர்ப்புப் பண்ணையாகத் திகழ்ந்து வந்துள்ளது என்று கூறலாம்.

**நெடியோன் குன்றம்** : சிலம்பில் திருவேங்கடம் நெடியோன் குன்றம் எனக் குறிப்பிடப் பெறுகின்றது. மாங்காட்டு மறையோன் வாக்காக இளங்கோவடிகள் திருவேங்கடம் பற்றிய வருணனைச் சொல்லோவியத்தை அமைத்திருக்கின்றார்.[592] ஆழ்வார் பெருமக்களால் போற்றுதல் செய்யப்பெற்ற நூற்றெட்டுத் திருப்பதிகளுள் நெடியோன் குன்றமும் ஒன்று. கோவில், திருமலை, பெருமாள் கோவில் (காஞ்சி) என்ற வைணவப் பெருமக்களால் போற்றப்பெறும் மூன்று திவ்விய தேசங்களுள் இது நடுநாயகமாகத் திகழ்கின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த திருவேங்கடத்தைப் பற்றி 213 பாசுரங்கள் நாலாயிரத்தில் காணப்பெறுகின்றன. இவற்றைப் பாடியவர்கள் பத்து ஆழ்வார் பெருமக்கள். பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை, திருப்பாணாழ்வார், குலசேகரர், பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் முதலியோராவார்.

''திருமா லிருஞ்சோலை மலைஎன்றேன்; என்னத்
திருமால் வந்துஎன் நெஞ்சு நிறையப் புகுந்தான்''[593]

என்ற திருவாய்மொழி திருமால் மனமகிழ்ந்து திருவருள் பாலிக்கும் பெருமையினைப் பேசுகின்றது. திருவேங்கடமலை திருவரங்கத்தைக் காட்டிலும் முதலாழ்வாரின் உள்ளத்தைக் கவர்ந்தது.

---

590. நா. தி. பிர. பெரியாழ்வார் திருமொழி 4 - 9 - 11
591. சிலம்பு - காடுகாண் - வரிகள் 35 - 40
592. சிலம்பு - காடுகாண் - வரிகள் 41 - 51
593. நா. தி. பிர. திருவாய்மொழி - 10 - 8 - 1

''சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால்''

என்ற ஆழ்வாரின் திருவாக்கு நம்மையும் அம்மலையைச் சென்று வணங்குமாறு ஆற்றுப்படுத்துகின்றது.[594] கால வெள்ளத்தில் திருமலையின் பெயரும் திருவேங்கடமுடையானின் பெயரும் மக்கள் மனத்தில் நிலையான இடத்தைப் பெற்றுவிட்டன. திருவேங்கட முடையான் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையே இத்தகைய சிறப்புகளுக்குக் காரணமெனலாம்.

ஆழ்வார்களுடைய பாடல்களில் பாண்டியன், சோழன், பல்லவன் மரபைச் சார்ந்த மன்னர்களைப் பற்றிய செய்திகள் இடம் பெற்றிருப்பது அவர்கள் காலத்தை ஆராய்ந்து முடிவு செய்வதற்கு வாய்ப்பு அளிக்கிறது. இவர்கள் பாடல்களால் பாரத வரலாற்றில் சிறப்பாகத் தமிழ்நாட்டில் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு முதல் ஒன்ப தாம் நூற்றாண்டு வரை காணப்பட்ட தெய்வக் கொள்கை, ஆலய வழிபாட்டு முறை இவற்றை அறிய முடிகின்றது. ஆழ்வார்கள் காலத்தில் அந்தந்த ஆலயத்தில் எழுந்தருளியிருக்கும் பெருமானுக்குத் தனிப்பட்ட பெயர் கிடையாது. ஆராவமுதன், பொன்னப்பன், தன்ஒப்பார், இல்அப்பன் என்பன இறைவனை அனுபவிக்கும் தன் அனுபவத்தால் அவர்கள் மனம்கொண்டு பேசும் அன்புச் சொற்களே. தலங்கள் தோறும் இறைவனுக்கும், தேவிக்கும் தனித்தனித் திருப் பெயர்கள் தலபுராணங்களிலேயே காணப்படுகின்றன. ஆழ்வார்கள் காலத்தில் தலபுராணங்கள் பெரும்பான்மையும் தோன்றவில்லை.

**வழிபாடு :** தமிழ் இலக்கியத்தில் வெவ்வேறு அமிசங்கள் வெவ்வேறு காலங்களில் சிறப்பாகப் போற்றப்பட்டு வந்திருக்கின்றன. சங்க காலத் தமிழ் மக்கள் வழிபாட்டிலே சடங்குகளே முதன்மை பெற்றிருந்தன. சங்க காலச் சமயத்திலே ஆரியக் கூறுகளும், திராவிடக் கூறுகளும் இருப்பதாகக் கூறப்படுகின்றது. ஆரியக் கூறு களில் வேள்வி செய்தல் என்ற வழிபாட்டு முறை முக்கியத்துவம் பெறுகிறது. திராவிடக் கூறுகளில் வெறியாட்டு என்ற வழிபாட்டு முறை சிறப்பிடம் பெறுகிறது. சடங்கு தெய்வத்திடமிருந்து நன்மை பெற்றுத் தரும் என்ற நம்பிக்கை காணப்படுகிறது. சங்கம் மருவிய காலத்திலே சடங்கிலே நம்பிக்கை குறைந்து விட்டது. அறநீதிக் கருத்துக்களிலே நம்பிக்கை விளங்கிக் காணப்படுகின்றது. ஒழுக்கம் உயர்ந்தால் வாழ்வு சிறக்கும் என்ற நம்பிக்கை விளங்கித் தோன்று கின்றது. பல்லவர் காலத் தமிழ்நாட்டில் **வைதிக** சமய இயக்கம்

594. நா. தி. பிர. நான்முகன் திருவந்தாதி - 42

இறைபக்தியை வற்புறுத்துகின்றது. தமிழ்நாட்டுச் சமய வரலாற்றிலே புது யுகம் தோன்றுகிறது.

தமிழ்நாட்டிலே பெரிய அளவிலே சமய மாற்றம் நிகழ்ந்த போதும், பல்லவர் காலத்துக்கு முன்புள்ள சமயக் கூறுகள் முற்றாக நிராகரிக்கப்படவில்லை என்பது புலனாகின்றது. **அறநீதிக்** கருத்துகள் பெரும்பாலும் ஏற்கப்படுகின்றன. ஆனால் அவற்றுக்குச் சங்கம் மருவிய காலத்திலிருந்த முக்கியத்துவம் பல்லவர் காலத்திலிருந்து குறைகிறது. பல்லவர் காலத்திலே சமயச் சடங்குகளும் இடம் பெற்றன. வேள்வியில் அறநீதிக் கருத்துகளால் கடியப்பட்ட உயிர்க் கொலை முதலியன தவிர்க்கப்பட்டன. இறைவனை வணங்குவதற்குப் பூசனை முறை விருத்தியடைந்தது. மக்கள் மதம் மாறும் போது பழைய நம்பிக்கைகள் யாவற்றையும் எங்கும் கைவிட்டதில்லை. மதம் பரவிச் செல்லும்போது பிற மத மக்கள் மதம் மாறி வரும்போது தம்முடைய பழைய மதத்தின் கூறுகள் சிலவற்றையும் பேணி வருகின்றனர் என்பது வரலாற்றுண்மையாகும். இவ்வுண்மைக்குத் தமிழ்நாடு விதிவிலக்கல்ல எனலாம்.

சங்க இலக்கியங்கட்குப் பிறகு இடையில் தோன்றிய நீதி இலக்கியங்களை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் சங்க இலக்கியம் பக்தி இலக்கியமாக மாறி வளர்ந்த வளர்ச்சியில் உள்ள சிறப்பை நன்கு உணரலாம். ''சுட்டி ஒருவர் பெயர் கூறப்பெறாத''தால் இன்னார் என்று உணர முடியாத கற்பனை மாந்தர் இருவரின் காதலாக இருந்த பாடல்கள் மாறி, தெய்வத்தின்மீது கொண்ட காதலைப் பாடும் பாசுரங்களாக வளர்ந்து செழித்தன. மன்னர்களின் வீரச் செயல்களைப் பாடும் நிலை மாறி இறைவனின் அற்புதத் திருவிளையாடல்களைப் பாடும் நிலை வளர்ந்தது. வள்ளல்களின் வளத்தையும் வள்ளண்மையையும் பாடும் பாடல்கட்கு ஈடாக இறைவனின் அற்புதச் செயல்களைப் பாடும் பாசுரங்கள் தோன்றின. கற்பனைக் காதலுக்குப் பின்னணியாக அந்தந்த ஊர்களின் இயற்கைச் சூழல் வருணிக்கப் பெற்றிருந்தது மாறி இறைவனிடம் செலுத்தும் பக்திக்குப் பின்னணியாக அந்தந்தத் திருக்கோயில் தலங்களைச் சூழ்ந்த இயற்கை எழில்களைப் பற்றிய வருணனைகள் அமைந்தன. ஆழ்வார்கள் பாசுரங்களில் சிறப்பாகத் திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இத்தகைய வருணனைகள் அமைந்து பாசுரங்களுக்குப் பொலிவூட்டுகின்றன.

ஆழ்வார் பாசுரங்களில் துறவறம் பழிக்கப்பெறவில்லை. இல்லறம் வெறுக்கப்பெறவில்லை. நிலையாமை உணர்த்தப்பெறுகின்றது. கலைகள் போற்றப்பெறுகின்றன. உலக இன்பங்களை

நுகர்ந்தவாறே இறைவனிடத்தில் பக்தி செலுத்தலாம் என்பதைப் பாசுரங்கள் தெளிவாக்குகின்றன. உலக வாழ்வைக் கண்டு அஞ்சும் நிலை மாறி மக்கள் கூட்டமாகத் திரண்டு இறைவனை வழிபட்டுப் பக்தியுணர்ச்சியில் திளைக்கலாம் என்ற ஊக்கம் பிறக்க வழி அமைகின்றது.

''உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை எல்லாம் கண்ணன்'' என்றும் அவன் அருளாலே பெறும் இன்பங்களே நிலையானவை என்றும் நம்மாழ்வார் கூறும் அறிவுரைக்குப் புதிய வேகம் அமைகின்றது. இவ்வாறே ஏனைய ஆழ்வார்களின் பாசுரங்களிலும் இறைவனை நினைந்து உருகும் பக்தியே மேலோங்கி நிற்க, மற்ற விருப்பு வெறுப்புகளும் கொள்கைகளும் அச்சங்களும் பின்னிலை அடைந்து மறையத் தொடங்குகின்றன.

இறைவனுக்கு முன்னர் எல்லோரும் சமமானவர்கள். இறைவன் ஒருவனே மக்கள் தலைவன் என்ற கருத்தைப் பரப்பப் பாசுரங்கள் துணையாக நின்றன. மன்னர்களையும், செல்வர்களையும் போற்றிப் பாடுவதற்குப் பயன்பட்ட தமிழ், இறைவனைப் பாடுவதற்கு மட்டுமே பயன்படவேண்டும் என்ற கொள்கை பிறந்தது, வளர்ந்தது. அரசர் அரண்மனைகட்கு இருந்த சிறப்பெல்லாம் திருக்கோயில்கள் பக்கம் திரும்பின. உரியனவாயின. பக்திப் பாசுரங்கள் ஊட்டிய உணர்ச்சியின் விளைவாக அரண்மனைகளின் கட்டடங்களைவிடத் திருக்கோயில்களின் கட்டடங்கள் சிறந்து உயர்ந்தன. விண்ணை முட்டும் கோபுரங்கள் கோயில்களின் வாயிலில் தோன்றத் தொடங்கின. அதிகாலையில் அரசன் துயிலெழுமாறு பாடிவந்த துயிலெடைநிலை திருப்பள்ளி எழுச்சியாக மாறியது. அரசனும் வைகறையில் எழுந்து மக்களுடன் சேர்ந்து திருப்பள்ளியெழுச்சி வழிபாட்டில் கலந்து கொள்ளும் நிலைமை ஏற்பட்டது. அரண்மனை விழாக்கள் திருக்கோயில் விழாக்களாக மாறின. மனிதர்களுக்குள் இருந்து வந்த உயர்வு தாழ்வுகளும், சாதி வேறுபாடுகளும் ஒருவாறு நீங்குவதற்கு இந்த நிலைமைகள் பயன்பட்டன என்று கூறலாம்.

**ஆச்சாரியர்கள் :** குருபரம்பரையை விளக்கும் போது இறைவனையே முதல் குருவாகக் கொண்டாலும் வரலாற்று நிலையில் நம்மாழ்வாரை ஆச்சாரியர்களுக்கு முதல்வராகக் குறிப்பிடுவர். நம்மாழ்வாரை அடுத்து நாதமுனிகளைக் கூறுவர். குருபரம்பரையில் பலரை அறிய முடிந்தாலும் இன்றியமையாதவர்களாகக் கருதப்படுபவர்கள் நாதமுனிகள், ஆளவந்தார், இராமானுசர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிகள் ஆகியோராவர். ஆழ்வார்களின் திருமால் பற்றிய சமயக் கருத்துக்கள் இவர்கள்

காலத்தில்தான் நெறிப்பட ஒழுங்குப்படுத்தப் பெற்றன. இறைவன், ஆன்மா, வீடுபேறு இவற்றைப் பற்றிய கருத்துக்களோடு கலந்து மிக உயரிய நிலையில் திருமால் வழிபாட்டு நிலை வளர்ந்து நிற்கிறது.

**இராமானுசர் :** சங்க காலத்தில் அரும்பு நிலையில் இருந்த வைணவம் பல்லவர் காலத்தில் மலர்ச்சி நிலை பெற்றது என்று தமிழ்ப் பேழை காட்டுகின்றது. ''மாஅயோயே மாஅயோயே மறுபிறப்பு அறுக்கும் மாசில் சேவடி மணி திகழ் உருவின் மாஅயோயே'' எனவும் ''நாறிணர்த் துழாயோன் நல்கின் அல்லது ஏறுதல் உண்டோ வீறுபெறு துறக்கம்'' எனவும் திருமாலுடைய முழு முதல் தன்மையைச் சங்க காலம் தொட்டே முழங்கி வரும் தமிழ் நாட்டு வைணவமாகிய திருமால் வழிபாட்டு நெறி ஆழ்வாராதி களுடைய பாசுரங்களால் வீறுபெற்று இராமனுசர் காலத்தில் புத்தொளி பெற்றது. வேதம், உபநிடதங்கள், ஆழ்வார் அருளிச் செயல்கள் ஆகியவற்றில் ஆங்காங்கே விரவிக்கிடந்த வைணவ சமயக் கருத்துகளைத் தொகுத்துக் கோவைப்படுத்தும் முயற்சியை இராமானுசருக்கு முன் யாரும் மேற்கொள்ளவில்லை. அவரே அவற்றைத் தொகுத்துத் தெளிய வைத்து முழுமையான வழிபாடாக ''விசிஸ்டாத்வைதம்'' என்ற பெயரில் புதிய சமயமாக அறிமுகப் படுத்தினார். உடையவர் என வழங்கப் பெறும் இப்பெரியாரை முன் வைத்தே, அவரது நூற்களின் விளக்கங்களை அடியொற்றியே வளர்ந்தமையின் இன்று வைணவம் ''இராமானுசர் தரிசனம்'' என வழங்கப் பெறும் நிலையை எய்தியுள்ளது.



# நிறைவுரை

'தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு' என்னும் இவ்வாய்வு தமிழ் இலக்கியங்களில் பக்திக் காலம் முடிய அமைந்துள்ள திருமால் வழிபாட்டின் பொது அமைப்பு முறையைக் கண்டறியும் விளக்க வியல் ஆய்வாக அமைந்துள்ளது. பொது அமைப்பு முறையைக் கண்டறிதல் என்பது வழிபாட்டை நோக்கிய முதல்படியாக மேற்கொள்ளப் பெற்றுள்ளது. காரணம் வழிபாடு என்பது பல நிலைகளில் முழுமையான அளவில் மேற்கொள்ளப்பட வேண்டிய ஒன்றாகும். திருமால் வழிபாடு என்பது முழுமையாகக் கணித்தறியப்பட வேண்டுமென்றால் விரிவான முழுமையான நிலையில் ஒப்பிடப்பட வேண்டும். இவ்வகையில் இவ்வாய்வேடு தமிழ் இலக்கியத்தில் அமைந்துள்ள திருமால்பற்றியசெய்திகளின் பொதுநிலைப் பார்வையாகும். திருமால் பற்றிய பெயர்கள், பல்வேறு தொடர்கள், வருணனைகள், திருமகளோடு திருமாலுக்குள்ள தொடர்பு, அவதாரங்கள் ஆகியன வழிபாட்டின் விளக்கவியல் ஆய்வாகும். இந்நிலையில் ஆய்வில் கண்டுரைக்கப்பெற்ற உண்மைகள் இங்கே நிரல் படுத்தப்படுகின்றன. இவை திருமால் வழிபாடு பற்றிய செய்திகளை உருவாக்கும் படி நிலைகளில் முதல் கட்டமாகும். இவையே முழுமையானவை என்பதல்ல. இயல்களுள் எழுதிய செய்திகளைத் தொகுத்துக் காட்டுவதும், அவ்வியல்களுள் கண்டு கூறிய முடிவுகளைத் தொகுத்துக் கூறுவதும் இம்முடிவுரையின் நோக்கமாகும். ஒருவகையில் இதனைத் தொகுப்புரை எனலாம்.

## முதல் இயல்

பண்டைக் காலந்தொட்டே தமிழரிடம் தெய்வ வழிபாட்டு முறைகள் இருந்து வந்திருக்கின்றன என்பதைத் தொல்காப்பியம், சங்க நூல்கள் அறிவிக்கின்றன. சங்க காலத்தில் பல தெய்வ வழிபாடுகள் இருந்தன. ஆயின் சமயக் காழ்ப்புணர்ச்சிக்கான சான்றுகள் இல்லை.

திருமாலும் முருகனும் அன்றைய மக்களால் பெரிதும் போற்றப் பட்டு வந்த தெய்வங்கள் என அறிய முடிகின்றது. அவற்றுள்ளும் திருமாலைப் பற்றிய பரிபாடல்களைக் காணும்போது ''திருமாலே எல்லாம்'' என்ற உணர்ச்சி தோன்றுகிறது. சங்க இலக்கியங்களில் சிவன், முருகன் போன்ற தெய்வங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பெருமைகளை நோக்கும்போதும் திருமாலுக்கே ''பரத்துவம்'' (முழுமுதன்மை) பேசப்படுகின்ற தன்மையினைக் காணமுடிகின்றது.

மக்கள் வாழ்க்கையோடு தெய்வ வழிபாடுகளும் பிணைந்து நின்ற பிணைப்பினைச் சங்க இலக்கியங்கள் தெளிவாக அறிவிக்கின்றன. தமிழ் மக்களின் வழிபாடு சங்ககாலத்தில் ஒரு தனிப் பண்பாட்டுடன் விளங்கியது. நிலப்பகுப்புடன் முல்லை நிலத்திற்கென அமைத்துக்கொண்ட கடவுள்தான் திருமால் என அறியமுடிகின்றது. தொல்காப்பியர் முல்லை நிலத்திற்கும், முல்லை நிலத் தெய்வமான திருமாலுக்கும் முதலிடம் கொடுத்துள்ளார். திருமால் அனைத்து நில மக்களுக்கும் உரிய தெய்வமாகவும் போற்றப்பட்ட வழக்கைக் காணமுடிகின்றது.

திருமாலின் பெயர்கள் பற்றிய சங்க இலக்கியக் குறிப்புகள் மூலமாகப் புராணங்களில் கூறப்பெறும் கதைக் குறிப்புகள் சங்க காலத்தில் ஓரளவு மக்களிடையே விளக்கம் பெற்றிருந்தமை புலனாகின்றது. திருமால் பற்றிய வருணனைகளில் திருமாலே வீடுபேற்றை நல்கக் கூடியவன் என்ற உண்மை உணர்த்தப்படுகின்றது. இவற்றின் மூலம் பண்டைத் தமிழரின் திருமால் பற்றிய கடவுட் கோட்பாடு நன்கு புலனாகின்றது.

சங்க இலக்கியங்களில் திருமால் பல்வேறு பெயர்களால் அவன் பண்புகள் தோன்ற அழைக்கப்படுகின்றான். அவன் நீலவுருவத்தன் என்றும், நீலமணி, கடல், முகில், பூவை ஆகியன அவனது நிறத்திற்கு உவமைகளாகக் கூறப்படுகின்றன. அவன் மார்பில் அணியும் கௌத்துவ மணியும், துழாய் மாலையும், கையில் கொண்டுள்ள ஆழியும், சங்கும், மார்பில் உறையும் திருமகளும் அவனுடைய சிறப்பு அடையாளங்களாகக் கூறப்படுகின்றன.

சங்க இலக்கியங்களில் திருமாலுக்குத் தேவியாகத் திருமகள் மட்டுமே சுட்டப்படுகின்றாள். நப்பின்னை பற்றிய செய்தி சங்க நூல்களில் காணப்படவில்லை. திருமால் மார்பில் மறுவாகத் தொடக்கத்தில் இருந்த திருமகள் பின் உருப்பெற்ற திருமகளாக அவனிடமிருந்து பிரிக்கப்பட்டுத் தனித் தெய்வமான செய்திகளைச் சங்க இலக்கியச் சான்றுகள் அறிவிக்கின்றன.

திருமாலைப் பல்வேறு தொடர்களால் விளக்கும்போது திருமாலின் கோலத்தைக் குறிப்பிட்டுச் சொல்லும் வழக்கைக் காண முடிகின்றது. திருமால் பற்றிய வர்ணனைகளில் அவனே பேராற்றலும், பேருருவும் கொண்ட பரம்பொருளாகக் காட்டப்படுகின்றான். மக்கள் துன்பம் தீர்க்கத் திருமால் அவதாரம் எடுத்ததும், அவ்வவதாரச் செய்திகளும் சிறப்பிக்கப்படுகின்றன. அவற்றினுள்ளும் கண்ணனுக்குரிய அவதாரக் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன.

இக்கருத்துக்களையெல்லாம் நோக்கும்போது காட்சிப் பொருளிற் கடவுளியல்பைக் கண்ட சங்கப் புலவர்களின் தெய்வ வழிபாட்டு உணர்வுகளையும் திருமால் பரம்பொருளுக்கே உரிய பண்புகளோடு சங்கப் புலவர்களால், சங்க காலத்துத் தமிழ் மக்களால் போற்றி வழிபடப்பட்டு வந்தான் என்பதனையும் அறிய முடிகின்றது.

## இரண்டாம் இயல்

சங்க காலத்திற்குப் பின் இறை உணர்வே பல்வேறு இலக்கியங்களையும் படைக்க உந்திற்று. சமய அடிப்படையில் இலக்கியம் படைக்கும் முயற்சி சங்க நாளில் இல்லை. அதற்கேற்ற நிலையில் சமுதாயம் அமையவில்லையெனலாம். சமய சிந்தனைகள் தெளிவாக வளர்ந்துவிட்ட நிலையைச் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் காண முடிகின்றது. பக்தி நெறியும் வளர்ந்து வந்துள்ளமையினை ஆய்ச்சியர் குரவையில் வரும் பாடல்களும் பிறவும் தெளிவாக உணர்த்துகின்றன. இதிகாசச் செய்திகளும் சங்க இலக்கியங்களிலும் பலவாகக் காப்பியங்களில் இடம்பெறுகின்றன.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் கூறப்படும் திருமால் இயல்புகள் சங்க இலக்கியங்களில் கூறப்படும் செய்திகளோடு பெரிதும் ஒத்திருக்கின்றன. எனினும் சங்க இலக்கியங்களை விடவும் சங்கம் மருவிய கால இலக்கியங்களில் பல செய்திகள் கூறப்படுகின்றன என்பது இவ்வாய்வால் பெற்ற முடிபுகளுள் ஒன்றாகும். திருமால், அரி, நாராயணன் போன்ற பெயர்கள் பெயரளவில் திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட வளர்ச்சியினை உணர்த்துகின்றது எனலாம்.

சங்க காலத்தைப் போலவே சங்கம் மருவிய காலத்திலும் திருமகள் திருமாலின் துணைவியாகக் காட்டப்படுகின்றாள். செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் திருமகளைத் தொடர்புபடுத்திப் பேசும் புதிய செய்திகளும் வளர்ந்திருக்கின்ற நிலை அறியத்தக்கது. பாவைக்கூத்து, மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகத் திருமகள் போற்றப்படும் நிலை சங்க இலக்கியங்களில் காணப்படாதது. இத்தகு செய்திகளுக்கு அரசியல், சமுதாயம், பொருளாதாரம் போன்றவைகளில் ஏற்பட்ட மாற்றங்களும் சூழ்நிலைகளும் காரணமாகலாம் என்பது இவ்வாய்வாளர் கொள்ளும் கருத்தாகும்.

திருமகள் என்ற ஒரு மனைவியையுடைய திருமாலைச் சங்க காலத்திலும், திருமகள்-நப்பின்னை என்ற இரு மனைவியையுடைய திருமாலாகச் சங்கம் மருவிய காலத்திலும் வளர்ச்சியுற்ற ஒரு நிலையை உணர முடிகின்றது. வடநாட்டார் தொடர்பு மிகுதியும்

ஏற்பட்டமை இத்தகு வளர்ச்சிக்குக் காரணமாகலாம் என்பது இவ்வாய்வால்வெளிப்படுத்த விரும்பும் கருத்தாகும்.

சங்க இலக்கியங்களில் திருமாலின் தங்கையாகச் சொல்லப் பெறாத கொற்றவை சிலம்பில் திருமாலின் தங்கையாகக் குறிக்கப் படுகின்றாள் என்ற புதிய தகவல் இங்கு குறிக்கப்பெறுகின்றது. திருமாலின் காத்தற் சக்தியே கொற்றவை என்று குறிக்கப் படுவதையும் அறியமுடிகின்றது.

சங்கம் மருவிய கால இலக்கியங்களிலும் திருமால் பற்றிய வருணனைகள் மிகுதியும் காணக் கிடைக்கின்றன. அவற்றுள்ளும் சிலம்பில் திருமாலின் சிறப்பு வெகுவாகப் புகழப் பெற்றுள்ளது. இவற்றுள் பின்னை கேள்வன், அறுவை ஒளித்தவன், வால சரிதை நாடகம் போன்ற செய்திகளும், திருமால், அரி போன்ற பெயர்க் குறிப்புகளும் சங்க இலக்கியங்களில் காணப்படாதவை என்பது இவ்வாய்வால் அரிய வந்த செய்திகளாகும்.

சங்க இலக்கியங்களிலும் திருமால் கோலங்களின் சிறப்பு மிகுதியும் சிலம்பில் வருணிக்கப்படுகின்றது. அவதாரங்களில் கிருட்டிணாவதாரம் வர்ணனையோடு மிகுதியும் கூறப்படுகின்றது. சங்க இலக்கியங்களைப் போலவே ''அவதாரம்'' என்ற சொல் காணப்படவில்லை. வராகம், மச்சம், கல்கி தவிர்த்த பிற அவதாரக் குறிப்புகள் இடம் பெறுகின்றன. சங்க காலத்தைப் போன்று இக்கால இலக்கியங்களிலும், கிருட்டிணாவதாரத்துச் செய்திகளே மிகுதியும் இடம் பெறுகின்றன. பாரதக் கதைச் செய்திகள் மக்களிடையே பரவியிருந்தமையும் கண்ணன் ஆயர்குல தெய்வமாகவும், பரம்பொருளாகிய திருமாலாகவும் போற்றப்பட்ட நிலை தெளிவாகின்றது.

## மூன்றாம் இயல்

சங்க காலத்தையும், நீதிநூல் காலத்தையும் அடுத்துத் தெளி வாகக் காணப்படுவது பக்தி இலக்கியக் காலமாகும். முந்தைய கால இலக்கியங்களிலும் மிகுதியான செய்திகள் பக்திப் பாடல்களில் உள்ளன.

சைவ இலக்கியங்களில் இடம்பெறும் திருமால் பற்றிய குறிப் புகளையெல்லாம் நோக்கும்போது பெயர்கள் பற்றிய நிலையில் ஒரு வளர்ச்சி நிலையினைக் காணமுடிகின்றது. அவற்றுள்ளும் நிறம் பற்றிய பெயர்களே மிகுதியும் அமைகின்றன. பல்வேறு தொடர் களால் திருமால் விளக்கம் பெறுமிடத்துச் சங்கம், சங்கம் மருவிய காலநிலையே நீட்டிக்கின்றது. வருணனை பற்றிய அளவில் முந்தைய

இருகால கட்டங்களைப் போன்ற வருணனை அமைப்பு இடம் பெறாமையை நன்கு உணர முடிகின்றது. திருமால் கோலங்களின் சிறப்பு முந்தைய காலங்களைப் போல இங்கு காட்டப்படவில்லை. பக்திப்பாடல்கள் தோத்திரப் பாடல்களாக இறைவன் அருட்திறம் விளக்குவதையே இலக்காகக் கொண்டதால் அத்தகு வருணனைகள் இடம்பெறவில்லை என்பது இவ்வாய்வின் முடிவாகக் கொள்ளப் பெறுகின்றது.

திருமகள் பற்றிய செய்திகளைக் காணும்போது ''திரு'' என்ற சொல் தொடக்க காலத்தைப் போல அழகு, செல்வச் செழிப்பு, இறையருள் போன்ற பொருள்களில் வழங்குவதோடு சைவ இலக் கியங்களில் வீட்டின்பமாகவும் குறிக்கப்படுகின்றது. செங்கோல், கடுங்கோல் இவற்றுடன் திருமகளைத் தொடர்புபடுத்திப் பேசும் சங்கம் மருவிய கால மரபினைச் சைவ இலக்கியங்களிலும் காண முடிகின்றது. அங்கு மூவேறு சக்திகளுள் ஒருத்தியாகப் போற்றப் பட்ட திருமகள் இங்கு நால்வகைத் தேவியருள் ஒருவளாகவும் சுட்டப்படுகின்றாள். திருமகள் சிவனை வழிபட்டதாக அமையும் செய்திக் குறிப்பு, அம்பிகையின் ஓர் அம்சமாகத் திருமகள் சுட்டப்படும் செய்திகள் திருமகள் வழிபாட்டில் ஏற்பட்ட புதிய செய்திகளாகவும் அமைகின்றன என்பது இங்கு காட்டப் பெறுகின்றது.

சங்கம் மருவிய கால இலக்கியங்களில் திருமால் இரு மனைவியை உடையவனாகக் காட்டப்பட்ட வழக்குச் சைவ இலக்கியங்களிலும் தொடர்கின்றது. ஆயினும் நப்பின்னை பற்றிய செய்திகள் அங்கு போல இங்கு மிகுதியாக இடம்பெறவில்லை. கொற்றவை பற்றிய செய்திகள் சைவ இலக்கியங்களில் திருமாலுடன் தொடர்புபடுத்தி எங்கும் கூறப்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பக்திக் கால இலக்கியங்களில் சிவன், திருமால் பெருமை பேசுவதையே இலட்சியமாகக் கொண்ட நெறி வளர்ந்துவிட்டதால் சைவ சமயச் சார்பான பக்திப் பாசுரங்களில் சிவனைத் தன்னிகரற்ற தெய்வமாகப் பாடவேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. எனவே தனித் தெய்வமாக இருந்த கொற்றவை சிவனுடன் கூடிய சார்புத் தெய்வமாக மாறிவிட்ட பக்தி காலச் சூழலில் தனித்தன்மையோடு பாடப்பெற முடியாத நிலை ஏற்பட்டுள்ளது.

திருமால் பல்வேறு தொடர்களால் விளக்கம்பெறும் செய்தி களை நோக்கும்போது அச்செய்திகள் அமையும் சூழல் முந்தைய காலங்களினின்று பெரிதும் வேறுபடுகின்றது. சிவனது அடிமுடி

காணாதது, சிவனது பாகமாகத் திருமால், மூவருமானவன் சிவன், திருமால் சிவனை உள்ளத்தில் கொண்டவன், சிவனை வழிபட்டமை, சிவனருளால் சக்கரம் பெற்றமை, அயனும், மாலும் காரணக் கடவுளர், திரிபுரம் எரிக்கத் திருமால் கணையானவன் போன்ற செய்திகள் யாவும் சைவ இலக்கியங்களில் காணப்படும் புதிய செய்திகள். இவை புகுந்தமைக்கான காரணங்களை ஆராயும்போது சிவனைத் தலைவனாகக் கொண்டு பாடியவர்கள் சிவனுக்கு தலைமை தந்து புகழவேண்டிய நிலையில் சிவன் பெருமை கூறும் வடபுலத்து நூற்செய்திகளை ஏற்கனவே தமிழில் இருந்த செய்திகளோடு கலந்து பாடியிருக்கலாம். அவ்வாறு வடக்கையும், தெற்கையும் இணைக்கும்பொழுது வட நூற்களிலுள்ள திருமால் பற்றிய புதிய தகவல்களும் தமிழுக்கு வந்திருக்கலாம் என்ற அளவில் இவ்வாய்வுரை அமைக்கப்பெற்றுள்ளது.

முந்தைய காலங்களைப் போலவே அவதாரம் என்ற சொல் காணப்படவில்லை. பலராமன், கூர்மம், மச்சம், கல்கி தவிர்த்த பிற அவதாரக் குறிப்புகள் சைவ இலக்கியங்களில் இடம் பெறு கின்றன. முந்தைய காலங்களைப்போலத் திருமாலின் அவதாரக் கருத்துகளை மன்னர்கள் மேல் ஏற்றிக் கூறும் வழக்கைச் சைவ இலக்கியங்களில் காணமுடியவில்லை. முந்தைய காலங்களைப் போல இயற்கைக் காட்சிகளில் உவமையாகவோ, வேறு இடங்களில் ஒப்புமையாகவோ இவ்வவதாரக் குறிப்புகள் அமையவில்லை. ஆயினும் சிவனுக்கு ஏற்றம் தந்து சிவனது புகழ் பாடும் சைவ இலக்கியங்களில் திருமாலின் இயல்புகள் பல சிவனுக்கு ஏற்றி உரைக்கப்படுகின்றன. சிவனது பெருமை கூறவே திருமால் பற்றிய செய்திகள் அமைந்தாலும் அவற்றுள்ளும் திருமாலின் அருட்பண்புகள் வெளிப்பட பேசப்படுவதைக் காணமுடிகின்றது. முந்தைய காலங் களைப்போலக் கிருட்டிணாவதாரச் செய்திகளே மிகுதியும் இங்கும் அமைகின்றன. ஏழுலகுண்டது, கோவர்த்தன கிரியைக் குடையாய்த் தூக்கியது ஆகிய இரு செய்திகளே மிகுதியும் பேசப்படுகின்றன. முந்தைய இருகால கட்ட இலக்கியங்களிலும், பலராமனும், கண்ணனும் இணையாக அண்ணன் தம்பியராகக் காட்டப்பட்ட வழக்குகள் சைவ இலக்கியங்களிலே காணப்படவில்லை. பலராமன் பற்றிய குறிப்பே இடம்பெறவில்லை.

சிலம்புக் காலத்தில் முக்கியத்துவம் பெற்ற நப்பின்னை பற்றிய செய்தி ஈரிடங்களில் மட்டுமே சொல்லப்படுகின்றது. திருமாலின் தங்கையாகக் கொற்றவை கூறப்படும்போது கண்ணனின் செயல்கள் ஏற்றி உரைக்கப்படுவதுபோலச் சிவனுக்கு ஒருசிலவிடங்களில் ஏற்றி உரைக்கப்படுகின்றது.

திருமால் பற்றிய புராணச் செய்திகளே மிகுதியும் கூறப்படு கின்றன. இங்கு காணும் இப்புராண வரலாறுகள் முந்தைய கால இலக்கியங்களில் காணப்படவில்லை. புராணங்களின் செல்வாக்கு மக்களிடையே மிகுந்திருந்தமை புலனாகின்றது. முந்தைய காலங் களில் காணப்பட்டதுபோலக் கண்ணன் பற்றிய பாரதக் கதைக் குறிப்புகள் சைவ இலக்கியங்களில் இடம் பெறவில்லை. திருமாலின் அவதாரமே கண்ணன் என்று காட்டப்படுகின்றது. சங்கம், சங்கம் மருவிய காலங்களில் இயற்கையோடு இறைப்பண்பை இணைத்துப் பார்க்கும் தன்மையினைச் சைவ இலக்கியங்களில் காண முடிய வில்லை. சைவ இலக்கியங்கள் சிவ பரத்துவத்தைப் பேசினாலும், அவ்விடங்களிலே திருமாலின் அருட்பண்புகளும், பல்வேறு பெயர் களும் தோற்றமும் விளங்கக் காத்தற் கடவுளாக அவன் காட்டப் படுவதை உணரமுடிகின்றது என்ற உண்மை இவ்வாய்வில் சுட்டிக் கூறப்பட்டுள்ளது.

## நான்காம் இயல்

**ஒன்று :** பல்லவர் காலம் பக்திக் காலமாகின்றது. பக்தியின் மொழி தமிழ், பக்தியைப் பாடுவதிலே தமிழ் மொழிக்கு ஈடிணை யில்லை என்ற நிலை ஏற்பட்டது. நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தில் அமையும் திருமால் பற்றிய செய்திகள் அமையும் சூழல்கள் முந்தைய மூன்று கட்ட இலக்கியங்களின்றும் வேறுபட்ட நிலையினைக் கொண்டதாக அமைகின்றது. சைவக் குரவர்கள் சிவனுக்கு முதன்மை தந்து பாடியதைப்போலத் திருமாலுக்கு முதன்மை தந்து அவன் புகழ் விளக்குவதையே ஆழ்வார்கள் தங்கள் பாசுரங்களில் இலக்காகக் கொண்டதால் திருமாலுக்கு முதன்மை தந்து பிற தெய்வங்களை அடுத்த நிலையில் வைத்துப் பாடுவதைக் காண முடிகின்றது. திருமாலுக்குப் பரத்துவம் பேசப்பட்ட பரிபாடல் நிலையை மீண்டும் ஆழ்வார் பாசுரங்களில் காணமுடிகின்றது.

அவதாரங்கள் பற்றிய நிலையில் முந்தைய கால இலக்கியங்களில் ஒவ்வொரு காலகட்டத்திலும் ஒருசில அவதாரங்கள் பேசப்பட வில்லை. ஆழ்வார்கள் பத்து அவதாரச் செய்திகளையும், அவற்றின் பெருமைகளையும் தங்கள் பாசுரங்களில் அமைத்துள்ளனர். பத்து அவதாரங்களும் அவதாரப் பெயரோடு சுட்டப்பெறுகின்றன. இது அவதாரங்கள் பற்றிய நிலையில் ஒரு வளர்ச்சியென்று கூறலாம். முந்தைய காலங்களைப் போலவே கிருட்டிணாவதாரச் செய்திகளே மிகுதியும் காணக் கிடைக்கின்றன. கிருட்டிணாவதாரத்தில் முந்தைய காலங்களில் இடம் பெறாத சில புதிய செய்திகளும் வளர்ச்சி என்ற நிலையில் அமைகின்றன. இயற்கைக் காட்சிகளில்

உவமமாக அமைதல், பூவை நிலைத்துறையில் அமையும் செய்திகள் போன்றவை பக்தி இலக்கியங்களில் காணப்படவில்லை. திருமால் வழிபாட்டில் ஏற்பட்ட தளர்ச்சி என்ற முறையில் இதனைக் கொள்ளலாம் என்ற கருத்து தெரிவிக்கப்பெற்றுள்ளது. மன்னனைப் போற்றுகின்ற மரபு மாறி இறைவனையே ஆண்டானாகக் கண்டு போற்றிய நிலை இதற்குக் காரணமெனலாம்.

இறைவன் எளிமையானவன், நம் அருகிலேயே உள்ளவன் என்ற உணர்வுகளை எற்படுத்துகின்ற நிலைகளை ஆழ்வார்களின் பாடல்களில் காணமுடிகின்றது. பக்தி இயக்கத்தைப் பரப்பத் துணை நின்ற கண்ணன் பக்தியில் புதியன புகுதல் என்ற நிலையில் ஒரு வளர்ச்சி நிலையினை ஆழ்வார் பாசுரங்களில் காண முடிகின்றது.

ஆழ்வார் பாசுரங்களில் திருமாலின் பெருங்கருணைத் திறமும், பேராற்றலும் விளங்க இராமாயணச் செய்திகள் அமைகின்றன. முந்தைய காலங்களைவிடவும் இங்கு இராமாவதாரச் செயல்கள் எண்ணிக்கையில் மிகுந்துள்ளன. இராமனின் நற்பண்புகள் மக்கள் மனத்தைப் பெரிதும் ஈர்த்திருந்தமை புலனாகின்றது.

சங்க காலத்திலிருந்து தொடர்ந்து வாமனாவதாரச் செய்திகள் சொல்லப்படுகின்றன. மன்னனைவிட வல்லமை வாய்ந்த சக்தி மண்ணுலகில் இல்லை என நம்பிக் கொண்டிருந்த மக்கள் உள்ளத்தில் மன்னர்களையும் தோல்வியுறச் செய்யும் வல்லமை திருமாலாகிய கடவுளுக்கு உண்டு என்ற நம்பிக்கையை ஆழ்வார் பாசுரங்களில் அமையும் வாமனாவதாரச் செய்திகள் தோற்றுவிக்கின்றன.

முந்தைய காலங்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகுதியாக நரசிங்காவதாரம், கூர்மாவதாரம், வராகவதாரம், பரசுராமன் முதலிய அவதாரச் செய்திகள் அமைகின்றன. இவ்வவதாரக் கருத்துகளில் ஏற்பட்ட வளர்ச்சி நிலையென்று இதனைக் கூறலாம்.

முந்தைய காலங்களில் இடம்பெறாத மச்சாவதாரம் - ஆழ்வார் பாசுரங்களில் மட்டுமே காணப்படுகின்றது. முந்தைய காலங்களைப் போலப் பலராமனைப் பற்றிய மிகுதியான செய்திகளை ஆழ்வார்கள் பாடவில்லையெனினும் கண்ணனின் தமையனாகவும், திருமாலின் அவதாரமாகவும் பலராமன் சுட்டப்படுகின்றான்.

முந்தைய கால இலக்கியங்களில் கல்கி அவதாரம் பற்றிய செய்திகள் எங்கும் இடம்பெறவில்லை. ஆழ்வார்களும் செய்திக்

குறிப்புகளாகக் கல்கி அவதாரத்தைக் கூறிஉள்ளனரே தவிர அதைப் பற்றிய விளக்கங்களைக் காணமுடியவில்லை.

அவதாரங்கள் மூலமும் உலகை உய்விக்க முடியவில்லை என்பதால் திருமால் எடுத்த அடுத்த முயற்சியே ஆழ்வார்கள் அவதாரமெனப்படுகின்றது. இறைவனே எல்லாம் என்பதைக் காட்டும் நிலையில் அவதாரங்களின் நோக்கம் அமைகின்றது.

சைவ இலக்கியங்களில் சிவனுக்கு ஏற்றம் தந்து செய்திகள் அமைவது போலத் திருமாலின் பெருமை பேசும் செய்திகளாக நாலாயிரத்தில் திருமால் பற்றிய செய்திகள் அமைகின்றன. திருமாலினது பரத்துவம், ஆற்றல், காத்தற் பண்பு, அடியவர்க் கருளல், தீமையை அழித்தல், எளியனாகுந்தன்மை, எங்கும் பரந்து நிற்கும் தன்மை ஆகியன வெளிப்பட அவதாரப் பண்புகள் விளக்கம் பெறுவதையும், திருமால் வழிபாடு பக்திக் காலத்தில் முந்தைய காலங்களைவிட வளர்ச்சி பெற்ற நிலையினையும் காணமுடிகின்றது.

**இரண்டு :** பல்வேறு புராணக் குறிப்புகளில் காணப்பெறும் திருமால் பற்றிய பொதுவான செய்திகள் பலவும் ஆழ்வார் பாசுரங் களில் இடம் பெறுகின்றன. இச்செய்திகளால் திருமால் அவதார மெடுத்ததன்றிப் பரம்பொருள் நிலையிலிருந்து செய்த திருவிளை யாடல்களும், முத்தேவரில் திருமாலே மேலானவன், திருமாலுக்கு அடுத்தபடியானவர்களே சிவனும் பிரமனும், உலகில் ஏற்படும் தீமைகள் எல்லாவற்றையும் போக்கும் வல்லமை படைத்தவன் திருமாலே என்பதும் தெளிவுறுத்தப்படுகின்றன.

**மூன்று :** தமிழ் இலக்கியங்கள் வழி அறிய நின்ற திருமால் வழிபாட்டில் ஒரு புது நெறியை ஆழ்வார் பாசுரங்களில் காண முடிகின்றது. தமிழினத்திற்குத் தனிச் சொத்தாக இருந்த அகத்திணை நெறியை, திருமால் வழிபாட்டில் ''நாயக - நாயகி பாவம்'' என்னும் புதிய உத்தியைப் பாடல் நெறியாக்கிப் பழமையிலே புதுமை செய்து பக்தியை வளர்த்த தன்மை புலனாகின்றது. இதனால் மக்களுக்கும், இறைவனுக்கும் இருந்த இடைவெளி குறுகிப் பக்தி உணர்வு பெருகியமையை உணரமுடி கின்றது. சங்க காலப் பொருள் மரபுகாலத்தின் போக்கிற்கிணங்கப் பல்லவர் காலப் பொருள்மரபாக மாறிவிட்டது.

**நான்கு :** சங்க கால வழிபாட்டு நிலைக்கும், திவ்வியப் பிரபந் தங்கள் தோன்றிய பக்திக் கால வழிபாட்டு நிலைக்கும் உள்ள

வளர்ச்சி நிலைகளைக் காணும்போது பெயர்கள் பற்றிய நி
பெரிதும் வளர்ச்சி நிலை காணப்படுகின்றது. திருமாலின்
ஆடை, ஊர்தி, கொடி, நிறம், ஆயுதங்கள், படுக்கை, திரு
நிலமகள் நப்பின்னையுடன் உள்ள உறவு, நான்முகன் —
தந்தை, வேதமுதல்வன், தேவதேவன், பரம்பொருள்
செய்திகளில் காலந்தோறும் உள்ள கருத்து நிலைகளே அ
பாசுரங்களிலும் தொடர்கின்றன. ஆயின் எண்ணிக்
மிகுதியான அளவில் இச்செய்திகள் பக்திக் காலத்தில்
பெறுகின்றன. முந்தைய காலங்களைக் காட்டிலும் இக்கால
இலக்கியங்களில் பல்வேறு கோயில்களின் சிறப்புக் கூறப்படுகி
முந்தைய காலங்களைக் காட்டிலும் மிகுதியான வழிப
பொருட்கள், குறிப்பாக மலர்கள் முதலானவை வழிபாட்டி
தன்மையில் காட்டப்பெறுகின்றன. பெரியாழ்வாரின்
கேச வர்ணனையும் இன்னும் பல்வேறிடங்களில் காட்டப
திருமாலின் வர்ணனைகளும் புதிய முறையில் இக்கால
இலக்கியங்களில் அமைகின்றன. எனினும் திருமாலின் கே
சிலம்பில் காட்டப் பெறுவதுபோல விளக்கமாகக்
பெறவில்லை என்றே கூறலாம். சிலம்பில் கிடந்த கே
நின்ற கோலமும் குறிக்கப் பெற்றன. இங்கு திருமாலின்
கோலங்களும் சுட்டப் பெறுகின்றன. சங்க காலம் முதல்
மனத்தில் உறைந்திருந்த இறைப்பண்பு படிப்படியாக
பரிபாடலில் நன்கு பரிணமித்துக் காப்பியங்களில்
நாயன்மார் - ஆழ்வார்களால் பெரிதும் பாராட்டப்பட்ட
தெளிவாகின்றது.

ஆழ்வார்கள் காலத்திற்கு அடுத்த நிலையில் ஆச்சாரிய
குரு பரம்பரையில் குறிப்பிடத்தக்க நாதமுனிகள், ஆள
இராமானுசர், வேதாந்த தேசிகர், மணவாள மா
ஆகியோரது காலத்தில் திருமால் பற்றிய சமயக் கருத்துகள்
படுத்தப்பெற்றன. மிகப் பழங்காலந்தொட்டே தொடர்
வைணவ நெறி இராமானுசர் காலத்தில் புத்தொளி பெற்று
அரிய தொண்டால் ஒழுங்குபடுத்தப் பெற்ற முழுமையான
டைக் கண்டடைந்தது. இராமானுசரே வேதம், உபநிட
ஆழ்வார் அருளிச் செயல்கள் ஆகியவற்றில் ஆங்காங்கே
கிடந்த வைணவத் தத்துவங்களைத் தொகுத்துக் கோவைப்
தெளியவைத்து முழுமையான வழிபாடாக ''விசிஸ்டாத்
என்ற பெயரில் புதிய சமயமாக அறிமுகப்படுத்தினார்.
இன்று வைணவம் ''இராமானுசர் தரிசனம்'' என வழங்க
நிலையும் தெளிவாகின்றது.

இராமானுசர் காலத்திற்குப் பின் சோழர் காலம், நாயக்கர் காலங்களில் திருமால் பற்றிய செய்திகளில் இன்னும் அதிக மாற்றங்கள் வளர்ச்சிகள் தென்படுகின்றன. இவை யாவும் திருமால் வழிபாட்டு நிலையில் ஏற்பட்ட வளர்ச்சி நிலைகள் என்றே கூறவேண்டும். இலக்கியம் அவ்வக்கால மக்களின் நிலையினை எடுத்துக்காட்டும் கண்ணாடி போன்றது. இவ்வகையில் பக்தி இலக்கியங்கள் சமயச் சார்புடையனவாக விளங்கி மக்களின் சமய நிலையை, இறை உணர்வை, வழிபாட்டுமுறைகளை முதன்மையாக எடுத்துக்காட்டுகின்றன. இவ்விலக்கியங்களால் உணர்த்தப்பெறும் திருமால் இயல்புகள் ஒரு கால்வழியே வந்தனவென்று கொள்ளலாம். இவ்வியல்புகளை அறியும்போது இவை இந்தியா முழுவதும் பரவி யிருந்த சிந்தனைகள் என்ற உண்மையும் இவ்வாய்வால் பெறப் படுகின்றது.

தமிழ் இலக்கியத்தில் (பக்திக் காலம் முடிய) ''திருமால் வழி பாட்டை'' அறியும் தொடக்க முயற்சி இவ்வாய்வாகும். பல நிலை களில் மேற்கொள்ளப்படவேண்டிய இவ்வாய்வு முதல் படியாக அமைப்பு முறையைக் காணும் ஆய்வாக, வழிபாட்டில் திருமாலின் தனித்தன்மை காணும் ஆய்வாக மட்டும் அமைந்துள்ளது. ஈண்டு ஆய்வு முடிவுகளாக வரையறை செய்யப்பட்டுள்ள ''திருமால் வழிபாடு'' பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியங்களில் கூறப்படும் முடிவான நெறிமுறைகளை நோக்கிச் செல்வன. ஆழ்வார்கள் காலத்திற்குப்பின் இராமானுசர் காலம், சோழர் காலம், நாயக்கர் காலம் என்று மேலும் பல கால நிலைகளில் திருமால் பற்றிய செய்திகள் விரிவாக ஆராய்வதற்கு உரியன.

இலக்கண, இலக்கிய வழிப்பட்ட இவ்வாய்வின் ஒவ்வொரு இயலும் தனித்த ஆய்வுக்குத் தொடர்ந்து உட்படுத்தப்பட வேண்டும். விளக்கவியல் ஆய்வுடன் பிற ஆய்வு அணுகுமுறைகளும் மேற்கொள்ளப்படவேண்டும். பல்துறை இணைப்பாய்வுகளின் மூலம் தொடர்ந்து மேற்கொள்ளப்படும் முயற்சிகளின் இறுதி நிலை யில் திருமால் பற்றிய வரையறுக்கப்பட்ட வழிபாட்டு நெறிகளை உருவாக்க முடியும். இந்நிலையில் இவ்வாய்வு ஒரு முன்னோட்ட ஆய்வாக அமைந்துள்ளது எனலாம்.

